அம்பலங்கள் சந்தியி லாடுகின்ற வம்பனே
அன்பனுக்கு ளன்பனாய் நிற்பனாதி வீரனே
அன்பருக்கு ளன்பராய் நின்றவாதி நாயனே
உன்பருக்கு வுண்மையாய் நின்றவுண்மை யுண்மையே.

அண்ணலாவ தேதடா வறிந்துரைத்த மந்திரம்
தண்ணனாக வந்தவன் சகலபுராணங் கற்றவன்
கண்ணனாக வந்தவன் காரணைத் துதித்தவன்
ஒண்ணதாவ தேதடா வுண்மையான மந்திரம். (௨௫௭)

எள்ளதோர் புறப்பதோ ருயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேணு மென்கிறீர்
உள்ளதும் புறம்பது மொத்தபோது நாதமாம்
கள்ளவா சலைத்திறந்து காணவேணு மப்பனே. (௨௫௮)

ஆரலைந்து பூதமா யளவிடாத யோனியும
பாரமான தேவரும் பழுதிலாத பாசமும்
ஒராணுத வண்டமு பூலோகலோக லோகமும்
சேரவெந்து போயிருந்த தேகமேது செப்புமே. (௨௫௯)

என்னகத்து ளென்னைநா னெங்குநாடி யோடினேன்
என்னகத்து ளென்னைநா னறிந்திலாத தாகையால்
என்னகத்து ளென்னைநா னறிந்துமே தெரிந்தபின்
என்னகத்து ளென்னையன்றி யாதுமொன்று மில்லையே. ()

விண்ணினின்று மின்னெழுந்து மின்னொடுங்கும் வாறுபோல்
என்னுள்நின்று மென்னுமீச னென்னகத் திருக்கையால்
கண்ணினின்று கண்ணில்தோன்றும் கண்ணறிவி லாமையால்
என்னுணின்ற வென்னையு மியானறிந்த தில்லையே. (௨௬௧)

அடக்கினு மடக்கொணாத வம்பலத்தி னூடுபோய்
அடக்கினு மடக்கொணாம லன்புருக்கு மென்றனை
கிடக்கினு மிருக்கினுங் கிலேசம்வந் திருக்கினும்
நடக்கினு மிடைவிடாத நாதசங் கொலிக்குமே. (௨௬௨)

மட்டுலாவு தண்டுழா யலங்கலாய் புனற்கழல்
விட்டுவீழில் தாகபோக விண்ணில்நண்ணில் வெளியினும்
எட்டினோ டிரண்டினு மிதத்தினால மனத்தனைக்
கட்டிவீடி லாதுவைத்த காதலின்ப மாகுமே (உசுரு)

ஏகமுற்றி மூன்றுமுற்றி நாலுமுற்றி நன்மைசேர்
போகமுற்றி புண்ணியத்தில் முற்றியன்றி முற்றியாய்
நாகமுற்ற சயனமாய் நலங்கடல் கடந்ததீ
யாகமுற்றி யாகநின்ற தென்கொலாதி தேவனே. (உசுசு)

மூன்றுமுப்பத் தாறினோடு மூன்றுமூன்று மாயமாய்
மூன்றுமுத்தி யாகிமூன்று மூன்றுமூன்று மூன்றுமாய்
தோன்றுசோதி மூன்றதாய் துலக்கமில் விளக்கதாய
என்றனாவி னுள்புகுந்த தென்கொலோநம் மீசனே. (உசுஎ)

ஐந்துமைந்து மைந்துமா யல்லவற்று ளாயுமாய்
ஐந்துமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
ஐந்துமைந்து மைந்துமா யமைந்தனைத்து நின்றநீ
ஐந்துமைந்து மாயநின்னை யாவர்காண வல்லரே. (உசுஅ)

ஆறுமாறு மாறுமாயொ ரைந்துமைந்து மைந்துமாய்
ஏறுசீ ரிரண்டுமூன்று மேழுமாறு மெட்டுமாய்
வேறுவேறு ஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்
ஊறுமோசை யாயமர்ந்த மாயமாய மாயனே. (உசுகூ)

எட்டுமெட்டு மெட்டுமாயொ ரேழுமேழு மேழுமாய்
எட்டுமூன்று மொன்றுமாகி நின்றவாதி தேவனே
எட்டுமாய பாதமோ டிறைஞ்சிநின்ற வண்ணமே
எட்டெழுத்து மோதுவார்க ளல்லல்நீங்கி நிற்பரே. (உஎ0)

பத்தினோடு பத்துமாயொ ரேழினோடு மொன்பதாய்
பத்துநாற் றிசைக்குநின்ற நாடுபெற்ற நன்மையா
யத்துமாய கொத்தமோடு மத்தலமிக் காதிமால
பத்தர்கட்க லாதுமுத்தி முத்திமுத்தி யாகுமே. (உஎக)

வாசியாகி நேசமொன்று வந்தெதிர்ந்த தென்னுக
நேசமாக நாளுலாவ நன்மைசேர் பவங்களில்
வீசிமேல் நிமிர்ந்ததோளி யில்லையாக்கி னுய்கழல்
ஆசையால் மறக்கலா தமரராக லாகுமே. (உஎஉ)

எளியதான காயமீதி லெம்பிரா னிருப்பிடம்
அளிவுறாது நின்றதே அகாரமும் உகாரமும்
கொளுகையான சோதியுங் குலாவிநின்ற தவ்விடம்
வெளியதாகு மொன்றிலே விளைந்ததே சிவாயமே. (உஎங)

அஞ்செழுத்து மூன்றெழுத்து மென்றுரைக்கு மன்பர்கா
அஞ்செழுத்து மூன்றெழுத்து மல்லகாணு மப்பொருள்
அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி யவ்வெழுத் தறிந்தபின்
அஞ்செழுத்து மூன்றெழுத்து மவ்வுமாஞ்சிவாமே. (உஎச)

பொய்யுரைக்க போதமென்று பொய்யருக் கிருக்கையால்
மெய்யுரைக்க வேண்டுதில்லை மெய்யர்மெய்க் கிலாமையால்
வையகத்தி லுண்மைதன்னை வாய்திறக்க வஞ்சினேன
நையவைத்த தென்கொலோ நமசிவாய நாதனே. (உஎரு)

ஒன்றையொன்று கொன்றுட னுணவுசெய் திருக்கினும்
மன்றுளோடு பொய்களவு மாறுவேறு செய்யினும்
பன்றிதேடு மீசனைப் பரிந்துகூட வல்லிரேல்
அன்றுதேவ ரும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே. (உஎசு)

மச்சகத்து ளேயிவர்ந்து மாயைபேசும் வாயுவை
அச்சகத்து ளேயிருந் தறிவுணர்த்திக் கொள்விரே
அச்சகத்து ளேயிருந் தறிவுணர்த்தி கொண்டபின்
இச்சையற்ற வெம்பிரா னெங்குமாகி நிற்பனே. (உஎஎ)

வயலிலே முளைத்தசெந்நெல் களையதான வாறுபோல்
உலகிலேரும் வண்மைகூறி லவ்வுமாற தங்ஙனே
விரகிலே முளைத்தெழுந்த மெய்யலாது பொய்யதாய்
நரகிலே பிறந்திருந்து நாபெட்ட பாடதே. (உஎஅ)

ஆடுகின்ற வெம்பிரானை யங்குமங்கு மென்றுநீர்
தேடுகின்ற பாவிகாள் தெளிந்ததொன்றை யோர்கிலீர்
காடுநாடு வீடுவீண் கலந்துநின்ற கள்வனை
நாடியோடி யும்முளே நயந்துணர்ந்து பாருமே. (உஎக)

ஆடுகின்ற வண்டர்கூடு மப்புற மதிப்புறம்
தேடுநாலு வேதமுந் தேவரான மூவரும்
நீடுவாழி பூதமும் நின்றதோர் நிலைகளும்
ஆடுவாழி னொழியலா தனைத்துமில்லை யில்லையே. (உஅ0)

ஆவதும் பரத்துளே புகுவதும் பரத்துளே
போவதும் பரத்துளே யழிவதும் பரத்துளே
தேவரும் பரத்துளே திசைகளும் பரத்துளே
யாவரும் பரத்துளே யானுமப் பரத்துளே. (உஅக)

எழுபது மெழுகடலி பங்களெட்டு வெம்புடன்
சூழுவான் கிரிகடந்து சொல்லுமே முலகமும்
பூழிமால் விசும்புகொல் பிரமாண்டரண்ட வண்டமும்
ஊழியா னொளிக்குளே யுதித்துட னொடுங்குமே. (உஅஉ)

கயத்துநீ ரிறைக்கிறீர் கைகள்சோர்ந்து நிற்பதேன்
மனத்துளீர மொன்றிலாத மதியிலாத மாந்தர்காள்
அகத்துளீரங் கொண்டுநீ ரழுக்கறுக்க வல்லிரேல்
நினைத்திருந்த சோதியும் நீயுமானு மொன்றரோ. (உஅங)

நீரிலே பிறந்திருந்து நீர்சடங்கு செய்கிறீர்
ஆரையுன்னி நீரெலா மவத்திலே யிறைக்கிறீர்
வேரையுன்னி வித்தையுன்னி வித்திலே முளைத்தெழுஞ்
சீரையுன்ன வல்லிரேற் சிவபத மடைவீரே. (உஅச)

பத்தொடத்த வாசலிற் பரந்துமூலவக்கர
முத்திசித்தி தொந்தமென் றியங்குகின்ற மூலமே
மத்தசித்த வைப்புலன் மகாரமான கூத்தையே
அத்தியூரர் தம்முளே யமைந்ததே சிவாயமே. (உஅரு)

அறிவிலேனு மண்டமா யளவிடாத சோதியை
குணமதாகி யும்முளே குறித்திருக்கில் முத்தியா
முணமுமென்று மும்முளே விரலையொன்றி மீளவும்
நினைந்தினை மயச் நவீர் செம்புபூசை பண்ணியே. (உ௬௬)

மூலமான வக்கர முகப்பதற்கு முன்னெலாம்
மூடமாக மூடுகின்ற மூடமேது மூடரே
காலனை வருந்த மந்திலே யொடுங்கினும்
ஆதியோடு கூடுமோ வனாதியோடு கூடுமோ (உ௬௭)

மூச்சுர மூலமாகி முடிவுமாகி யோகமாய்
அச்சர மாகியே யடங்கியோ ரெழுத்துமாய்
மெய்ச்சரமெய்யுளே விளங்குஞான தீபமாய்
உச்சரிக்கு மந்திரத்தி னுண்மையே சிவாயமே. (உ௬௮)

வண்டலங்கள் போலுநீர் மனத்துமா சறுக்கிலீர்
குண்டலங்கள் போலுநீர் குளத்திலே முழுகுநீர்
பண்டுமுங்கள் நான்முகன் பறந்து தேடி காண்கிலான்
கண்டிருக்கு மும்முளே கலந்திருப்பர் காணுமே. (உ௬௯)

நின்றதன் றிருந்ததன்று நேரிதன்று கூறிதன்று
பந்தமன்று வீடுமன்று பரவசங்க ளற்றது
கெந்தமன்று கேள்வியன்று கேடிலாத வானிலே
அந்தமன்றி நின்றதொன்ற தெங்ஙனே யுரைப்பதே. (உ௭௰)

பொருந்துநீரு மும்முளே புகுந்துநின்ற காரணம்
ஒருதிரண்டு கன்றையீன்ற வேகமொன்றை யோர்கிலீர்
அருகிருந்த சாவுகின்ற யானையையு மறிந்திலீர்
குருவிருந்து லாவுகின்ற கோலமென்ன கோலமே. (உ௭௧)

அம்பரத்து ளாகின்ற வஞ்செழுத்து நீயலோ
இம்பளாய் பரந்துநின்ற சிற்பரமு நீயலோ
எம்பிரானு மெவ்வுயிர்க்கு மேகபோக மாதலால்
எம்பிரானு நானுமா யிருந்ததே சிவாயமே. (உ௭௨)

ஏரொளிய திகைகளே யியங்கிநின்ற தற்பரம்
பேரொளிய திகைகளே யாவரு மறிகிலீர்
காரொளிய படலமுங் கடந்துபோன தற்பரம்
பேரொளிப் பெருமைபத பேசநா பாதமே. (௨௨௧)

கொள்ளொணாது மெல்லொணாது போதறக் குகட்டொணு
தள்ளொணாது தனுங்கொணாது காழலான் மனத்துளே
சொல்லொணாது தெளியொணாச் சிற்றாந்தி னுட்டயன்
விள்ளொணாது பொருளைநான் விளம்புமா றெங்ஙனே ()

வாக்கினால் மனத்தினால் மதித்தகா ரணத்தினால்
நோக்கொணாதநோக்கையுன் னிநோக்கையாவர்நோக்குவார்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கநோக்க நோக்கிடில்
நோக்கொணாத நோக்குவந்து நோக்கையெங்க ணேக்குமே.

உள்ளினும் புறம்பினு முலகமெங்க ணும்பரந்
தெள்ளிவெண்ணெய் போலநின் றியங்குகின்ற வெம்பிரான்
மெள்ளவந்தெ னுட்புகுந்து மெய்த்தவம் புரிந்தபின்
வள்ளலென்ன வள்ளுளக்கு வண்ணமென்ன வண்ணமே. ()

வேதமொன்று கண்டிலேன் வெம்பிறப்பி லாமையாய்
போதநின்ற வடிவதாய்ப் புவனமெங்கு மாயினாய்
சோதியுள் ளொளியுமாய்த் துரியமோ டதீதமாய்
ஆதிமூல மாதியா யமைந்ததே சிவாயமே. (௨௯௭)

சாணிரு மடங்கினாற் சரிந்தகொண்டை தன்னுளே
பேணியப் பதிக்குளே பிறந்திறந் துழலுவீர்
தோணியான வைவரத் துறந்தறுக்க வல்லிரேல்
காணிகண்டு கோடியாகக் கலந்ததே சிவாயமே. (௨௯௮)

அஞ்சுகோடி மந்திர மஞ்சுளே யடங்கினால்
நெஞ்சுகூற வும்முளே நினைப்பதோ ரெழுத்துளே
அஞ்சுநாலு மூன்றதாகி யும்முளே யடங்கினால்
அஞ்சுமோ ரெழுத்ததா யமைந்ததே சிவாயமே. (௨௯௯)

அக்கரந்த வக்கரத்தி லுட்கரந்த வக்கரம்
சக்கரத்த சிவ்வையுண்டெ·க்ம்பளத் திருந்ததும்
எட்கரந்த வெண்ணெய்போ லெவ்வெழுத்து மெம்பிரான்
உட்கரந்து நின்றநேர்மை யாவர்காண வல்லரே. (கூ00)

ஆகமத்தி னுட்பொரு ளகண்டமூல மாதலால்
தாகபோக மன்றியே தரித்ததற்பரமுநீ
ஏகமாதம் வைத்தனை யுணர்த்துமஞ் செழுத்துளே
ஏகபோக மாகியே யிருந்ததே சிவாயமே. (கூ0க)

மூலவாசல் மீதுளே முச்சதுர மாகியே
நாலுவாச லெண்விரல நடுவுதித்த மந்திரம்
கோலமொன்று மஞ்சமாகு மிஙகலந்து நின்றநீ
வேறுவேறு கண்டிலேன் விளைந்ததே சிவாயமே. (கூ0உ)

சுக்கிலத் திடியுளே சுழித்ததோ ரெழுத்துளே
அக்கரத் திடியுளே யமர்ந்தவாதி சோதிநீ
உக்கரத் தடியுளே யுணர்ந்தவஞ் செழுத்துளே
அக்கரம தாகியே யமர்ந்ததே சிவாயமே. (கூ0கூ)

குண்டலத்து ளேயுளே குறித்தகத்து நாயகன்
கண்டவந்த மண்டலங் கருததழித்த கூத்தனை
விண்டலர்ந்த சந்திரன் விளஙகுகின்ற மெய்ப்பொருள்
கண்டுகொண்ட மண்டலஞ் சிவாயமல்ல தில்லையே. (கூ0ச)

சுற்றுமைந்து கூடமென்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவனுமாக நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ தும்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்கா ளறிந்திலீர் பிராணிருந்த கோலமே. (கூ0ரு)

மூலமென்ற மந்திர முளைத்தவஞ் செழுத்துளே
நாலுவேத நாவுளே நவின்றஞான மெய்யுளே
ஆலமுண்ட கண்டனு மரியயனு மாதலால்
ஓலமென்ற மந்திரஞ் சிவாயமல்ல தில்லையே. (கூ0சு)

தந்துவங்க ளென்றுநீர் தமைக்கழுந்து போவீர்காள்
த[illegible]வுஞ் சிவம[illegible]ாகில் தற்பரமு நீரல்லோ
முத்தசீவ ஞூதமே மூலபாதம் [illegible]வத்தபின்
அத்தனூரு மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே. (௩0௭)

மூன்றுபத்து மூன்றையு மூன்றுசொன்ன மூலனே
தோன்றுசேர ஞானிகள் துய்யபாத மென்றலே
ஏன்றுவைதத வைத்தபின் னியம்புமஞ் செழுத்தையும்
தோன்றவோத வல்லிரேல் துய்யசோதி காணுமே. (௩0அ)

உம்பர்வான கத்தினு முலகபார மேழினும்
நம்பர்நாடு தன்னினு நாவலென்ற தீவினும்
செம்பொன்மாட மல்குதில்லை யம்பலத்து ளாடுவான்
எம்பிரான லாதுதெய்வ மில்லையில்லை யில்லையே. (௩0௯)

ரய வைந்துமாய் புனலில்நின்ற நான்குமாய்
தீயிலாய மூன்றுமாய் சிறந்தகா லிரண்டுமாய்
வேயிலாய தொன்றுமாய் வேறுவேறு தன்மையாய்
நீயலாமல் நின்றநேர்மை யாவர்காண வல்லரே. (௩௧0)

அந்தரத்தி லொன்றுமா யசைவுகா லிரண்டுமாய்
செந்தழலில் மூன்றுமாய்ச சிறந்தவப்பு நான்குமாய்
ஐந்துபாரி லைந்துமா யமர்ந்திருந்த நாதனை
சிந்தையிற் றெளிந்தமாயை யாவர்காண வல்லரே. (௩௧௧)

மனவிகார மற்றுநீர் மதித்திருக்க வல்லிரேல்
நினைவிலாத மணிவிளக்கு நித்தமாகி நின்றிடும்
அனைவரோதும் வேதமும் மகம்பிதற்ற வேணுமேற்
கனவுகண்ட துண்மைநீர் தெளிந்ததே சிவாயமே. (௩௧௨)

இட்டகுண்ட மேதடா விருக்குவேத மேதடா
சுட்டமட் கலத்திலே சுற்றுநூல்க ளேதடா
முட்டிநின்ற தூணிலே முளைத்தெழுந்த சோதியை
பற்றிநின்ற தேதடா பட்டநாத பட்டரே. (௩௧௩)

நீரிலே முளைத்தெழுந்த தாமரையி னோரிலை
நீரினோடு கூடிநின்று நீரிலா தவாறுபோல்
பாரிலே முளைத்தெழுந்த பண்டிதப் பராபரம்
பாரினோடு கூடிநின்ற புண்புகண் டிருப்பிரே. (௩௧௪)

உறங்கிலென் விழிக்கிலென் னுணர்வுசென் றொடுங்கிலென்
சிறந்தவைம் புலன்களுந் திசைத்திசைக ளொன்றிலென்
புறம்புமுள்ளு மெங்கணும் பொருந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகாள் நினைப்பதேது மில்லையே. (௩௧௫)

ஓதுவார்க ளோதுகின்ற வோரெழுத்து மொன்றதே
வேதமென்ற தேகமாய் விளம்புகின்ற தன்றிது
நாதமொன்று நான்முகன் மாலுநாலு மொன்றதே
ஏதுமன்றி நின்றதொன்றை யாருணர்ந்த நேர்மையே. ()

பொங்கியே தரித்தவசசு புண்டரீக வெளியிலே
தங்கியே தரித்தபோது தாதுமா துளையதாம்
அங்கியுட் டரித்தபோது வடிவுகளொளியுமாய்க்
கொம்புமேல் வடிவுகொண்டு குருவிருந்த கோலமே. (௩௧௭)

மண்ணுளோரும் விண்ணுளோரும் வந்தவார தெங்கெனில்
கண்ணினோடு சோதிபோற் கலந்தநாத விந்துவும்
அண்ணலோடு சத்தியு மஞ்சுபஞ்ச பூதமும்
பண்ணினோடு கொடுத்ததழிப் பாரொடேழு மின்றமே. ()

ஒடுக்குகின்ற சோதியு முந்திநின்ற வொருவனும்
நடுத்தலத்தி லொருவனும் நடந்துகாலி லேறியே
விடுத்துநின்ற விருவரோடு மொய்யினோடு பொய்யுமாய்
அடுத்துநின் றறிகினோ வறுதிநின்ற வாதியே. (௩௧௯)

உதித்தமந் திரத்தினு மொடுங்குமக் கரத்தினும்
மதித்தமண் டலத்தினு மறைந்துநின்ற சோதிநீ
மதித்தமண் டலத்துளே மரித்துநீ ரிருந்தபின்
இருந்தமண் டலத்துளே பிறந்ததே சிவாயமே. (௩௨௰)

திருத்திவைத்த சற்குருவைச் சீர்பெற வணங்கிலீர்
குருக்கொடுக்கும் பித்தரே கொண்டுநீந்த வல்லிரோ
குருக்கொடுக்கும் பித்தருங் குருக்கொள்வந்த சீடனும்
பருத்திப்பட்ட பாடுதான் பன்னிரண்டும் பட்டதே. (௩௨௧)

விழித்தகண் துதிக்கவும் விந்துநாத வோசையும்
மேருவுங் கடந்தவண்ட கோளமுங் கடந்துபோய்
எழுத்தெலா மறிந்துவிட்ட விந்திரஞால வெளியிலே
* யானுநீயு மேகலந்த தென்னதொன்மை யீசனே (௩௨௨)

ஓம்நமா வென்றுளே யுண்மையென் றறிந்தபின்
பானுடற் கருத்துளே பாவையென் றறிந்தபின்
நானுநீயு முண்டடா நலங்குலந் துண்டடா
ஊனுமூனு மொனமமே யுணர்ந்திடாயெனக்குளே. (௩௨௩)

ஐம்புலனை வென்றவர்க் கன்னதான மீவதாய்
நன்புலன்க ளாகிநின்ற நாதருக்க தேறுமோ
ஐம்புலனை வென்றிடா தவத்தமே யுழன்றிடும்
வம்பருக்கு மீவதுவ கொடுப்பது மவத்தமே. (௩௨௪)

ஆகியான வைம்புலன்க ளவையுமொக்கு ளொக்குமோ
யோனியிற பிறந்திருந்த துன்பமிக்கு மொக்குமோ
வீணர்காள் பிதற்றுவீர் மெய்ம்மையே யுணர்த்திரேல்
ஊனுறக்க போகமு முமக்கெனக்கு மொக்குமே. (௩௨௫)

ஓடுகின்ற வைம்புல னொடுங்கவுஞ் செழுத்துளே
நாடுகின்ற நான்மறை நவிலுகின்ற ஞானிகாள்
கூடுகின்ற கண்டித குணங்கள்மூன் றெழுத்துளே
ஆடுகின்ற பாவையா யமைந்ததே சிவாயமே. (௩௨௬)

புவனசக் கரத்துளே பூதநாத வெளியிலே
பொங்குதீப வக்கியுள் பொதிந்தெழுந்த வாயுவைத்
தவனசோம ரிமுவருந் தாமியங்கும் வாசலில்
தண்டுமாறி யேறிநின்ற சரசமான வெளியிலே. (௩௨௭)

* இருளை வெல்பவர்களுக் கெழுபிறப்பு மில்லையே.

மவுனமஞ் செழுத்திலே வாசியேறி மெள்ளவே
வானளாய் நிறைந்தசோதி மண்டலம் புகுந்தபின்
அவனுநானு மெய்கலந் தனுபவித்த வளவிலே
அவனுமுண்டு நானுமில்லை யாருமில்லை யானதே. (நஉஅ)

வாளுறையில் வாளடக்கம் வாயுரையில் வாய்விடக்கம்
ஆளுறையில் ஆளடக்கம் அருமையென்ன வித்தைகாண்
தாளுறையில் தாளடக்கம் தன்மையான தன்மையும்
நாளுறையில் நாளடக்கம் நானுநீயுங் கண்டதே. (நஉக)

வழுத்திடா னழித்திடான் மாயரூப மாகிடான்
கழன்றிடான் வெகுண்டிடான் காலகால காலமும்
திவண்டிடா னசைந்திடான் றாயதாப மாகிடான்
சவன்றிடா னுரைத்திட்டான் சூக்ஷ சூக்ஷ சூக்ஷமே. (நநம)

ஆதிகூடென் றேயுரைத்த வக்ஷரத்தி னுனந்தம்
யோகியோகி யென்பர்கோடி யுற்றறிந்து கண்டிடார்
பூசமாய் மனக்குரங்கு பொங்குமங்கு மிங்குமாய்
ஏகமேக மாகவே யிருப்பர்கோடி கோடியே. (நநக)

கோகோடி கோடிகோடி குவலயத்தோ ராதியை
நாடிநாடி நாடிநாடி நாளகன்று வீணதாய்
தேடிதேடி தேடிதேடி தேகமுங் கசங்கியே
கூடிகூடி கூடிகூடி நிற்பர்கோடி கோடியே. (நநஉ)

கருத்திலான் வெளுத்திலான் பாவிருந்த காரணம்
இருத்திலா னொளித்திலா னெவ்வம்ரண்டு மாகிலான்
ஒருத்திலான் மரித்திலா னெழுந்திடா னழிந்திடான்
கருத்திற்கியுங் கூவுமுற்றோன் கண்டறிந்த வாதியே. (நநந)

வாதிவாதி வாதிவாதி வண்டலை யறிந்திடான்
ஊதியூதி யூதியூதி யொளிமழுங்கி யுளறுவான்
வீதிவீதி வீதிவீதி விடையெருப் புரக்குவோன்
சாதிசாதி சாதிசாதி சாகரத்தைக் கண்டிடான். (நநச)

ஆண்மையாண்மையாண்மையாண்மை ஆண்மைகூறுமசடரே
காண்மையான வாதிரூபங் காலகால காலமும்
பாண்மையாகி மோனமான பாசமாகி நின்றிடும்
நாண்மையான நாலைவாயில் நங்குமிங்கு மங்குமே. (கநரு)

மிங்குமென்ற வட்சரத்தின் மீட்டுவாகி கூவுடன்
துங்கமாகச சோமனோடு சோமன்மாறி நின்றிடும்
அங்கமா முனைசசுழியி லாகுமேக வாகையாய்
கங்குலற்றுக் கியானமுற்று காணுவாய் சுடரொளி. (கநசா)

சுடரெழும்புஞ் சூட்சமுஞ் சுழிமுனையின் சூட்சமும்
அடரெழும்பி யேகமாக வமர்ந்துநின்ற சூட்சமுந்
திடரதான சூட்சமுந் திரியின்வாலை சூட்சமுங்
கடலெழும்பு சூட்சந்தல்னை கண்டறிந்தோன் ஞானியே. ()

ஞானிஞானி யென்றுரைத்த நாய்கள்கோடி கோடியே
வானிலாத மழைநானென்ற வாதிகோடி கோடியே
தானிலான சாகரத்தின் தன்மைகாணு மூடர்கள்
மூனிலாமற் கோடிகோடி முன்னறிந்த தென்பரே. (கநஎ)

சூக்ஷமான கொம்பிலே சுளிமுனைச சுடரிலே
வீசசமான வீயிலே விபுலைதங்கும் வாயிலே
கூசசமான கொம்பிலே குடியிருந்த கோவிலே
தீக்ஷையான தீவிலே சிறந்ததே சிவாயமே. (கநகூ)

பொங்கிநின்ற மோனமும் பொதிந்துநின்ற மோனமுந்
தங்கிநின்ற மோனமுந் தயங்கிநின்ற மோனமுங்
கங்கையான மோனமுங் கதித்துநின்ற மோனமுந்
திங்களான மோனமுஞ் சிவனிருந்த மோனமே. (கச0)

மோனமான வீதியில் முனைச்சுழியில் வாலையில்
பானமான வீதியில் பகிர்ந்தசெஞ் சுடரிலே
ஞானமான மூலையில் நாலைதங்கும் வாயலில்
ஊனமான செஞ்சுட ருதித்ததே சிவாயமே. (கசக)

உதித்தெழுந்த வாலையு முயங்கிநின்ற வாலையுங்
கதித்தெழுந்த வாலையுங் காலையான வாலையும்
மதித்தெழுந்த வாலையு மறைந்துநின்ற ஞானமுங்
கொதித்தெழுந்து கும்பலாகி ஓம்நமசிவாயமானதே. (௧௪௨)

கூவுங்கியு மோனமாகி கொள்கையான சொள்கையை
மூவுலே யுதித்தெழுந்த முச்சுடா விரிவிலே
பூவிலே நறைகள்போற் பொருந்திநின்ற பூரணம்
ஆவியாவி யாவியாவி யன்பருள்ள முற்றதே. (௧௪௩)

ஆண்மைகூறு மாந்தரே அருக்கனோடும் வீதியைக்
காண்மையாகக் காண்பிரேல் கசடறாத பல்லிரே
தூண்மையான வாதிருட்சஞ் சோபமாகு மாகுமே
நாண்மையான வாயலில் நடிந்துநின்ற நாதமே. (௧௪௪)

நாதமான வாயலில நடிந்துநின்ற சாயலில
வேதமான வீதியில் விரிந்துமுச்சுடரிலே
கீதமான ஓமியிலே கிளர்ந்துநின்ற கவிலே
பூதமான வாயலைப் புகலறிவ ரறியே. (௧௪௫)

ஆவியாவி யாவியாவி ஐந்துகொம்பி னாவியே
மேவிமேவி மேவிமேவி மேதினியின் மானிடர்
வாவிவாவி வாவிவாவி வண்டறத வறிந்திடார்
பாவிபாவி பாவிபாவி படியிலாற மாந்தரே. (௧௪௬)

வித்திலே முளைத்தசோதி வில்வளைவின் மத்தியில
உத்திலே யொளிவதாகி மோனமான தீபமே
நத்திலோதி ரசசிபோன்ற நாதனை யறிந்திடார்
வத்திலே கிடந்துழன்ற வாலையான சூட்சமே (௧௪௭)

வாலையோடு காலையுட வடிந்துபோகு மோனமே
மாலையோடு காலையான வாறறிந்த மாந்தரே
மூலையான கோணமின் முளைத்தெழுந்த செஞ்சுடர்
தாலையோடு பானகன்று தங்கிநின்ற மோனமே. (௧௪௮)

சுடரதாகி யெழும்பியங்கு தூபமான காலமே
இடரதாய்ப் புவியும்விண்ணு மேகமா யமைக்குமுன்
படரதாக நின்றவாதி பஞ்சபூத மாகியே
அடரதாக அண்டமெங்கு மாண்மையாக நின்றதே. (ருகசு)

நின்றிருந்த சோதியை நிலத்திலுற்ற மானிடர்
கண்டறிந்து கண்குளிர்ந்து காதலுற் றுலாவுவோர்
கண்டமுற்ற மேன்முனையின் காட்சிதன்னைக் காணுவார்
நன்றியற்று நரலைபொங்கி நாதமு மகிழ்ந்திடும். (ருகஎ

வயங்குமோனச் செஞ்சுடர் வடிந்தசோதி நாதமுங்
கயங்கள்போலக் கதறியே கருவூரற்ற வெளியிலே
பயங்கொடின்றி யீன்றியே படர்ந்துநின்ற பான்மையே
நயங்கள்கோவென் றேநடுங்கி நங்கையான தீபமே. (ருகஅ)

தீபவுச்ச முனையிலே திவாகரத்தின் சுழியிலே
கோபமாறு கூவிலே கொதித்துநின்ற தீயிலே
தாபமான மூலையிற் சமைந்துநின்ற சூக்ஷமுஞ்
சாபமான மோட்சமூந் தடிதநின் றிலங்குமே. (ருகக)

தேசிகன் சுழன்றதே திரிமுனையின் வாலையில்
வேசமோடு வாலையில் வியனிருந்த மூலையில்
நேசசக்தி ரோதைய நிறைந்திருந்த வாரமில்
வீசிவீசி நின்றதே விரிந்துநின்ற மோனமே. (ரு௰)

உட்கமல மோனமி லுயங்கிநின்ற நந்தியை
விக்கலோடு கியுமாகி வில்வளைவின் மத்தியில்
பட்டொதிர்ந்த தென்னவே முடிகிநின்ற செஞ்சுடர்
ட்குவைகள் போலவுங் கடிந்துநின்ற காட்சியே. (உகக)

உந்தியிற் சுழிவழியி லுச்சியுற்ற மத்தியிற்
சந்திர னொளிகிரணந் தாண்டிநின்ற செஞ்சுடர்
ந்தமாக வில்வளையிற் பஞ்சபூத விஞ்ஞையாங்
செந்துபோற் கியல்கின்று கீச்சுமூச்சு வென்றதே. (ருகஉ)

செச்சையென்ற மூச்சினோடு சிகாரமும் வகாரமும்
பச்சையாகி நின்றதே பரவெளியின் பான்மையே
இச்சையான ஹாவிலே யிருந்தெழுந்த ஹீயிலே
உச்சியான கோணத்தி லுதித்ததே சிவாயமே. (௩௱௬௩)

ஆறுமூலக் கோணத்தி லமைந்தவொன்ப தாத்திலே
நாறுமென்று சங்கையான நாவியுந் தெரிந்திட
கூறுமென்று ஐவராங்கு கொண்டுநின்ற மோனமே
பாறுகொண்டு நின்றது பறந்ததே சிவாயமே. (௩௱௬௪)

பறந்ததே கறந்தபோது பாச்சலூர் வழியிலே
பிறந்ததே பிராணனன்றிப் பெண்ணுமாணு மல்லவே
துறந்ததோ சிறந்ததோ தூயதுங்க மானதோ
இறந்தபோதி லன்றிஈ இலங்கிடுஞ் சிவாயமே. (௩௱௬௫)

அருளிருந்த வெளியிலே அருக்கனின்ற விருளிலே
பொருளிருந்த சுழியிலே புரண்டெழுந்த வழியிலே
தெருளிருந்த கலையிலே தியங்கிநின்ற வலையிலே
குருவிருந்த வழியினின்று ஹாவுங்ஹீயு மானதே. (௩௱௬௬)

ஆனதோ ரெழுத்திலே யமைந்துநின்ற வாதியே
கானமோடு தாலமீதிற் கண்டறிவ தில்லையே
தானுந்தானு மானதே சமைந்தவாலை காலையில்
வேனலோடும் வாறுபோல் விரிந்ததே சிவாயமே. (௩௱௬௭)

ஆறுகொண்ட வாரியு மமைந்துநின்ற தெய்வமுந்
தூறுகொண்ட மாரியுந் துலங்கிநின்ற தூபமும்
வீறுகொண்ட மோனமும் விளங்குமுட் கமலமும்
மாறுகொண்ட ஹூவிலே மடிந்ததே சிவாயமே. (௩௱௬௮)

வாயல்கண்ட கோணமில் வயங்குமைவர் வைகியே
சாயல்கண்டு சார்ந்ததுந் தலைமன்னு ருறைந்ததுங்
காயவண்டு கண்டதுங் கருவூரங்கு சென்றதும்
பாயுமென்றீ சென்றதும் பறந்ததே சிவாயமே. (௩௱௬௯)

பறந்ததே துறந்தபோது பாச்சலூர் வழியிலே
மறந்ததே கவ்வுமுற்ற வாணர்கைபின் மேவியே
பிறந்ததே யிறந்தபோதிற் படிடாமற் றிபிலே
சிறந்துநின்ற மோனமே தெளிந்ததே சிவாயமே. (௧௭௦)

வடிவுபற்ப வாசனத் திருத்தமூல வனலையே
மாருதத்தி னலெழுப்பி வாசலைந்து நாலையே
முடிவுமுத்தி னைப்படுத்தி மூலவீணை தண்டிலே
முளரியால யங்கடந்து மூலநாடி யூடுபோய். (௧௭௧)

அடிதுவக்கி முடியளவு மாறுமா நிலங்கடந்
தப்புறத்தில் வெளிகடந்த வாதியெங்கள் சோதியை
யுடபதிக்க ணமுதருந்தி யுண்மைஞான வுவகையுள்
உச்சிபட்டி றங்குகின்ற யோகிநல்ல யோகியே. (௧௭௨)

மந்திரங்க ளுண்டுநீர் மயங்குகின்ற மானிடர்
மந்திரங்க ளாவது மறத்திலூற லன்றுகாண்
மந்திரங்க ளாவது மதித்தெழுந்த வாயுவை
மந்திரத்தை யுண்டவர்க்கு மரணமேது மில்லையே. (௧௭௩)

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
சூந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதித்தநீரு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்தினைந் தெழுத்துமே. (௨௭௪)

உள்ளதோ பிறப்பதோ வுயிரொடுங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டிநீர் வினவவேண்டு மென்கிறீர்
உள்ளதும் பிறப்பதும் மொத்தபோது நாதமாங்
கள்ளவாச லைத்திறந்து காணவேண்டு மாந்தரே. (௪௭௫)

ஓரெழுத்தி லிங்கமா யோதுமட் சரத்துளே
ஓரெழுத்தி யங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்து மூவராய் மூளைத்தெழுந்த சோதியை
நாவெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே. ௧௭௬)

முத்திசித்தி தொந்தமா முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வப்புனல்க ளாகுமத்தி மப்புலன்
அத்தரித்தர் காளகண்ட ரன்பினு லனுதினம்
உச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே. (௫௭௭

மூன்றிரண்டு மைந்துமாய் முயன்றெழுந்த தேவராய்
மூன்றிரண்டு மைந்ததாய் முயன்றதே யுலகெலாம்
ஈன்றதாயு மப்பனு மியங்குகின்ற நாதமாய்
தோன்றுமோ ரெழுத்தினோடு சொல்லவொன்று மில்லையே.

வெளியுருக்கி யஞ்செழுத்து விந்துநாத சத்தமுந்
தளியுருக்கி நெய்கலந்து சகலசத்தி யானதும்
வெளியிலு மவ்வினையிலு மிருவரை யறிந்தபின்
வெளிகலந்த தன்மையால் தெளிந்ததே சிவாயமே. (௫௭௯)

முப்புறத்தி லப்புறம் முக்கணன் வினையிலே
சிற்பரத்து ளற்பனஞ் சிவாயமஞ் செழுத்துமாந்
தற்பரமுதித்து நின்று தானுமெங்கு மானபி
னிப்புற மொடெங்குமோடி யெங்கும்லிங்க மானதே. (௫௮0)

ஆடிநின்ற சீவனோ ரஞ்சுபஞ்ச பூதமோ
கூடிநின்ற சோதியோ குலாவிநின்ற மூலமோ
நாடுகண்டு நின்றதோ நாவுசுற்ற கல்வியோ
வீடுகண்டு விண்டிடின் வெட்டவெளியு மானதே. (௫௮0)

உருத்தரித்த போதுசிவ னேக்கநின்ற வுண்மையுந்
திருத்தமுள்ள தொன்றிலுஞ் சிவாயமஞ் செழுத்துமா
மிருத்துநின் றறுத்தடங்கி யேகபோக மானபின்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாதனே. (௫௮௧)

கருத்தரித் துதித்தபோது கமலபீட மானதுங்
கருத்தரித் துதித்தபோது காரணங்க ளானதுங்
கருத்தரித் துதித்தபோது கர்ணமிரண்டு கண்களாய்
கருத்தினின் றுதித்ததே கபாலமேந்து நாதனே. (௫௮௨

ஆனவன்னி மூன்றுகோண மாறிரண்டு எட்டிலே
யானசிவ னஞ்செழுத் தகாரமிட் டலர்ந்தது
மானசோதி யுண்மையு மனுதியான வுண்மையு
மானதான தானதா யவலமாய் மறைந்திடும். (உ௮௩)

ஈன்றெழுந்த வென்பிரான் றிருவரங்க வெளியிலே
நான்றபாம்பின் வாயினுல் நாலுதிக்கு மாயினுன்
மூன்றுமூன்று வளையமாய் முப்புரங் கடந்தபின்
னீன்றெழுந்த அவ்வினுேசை யெங்குமாகி நின்றதே. (௩௮௪)

எங்குமெங்கு மொன்றலோ வீரேழ்லோக மொன்றலோ
அங்குமிங்கு மொன்றலோ வனுதியான தொன்றலோ
தங்குதா பரங்களுந் தரித்துவார' தொன்றலோ
உங்களெங்கள் பங்கினி லுதித்ததே சிவாயமே. (௩௮௫)

அம்பரத்தி லாடுஞ்சோதி யானவன்னி மூலமா
மம்பரமுந் தம்பரமு மகோரமிட் டலர்ந்தது
மம்பரக் குளியிலே யங்கமிட் டொருக்கிட
வம்பரத்தி லாதியோ டமர்ந்ததே சிவாயமே. (௩௮௬)

வாடிலாத பூமலர்ந்து வண்டுரிசை நாவிலே
யோடிநின் றுருவெடுத் துவாரமா யலர்ந்தது
மாடியாடி யங்கமு மகப்படக் கடந்தபின்
கூடிநின் றுலாவுமே குருவிருந்த கோலமே. (௩௮௭)

விட்டடி விரைத்ததோ வேருருக்கி நின்றதோ
எட்டிநின்ற சீவனு மீரேழ்லோகங் கண்டதோ
தட்டுருவ மாகிநின்ற சதாசிவத் தொளியதோ
விட்டவீ டறிந்தபேர்கள் வானதேவ ராவரே. (௩௮௮)

வானவர் நிறைந்தசோதி மானிடக் கருவிலே
மானதேவ ரத்தனைக்குள் வந்தடைவர் வானவர்
வானகமு மண்ணகமும் வட்டவீ டறிந்தபின்
வானெலா நிறைந்துமன்னு மாணிக்கங்க ளானதே. (௩௮௯)

பன்னிரண்டு கால்நிறுத்திப் பஞ்சவர்ண முற்றிடின்
மின்னியே வெளிக்குணின்று வேரிடத் தமர்ந்ததுஞ்
சென்னியாந் தலத்திலே சீவனின் றியங்கிடும்
பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மானதே. (௩௯0)

உச்சிகண்டு கண்கள்கட்டி யுண்மைகண்ட தெவ்விடம்
மச்சுமாளி கைக்குளே மானிடங் கலப்பிரேல்
எச்சிலான வாசல்களு மேகபோக மாய்விடும்
பச்சைமாலு மீசனும் பரந்ததே சிவாயமே. (௩௯௧)

வாயிலிட்டு நல்லுரிசை யட்சரத் தொளியிலே
கோயிலிட்டு வாவியுமங் கொம்பிலே யுலர்ந்தது
மாயிலிட்ட காயமு மறுதியிட்ட சீவனும்
வாயுவிட்ட வன்னியும் வளர்ந்ததே சிவாயமே. (௩௯௨)

அட்சரத்தை யுச்சரித் தறுதியங்கி மூலமா
யட்சரத்தை யுந்திறந்த கோரமிட் டலர்ந்தது
மட்சரத்தி லுட்கர மகப்படக் கடந்தபின்
அட்சரத்தி லாதியோ டமர்ந்ததே சிவாயமே. (௩௯௩)

கோயிலுங் குளங்களுங் குளியினிற் குருக்களாய்
மாயிலு மடியிலு மனத்திலே மயங்குறீர்
ஆயனை யரனையு மறிந்துணர்ந்து கொள்விரேல்
தாயினுந் தகப்பனோடு தானமர்ந் தொக்குமே. (௩௯௪)

கோயிலெங்கு மொன்றலோ குளங்கணீர்க ளொன்றலோ
தேயுவாயு வொன்றலோ சிவனுமங்கே யொன்றலோ
ஆயசீவ னெங்குமா ரமர்ந்துவார தொன்றலோ
காயமீ தறிந்தபேர்கள் காட்சியாவர் காணுமே. (௩௯௫)

காதுகண்கள் மூக்குவாய் கலந்துவார தொன்றலோ
சோதியிட் டெடுத்ததுஞ் சகங்களஞ்சு மொன்றலோ
ஓதிவைத்த சாத்திர முதித்துவார தொன்றலோ
காதலீ டறிந்தபேர்க ளுதராவர் காணுமே. (௩௯௬)

அவ்வுதித்த வட்சரத்தி னுட்கலந்த வட்சரம்
சவ்வுதித்த மந்திரஞ் சம்புளத் திருந்ததால்
மவ்வுதித்த மாய்கையால் மயங்குகின்ற மாந்தர்காள்
உவ்வுதித்த தவ்வுமா யுருத்தரித்த வுண்மையே. (௯௭)

அகாரமென்னு மக்கரத்தி லக்கர மெழுந்ததோ
அகாரமென்னு மக்கரத்தி லவ்வுவந் துதித்ததோ
உகாரமு மகாரமு மொன்றிநின்று நின்றதோ
விகாரமற்ற ஞானிகாள் விரித்துரைக்க வேணுமே. (௯௮)

சத்திபாவ தன்னுடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் ரிதற்குமேல் பிதற்றுகின்ற தில்லையே
சுத்திஐந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்திசிவ மாகிநின்று தண்மையாவ துண்மையே. (௯௯)

சுக்கிலத் துளையிலே சுரோணிதக் கருவுளே
முச்சதுர வாசலில் முளைத்தெழுந்த மோட்டினில்
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமா
யுச்சரிக்கு மந்திரம் ஓம்நமசி வாயமே. (௧௦௦)

அக்கர மனாதியல்ல வாத்தும மனாதியல்ல
புக்கிருந்த பூதமும் புலன்களு மனாதியல்ல
தக்கமிக்க நூல்களுஞ் சாஸ்திர மனாதியல்ல
வொக்கநின் றுடன்கலந்த வுண்மைகா ணனாதியே. (௧௦௧)

மெண்மையாகி நின்றதேது விட்டுநின்ற தொட்டதேது
வுண்மையாக நீயுரைக்க வேணுமெங்க ளுத்தமா
மெண்மையாகி நின்றதொன்று விட்டுநின்ற தொட்டதை
யுண்மையா யுரைக்கமுத்தி யுட்சலத் திருந்ததே. (௧௦௨)

அடக்கினு மடங்குமோ வண்டமஞ் செழுத்துளே
யுடக்கினை யெடுத்தகாய முண்மையென் றுணர்ந்துநீ
சடக்கிலாறு வேதமுந் தரிக்கவோதி லாமையால்
விடக்குநாயு மாயவோதி வேறுவேறு பேசுமோ. (௧௦௩)

உண்மையான சக்கர முபாயமா யிருந்ததுந்
தண்மையான காயமுந் தரித்தரூப மானதும்
வெண்மையாகி நீறியே விளைந்துநின்ற தானது
முண்மையான ஞானிகள் விரித்துரைக்க வேண்டுமே ()

எள்ளகத்தி லெண்ணெய்போல வெங்குமாகி யெம்பிரா
னுள்ளகத்தி லேயிருக்க வூசலாடு மூடர்காள்
கொள்ளைபட்ட வாவினைக குணக்கெடுக்க வல்லிரேல்
வள்ளலாகி நின்றசோதி காணலாகு மெய்ம்மையே. (௨0௫)

வேணுமென்ற ஞானமும் விரும்புகின்ற நூலிலே
தாணுவுண்டங் கென்கிறீர் தரிக்கிலீர் மறக்கிலீர்
தாணுவொன்று மூலநாடி தன்னுள்நாடி யும்முளே
காணுமன்றி வேறியாவுங் கனமயக்க மொக்குமே. (௨0௬)

வழக்கிலே யுரைக்கிறீர் மனத்துளே தவிக்கிறீர்
உழக்கிலாத நாழியான வாறுபோல மூடர்காள்
உழக்குநாலு நாழியான வாறுபோலு மும்முளே
வழக்கிலே யுரைக்கிறீர் மனத்துளீசன் மன்னுமே. (௨0௭)

அறத்திறங்க ளுக்குநீ யண்டமெண் டிசைக்கும்நீ
திறத்திறங்க ளுக்குநீ தேடுவார்கள் சிந்தைநீ
யுறக்கம்நீ யுணர்வுநீ யுட்கலந்த சோதிநீ
மறக்கொணாத நின்கழல் மறப்பினுங் குடிகொளே. (௨0௮)

ஆடுகின்ற வெம்பிரானை யங்குமிங்கு நின்றுநீர்
தேடுகின்ற வீணர்காள் தெளிவதொன்றை யோர்கிலீர்
நாடிநாடி யும்முளே நவின்றுநோக்க வல்லிரேல்
கூடொணாத தற்பரங் குவிந்துகூட லாகுமே. (௨0௯)

சுத்தியைந்து கூடமொன்று சொல்லிறந்த தோர்வெளி
சத்தியுஞ் சிவமுமாகி நின்றதன்மை யோர்கிலீர்
சத்தியாவ துந்முடல் தயங்குசீவ னுட்சிவம்
பித்தர்காள் அறிந்துகொள் பிரானிருந்த கோலமே. (௨௧0)

அகாரமான தம்பலம் மனுதியான தம்பலம்
முகாரமான தம்பல முண்மையான தம்பல
மகாரமான தம்பலம் வடிவமான தம்பலஞ்
சிகாரமான தம்பலம் தெளிந்ததே சிவாயமே. (சகக)

சக்கரம் பறந்தோடி சக்கரமேல் பலகையாய்
செக்கிலாம லெண்ணெய்போல சிங்குவாயு தேயுவ
மூக்கிலே யொளிகலந்து யுகங்களும் கலக்கமாய்
புக்கிலே புகுந்தபோது போனவாற தெங்ஙனே. (சகஉ)

வளர்ந்தெழுந்த கொங்கைதன்னை மாயமென் றெண்ணிநீ
ரருள்கொள்சிவ ராருடம் புடைமையாகத் தோர்வீர்கள்
விளங்குஞான மேவியே மிச்சோர்சொல்லைக் கேட்பிரேல்
களங்கமற்று நெஞ்சுளே கருத்துவந்து புக்குமே. (சகங)

நாலுவேத மோதுகின்ற ஞானமொன் றறிவீரோ ,
நாலுசாம மாகியே நவின்றஞான போதமா
யாலமுண்ட கண்டனு மயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சுளே தரித்ததே சிவாயமே. (சகச)

சுற்றமென்று சொல்வதுஞ் சுருதிமுடிவில் வைத்திட
ரத்தசித்த மாடியே யமர்ந்திருந்த தெவ்விடம்
பத்திமுற்றி யன்பர்கள் பரத்திலொன்று பாழது
பித்தரே யிதைக்கருதி பேசலாவ தெங்ஙனே. (சகரு)

எங்ஙனேவி ளக்கதுக் கேற்றவாறு னின்றுதா
னெங்ஙனே யெழுந்தருளி யீசனேச ரென்பரே
சிங்கமண்மி யானைபோலத் திரிமலங்க ளற்றதே. (சகசு)

அற்றவுள் ளகத்தையு மலக்கிடு மெழுகிடு
மெத்தநீப மிட்டதிற்பிற வாதபூசை யெத்தியே
நற்றவம் புரிந்துலக நாதர்பாதம் நாடியே
கற்றிருப்ப தேசரிதை கண்டுகொள்ளு மும்முளே. (சகஎ)

பார்த்துநின்ற தம்பலம் பரமனாடு மம்பலங்
கூத்துநின்ற தம்பலங் கோரமான தம்பலம்
வார்த்தையான தம்பலம் வன்னியான தம்பலஞ்
சீற்றமான தம்பலந் தெளிந்ததே சிவாயமே. (சகஅ)

சென்றுசென் றிடந்தொறும் சிறந்தசெம்பொ னம்பலம்
அன்றுமின்று நின்றதோ ரனாதியான தம்பலம்
மொன்றியொன்று நின்றது ளொழிந்ததே சிவாயமே.

தந்தையாய் தமரும்நீ சகலதே வதையும்நீ
சிந்தைநீ தெளிவுநீ சித்திமுத்தி தானும்நீ
விந்துநீ விளைவுநீ மேலதாய வேதம்நீ
யெந்தைநீ யிறைவனீ யென்னையாண்ட வீசனே. (சஉ0)

எப்பிறப்பி லும்பிறந் திறந்தழிந்த வேழைகா
ளிப்பிறப்பி லும்பிறந்து என்னநீறு பூசுறீ
ரப்புடன் மலமறுத்து ஆசைநீக்க வல்லிரேல்
செப்புராத வோசையிற் றெளிந்துகாண லாகுமே. (சஉக)

மந்திரங்கள் கற்றுநீர் மயங்குகின்ற மாந்தரே
மந்திரங்கள் கற்றநீர் மரித்தபோது சொல்விரோ
மந்திரங்க ளும்முளே மதிக்கநீரு மும்முளே
மந்திரங்க ளாவது மனத்திலைந் தெழுத்துமே. (சஉஉ)

எட்டியோக மானது மியங்குகின்ற நாதமும்
மெட்வெக்க ரத்துளே உகாரமு மகாரமும்
விட்டலந்த மந்திரம் வீணாதண்டி னூடுபோ
யட்டவக்ஷ ரத்துளே யமர்ந்ததே சிவாயமே. (சஉந)

பிரான்பிரா னென்றுநீர் பினத்துகின்ற மூடரே!
பிரானைவிட்டு மெம்பிரான் பிரித்தவாற தெங்ஙனே
பிரானுமாய் பிரானுமாய் பேருலகு தானுமாய்
பிரானிலே முளைத்தெழுந்த பித்தர்கா ணும்முட

ஆதியில்லை யந்தமில்லை யானநாலு வேதமில்லை.
சோதியில்லை சொல்லுமில்லை சொல்லிறந்த தூவெளி
நீதியில்லை நேசமில்லை நிச்சயப் படாததும்
ஆதிகண்டு கொண்டபின்ன னஞ்செழுத்து மில்லையே. (௬௨௫)

அம்மையப்ப னப்பநீ ரமர்ந்தபோ து
ரம்மையப்ப னானநீ ராதியான பாசமே
யம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யானபின்
னம்மையப்ப னின்னையன்றி யாருமில்லை யில்லையே (௬௨௬)

நூறுகோடி மந்திரம் நூறுகோடி யாகமம்
நூறுகோடி நாளிருந்து டாடிநாலு மென்பயன்
ஆறுமாறு மாறுமா யகத்திலோ ரெழுத்ததாய்
நிறையோது வல்லிரேல் சிவபதங்கள் சேரலாம். (௬௨௭)

முந்தவோ ரெழுத்துளே முளைத்தெழுந்த செஞ்சுட
ரந்தவோ ரெழுத்துளே பிறந்துகாய மானது
மந்தவோ ரெழுத்துளே யேகமாகி நின்றது
மந்தவோ ரெழுத்தையு மறிந்துணர்ந்து கொள்ளுமே. (௬௨௮)

கூட்டமிட்டு நீங்களுங் கூடிவேத மோதுறீர்
ஏட்டகத்து ளீசனு மிருப்பதென் னெழுத்துளே
காட்டமிட்டு நாடிடு நாலுமூன்று தன்னுளே
யாட்டகத்து ளாடிடு மம்மையானை யுண்மையே. (௬௨௯)

காக்கைமூக்கை யாமையா லெடுத்துரைத்த காரணம்
நாக்கையூன்றி யுள்வளைத்து ஞானநாடி யூடுபோ
யேக்கைநோக்க வட்சர மிரண்டெழுத்து யேந்திடிற்
பார்த்தபார்த்த திக்கெலாம் பரப்பிரம மானதே. (௬௩0)

கொள்ளொணாது குவிக்கொணாது கோதறக் குலைக்கொணாது
அள்ளொணாது வறுகொணாது வாதிமூல மானதைத்
தெள்ளொணாது தெளியொணாது சிற்பரத்தி னுட்பயன்
விள்ளொணாதபொருளையான் விளம்புமாறதெங்ஙனே. (௬௩௧)

பூசையுள்ள கல்லைநீ ருடைத்திரண்டாய் செய்துமே
வாசலிற் பதித்தகல்லை மழுங்கவே மிதிக்கிறீர்
பூசனைக்கு வைத்தகல்லில் பூவும்நீருஞ் சாத்துறீர்
ஈசனுக் குகந்தகல் லெந்தக்கல்லு சொல்லுமே. (௩௨)

ஒட்டுவைத்து கட்டிநீ ருபாயமான மந்திரங்
கட்டுபட்ட போதிலுங் கர்த்தனங்கு வாழுமோ
எட்டுமெட்டு மெட்டுளே யியங்குகின்ற வாயுவை
வட்டமிட்ட யவ்விலே வைத்துணர்ந்து பாருமே. (௩௩)

இந்தவூரி லில்லையென்று எங்குநாடி யோடுறீ
ரந்தவூரி லீசனு மமர்ந்துவாழ்வ தெங்ஙனே
யந்தமான பொந்திலாரில் மேவிநின்ற நாதனை
யந்தமான சீயிலவ்வி லறிந்துணர்ந்து கொள்ளுமே. (௩௪)

புக்கிருந்த தும்முளே பூரிபிட்ட தோத்திரம்
தொக்குசக்க சிங்குவை யாக்கிராணன் சூழ்ந்திடி
லக்குமணி கொன்றைசூடி யம்பலத்து ளாடுவார்
மிக்கசோதி யன்புடன் விளம்பிடாது பின்னையே. (௩௫)

பின்னெழுந்த மாங்கிஷத்தை பேதையர்கண் பற்றியே
பின்புமாங் கிஷத்தில் போகமாய்கை பண்ணினால்
துன்புறும் வினைகள்தான் சூழ்கநெம்பி னென்றலோ
அன்பரா யிருந்தபேர்க ளாறுநீந்தல் போலவே. (௩௬)

விட்டிருந் தும்முளே விதனமற் றிருக்கிறீர்
கட்டிவைத்த வாசல்மூன்று காட்சியான வாசலொன்று
கட்டிவைத்த வாசலுங் கதவுதாள் திறந்துபோய்த்
திட்டமான வீசனைத் தெளியுமாங் கிஷந்ததுளே. (௩௭)

ஆருமாகு மாகுமே யனாதியான வப்பொருள்
ஏகர்பாதம் நாடிநாடி யெய்த்திருக்க வல்லிரேல்
பாருசேர் மொழியுமைக்குப் பாலனுகி வாழலாம்
வாருடனே வன்னியை மருவியே வருந்திடீர். (௩௮)

உண்மையான தொன்றதொன்றை யுற்றுநோக்கிதம்முளே.
வண்மையான வாசியுண்டு வாழ்த்தியேத்த வல்லிரேல்
தண்மைபெற் றிருக்கலாம் தவமும்வந்து நேரிடும்
கன்மதன்ம மாகுமீசர் காட்சிதானுங் காணுமே. (சங௧)

பாலனாக வேணுமென்று பத்திமுற்று மென்பரே
நாலுபாத முண்டதில் நனைந்திரண் டடுத்ததால்
மூலநாடி தன்னில்வன்னி மூட்டியந்த நீருண
ஏலவார் குழலியூடே யீசர்பாத மெய்துமே சசO

எய்துநின்னை யன்பினா லிறைஞ்சியேத்த வல்லிரே
லெய்துமுண்மை தன்னிலே யிறப்பிறப் பகற்றிடும்
மையிலங்கு கண்ணிபங்கன் வாசிவாணி லேறிமுன்
செய்தவல் வினைகளுஞ் சிதறுமது திண்ணமே (சசக)

திண்ணமென்று சேதிசொன்ன செவ்வியோர்கள் கேள்மினோ
யண்ணலன்பு ளன்புருகி யறிந்துநோக்கலாயிடும்
மண்ணதிர விண்ணதிர வாசியை நடத்திடில்
நண்ணியெங்க ளீசனும் நமதுட னிருப்பனே. (சசஉ)

இருப்பனெட்டெட் டெண்ணிலே யிருந்துவேற தாகுவன்
நெருப்புவாயு நீருமண்ணும் நீள்விசும்பு மாகுவன்
கருப்புகுந்து காலமே கலந்துசோதி நாதனைக்
குருப்புனலில் மூழ்கினோர் குறித்துணர்ந்து கொள்வரே. ()

கொள்ளுவார்கள் சிந்தையிற் குறிப்புணர்ந்த ஞானிகள்
விள்ளுவார்கள் பக்குவத்தில் வேண்டிவேண்டி யேத்தினால்
உள்ளுமாய் புறம்புமா யுணர்வதற் குணர்வுமாய்த்
தெள்ளிதாக நின்றசோதி செம்மையைத் தெளிந்திடே. ()

தெளிந்தநற் சரியைதன்னில் சென்றுசாலோ கம்பெறும்
தெளிந்தநற் கிரியைபூசை சேரலாஞ் சமீபமே
தெளிந்தநல் யோகந்தன்னில் சேரலாகுஞ் சாரூபந்
தெளிந்தஞானம் நான்கிலும் சேரலாஞ்சா யுச்சியமே.(சசரு)

சேருவார்கள் ஞானமென்று செப்புவார் தெளிவுளோர்
சேருவார்கள் நாலுபாதச் செம்மையென்ற தில்லையே
சேருவார்கள் சிவகதி திருவருளைப் பெற்றபேர்
சேறுமாறு கண்டுநாலுஞ் செய்தொழில் திடப்படே. (சஉஅ)

திறமலிக்கு நாலுபாதஞ் செம்மையுந் திறப்படார்
அறிவிலிகள் தேசநாடி யவத்திலே யலைவதே
குறியதனைக் காட்டியுட் குறித்துநோக்க வல்லிரேல்
வெறிகமழ் சடையுடையோன் மெய்ப்பத மடைவரே. (சஉஎ)

அடைவுளோர்கள் முத்தியை யறிந்திடாத மூடரே
படையுடைய தத்துவமும் பாதகங்க ளல்லவோ
மடைதிறக்க வாரியின் மடையிலேறு மாறுபோல்
உடலில்மூல நாடியை யுயரவேத்தி யூன்றிடே. (சஉஅ)

ஊன்றியேத்தி மண்டல முறுவிமூன்று தாள்திறந்
தான்றுகுத்தி யேறிடி லமூர்தம்வந் திறங்கிடும்
தான்றிதென்று தொண்டருக்கு நாதனும் வெளிப்படு
மான்றியு முயிர்பரம் பொருந்திவாழ்வ தாகவே. (சஉகூ)

ஆகமூல நாடியி லனலெழுப்பி யன்புடன்
மோகமான மாயையில் முயல்வது மொழிந்திடில்
தாகமேரு நாடியே தனேகமான வாறுபோ
லேகர்பாக மன்புட னிறைஞ்சினு ரறிவரே. (சஙூ0)

அறிந்துநோக்கி யும்முளே யயன்தியான மும்முளே
யிருந்திராம லேகர்பாதம் பெற்றிருப்ப தன்மையே
யறிந்துமீள வைத்திடா வகையுமரண மேத்தினர்
செறிந்துமேலை வாசலைத் திறந்துபாரு மும்முளே. (சஙூக)

சோதியாக வும்முளே தெளிந்துநோக்க வல்லிரேல்
சோதிவந் துதித்திடுந் துரியாதீத முற்றிடு
மாதிசக் கரத்தினி லமர்ந்துதீர்த்த மாடுவன்
பேதியாது கண்டுகொள் பிராணனைத் திருத்தியே. (சஙூஉ

திருவுமாய் சிவனுமாய் தெளிந்தவோர்கள் சிந்தையில்
மருவிலே யெழுந்தவீசம் வாசனைய தாகுவன்
கருவிலே விழுந்தெழுந்த கன்மவாத னையெலாம்
பருதிமுன் னிருளதாய் பறியுமங்கி பாருமே. (சருரு)

பாருமெந்தை யீசர்வைத்த பண்பிலே யிருந்துநீர்
சேருமே நடுவெறிந்து செம்மையான வப்பொருள்
வேரையும் முடியையும் விரைந்துதேடி மாலயன்
பாரிடந்து விண்ணிலே பறந்துங்கண்ட தில்லையே. (சருச)

கண்டிலா தயன்மாலென்று காட்சியாகச் சொல்லுநீர்
மண்டினு லரனுடன் மேவலா யிருக்குமோ
தொண்டுபட்டு மன்புடன் தொழுதுநோக்க வல்லிரேல்
பண்டுமுப் புரமெரித்த பத்திவந்து முத்துமே. (சருரு)

முற்றுமே யவனெழிந்து முன்பினென்றுங் காண்கிலேன்
பற்றிலாத தொன்றுதன்னை பற்றிநிற்க வல்லது
கற்றதாலே யீசர்பாதங் காணலா யிருக்குமோ
பெற்றபேரை யன்புடன் பிரியமாகக் கேளுமே. (சருசு)

கேட்டுநின்ற வுன்னிலை கிடைத்தகா லத்துளே
வாட்டமுள்ள தத்துவ மயக்குமு மகற்றிடும்
வீட்டிலே வெளியதாகும் விளங்கவந்து நேரிடுங்
கூட்டிவன்னி மாருதங் குயத்தைவிட் டெழுப்புமே. (சருசு)

எழுப்பிமூல நாடியை யிதப்படுத்த லாகுமே
மழுப்பிலாத சபையைநீ வலித்துவாங்க வல்லிரேல்
சுழுத்தியுங் கடந்துபோய் சொப்பனத்தி லப்புற
மழுத்தியோ ரெழுந்துளே யமைப்பதுண்மை யையனே. ()

அல்லதில்லை யென்றுதா னுவியும் பொருளுடல்
நல்லவீசர் தாளிணைக்கு நாதனுக்கு மீந்திலை
என்றுமென்னுள் நேசமும் வாசியை வருந்தினல்
தொல்லையாம் வினைவிடென்று தூரதூரமானதே. (சருக)

ஆனதே பதியது யற்றதே பசுபாசம்
போனதே மலங்களும் புலன்களும் வினைகளும்
கானகத்தி விட்டதீயிற் காற்றுவர் தடுத்தலோ
ஆனகத்தில் வாயுவன்னி யொன்றியே யுலாவுமே. (சசா0)

உலாவுமுவ்வு மவ்வுமா யுதித்தடர்ந்து நின்றது
மூலாவியைம் புலன்களு மொருதலத் திருந்திடும்
விலாவுமங்கு நேசமாகி நின்றமூர்த முண்டுதாங்
குலாவுமெங்க ளீசனைக் குறித்துணர்ந்து கும்பிடே. (சசாக)

கும்பிடுங் கருத்துளே குகனையைங் கரனையும்
நம்பியே யிடம்வலம் நமஸ்கரித்து நாடட
வெம்பிரானு மம்மையு மிருத்தியே நடுவணைத்
தும்பிபோல வாசகந் தொடர்ந்துசோம்பி நீங்குமே. (சசாஉ)

நீங்குமைம் புலன்களும் நிறைந்தவல் வினைகளும்
ஆங்காரமா மாசையு மருந்தடர்ந்த பாவமும்
ஓங்காரத்தி னுள்ளிருந்த வொன்பதொழிந் தொன்றிலத்
தூங்கவீசர் சொற்படி துணிந்திருக்க கத்தமே. (சசாங)

நினைப்பதொன்று கண்டிலே னீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையே
யனைத்துமா யகண்டமா யனாதிமுன் னனாதியாய்
நினைக்குள்நா னெனக்குள்நீ நினைக்குமா றதெங்ஙனே. (சசாச)

கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்
உருக்கலந்த போதலோ வுன்னைநா னுணர்ந்தது
விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்த போதெலா
முருக்கலந்து நின்றபோது நீயும்நானு மொன்றலோ. (சசாரு)

ஞானநூல்கள் தேடியே நவின்றஞான யோகிகாள்
ஞானமான சோதியை நாடியுள் ளறிகிலீர்
ஞானமாகி நின்றதோர் நாதனை யறிந்தபின்
ஞானமல்ல தில்லைவேறு நாமுரைத்த துண்மையே. (சசாசா)

கருத்தரிப்ப தற்குமுன் காயம்நின்ற தெவ்விடம்
உருத்தரிப்ப தற்குமுன் னுயிர்ப்புநின்ற தெவ்விடம்
மருட்பொருந்த சிந்தையில் மயக்கம்நின்ற தெவ்விடம்
விருப்புணர்ந்த ஞானிகள் விரித்துரைக்க வேணுமே. (சகஎ)

கருவினிற் கருவதா யெடுத்தவேழு தோற்றமு
மிருவினைப் பயத்தினால் பிறந்திறந் துழன்றிடும்
மறுவினைப் பிறவிமூன்று காலமும் வகுத்தபின்
உறுவினைப் பயனிதென் றுணர்ந்தஞானி சொல்லுமே.

வாயிலெச்சில் போகவே நீர்குடித்து துப்புவீர்
வாயிருக்க எச்சில்போன வாறதென்ன தெவ்விடம்
வாயிலெச்சி லல்லவோ நீருரைத்த மந்திரம்
நாதனை யறிந்தபோது நாடுமெச்சி லேதுசொல். (சகக)

தொடக்கதென்று நீர்விழுந் தொடங்குகின்ற வூமர்காள்
தொடக்கிருந்த தெவ்விடஞ் சுத்தியான தெவ்விடம்
தொடக்கிருந்த வாறறிந்து சுத்திபண்ண வல்லிரேல்
தொடக்கிலாத சோதியைத் தொடர்ந்துகாண லாகுமே.

மேதியோடு மாவுமே விரும்பியே யுணர்ந்திடில்
சாதிபேத மாயுருத் தரிக்கும்வாறு போலவே
வேதமோது வானுடன் புலைச்சிசென்று மேவிடில்
பேதமாய்ப் பிறக்கிலாத வாறதென்ன பேசுமே. (சஎக)

குலங்கள் பேசியே வழக்குரைக்கு மாந்தர்காள்
தொகைக்குலங்க ளானநேர்மை நாடியே யுணர்ந்தபின்
மிகைத்தசுக்கில மன்றியே வேறுமொன்று கண்டிலீர்.

ஓதும்நாலும் வேதமு முரைத்தசாஸ் திரங்களும்
பூததத் துவங்களும் பொருந்துமாக மங்களும்
சாதிபேத வண்மையுந் தயங்குகின்ற நூல்களும்
பேதபேத மாகியே பிறந்துழன் றிருந்ததே சஎங)

உறங்கிலேன் விழிக்கிலே நுணர்வுசென் றொடுங்கிலேன்
திறம்பிலேன் றிகைக்கிலேன் சிலதிசைக ளெட்டிலேன்
புறம்புமுள்ளு மெங்ஙனும் பொதிந்திருந்த தேகமாய்
நிறைந்திருந்த ஞானிகள் நினைப்பதேது மில்லையே. (சஎச)

அங்கலிங்கம் பூண்டுநீ ரகண்டபூசை செய்கிறீர்
அங்கலிங்கம் பூண்டுநீ யமர்ந்திருந்த மார்பனே
யெங்குமோடி யெங்குமெங்கு மீடழிந்து மாய்கிறீர்
செங்கல்செம்பி கல்லெலாஞ் சிறந்துபார்க்கும் மூடரே. ()

தீட்டந்தீட்ட மென்றுநீர் தினமுழுகு மூடரே
தீட்டமாகி யல்லவோ திரண்டுகாய மானதும்
பூட்டகாய மும்முளே புகழுகின்ற பேயரே
தீட்டவந்து கொண்டலோ தெளிந்ததே சிவாயமே. (சஎசு)

மூலநாடி தம்முளே முளைத்தெழுந்த வாயுவை
நாளுநாளு மும்முளே நடுவிருந்த வல்லிரேல்
பாலனாகு மும்முடல் பறந்துபோக லாய்விடும்
ஆலமுண்ட கண்டர்பாத மம்மைபாத முண்மையே. (சஎஎ)

உந்திமேலே நாலுமூன்று ஓம்நமசி வாயமாஞ்
சந்திசந்தி யென்றுநீர் சாற்றுகின்ற பேயரே
முந்தவந்து நம்முளே மூலநாடி யூடுபோய்
அந்திசந்தி யற்றிட மறிந்துணர்ந்து பாருமே. (சஎஅ)

வன்னிமூன்று தீயினில் வாழுமெங்கள் நாதனுங்
கன்னியான துள்ளிருக்கக் காதல்கொண்ட தெவ்விடம்
சென்னிநாலு கையிரண்டு சிந்தையி லிரண்டிலொன்று
உன்னியுன்னி நம்முளே யுய்த்துணர்ந்து பாருமே. (சஎக)

தொண்டுசெய்து நீங்களுஞ் சூலவோடி மாள்கிறீர்
உண்டுழன்று நம்முளே யுற்றுணர்ந்து பார்க்கிலீர்
வண்டுலாவு சோலைசூழ் வாழுமெங்கள் நாதனும்
பண்டுபோலநம்முளே பகுத்திருப்ப னீசனே. (சஅ0)

அரியதோர் நமச்சிவாய மாதியந்த மானதும்
ஆறிரண்டு நூறுகோடி யளவிடாத மந்திரம்
தெரியநாலு வேதமாறு சாத்திர புராணமுந்
தேடுமாலு மயலுஞ்சர்வ தேவதேவ தேவனே. (௪௮௧)

பரமுனக் கெனக்குவேறு பயமுமில்லை யாரையா
கரமுனக்கு நித்தமுங் குவித்திடக் கடமையாஞ்
சிரமுறுக்கி யமுதளித்த சீருலாவு நாதனே
யுரமெனக்கு நீயளித்த வுண்மையுண்மை யுண்மையே. (௪௮௨)

மூலவட்ட மீதிலே முளைந்தவைந் தொழுத்திலே
கோலவட்ட மூன்றுமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றநீ
ஞாலவட்ட மன்றுளே நவின்றஞானி மேலதா
யேலவட்ட மாகியே யிருந்ததே சிவாயமே. (௪௮௩)

என்னகத்தி லென்னைநா னெங்குமோடி நாடினே
னென்னகத்தி லென்னையன்றி யேதுமொன்று கண்டிலேன்
மின்னெழும்பி விண்ணகத்தின் மின்னொடுங்கும் வாறுபோ
லென்னகத்து ளீசனோடி யானுமல்ல தில்லையே. (௪௮௪)

நாலுவேத மோதுகின்ற ஞானமொன் றறிவீரோ
நாலுசாம மாகிய நவின்றஞான போதமாய்
ஆலமுண்ட கண்டனு மயனுமந்த மாலுமாய்ச்
சாலவுன்னி நெஞ்சிலே தரித்ததே சிவாயமே. (௪௮௫)

முச்சதுர மூலமாகி மூன்றதான பேதமா
யச்சதுர மும்முளே யடங்கவாசி யோகமா
மெய்ச்சதுர மெய்யுளே விளங்குஞான தீபமா
யுச்சரித்த மந்திர யோம்நமசி வாயமே. (௪௮௬)

மூன்றுமண்டலத்துளே முச்சதுர மாயமாய்
நாலுவாச லெண்விரலி னடுவுதித்த மந்திரங்
கோலியென்று மைந்துமாய்க் குளிர்ந்தலர்ந்து நின்றநீ
மேலுமேலு நாடினேன் விளைந்ததே சிவாயமே. (௪௮௭)

இடங்கள்பண்ணி சுத்திசெய்தே யிட்டபீட மீதிலே
யடங்கலீறும் பூசல்செய் தருந்தவங்கள் பண்ணுவீர்
ஒடுங்கிநின்ற நாதனு ருதிக்குஞான மெவ்விட
மடங்குகின்ற தெவ்விட மறிந்துபூசை செய்யுமே. (சஅஅ)

புத்தகங் களைச்சுமந்து பொய்களைப் பிதற்றுவீர்
செத்திடம் பிறந்திடம் தெங்ஙனென் றறிகிலீர்
அத்தனைய சித்தனை யறிந்துநோக்க வல்லிரே
லுத்தமத்து ளாயசோதி யுணரும்போக மாகுமே. (சஅகூ)

அருளிலே பிறந்துதித்து மாயைரூப மாகியே
யிருளிலே தயங்குகின்ற வேழைமாந்தர் கேண்மினோ
பொருளிலே தவம்புனைந்து பொருந்திநோக்க வல்லிரேல்
மருளதேது வன்னியின் மறைந்ததே சிவாயமே. (சகூ0)

கருக்கலந்த காலமே கண்டிருந்த காரணா
வுருக்கலந்த போதலலோ வுன்னையா னறிந்தனன்
தருக்கலந்த சோதியைத் தெளிந்துயா னறிந்தபின்
னிருக்கிலே னிறக்கிலே னிரண்டுமற் றிருந்ததே. (சகூக)

தன்மசிந்தை யாமளவுந் தவமறியாத் தன்மையாய்க்
கன்மசிந்தை வெயிலுழன்று கருத்துமிழ்ந்த கசடரே
சென்மசென்மந் தேடியுந் தெளியொணாத செல்வனை
நன்மையாக வும்முளே நயந்துகாண வேண்டுமே. (சகூஉ)

கள்ளவுள்ள மேயிருக்க கடந்தஞான மோதுவீர்
கள்ளமுள் ளறுத்தபோது கதியிதன்றிக் காண்கிலீ
ருள்ளமே விளக்கிநித்த மொளியணுக வல்லிரேற்
றெள்ளுஞான மும்முளே சிறந்ததே சிவாயமே. (சகூங)

காணவேண்டு மென்றுநீர் கடன்மலைக ளேறுவீர்
ஆணவம தல்லவோ வறிவில்லாதமாந்தரே
வேணுமென்றவ் வீசர்பாத மெய்யுளே தரிப்பரேற்
றூணுவாக நின்றசிவன் றன்சிவமதாகுமே. (சகூச)

அணுவினோ டகண்டமா யளவிடாத சோதியைக்
குணமதாக வுன்னுளே குறித்துநோக்கின் முத்தியாம்
மிணமிணென்று விரலையெண்ணி நீளொணா மயக்கமாய்த்
துணிவிலாத படியினாற் றொடர்ந்துபூசை செய்குவீர்.

எச்சிலெச்சி லென்றுநீ ரிடைந்திருக்கு மேழைகா
டுச்சிலெச்சி தல்லலோ துயகாய மானதும்
வைத்தவெச்சி றேனலோ வண்டினெச்சில் பூவலோ
கைச்சதாவில் வைத்துடன் கறந்தபாலு மெச்சிலே. (௪௯௬)

தீர்த்தலிங்க மூர்த்தியென்று தேடியோடுந் தீதரே
தீர்த்தலிங்க முள்ளினின்ற சீவனைத் தெளியுமே
தீர்த்தலிங்க முள்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்ததலிங்கந் தானதாய்ச் சிறந்ததே சிவாயமே, (௪௯௭)

ஆடுகொண்டு கூடுசெய் தமர்ந்திருக்கும் வாறுபோற்
றேடுகின்ற செம்பினைத் திடப்படப் பரப்பியே
நாடுகின்ற தம்பிரானு நம்முளே யிருக்கவே
போடுதர்ப்ப பூசையென்ன பூசையென்ன பூசையே.(௪௯௮)

என்னையற்ப நேரமு மறக்கிலாத நாதனே
ஏகனே யிறைவனே யிராசராச ராசனே
யுன்னையற்ப நேரமு மொழிந்திருக்க லாகுமே
வுனதுநாட்ட மெனதுநாவி லுதவிசெய்வி ரீசனே, (௪௯௯)

எல்லையற்று நின்றசோதி யேகமா யெரிக்கவே
யெந்தைபூர ணப்பிரகாச ரேகம்போக மாகிய
நல்லவின்ப போனசாக ரத்திலே யழுத்தியே
நாடொணாத வமிர்தமுண்டு நானழிந்து நின்றநான். (௫00)

ஆனவாற தாயிடு மகண்டமான சோதியை
யூனைகாட்டி யும்முளே யுகந்துகாண வல்லிரே
ஊனகாய மாளலா மூலசபார மாளலாம்
வானநாடு மாளலாம் வண்டநாட ராணையே, ௧

நித்தலு மணிதுலக்கி நீடுமூலை புக்கிருந்து
சுத்தியே சுதறியே கண்கண்மூடி யென்பயன்
எத்தனைபே ரெண்ணினு மெட்டிரண்டு பத்தலோ
வத்தனுக் கிதேற்குமோ வறிவிலாத மாந்தரே. (௫௦௨)

எட்டிரண்டுங் கூடியே யிலிங்கமான தேவனை
மட்டதாக வும்முளே மதித்துநோக்க வல்லிரேற
கட்டமான பிறவியென் கருங்கடல் கடக்கலா
மிட்டமான வெளியினோ டிசைந்திருப்பீர் காண்மினே.

உண்மையான மந்திர மொளியிலே யிருந்திடுந்
தண்மையான மந்திரஞ் சமைந்தரூப மாகிய
வெண்மையான மந்திரம் விளைந்துநீற தானதே
யுண்மையான மந்திரம் தோன்றுமே சிவாயமே. (௫௦௪)

பன்னிரண்டு நாளிருத்திப் பஞ்சவன்ன மொத்திட
மின்னியவ் வெளிக்குணின்று வேறெடுத் தமர்ந்தது
சென்னியான தலதிலே சீவனின் றியங்கிடும்
பன்னியுன்னி யாய்ந்தவர் பரப்பிரம மாவரே. (௫௦௫)

தச்சிவாயி லுச்சிமே லாயிரந் தலங்களாய்
முச்சுடரு மூவிரண்டு மூண்டெழுந்த தீசசுடர்
வசிரமதாகிய வளர்ந்துநின்ற தெவ்விடம்
இசசுடரு மிந்தியமு மேகமான தெங்ஙனே. (௫௦௬)

முத்திசித்தி தொந்தமாய் முயங்குகின்ற மூர்த்தியை
மற்றுதித்த வைம்புலன்க ளாகுமத்தி மப்புலன்
அத்தனித்த காளகண்ட ரன்பினா லனுதின
முச்சரித் துளத்திலே யறிந்துணர்ந்து கொண்மினே. ()

அண்ணலா ரநாதியா யநாதிமுன் னநாதியாய்
பெண்ணுமாணு மொன்றலோ பிறப்பதாகு முன்னலங்
கண்ணிலாணில் சுக்கிலங் கருத்தொடுங்கி நின்றபின்
மண்ணுளோரு விண்ணுளோரும் வந்தவார தெங்ஙனே.

எத்திசைக்கு மெவ்வுயிர்க்கு மெங்களப்ப னெம்பிரான்
முத்திஞான வித்துளே முளைத்தெழுந்த செஞ்சுடர்
சித்தினிற் றெளிந்தபோது தேவர்கோயிற் சேர்ந்தன
னத்தனுடல் கண்டபோ தடங்கியாட லுற்றதே.

வல்லவாச லொன்பது மருத்தடைத்த வாசலுஞ்
சொல்லும்வாச லோரைந்துஞ் சொல்லவிம்மி நின்றதும்
நல்லவாச லைத்திறந்து ஞானவாச லூடுபோ
யெல்லைவாசல் கண்டபி னினிப்பிறப்ப தில்லையே. (௩௧0)

ஆதியான தோன்றுமே யநேகரூப மாயமாய்ப்
பேதபேத மாயெழுந்து சர்வசீவ னானபின்
ஆதியோடு கூடிமீண் டெழுந்துசன்ம மானபின்
சோதியான ஞானியாருஞ் சுத்தமா யிருப்பரே. (௩௧௧)

வண்டுபூ மணங்களோடு வந்திருந்த தேனெலாம்
உண்டுளே யடங்குவண்ண மோதுலிங்க மூலமாய்க்
கண்டுகண்டு வேரிலே கருத்தொடுங்க வல்லிரேல்
பண்டுகொண்ட வல்வினை பறந்திடுஞ் சிவாயமே. (௩௧௨)

ஓரெழுத்து லிங்கமாக வோதுமக் கரத்துளே
யோரெழுத் தியங்குகின்ற வுண்மையை யறிகிலீர்
மூவெழுத்து மூவராய் முளைத்தெழுந்த சோதியை
நாலெழுத்து நாவுளே நவின்றதே சிவாயமே. (௩௧௩)

தூரதூர தூரமுந் தொடர்ந்தெழுந்த தூரமும்
பாரபார பாரமென்று பரிந்திருந்த பாவிகாள்
நேரநேர நேரமு நினைந்திருக்க வல்லிரேல்
தூரதூர தூரமுந் தொடர்ந்துகூட லாகுமே. (௩௧௪)

குண்டலங்க ளூண்டுநீர் குளங்கடோறு மூழ்கிநீர்
மண்டுகங்கள் போலநீர் மனத்தின்மா சறுக்கிலீர்
மண்டையேந்து கையரை மனத்திருந்த வல்லிரேற்
பண்டைமா லயன்றொழப் பணிந்துவாழ லாகுமே. (௩௧௫)

கூடுகெட்டி முட்டையிட்டுக் கொண்டிருந்த வாறுபோ
லாடிரண்டு கன்றையீன்ற வம்பலத்து ளாடுதே
மாடுகொண்டு வெண்ணெயுண்ணு மானிடப் பசுக்களே
வீடுகண்டு கொண்டபின்பு வெட்டவெளியுமா காணுமே,

உள்ளதோ யிறப்பதோ வுயிர்ப்படங்கி நின்றிடம்
மெள்ளவந்து கிட்டநீர் வினவவேண்டு மென்கிறீர்
ருள்ளதும் பிறப்பது மொத்தபோது நாதமாம்
கள்ளவாசலைத்திறந்து காணவேண்டு மாந்தரே. (௩௭)

நட்டகல்லை தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து மொணமொணென்று சொல்லுமந்த்ர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவங் கறிச்சுவை யறியுமோ. (௩௮)

சிவவாக்கியர்பா

# புத்தகவிளம்பரம்.

இதனால் யாவருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை ஆசசாரப்பன் தெருவு 84-வது கெ. வீட்டில் அடியிற்கண்டபுத்தகங்களும் இன்னும் இதர யேனையபுத்தகங்களும் விற்கப்பட்டுவருகின்றனம் வேண்டுவோர் தபால்மார்க்கமாகவும் வி. பி தபால்மூல்ய மாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| ஆதிபர்வம் காலிக்கோ. | 0 | 14 | 0 |
| ஞானவாதிட்டம்-மூலமும்-உரையும், | 2 | 0 | 0 |
| பாகவதப்பாட்டு முதல்வாலியம் | 1 | 12 | 0 |
| ” இரண்டாவதுவாலியம், | 2 | 8 | 0 |
| காசிகாண்டம். | 1 | 0 | 0 |
| கெருடபுராணம். | 0 | 4 | 0 |
| ” கிளேஸ். | 0 | 8 | 0 |
| அரிச்சந்திரபுராணம்-உரை. | 0 | 4 | 0 |
| அரிச்சந்திரபுராணம உயர்ந்த பதிப்புகிளேஸ் | | | |
| ” காலிகோ. | 1 | 4 | 0 |
| தேவாரத்திரட்டு. | 0 | 8 | 0 |
| ” ஆறுமுகநாவலர்பதிப்பு. | 1 | 12 | 0 |
| தாயுமானவர் ஒஸ்தி படம். | 0 | 8 | 0 |
| ” உரையுடன். | 3 | 0 | 0 |
| மஸ்தான்சாயபுபாடல் கிளேஸ். | 0 | 10 | 0 |
| பட்டணத்தார் புராணம். | 0 | 12 | 2 |
| ” உரையுடன். | 2 | 0 | 0 |
| ” சின்னது உரை. | 0 | 10 | 0 |

இப்படிக்கு,

சென்னை-இட்டா,

பார்த்தசாரதி நாயுடு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# பட்டணத்துப் பிள்ளையார்

## திருவாய் மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு

## உடற்கூற்று வண்ணமும்

பட்டணத்துப்பிள்ளையார் சரித்திரச் சுருக்கமும்

அடங்கி யிருக்கின்றன.

---

இஃது,

வா. சரவணமுத்துப்பிள்ளையால்

ஞானவான்களுக்கு

உபயோகமாகும் பொருட்டு,

சில ஏட்டுப்பிரதிகளி லிருந்தும்

அச்சுப்பிரதிகளிலிருந்தும்

சேர்க்கப்பட்டு,

சென்னை:

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

190(

# புத்தக விளம்பரம்.

இதனால் யாவருக்கும் தெரிவிப்பது என்னவென்றால் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை ஆச்சாரப்பன் தெருவு 84 நெம்பர் வீட்டில் அடியிற் கண்ட புத்தகங்களும் விற்கப் பட்டு வருகின்றனம் வேண்டுவோர் தபால் மார்க்கமாகவும் வி. பி. தாபால் மூல்யமாகவும் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஸ்ரீ இராமலிங்கபிள்ளை திருவருட்பா மூலமும் உரையும் | 1 | 0 |
| அநுபோகபிரசனை ஆரூடம் | 0 | 8 |
| தற்காலவைத்தியபோதினி | 0 | 8 |
| ஜௌபல் நாகக் நாகக் சுந்தர் சரித்திரம் | 1 | 8 |
| மைனுவதி கதை | 0 | 12 |
| மனோரஞ்சனி | 0 | 12 |
| சுந்தராங்கி | 0 | 8 |
| பட்டணத்தார்புலம்பல் பத்திரகிரியார் புலம்பல் | 0 | 10 |
| வேமன்னயோகிஸ்வரர் 1000 பாடல்உரை | 1 | 0 |
| ஜெயங்கொண்ட சௌந்தரவல்லிகதை | 1 | 0 |
| நாலாயிரப பிரபந்தம் | 2 | 0 |
| சோதிட பிரபஞ்சசேகரம் இரண்டாம்பதிப்பு | 0 | 12 |
| நூதன சாத்திர விசித்திர புத்தகம் | 0 | 14 |
| நூதன சைவபாக சாத்திரம் | 0 | 12 |
| மேற்படி மில்டேறி இந்துபாக சாத்திரம் | 0 | 8 |
| பிரபஞ்ச உற்பத்தி | 2 | 0 |

இப்படிக்கு,

சென்னை - இட்டா

பார்த்தசாரதிநாயுடு

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# பட்டணத்துப் பிள்ளையாருடைய

# ரச் சுருக்கம்.



சோழநாட்டிலுள்ள காவிரிப்பூம் பட்டணத்தில் குபேர
ன் திருவெண்காட ரென்னும் பட்டணத்துப் பிள்ளையாக
அவதரித்துச் சீமானயிருந்தனர். பின்பு இவர் விவாகமுடித்
தும் புத்திரனில்லாமல் வருந்துகையில, பரமசிவன் ஒருகுழ
ந்தை வடிவமாகத் திருவிடைமருதூர் உத்தியான வனத்தில்
வில்வமரத்தடியின் அருகிருந்தனர்; இதைக்கண்டு மிகுதியும்
வறியராயிருந்த சிவசருமரும, அவர் மனைவியாரும குழந்தை
யை யெடுத்துவந்து புத்திரனில்லாத பட்டணத்துப் பிள்ளை
க்குக் கொடுத்து நிரம்பப் பொனபெற்றுச சென்றனர். குழந்
தையாகிய பரமசிவன் மருதப்பிரான் என்னும் பெயர் தரிக்க
ப் பெற்றுவளர்ந்து பதினறுவயதாகையால பிதாவில்லாதசம
யத்தில் தாயாரிடம்வந்து "காதற்றவூசியும் வாராது கடைவ
ழிக்கே" என்னும் வாக்கியமெழுதிய ஒருநறுக்கையும், ஒரு
காதற்ற வூசியையும் ஒரு பெட்டியில் வைத்து தாளிட்டு, அ
தை அந்த அம்மனிடம் கொடுத்து இதை என்பிதா வந்தவுட
ன் கொடுக்ககடவீர் என்று சொலலி மறைந்துபோயினர், அ
ந்த அம்மனும் பிதாவாகிய பட்டணத்துப் பிள்ளை வந்தவுடன்
கொடுக்க அவர் அப்பெட்டியைத்திறகது காதற்ற வூசியை
யும் நறுக்கையும்கண்டு ஞானோதயமாகி இதுவரையிலும் தம
க்குத் திருமகனயிருந்தவர் பரமசிவ னென்றுணர்ந்து தம
து செல்வப்பொருளைப் பலருக்கும் குறையிடும்படி தமது

தலைமைக்காரியக் காரராகிய சேந்தனாருக்குக் கட்டளையி ட்டு துறவுபூண்டு, அவ்வூரிற் பிச்சையெடுத் துண்டு வந்தனர் இதைக்கண்டு அவர் சுற்றத்தார் வருந்துகையில், அவரது த மக்கையார் இவர் இறந்தாலும் நல்லதெனவெறுத்து விஷங் கலந்த ஒட்டப்பம் ஒன்று சுட்டுத்தரவே அப்போது பட்ட ணத்தார் "தன்வினை தன்னைச்சுடும் ஒட்டப்பம் வீட்டைச்சு டும்" என்றுசொல்லி அவ்வப்பத்தைக் கொடுத்தவர் வீட்டிற் சொருகி அப்பட்டணமுழுமையும் உயிர்களிறவாமல் எரித் துப், பின்புதமது தாயார் இறந்தமையால் அந்த அம்மனைச் சுடுகாட்டில் தமதுஞானக்கினியால் சிலபாடல்களைப்பாடித் தகித்துத், திருவிடைமருதூரிற் சென்று அப்பால் திருவாரூ ரடைந்து அங்கு இறந்தவனைப் பிழைப்பித்துக், கொங்குநாட் டின் சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, துளுவு நாடுவந் து, பத்திரகிரிமகாராஜனுக்கு ஞானோபதேசஞ்செய்து, திரு வெண்காட்டுக்குச் சென்று அங்குத் தமது தலைமைக்காரிய ராகிய சேந்தனாரைச் சிறையினின்றுமீட்டுச் சிதம்பரம், தி ருக்காஞ்சி, திருக்காளத்தி முதலிய ஸ்தலங்களிற் சென்று சி வபிரானைப்பாடிப் பணிந்து திருவொற்றியூர்வந்து சிவலிங்க மாக உருமாறினர்.

சென்னையைச் சார்ந்த திருவொற்றியூர்க் கடற்கரை யோரம். (இப்பொழுது அவ்விடத்தில் அவர்பேரால் ஓர் ஆ லயஞ் சமைக்கப்பட்டிருக்கின்றது.)

சரித்திரச் சருக்கம்.

முற்றிற்று.

பட்டணத்துப் பிள்ளையார்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு.

## முதலாவது.

## கோயிற்றிருவகவல்.

திருச்சிற்றம்பலம்.

நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெருமானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனமே நினைமின் மனமே
? அலகைத்தேரி னலமரு காவின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலை ! யோம்பற்க
பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்கும்
தோன்றின மறையு மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்குஞ் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
† அருந்தின மலமாம் * புனைந்தன வழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்து முணர்ந்தனை யன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்து மனைத்துநினைக் கொன்றன
தின்றனை யனைத்து மனைத்துநினைத் தின்றன
பெற்றனை யனைத்து மனைத்துநினைப் பெற்றன

? அலகைத்தேர்-கானல். ! ஓம்பற்க-பாதுகாவது ஒழிக
† அருந்தின-உண்டஉணவு * புனைந்தன-உடுத்த ஆடை.

# முதலாவது கோயிற்றிருவகவல்.

ஒம்பினை யனைத்து மனத்துநினை யோம்பின
செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை
ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்
? புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை யிதனுள்
பூளையும் நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
* சட்டக முடிவிற் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து
? கடிமலர் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற விருவினை மலமற
வரவொடு செலவற மருளற விருளற
இரவொடு பகலற விகபர மறவொரு
முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை யானந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென - நெக்கு நெக்குருகித்
திருச்சிற்றம்பலத் * தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொ னம்பலவனை
நினைமின மனனே நினைமின் மனனே.

---

? புற்புதம் நீர்க்குமிழி * சட்டகம்-உடல், ? கடிமல ர்பரிமளத்தோடு மலர்கின்ற : நெக்கு நெக்கு-நெகிழ்ந்து நெகிழ்ந் து * ஒளிரும்-பிரகாசிக்கின்ற.

## இரண்டாவது.

# கோயிற்றிருவகவல்.

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுட ஞுடமை
காதலுங் கருத்துமல் லானின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாவகிருந்
தங்கோ டிங்ஙோ ? டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் : பேழை யிருவினைப் : பெட்டகம்
வாதபித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றத் துண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
? அடலைப் பெரிய சுடலைத் * திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோக்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரணப் * பஞ்சரம்
சோற்றுத் துருத்தி தூற்றம் ? பத்தல்
காற்றிற் பறக்குங் கானப் ? ? பட்டம்
விதிவழித் 0 தருமன் வெட்டுங்கட்டை
சதுர்முகப் " பாணன் றைக்குஞ்சட்டை
? ஈமக் கனலி விடுசில விருந்து
காமக் கனலி விடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழங்கஞ் சருமி
!! பவக்கொழுந் தேருங் கவைக்கொழு கொம்பு

---

? அலமரும்-சுழலுகின்ற : பேழை பெட்டகம் பெட்டி, : அடலை-சாம்பல், * திடர்-மேடு, * பஞ்சரம்-கூடு ? பத்தல்-ஓர் பாத்திரம், ? ? பட்டம் காற்றாடி 0 தருமன் யமன் " பாணன் தை[illegible]காரன். ? ஈமம்-சுடுகாடு, !! பவம்-பிறவி.

மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமே
ஊரிற் கிடக்கும் வொட்டா வுபாதி
? காலெதிர் குவித்த ! பூளை காலைக்
† கதிரெதிர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
" அந்தரத் தியங்கு * மிந்திர சாயம்
அதிரு மேகத் துருவி னருநிழல்
நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில் கனவிற் கண்டகண் காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையு மமையும் பிரானே யமையும்
இமைய வல்லி வாழியென் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் னருளினக்கழகே.

---

மூன்றாவது

# கோயிற்றிரு அகவல்.

---

பாற்கடல் கடையப் படுங் ?? கடுவெண்ணெயைத்
திரு ? மிடற் றடங்கிய சிவனே யடைக்கலம்
அடங்கலு மடக்கிடுங் கடுங்கொலைக் காலனை
காலெடுத் தடக்கிய கடவுணின் னடைக்கலம்
உலகடங் கலும்படைத் துடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கி யிறைவநின் னடைக்கலம்
செய்யபொன் னம்பலச் செல்வநின் னடைக்கலம்
ஐயநின் னடைக்கல மடியனின் னடைக்கலம்
மனவழி யலைத்திடுங் கனவெனும் வாழ்க்கையும்
0விழுப்பொரு ளறிய வழுக்குறு மன்னும்
ஆணவமலத்துநித் ?? தலைத்தநி ??லுலைந்திடு

---

?கால்-காற்று, ? பூளை-பூளைப்பூ † கதிர்-சூரியன், " அந்தரம்-ஆகாயம், * இந்திரசாயம்-இந்திரதனுசு, ?? கடு-விஷம் ? மிடறு-கண்டம். 0 விழுப்பொருள் - மேலாகிய பொருள்? ?? அலைத்து-கலக்கு, ??உலைந்து வருந்தி.

? நிணவைப் புழுவென நெளித்திடு சிந்தையும்
? படிறும் பாவமும் பழிப்புறு நினைப்பும்
தவறு ? மழுக்காறு 00 மிவறும் : பொச்சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
விகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்
பகையு மச்சமுந் துணிவும் ?? பனிப்பும்
முக்குண மடையு மைம்பொறி 0 மூயக்கமும்
* இடும்பையும் பிணியு மிடுக்கிய வாக்கையை
உயிரெனுங் ** குருகுவிட் டோடுங் " கூரம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மெழுக்குவிழுங் குடிலைச
செம்பெழு வதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவடற் குடத்தைப் புலவடற் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிப்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீறற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தைப்
புலராக் கவலை விலைமரப் ??பொதும்பை
ஆசைக் கயற்றி லாடும்பம் பரத்தை
காசிற் பணத்திற் சுழலுங் காற்றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக்காலைப்
பாவச் சரக்கொடு பவக்கடல் புக்கு
காமக் காற்றெடுத் தலைப்பக்
கெடுவழிக் கரைசேர் கெடுமலக் கலத்தை

? நிணம்-கொழுப்பு, ?படிறு-பொய், ? அழுக்காறு பொருமை, 00 இவறல்-உலோபகுணம், : பொச்சாப்பு-மறதி, ?? பனிப்பு-நடுக்கம், 0மூயக்கம்-தழுவகை, * இடும்பை-துன்பம் ** குருகு-பறவை " குரம்பை-கூடு. ?? பொதும்பு-பொந்து.

இருவினை வியநகொடு மியநகு? புற்கலனை
? நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
அடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்
வெளியிடை யுருமிடி யிடித்தெனை வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இமையா நாட்டத் திறையே யடைக்கலம்
அடியார்க் கெளியா யடைக்கல மடைக்கலம்
மறைவர் தில்லை மன்றுணின் றாடிக்
கருணைமொண் டலையெறி கடலே யடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
* பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசே யடைக்கல முனக்கே.

---

## நான்காவது

## கச்சித்திரு வகவல்.

---

திருமால் ? பயந்த 0 திசைமுக னமைத்து
வருமேழ் பிறவியு மானிடத் துதித்து
மலைமகள் கோமான் மலரடி யிறைஞ்சிக்
குலவிய சிவபதங் குறுகா ?? தவமே
மாதரை மகிழ்ந்து காதல் கொண்டாடும்
மானுடர்க் கெல்லாம் யானெடுத் துரைப்பேன்
விளிவெளி மார்க்க வெளிவுறக் கேண்மின்
முள்ளுங்கல்லு முயன்று நடக்கும்
உள்ளங்காலைப் பஞ்செனவுரைத்தும்
வெள்ளும்பாலே மேவியகணைக்கால்
துள்ளும்வராலெனச் சொல்லித்துதித்தும்

---

? புற்கலன்-உயிர், ? நடுவன்-யமன், * பாசு-பசுமை, இழை - ஆபரணம், ? பயந்த-ஈன்ற, 0திசைமுகன் - பிரமன் ?? அவம்-வீண்.

தசையுமெலும்புந் தக்கபுன் ? குறங்கை
இசையுங் * கதலித் தண்டெனா ? வியம்பியும்
நெடுமூடருங்கி நின்றிடு மிடையைத்
? துடி * இடி யென்று சொல்லித் துதித்தும்
மலமுஞ் சலமும் ? வழும்புந் திரையும்
அலையும் வயிற்றை யாலிலையென்றும்
சிலந்திபோலக் கிளைத்து முன்னெழுந்து
திரண்டுவிம்மிச் சிப்பாய்ந்தேறி
?? உதிராற்கிற வுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய் 00 நான்றுவற்றும்
முலையைப்பார்த்து ” முளரிமொட்டென்றும்
குலையுங்காமக் குருடர்க்குரைப்பேன்
நீட்டவு முடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும் பிசையவு முதவியங்கியற்றும்
அங்கையைபபார்த்துக் * காந்தளென்றுரைத்தும்
வேர்வையு மழுக்கு மேவியகழுத்தைப்
பாரினிலினிய ?? கமுகெனப் பகர்ந்தும்
வெப்புமூத்தையு மேவியவாயைத்
0 துப்புமுருக்கின் றாய்மலரென்றும்
அன்னமுங்கறியு மசையவிட்டிறக்கும்
முன்னியபல்லை முத்தென மொழிந்தும்
நீருஞ்சளியு நின்றுநின்றொழுகும்
கூரிய மூக்கைக் * * குமிழெனக் கூறியும்
தண்ணீர்பீளை தவிராதொழுகும்
கண்ணைப் பார்த்து ?? கழுநீரென்றும்
உள்ளுங்குரும்பி யொழுகுங்காதை

? குறங்கு-தொடை. * கதலி-வாழை, ? இயம்பி. சொல்லி துடி-உடுக்கை, * பிடி-கைப்பிடி, ?வழும்பு-கிணம், ?? உதிர் நம் 00நான்று-தொங்கி, ”முளரிமொட்டு தாமரைமொக்கு காந்தள்-காந்தட்பூ, ??கமுகு-பாக்குமரம், 0 துப்பு-பவளம், குமிழ்-குமிழம்பூ, ** கழுநீர்-குவளை.

? வள்ளைத் தண்டின் வளமெனவாழ்த்தியும்
கையுமெண்ணெயுங் கலவாதொழியில்
வெய்யவதரும் பேனும்விளையத்
தக்கதலையோட் டின்மூளைத்தெழுந்த
சிக்கின்மயிரைத் திரண் ? முகிலென்றும்
சொற்பலபேசித் துதித்துநீங்கள்
நச்சிச்செல்லு நரகவாசல்
தோலுமிறைச்சியுக் 0 துதைந்துசிப்பாயுமம
காமப்பாழி கருவிளைகழனி
தூமைக்கடைவழி தொளைபெறுவாசல்
எண்சாணுடம்பு மிழியும்பெருமழை
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிகாமுக காய்தானென்னும்
இச்சித்திருக்கு மிடைகழிவாசல்
திங்கட்சடையோன் திருவருளில்லார்
தங்கித்திரியுஞ் ? சவலைப்பெருவழி
புண்ணிதுவென்று புடவையைமூடி
உண்ணீர்பாயு மோசைச்செழும்புண்
மால்கொண்டறியா மாந்தர்புகும்வழி
நோய்கொண்டொழியா நுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர் சாரும்படுகுழி
செருக்கியகாமுகர் சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும் பிறக்கும்பெருவழி
மலஞ் சொரிந்திழியும் வாசற்கருகே
சலஞ்சொரிந்திழியுந் தண்ணீர்வாசல்
இத்தைநீங்க ளினிதெனவேண்டாம்
பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபத வீடருள்பவனை
முத்திநாதனை மூவாமுதல்வனை

---

? வள்ளை-வள்ளைக்கொடி, ? முகில்-மேகம், 0 துதைந்-
நெருங்கி, ? [illegible]

அண்டாண்டமு மனைத்துளபுவனமுங்
கண்டவண்ணலைக் கச்சியிற்கடவுளை
யேகநாதனை யிணையடியிறைஞ்சுமின்
போகமாதரைப் போற்றுத லொழிந்தே.

திருச்சிற்றம்பலம்.

அறந்தானியற்று மவனிலுங்கோடி யதிகமில்லர்
றந்தானவனிற் ○ சதகோடியுள்ளத் துறவுடையோன்
றந்தானறக்கற் றறிவோடிருந்திரு வாதனையற்
றந்தான்பெருமையையென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

டியிணைத்திடும் பெண்டிருமக்களுங் காலத்தச்சன்
வட்டிமுறிக்கு மரம்போற்சரீரத்தை வீழ்த்திவிட்டாற்
ாட்டிமுழுக்கி யழுவார்மயானங் குறுகியப்பா
லட்டியடிவைப்பரோ விறைவாகச்சி யேகம்பனே. (௨)

கப்பிடிநாயகன் றானகைபிலேயவன் கையையெடுத்
புறந்தன்னி லசையாமன்முன்வைத் தயல் ? வளவி
ாப்புடன்சென்று தயினித்துப்பின்வந் துறவுகுவளை
பப்படிநாம்புவே னிறைவாகச்சி யேகம்பனே. (௩)

ஞரிற்பூட்டிய சூத்திரப்பாவைகன் ஞர்தப்பினுற்
ஞலுமாடிச் சலித்திடுமோஅந்தத் தன்மையைப்போ
ன்ஞலியானுந் திரிவதல்லான் மற்றுனைப்பிரிந்தா
ன்ஞலிங்காவ துண்டோ விறைவாகச்சி யேகம்பனே. (௪)

லாரிணக்கமு நின்பூசைநேசமு ஞானமுமே
லா துவேறு நிலையுளதோவக மும்பொருளு
லாளுஞ்சுற்றமு மைந்தரும்வாழ்வு மெழிலுடம்பு
ல்லாம்வெளிமயக்கே யிறைவாகச்சி யேகம்பனே. (௫)

---

† அறம்-முப்பத்திரண்டு தருமம். அவைஆதுலர்க்குச்சா முதலியன. ○ சதகோடி-நூறுகோடி. ? வளவு வீடு.

பொல்லாதவனெறி நில்லாதவனைம் புலன்கடமை
வெல்லாதவன்கல்வி கல்லாதவன்மெய் யடியவர்பாற்
செல்லாதவனுண்மை சொல்லாதவனின் திருவடிக்கன்
பில்லாதவன்மண்ணி லேன்பிறந்தேன்கச்சி யேகம்பனே. ()

பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லைப் பிறந்துமண்மே
லிறக்கும்பொழுது கொடுபோவதில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியா
திறக்கும் ?குலாமருக்கென்சொல்லுவேன்கச்சியேகம்பனே.

அன்னவிசார மதுவேவிசார மதுவொழிந்தாற்
சொன்னவிசாரந் தொலையாவிசாரநற் றோகையரைப்
பன்னவிசாரம் பலகால்விசாரமிப் பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம் வைத்தா யிறைவாகச்சி யேகம்பனே. (அ)

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துருகி
நில்லாப்பிழையு நினையாப்பிழையு நின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந் தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே. ()

மாயநட்போரையு மாயாமலமெனு மாதரையும்
வீயவிட்டோட்டி வெளியேபுறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன்சென்றுபின் றாதையைக்கூடிப்பின் றாயைமறந்
தேயுமதேநிட்டை யென்றானெழிற்கச்சி யேகம்பனே. (௧௰)

வரிக்கோலவேல்விழி யாரனுராக மயக்கிற்சென்று
சரிக்கோதுவேனெழுத் தஞ்சுஞ்சொலேன்றமி யேனுடல்
நரிக்கோகழுகு பருந்தினுக்கோவெய்ய நாய்தனக்கோ
வெரிக்கோவிரையெதுக்கோ விறைவாகச்சி யேகம்பனே. ()

காதென்றுமூக்கென்று கண்ணென்றுகாட்டியென் கண்ணெ
மாதென்றுசொல்லி வருமாயைதன்னை மறவிட்ட [திரே
தேதென்றெண்ணும்மற் சுகமென்றுநாமேத் தீர்ப்புத்தியை
யேதென்றெடுத்துரைப்பே னிறைவாகச்சி யேகம்பனே. ()

ஊருஞ்சதமல்ல வுற்றார்சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல பெண்டீர்சதமல்ல பிள்ளைகளுஞ்

? குலாமா-கழமகளை.

சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல தேசத்திலே
யாருஞ்சதமல்ல நின்றாள்சதங்கச்சி யேகம்பனே.

சீறும்வினையது பெண்ணுருவாகித் திரண்டுருண்டு
கூறுமுலையு மிறைச்சியுமாகிக் கொடுமையினால்
பீறுமலமு முதிரமுஞ்சாயும் பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலே னிறைவாகச்சி யேகம்பனே. (கச)

பொருளுடையோரைச் செயலினும்வீரரைப்போர்க்களத்துந்
தெருளுடையோரை முகத்திலுந்தேர்ந்து தெளிவதுபோ
வருளுடையோரைத் தவத்திற்குணத்தி லருளிலன்பி
லிருளறுசொல்லினும் காணத்தகுங்கச்சி யேகம்பனே. (சு)

பருத்திப்பொதியினைப் போலேவயிறு பறக்கத்தங்க
டுருத்திக்கறுசுவை போடுகின்றார் துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிட மாட்டாரவரை யிம்மாநிலத்தி
லிருத்திக்கொண்டேனிருந்தா யிறைவாகச்சி யேகம்பனே. ( )

பொல்லாவிருளகற் றுங்கதிர்கூகையென் புட்கண்ணினுக்
கல்லாயிருக்கிடும் மாறொக்குமே யறிவோருளத்தில்
வல்லாரறிவா ரறியார்தமக்கு மயக்கங்கண்டா
யெல்லாம்விழிமயக்கே யிறைவாகச்சி யேகம்பனே. (கஎ)

வாதுக்குச்சண்டைக்குப் போவார்வருவர் வழக்குரைப்பர்
தீதுக்குதவியுஞ் செய்திடுவர் தினந்தேடியொன்று
மாதுக்களித்து மயங்கிடுவோர் விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தா ரிறைவாகச்சி யேகம்பனே. (கஅ)

ஓயாமற்பொய்சொல்வர் நல்லோரைநிந்திப்ப ருற்றுப்பெற்ற
தாயாரைவைவர் ! சதியாயிரஞ்செய்வர் சாத்திரங்க
ளாயார்பிறர்க்குப காரஞ்செய்யார் தமை யண்டினர்க்கொன்
றீயாரிருந்தென்ன போயென்னகாண்கச்சி யேகம்பனே. ()

அப்பென்றும் வெண்மைய தாயினுமாங்கந் நிலத்தியல்பா
கப்பின்னிவேகனை வேற்றுமைகாண்பல சார்கவினை

செப்பிலபக்குவம் பக்குவமாயுள்ள சிவனிலு
மிப்படியேசிறப் பெனக்கைபிரான்கச்சி யேகம்பனே. (உ0)

காயாய்ப்பிறந்திடி னல்வேட்டையாடி நயம்புரியுந்
தாயார்வயிற்றி னரராய்ப்பிறந்தபின் 0 சம்பன்னராய்க்
காயாமரமும் வறளாங்குளமுங் கல்லாவுமென்ன
வீயாமனிதரை யேன்படைத்தாய்கச்சி யேகம்பனே. (உக)

ஆற்றிற்கரைத்த புளியாக்கிடாமலென் னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம் பற்றுமையாபுர மூன்றெரித்துக்
!கூற்றைப்பணிகொளுந் தாளுடையாய்குன்றைவில்லுடையா
யேற்றுக்கொடியுடையா யிறைவாகச்சி யேகம்பனே. (உஉ)

பெண்ணாகிவந்தொரு மாயப்பிசாசம் பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டி முலையான்மயக்கிக் : கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத் தள்ளியென் '' போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந் தேனிறைவாகசசி யேகம்பனே. (உரு

நாவாரவேண்டும் விதஞ்சொல்லுவாருனை நான்பிரிந்தாற்
சாவெனென்றேயிருந் தொக்கவுண்பார்கள் கைதான்வறண்
போய்வாருமென்று நடுத்தலைக்கேகுட்டும் பூவையருக் [டாற்
கோர்தலைவிதியோ விறைவாகச்சி யேகம்பனே. (உச)

கல்லார்சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க் கன்னங்கொடார் குருசொன்னபடி
நில்லாரறத்தை நினையார்நின்னாம நினைவிற்சற்று
மில்லாரிருந்தென் னிறந்தென்புகல்கசசி யேகம்பனே. (உ௫)

வானமுதத்தின் சுவையறியாதவர் வன்கனியின்
ருனமுதத்தின் சுவையெண்ணல் போலத் தனித்தனியே
தேனமுதத்தின் றெளிதாயஞானஞ் சிறிதுமில்லார்க்
கீனமுதச்சுவை கன்றல்லவோகச்சி யேகம்பனே. (உசு)

---

0 சம்பன்னர்-தனவான்கள், ! கூற்று-யமன்,, கடிதடம்-நிதம்பம் அது இடைக்குக்கீழும் தொடைக்கு மேலுமுள்ள பாகம், ² போதம்-ஞானம்.

ஊற்றைச்சரீரத்தை ⁰ யாபாசக் ⁰ கொட்டிலை யூன்பே
பீற்றற்றுருத்தியை சோறிடுந்தோற்பையைப் பேசரிய
காற்றிற்பொதிந்த நிலையற்றயாண்டதனைக் காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டே னிறைவாகச்சி யேகம்பனே. (௨௭

சொல்லால்வருங்குற்றஞ் சிந்தையால்வருந் தோடஞ்செய்த
பொல்லாததீவினை பார்வையிற்பாவங்கள் புண்ணியநூ
லல்லாதகேள்வியைக் கேட்டிடுந்தீங்குக ளாயவுமற்
றெல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய்கச்சி யேகம்பனே. (

" முட்டற்ற மஞ்சளை யெண்ணெயிற்கூட்டி முகமினுக்கி
? மெட்டிட்டுப்பொட்டிட்டுப் பித்தளை யோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில் வெளிமயக்கேசெய்யும் பாவையர்மே
லிட்டத்தை நீதவிர்ப்பா யிறைவாகச்சி யேகம்பனே. (௨௯

பிறந்துமண்மீதிற் பிணியேகுடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின் மேன்மயலாகிப்பின் மாதருக்குட்
பறந்துழன்றேதடு மாறிப்பொன்றேடி யப்பாவையாக்கித்
திறந்திடவோ பணித்தாயிறைவாகச்சி யேகம்பனே. (௩0)

பூதங்களற்றுப் பொறியற்றுச்சாரைம் புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப் பேராசைதானற்றுப் பின்முனைறுக
காதகரணங் களுமற்று வானந்தக் காட்சியிலே
யேதங்களைந்திருப்பே னிறைவாகச்சி யேகம்பனே. (௩க)

நல்லாயெனக்கு மனுவொன்றுதந்தருண ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்று போடும்பொழுதியல் பூசைசெய
சொல்லாநற்கோயி னியமம்பலவகைத தோத்திரமு [ஞ்
மெல்லாமுடிந்தபின் கொல்லுகண்டாய்கச்சி யேகம்பனே.

சடக்கடத்துக்கிரை தேடிப்பலவுயிர் தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண் டிறுமாந்திருந்து மிகமெலிந்து
படக்கடித்தின்னிழல் வார்கடமைகரம் பற்றிகம
னிடக்கடிக்கும்பொழு தேதுசெய்வார்கச்சி யேகம்பனே. (

⁰ ஆபாசம்-அலங்கோலம், ⁰ கொட்டில்-ஒதுக்கிடம்,
" முட்டு-குற்றம், ? மெட்டு-காலாழி.

*நாறுமுடலை நரிப்பொதிச்சோற்றினை நான்றினமுஞ்
சோறுங்கறியு நிரப்பியபாண்டத்தைத் தோகையர்தங்
கூறுமலமு மிரத்தமுஞ்சேருங் குழியில்விழா
தேறும்படியருள்வா யிறைவாகச்சி யேகம்பனே. (௩௪)

சொக்கிட்டரமனைப் புக்குட்டிருடிய துட்டர்வந்து
இக்குற்றமன்னரைக் கேட்பதுபோற்சிவ நிந்தைசெய்து
மிக்குக்குருலிங்க சங்கமநிந்தித்து வீடிச்சிக்கு
மெக்குப்பெருத்தவர்க்கென்சொல்லுவேன்கச்சி யேகம்பனே

விருந்தாகவந்தவர் தங்களுக்கன்ன மிகக்கொடுக்கப்
பொருந்தார்வளம்பெறவாழ்வார்நின்றுமத்தைப்போற்றிநித்த
° மருந்தாமுலைப்பங்க ரென்றுரைப்பாதக ரம்புவியி
விருந்தாவ தேதுகண்டா யிறைவாகச்சி யேகம்பனே. (௩௬)

எல்லாமறிந்து படித்தேயிருந்தெமக் குள்ளபடி
வல்லானறிந்துள னென்றுணராது மதிமயங்கிச்
சொல்லான்மலைந்துறு சூழ்விதியின்படி துதிக்கித்துப்பி
னெல்லாஞ்சிவன்செயலே யென்பர்காண்கச்சி யேகம்பனே.

பொன்னைநினைந்து வெகுவாகத்தேடுவர் பூவையன்று
டன்னைநினைந்து வெகுவாயுருகுவர் தாரணியி
லுன்னைநினைந்திங் குனைப்பூசியாத வுலுத்தரெல்லா
மென்னைநினைந்துகண்டா யிறைவாகச்சி யேகம்பனே. (௩௮)

கடுஞ்சொலின்வம்பரை யீனரைக்" குண்டரைக்காமுகரைக்
கொடும்; பவமேசெயு நிர்மூடர்தம்மைக் குவலயத்து
னெடும்பனைபோல வளர்ந்தகல்வோர்த நெறியறியா
? விடும்பரையேன்வகுத்தா யிறைவாகச்சி யேகம்பனே. (௩௯)

கொன்றேனனேக முயிரையெல்லாம் பின்புகொன்றுகொன்
றின்றேனதன்றியுந் தீங்குசெய்தேனது நீர்கவென்றே [று

---

* சொக்கு-சுண்ணம், அல்லது, சொக்குப்பொடி. ° அருந்தாமுலை-உண்ணாமுலை, " குண்டர்-சோரபுத்திரர். : பவம்-பாவம், ? இடும்பர்-செருக்குடையோர்.

நின்றேனின் சன்னிதிக் கேயதனாற்குற்ற நீபொறுப்பா
யென்றேயுனை நம்பினே னிறைவாகச்சி யேகம்பனே. (௪௰)

ஊரிருந்தென்ன நல்லோரிருந்தென் னுபகாரமுள்ள
பேரிருந்தென்பெற்ற தாயிருந்தென் மடப் பெண்கொடியாள்
சீரிருந்தென்னச் சிறப்பிருந்தென்னவித் தேயத்தினி
லாரிருந்தென்வல்லவா யிறைவாகச்சி யேகம்பனே. (௪௧)

வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லாலெரியப் பிரம்பாலடிக்கக் களிவண்டுகூர்ந்
தல்லார்பொழிற்றில்லை யம்பலவாணர்க்கோ ரன்னைபிதா
வில்லாததாலல்லவோ விறைவாகச்சி யேகம்பனே. (௪௨)

விருத்தம்.

அன்னையெத்தனை யெத்தனை யன்னையோ - வப்பனெத்தனை யெத்தனை யப்பனோ, யின்னை யெத்தனை யெத்தனை பெண்டிரோ-பிள்ளை யெத்தனை யெத்தனை பிள்ளையோ முன்னை யெத்தனை யெத்தனை சென்மமோ-மூடனாயடி யேனுமறிந்திலே, னின்னமெத்தனை யெத்தனைசென்மமோ வென் செய்வேன்சச்சி யேகம்பநாதனே. (௧)

திருத்தில்லை.

[1] காம்பிணங்கும்பணைத் தோளார்க்கும் பொன்னுக்குங் காசினிக்குந், தாம்பிணங்கும் பல வாசையும் விட்டுத் தனித்துச்செத்துப், போம்பிணந்தன்னைத் திரளாகக்கூட்டிப்புரண்டினிமேற், சாம்பிணங்கத்துதையோ வென்செய்வேன்றில்லைச்சங்கரனே. (௧)

சோறிடுநாடு துணிதருங்குப்பை தொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைக ளிறங்கிடுந்தீவினை யெப்பொழுது
நீறிடுமேனியர் சிற்றம்பலவர் நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்க ளுருக்கிடுநெஞ்சமென் னுள்ளமுமே.

அழலுக்குள்வெண்ணெயெனவேயுருகிப்பொன்னம்பல
நிழலுக்குணின்று [2] தவ முனாற்றும னிட்டோமினா

[1] காம்பு மூங்கில், [2] உஞற்றுதல் முயலுதல்.

குழலுக்கிசைந்த வகைமாலைகொண்டு குற்றேவல்செய்து
விழலுக்குமுத்தலை யிட்டிறைத்தேனென் விதிவசமே. (ரு)

ஓடாமற்பாழுக் குழையாம ⁰லோரமுரைப்பவர்பாற்
கூடாமனல்லவர் கூட்டம்விடாமல் வெங்கோபநெஞ்சி
லூடாமனன்மை வழுவாமலின்றைக்கு நாளைக்கென்று
தேடாமற்செல்வந் தருவாய்சிதம்பர தேசிகனே. (சு)

பாராமலேற்பவற் கில்லையென்னுமற் பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள் வந்தணுகாமன் மனமயர்ந்து
போராமற்சேவை பிரியாமலன்பு பெறுதவரைச்
சேராமற்செல்வந் தருவாய்சிதம்பரத் தேசிகனே. (ௗ)

கொல்லாமற்கொன்றைத் தின்னுமற் ! குத்திரங்கோள்களவு
கல்லாமற் ” கைதவ ரோடிணங்காமற் கனவிலும்பொய்
சொல்லாமற்சொற்களைக் கேளாமற்றோகையர் மாயையிலே
செல்லாமற்செல்வந் தருவாய்சிதம்பர தேசிகனே. (சு)

முடிசார்ந்தமன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொருப
பிடிசாம்பராய்வெந்து மண்ணாவதுங்கண்டு பின்னுமந்தப்
படிசார்ந்தவாழ்வை நினைப்பதல்லாற்பொன்னி னம்பலவ
ரடிசார்ந்துநாமுய்ய வேண்டுமென்றேயறி வாரில்லையே. (எ)

காலையுபாதி மலஞ்சலமாமன் றிக் கட்டுச்சியிற்
சாலவுபாதி பசிதாகமாமுற் சஞ்சிதமா
மாலையுபாதி துயில்காமமிவை மாற்றிவிட்டே
யாலமுகந்தரு ளம்பலவாவென்னை யாண்டருளே. (அ)

ஆயும்புகழ்த்தில்லை யம்பலவாண ரருகிற்சென்றாற்
பாயுமிடபங் கடிக்குமரவம்பின் பற்றிச்சென்றாற்
பேயுங்கணமும் பெருந்தலைப்பூதமும் பின்றொடரும்
போயென்செய்வாய்மனமே பிணக்காடவர் போமிடமே. ()

ஓடுமெடுத்” ததளாடையுஞ்சுற்றி யுலாவிமெள்ள
வீடுகடோறும் பலிவாங்கியேவிதி யற்றவர்போ

⁰ ஓரம் பக்ஷபாதம். ? குத்திரம்-வஞ்சனை, ? கைதவர் வஞ்சகர், ” அதள்-தோல்.

லாமெருட்கொண்டிங் கம்பலத்தேநிற்கு மாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்ன காண்சிவகாம சவுந்தரியே. (௧0)

ஊட்டுவிப்பானு முறங்கு விப்பானுமிங் கொன்றோடொன்றை
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை
காட்டுவிப்பானு மருவினைப்பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப்பானு மொருவனுண்டேதில்லை யம்பலத்தே.(௧௧)

அடியார்க்கெளியவ ரம்பலவாண ரடிபணிந்தால்
மடியாமற்செல்வ வறம்பெறலாம்வைய மேழளந்த
நெடியோனும்வேதனுங் காணாதசித்த நிமலனருட்
குடிகாணுநாங்க ளவர்காணுமெங்கள் குலதெய்வமே. (௧௨)

தெய்வசிதம்பர தேவாவுன்சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பன மாமன்னர்வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்தசெல்வமெங் கேமண்டலீகர்தம் மேடையெங்கே
கைவைத்தநாடக சாலையெங்கேயிது கணமயக்கே. (௧௩)

உடுப்பானும்பாலன முண்பானுமுய்வித் தொருவர்தம்மைக்
கெடுப்பானுமேதென்று கேள்விசெய்வானுங் கெதியடங்கக்
கொடுப்பானுந்தேகியென் றேற்பானுமேற்கக்கொடாமனின்
தடுப்பானுநீயல்லை யோதில்லையானந்தத் தாண்டவனே. (௧௪)

வித்தாரம்பேசினுஞ் * சோங்கேறினுங்கம்ப மீதிருந்து
தத்தாவென்றோதிப் §பவுரிகொண்டாடினுந்† தம்மூன்றம்பி
யொத்தாசைபேசினு மாவதுண்டோதில்லை யுண்ணிறைந்த
கத்தாவின்சொற்படி யல்லாதுவேறில்லை கன்மங்களே.(௧௫)

பிறவாதிருக்க வரந்தறல்வேண்டும் பிறந்துவிட்டா
லிறவாதிருக்க மருந்துண்டுகாணிது வெப்படியோ
வறமார்புகழ்த்தில்லை யம்பலவாண ரடிக்கமல
மறவாதிருமனமே யதுகாணன் மருந்துனக்கே.

தவியாதிருநெஞ்சமே தில்லைமேவிய சங்கரனைப்
புவியார்ந்திருகின்ற $ ஞானகரனைப் புராந்தகனை

* சோங்கு-மரக்கலம்' § பவுரி-ஓர்கைக்கூத்து.
ன் தலையன் $ ஞானகரன்-ஞானத்துக்குப்பிரப்பி
லவன். •

யவியாவிளக்கைப்பொன்னம்பலத்தர்டியையைத்தொழுத்தார்
செவியாமனிசெவித் தாற்பிறவாமுத்தி சித்திக்குமே. (௧எ)

நாலின் மறைப்பொரு ளம்பலவாணரை நம்பியவர்
பாலிலொருதாஞ் சேவிக்கொணுதிருப் பார்க்கருங்கல்
மேலிலெடுத்தவர் கையிலக்கைத்தைப்பர் மீண்டுமொரு
காலினிறுத்துவர் கிட்டியுந்தாம்வந்து கட்டுவரே. (௧அ)

ஆற்றேடுதும்பை யணிந்தாடுமம்பல வாணர்தமைப்
போற்றுதவர்க்கடை யாளமுண்டேயிந்தப் பூதலத்திற்
சோற்றுவியற்றுச் சுகமற்றுச்சுற்றுத் துணியுமற்றே
யேற்றலும்பிசசை கிடையாமலேக்கற்றிருப்பர்களே. (௧௯)

அத்தனைமுப்பத்து முக்கோடிதேவர்க் கதிபதியை
நித்தனையம்மை சிவகாமிசுந்தரி நேசனையெங்
கத்தனைப்பொன்னம் பலத்தாடுமையனைக் காணக்கண்க
ளெத்தனைதோடி யுகமோதவஞ்செய் திருக்கின்றே (௨0)

திருச்செங்காடு.

செருப்பானமேனியர் செங்காட்டிலாத்தி நிழலருகே
யிருப்பார்திருவுள மெப்படியோவின்ன மென்னையன்னைக்
0 கருப்பாசயக்குழிக் கேதள்ளுமோகண்ணன் காணரிய
திருப்பாதமேதருமோ தெரியாது சிவன்செயலே. (௧)

§ ஐயுந்தொடர்ந்து விழியுஞ்சொருகி யறிவழிந்து
மெய்யும்பொய்யாகி விடுகின்றபோதொன்று வேண்டுவன்யா
செய்யுந்திருவொற்றி யூருடையீர்திரு நீறுமிட்டுக் (ன்
கையுந்தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே.

சுடப்படுவாரறியார் புரமூன்றையுஞ் சுட்டபிரான்
றிடப்படுமாமதிற் றென்னொற்றியூரன் றெருப்பரப்பி
னடப்பவர்பொற்பதந்தலைமேற்பட நன்குருண்டு
கிடப்பதுகாண்மனமே விதியேட்டைக் கிழிப்பதுவே. (௨)

---

0 கருப்பாசயம்-கருப்பை § ஐ-சிலேத்துமம்.

திருவிடைமருதூர்.

காடேதிரிந்தென்ன காற்றேபுசித்தென்ன கந்தைசுற்றி
யோடேயெடுத்தென்ன வுள்ளன்பிலாதவரோங்குவிண்ணோர்
நாடேயிடைமருதீசர்க்குமெய்யன்பர் § நாரியர்பால்
வீடேயிருப்பினு மெஞ்ஞானவீட்டின்ப மேவுவரே. (க)

தாயும்பகைகொண்ட பெண்டீர்பெரும்பகை தன்னுடைய
† சேயும்பகையுற வோரும்பகையிச் செகமும்பகை
யாயும்பொழுதி லருஞ்செல்வநீங்கி லிங்காதலினாற்
றோயுநெஞ்சேமரு தீசர்பொற்பாதஞ் சுதந்தரமே. (உ)

திருக்கழுக்குன்றம்.

காடோசெடியோ கடற்புறமோகன மேமிகுந்த
நாடோநகரோ நகர்நடுவோநல மேமிகுந்த
வீடோபுறந் திண்ணையோ தமியோனுடல் வீழுமிட
நீடோய்கழுக்குன்றி லீசாவுயிர்த்துணை நின்பதமே. (க)

திருக்காளத்தி.

பத்தும்புகுந்து பிறந்து வளர்ந்துபட் டாடைசுற்றி
முத்தும்பவளமும் பூண்டோடியாடி முடிந்தபின்பு
செத்துக்கிடக்கும் பிணத்தருகேயினிச் சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்னகாண் கயிலாபுரிக் காளத்தியே. (க)

பொன்னாற்பிரயோசனம்பொன்படைத்தார்க்குண்டுபொ
ன்படைத்தோன், றன்னாற்பிரயோசனம் பொன்னுக்கங்கே
துண்டத் தன்மையைப்போ, லுன்னாற்பிரயோசனம் வேணு
தெல்லாமுண் டுனைப்பணியு, மென்னாற்பிரயோசனமேதுண்
டுகாளத்தி யீச்சுரனே. (உ)

வாளான் ‡ மகவரிந் தூட்டவல்லேனல்லன் மாதுசொன்ன
¶ சூளாலிளமை துறக்கவல்லேனல்லன் றொண்டுசெய்து

§ நாரியர் - மாதர்கள்; † சேய்-பிள்ளை, ‡ மகவு-பிள்ளை,
¶ சூள்-ஆணை.

நாளாறிக்கண்ணிடந் தப்பவல்லேனல்ல ஞானிசசென்
றுளாவதெப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே. (ங)

முப்போதுமன்னம் புசிக்கவுந் தூங்கவு மோகத்தினாற்
செப்போதிளமுலை யாருடன்சேரவுஞ் சீவன்விடு
மப்போதுகண்கலக் கப்படவும்மமைத் தாயைய்யனே
யெப்போதுகாணவல்லேன் றிருக்காளத்தி யீசுரனே. (௪)

இரைக்கேயிரவும் பகலுந் திரிந்திங் கிளைத்துமின்று
ரைக்கேயவலக் குழியருகே § யசும்பார்த்தொழுகும்
புரைக்கேயுழலுந் தமியேனையாண்டருள் பொன்முகலிக
கரைக்கேகல்லால நிழற்கீழமர்ந்தருள் காளத்தியே. (ரு)

நாறுங்குருதிச சலதாரைதோற்புரை நாடொறுஞ்சீ
யூறுமலக்குழி காமதுவார மொளித்திடும்புண்
டேறுந்தசைப்பிளப் பந்தரங்கத்துள் சிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய் திருக்காளத்தி யீசுரனே. (சு)

கைலாயம்.

கான்சாயும்வெள்ளி மலைக்கரசேநின் கழனம்பினே
னூன்சாயுஞ்சென்ம மொழிததிடுவாய் கருவூரனுக்காய்
மான்சாயுஞ்செங்கை மழுவலஞ்சாய வளைந்தகொன்றைத்
தேன்சாயநல்ல திருமேனிசாய்ந்த சிலக்கொழுந்தே. (க)

இல்லந்துறந்து பசிவந்தபோதங் கிறந்துநின்று
மல்லுங்கரையற்று வெள்வாயுமாயொன்றிப் பற்றுமின்றிச்
சொல்லும்பொருளு மிழந்துசுகானந்தத் தூக்கத்திலே
யல்லும்பகலு மிருப்பதென்றோ கயிலாயத்தனே. (உ)

† சினந்தனையற்றுப் பிரியமுந்தானற்றுச செய்கையற்று
நினைந்ததுமற்று நினையாமையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந் தானந்தநித்திரை தங்குமென்ற
வனந்தனிலென்றிருப் பேனத்தனேகயி லாயத்தனே. (ங)

அகையாசவேற்றுநின் றங்ஙனந்நின்று கரித்துணியை
தையாதுடுத்துநின் சன்னிதிக்கேவந்து சந்ததமு

§ அசும்பு-கசிவு, † சினம்-கோபம்.

மெய்யாரகிற்பணிந் துள்ளேயுரோமம் விதிர்விதிர்ப்ப
வையாவென்றோல மிடுவதென்றோகயி லாயத்தனே. (ச)

நீருர்த்தமேனியு ரோமஞ்சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேருய்க்கசிந்து கசிந்தேயுருகிநின் சீரடிக்கே
மாறுத்தியானமுற் றுனந்தமேற்கொண்டு மார்பிற்கண்ணீ
ராருய்ப்பெருகக் கிடப்பதென்றே கயிலாயத்தனே. (ரு)

செல்வரைப்பின்சென்று சங்கடம்பேசித் தினந்தினமும்
பல்வினைக்காட்டிப் பரிதவியாமற் பரானந்தத்தி
னெல்லையிற்புக்கிட வேகாந்தமாயெனைக் காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பே னத்தனேகயி லாயத்தனே. (சு)

மந்திக் 0 குருளையொத் தேனில்லைநாயேன் வழக்கறிந்து
புந்திப்பசிவிற் § குருளை யேந்திய $ பூசையைப்போ
லெந்தைக்குரியவன் காணத்தனே கயிலாயத்தனே. (எ)

வருந்தேன்பிறந்து மிறந்துமயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற் புகுகின்றிலேன்புகழ் வாரிடத்தி
விருந்தேனினியவர் கூட்டம்விடேனிய லஞ்செழுத்தா
மருந்தேனருந்துவ னின்னருளாற் கயிலாயத்தனே. (அ)

ம து ரை.

விடப்படுமோவிப் பிரபஞ்சவாழ்க்கையை விட்டுமனந்
திடப்படுமோநின் னருளின்றியேதின மேயலையக்
கடப்படுமோவற்பர் வாயிலிற்சென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோசொக்க நாதாசவுந்தர பாண்டியனே. (க)

பொது.

¶ உடைகோவணமுண் டுறங்கப்புறந்திண்ணை யுண்டுணவிங்
கடைகாயிலையுண் டருந்தத்தண்ணீருண் டருந்துணைக்கே
|| விடையேறுமீசர் திருநாமமுண்டிந்த மேதினியில் [க்கே
வடகோடுயர்ந்தென்ன தென்கோடுசாய்ந்தென்ன வான்பிறை

---

0 குருளை-குட்டி § பூசை-பூசனை. ¶ உடை-வஸ்திரம்
|| விடை-இடபம்.

வீடெமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
வோடெமக்குண்டு வற்றாதபாத்திர மோங்குசெல்வ
நாடெமக்குண்டு கேட்டதெல்லாந்தர நன்னெஞ்சமே
யீடெமக்குச் சொலவேயொருவரு மிங்கில்லையே. (உ)

நாடிக்கொண்டீசரை நாட்டமுற்றாயிலை நாதரடி
தேடிக்கொண்டாடித் தெளிந்தாயிலை செகமாயைவந்து(றும்
மூடிக்கொண்டோமென்றுங் காமாயுதங்கண் முனிந்தவென்
பீடிப்பையோநெஞ்சமே யுனைப்போலில்லைப்பித்தர்களே. (ங)

கையொன்றுசெய்ய விழியொன்றுநாடக் கருத்தொன்றெண்
பொய்யொன்று வஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு (ணப்
மெய்யொன்றுசாரச் செவியொன்றுகேட்க விரும்புமியான்
செய்கின்றபூசையெவ் வாறுகொள்வாய்வினை தீர்த்தவனே. (௪)

கண்ணுண்டுகாணக் கருத்துண்டுநோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச் செவியுண்டுகேட்கப்பல் பச்சிலையா
லெண்ணுண்டுசாத்த வெதிர்நிற்கவீச னிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோ கெடுவீரிந்த மானிடமே. (ரு)

சொல்லினுஞ்சொல்லின் முடிவிலும்வேதச் சுருதியிலு
மல்லிலுமாசற்ற வாகாயந்தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்ப ரிடத்திலுமீச னிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பினுமோ விருப்பானெங்கள் கண்ணுதலே.

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினை தானொழிந்தா
றினைப்போதளவுநில் லாதுகண்டாய்சிவன் பாதநினை (ற்
நினைப்போரைமேவு நினையாரைநீங்கித் நெறியினின்று
லுனைப்போலொருவருண் டோமனமேயெனக் குற்றவரே.

பட்டைக்கிழித்துப் பருவூசிதன்னைப் பரிக்கெடுத்து
முட்டச்சுருட்டியென் மொய்குழலாள்கையில் முன்கொடுத்
கட்டியிருந்த கனமாயக்காரிதன் காமமெல்லாம் (துக்
விட்டுப்பிரியவென்றோ விங்ஙனேசிவன் மீண்டதுவே. (அ)

சூதுற்றகொங்கையு மானார்கலவியுஞ் சூழ்பொருளும்
போதுற்றபூசலுக் கென்செயலாஞ்செய்த புண்ணியத்தாற்

நீதற்றமன்னவன் சிந்தையினின்று தெளிவதற்கோ
காதற்றவூசியைத் தந்துவிட்டானென்றன் கைதனிலே. (க)

வாதுற்றதிண்புய ரண்ணுமலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும் புகலும்நெஞ்சேயிந்தப் பூதலத்திற்
றீதுற்றசெல்வமென் றேடிப்புதைத்த திரவியமென்
காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே. (க0)

வேதத்தினுட்பொருண் மண்ணாசைமங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழி கேட்டிலேயோசெய்த புண்ணியத்தா
லாதித்தன்சந்திரன் போலேவெளிச்சம தாம்பொழுது
காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே. (கக)

மனையாளுமக்களும் வாழ்வுந்தனமுந்தன் வாசன்மட்டே
யினமானசுற்ற மயானமட்டேவழிக் கேதுதுணை
தினையளவெள் ளளவாகினுமுன்பு செய்ததவந்
தனையாளவென்றும் பரலோகஞ்சித்திக்குஞ் சத்தியமே (கஉ)

* அத்தமும்வாழ்வு மகத்துமட்டேவிழி ! யம்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டேவிம்மி விம்மியிரு
கைத்தலமேல்வைத் தழுமைந்தருஞ்சுடு காடுமட்டே
பற்றித்தொடரு மிருவினைப்புண்ணிய பாவமுமே. (கங)

சீயுங்குருதிச செழுநீர்வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன் றில்லாதபோது பகலிரவா
யீயுமெறும்பும் புகுகின்றயோனிக் கிரவுபகன்
மாயுமனிதரை மாயாமல்வைக்க மருந்தில்லையே. (கச)

சீதப்பணிக்குண்டு சிக்கெனக்கந்தை தினமிரந்து
நீ § துய்க்கச்சோறு மனைதோறுமுண்டு நினைவெழுந்தால்
வீதிக்குணல்ல விலைமாதருண்டிந்த * மேதினியி
லேதுக்குநீசலித்தாய் மனமேயென்றும் புண்படவே. (கரு)

ஆருண்டுதோப்புண் டணிவீதியம்பலந் தானுமுண்டு
நீறுண்டுகந்தை நெடுங்கோவணமுண்டு நித்தநித்த

* அத்தம்-பொருள், ! அம்பு-நீர், § துய்த்தல்-உண்ணல்,
* மேதினி-உலகம்.

மாறுண்டலோவி மயங்குநெஞ்சேமனை தோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின் சும்மாவிருக்கச் சுகமுமுண்டே. ௧௬

உடுக்கக் ? கவிக்கக் குளிர்காற்றுவெய்யி லொடுங்கிவந்தாற்
றடுக்கப்பழைய வொருவேட்டியுண்டு சகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணை யெங்கெங்குமுண்டு பசித்துவந்தாற்
()

மாடுண்டுகன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படி கேட்டுவிட்டோமினிக் கேண்மனமே
யோடுண்டுகந்தையுண் டுள்ளேயெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்டகண்ட னடியார்நமக்குத் துணையுமுண்டே. (௧௮)

மாத்தானவத்தையு மாயாபுரியின் மயக்கத்தையு
நீர்த்தார்தமக்கொரு நிட்டையுண்டோநித்த னன்புகொண்டு
வேர்த்தாற்குளித்துப் பசித்தாற்புசித்து விழித்துயின்று
பார்த்தாலுலகத் தவர்போலிருப்பர் பற்றற்றவரே. (௧௯)

ஒன்றென்றிருதெய்வ முண்டென்றிருவுயர் செல்வமெல்லா
மன்றென்றிருபசித் தோர்முகம்பார்நல் லறமுநட்பு
நன்றென்றிருநடு நீங்காமலேநமக் கிட்டபடி
யென்றென்றிருமன மேயுனக்கேயுப தேசமிதே. (௨௦)

நாட்டமென்றேயிரு சற்குருபாதத்தை நம்புபொம்ம
லாட்டமென்றேயிரு பொல்லாவுடலை யடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிரு சுற்றத்தைவாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிரு நெஞ்சேயுனக்குப தேசமிதே. (௨௧)

என்செயலாவ தியாதொன்றுமில்லை யினித்தெய்வமே
யுன்செயலேயென் றுணரப்பெற்றேனிந்த வூனெடுத்த
பின்செய்ததீவினை யாதொன்றுமில்லைப் பிறப்பதற்கு
முன்செய்ததீவினையோ விங்ஙனேவந்து மூண்டதுவே. (௨௨)

திருவேடமாகித் தெருவிற்பயன்றனைத் தேடிவந்து
பரிவாகப்பிச்சை பகருமென்றனைப் பதம்பணிந்தேன்

---

? கவித்தல்-மூடுதல்.

கருவாகுமேதக் கடற்கரைமேவக் கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோ விங்ஙனேசிவனுற்றதுவே. ()

விட்டேனுலகம் விரும்பேனிருவினை வீணருடன்
கிட்டேனவருரை கேட்டிரேன்மெய் கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்றொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பர மென்னிடத்தேவந்தி கெய்தியதே.

அட்டாங்கயோகமு மாதாரமாறு மவத்தையைந்தும்
விட்டேறிப்போன வெளிதனிலே வியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்செம்மதிப் பாலூறலுண்டு மகிழ்ந்திருக்க
வெட்டாதபேரின்ப மென்னைவிழுங்கி யிருக்கின்றதே. (உ௫)

0எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணு
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க (ஞ்
நரியெனக்கென்னும் புன்னாயெனக்கென்னு மிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தே னிதனாலென்ன பேறெனக்கே. (உ௬)

அண்ணற்றன்வீதி யரசிருப்பாகு மணிபடையோர்
நண்ணுறுநாளொன்ப தாமவரேவலு நண்ணுமிவ்வூர்
தண்ணென்பசிக்கு மடைப்பள்ளியான சுகமுமெல்லா
மெண்ணிலிகால ? மவமேவிடுத்தன மெண்ணரிதே. (உ௭)

என்பெற்றதாயாரு மென்னைப்பிணமென் றிகழ்ந்துவிட்டாள்
பொன்பெற்றமாதரும்போவென் றுசொல்லிப்புலம்பிவிட்டா
கொன்பெற்றமைந்தரும் பின்வலம்வந்துகுடைமுடைத்தா[ர்
ருன்பற்றொழிய வொருபற்றுமில்லை யுடையவனே. (உ௮)

கறையற்றபல்லுங் கரித்துணியாடையுங் கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும்பொல்லாதவூணும் புறந்திண்ணையுந்
தறையிற்கிடப்பு மிறந்துண்ணுமோடுஞ் சகமறியக்
குறைவற்றசெல்வமென்றே கோலமா ! மறை கூப்பிடுமே. ()

எட்டுத்திசையும் பதினாறுகோணமு மெங்குமொன்றாய்
முட்டித்ததும்பி முளைத்தோங்குசோதியை மூடரெல்லாங்

0 எரி-நெருப்பு. ? அவம்-வீண். ! மறை-வேதம்.

கட்டிச்சுருட்டித்தங் கக்கத்தில்வைப்பர் கருத்தில்லையார்
பட்டப்பகலை யிரவென்று கூறிடும் பாதகரே. (௩௦)

வாய்நாறுமூழன் மயிர்சிக்குநாறிடு மையிடுங்கண்
பீநாறுமங்கம் பிணவெடிநாறும் பெருங்குழிவாய்
சீநாறும்யோனி யழுஞறுமிந்தியச் சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க் கோவிங்கனேமனம் பற்றியதே. (௩௧)

உரைக்கைக்குநல்ல திருவெழுத்தைந்துண் டுரைப்படியே
செருக்கித்தரிக்கத் திருநீறுமுண்டு தெருக்குப்பையிற்
றரிக்கக்கரித்துணி யாடையுமுண்டெந்தச் சாதியிலு
மிரக்கத்துணிந்துகொண்டேன்குறைவேதுமெனக்கில்லையே

எதப்பட்டாயினி மேற்படும்பாட்டையி தென்றறிந்து
போதப்பட்டாயில்லை நல்லோரிடஞ்சென்று புல்லறிவாள்
வாதப்பட்டாய்மட மானார்கலவி மயக்கத்திலே
பேதைப்பட்டாய்நெஞ்சமே யுனைப்போலில்லை பித்தருமே.()

சுரப்பற்றுவல்வினை சுற்றமுமற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர் கையிணக்கற்றுக் கவலையற்று
வரப்பற்றுநாதனை வாயாரவாழ்த்தி மனமடங்கப்
பரப்பற்றிருப்பதன்றோ பரமாபரமானந்தமே. (௩௪)

பேய்போற்றிரிந்து பிணம்போற்கிடந்திட்ட பிச்சையெல்லா
நாய்போலருந்தி நரிபோலுழன்றுநன் மங்கையரைத்
தாய்போற்கருதித் தமர்போலனைவர்க்குந்தாழ்மைசொல்லிச்
? சேய்போலிருப்பர்கண்டீ ருண்மைஞானந் தெளிந்தவரே.

! விடக்கேபருந்தின் விருந்தேகமண்டல வீணனிட்ட
முடக்கேபுழுவர் துறையிடமேநல முற்றுமிலாச்
சடக்கேகருவி தளர்ந்துவிட்டாற்பெற்ற தாயுந்தொடத்
தொடக்கேயுனைச்சுமந்தே னின்னினேது சுகமெனக்கே. ()

அழுதாற்பயனென்ன நொந்தாற்பயனென்ன வாவதில்லை
தொழுதாற்பயனென்ன நின்னையொருவர் சுடவுரைத்த

---

? சேய்-குழந்தை, ! விடக்கு மாமிசம்.

பழுதாற்பயனென்ன நன்மையுந்தீமையும் ! பங்கயத்தோ
னெழுதாப்படிவருமோ சலியாதிரென் னேழைநெஞ்சே.()

ஊரீருமக்கோ ருபதேசங்கேளு முடம்படங்கப்
போரீர்சமனைக் கழுவேற்றுநீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச் சுற்றத்தைநீங்கிச் சகங்கைக்க
வேரீருமக்கவர் தாமேதருவ ரிணையடியே. (௩அ)

நீற்றைப்புனைந்தென்ன நீராழும்போயென்ன நீமனமே
மாற்றிப்பிறக்க வகையறிந்தாயில்லை மாமறைநூ
லேற்றிக்கிடக்கு மெழுகோடிமந்திர மென்னகண்டா
யாற்றிற்கிடந்துந் துறையறியாம லலைகின்றயே. (௩௯)

ஓங்காரமாய்நின்ற வத்துவிலேயொரு வித்துவந்து
பாங்காய்முளைத்த பயனறிந்தாற்பதி னாலுலகு
நீங்காமனீங்கி நிறையாநிறைந்து நிறையுருவா
யாங்காரமானவர்க் கெட்டாக்கனிவந் தமர்ந்திடுமே. (௪0)

விதியார்படைப்பு மரியா § ரளிப்பும் வியன்கயிலைப்
பதியார் ¶ தொடைப்புநம் பாலணுகாது பரானந்தமே
கதியாகக்கொண்டுமற் றெல்லாந்துயிலிற் கனவெனநீ
மதியாதிருமனமே யிதுகாணன் மருந்துனக்கே. (௪௧)

நாய்க்குண்டுதொண்டு நமக்குண்டுபிச்சை நமனைவெல்ல
வாய்க்குண்டுமந்திர பஞ்சாட்சரமதி யாமல்வரும்
பேய்க்குண்டுநீறு திகைப்புண்டுநின்ற பிறவிப்பிணி
நோய்க்குண்டுதேசிகன் றன்னருணோக்கங்க ணோக்குதற்கே.

நேமங்களிட்டைகள் வேதங்களாகம நீதிநெறி
யோமங்கடர்ப்பணஞ் சந்திசெபமந்த்ர யோகநிலை
நாமங்கள்சந்தனம் வெண்ணீறுபூசி நலமுடனே
சாமங்கடோறு மிவர்செய்யும்பூசைகள் சர்ப்பனையே. (௪௩)

நானெத்தனைபுத்தி சொன்னாலுங்கேட்டிலை நன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட் டுழலுகின்றாயினி யேதுமிலா

† பங்கயத்தோன்-பிரமன் § அளிப்பு-ரக்ஷிப்பு, ¶ தொடைப்பு-சங்காரம்.

வானத்தின்மீனுக்கு வன்றூண்டிலிட்ட வகையதுபோற்
போனத்தைமீள நினைக்கின்றனையென்ன புத்தியிதே. (௪௪)

! அஞ்சக்கரமெனுங் கோடாலிகொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டை வேரறவெட்டி வளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச் சதாசிவமென்கிற வித்தையிட்டுப்
புண்செய்க்களைபறித்தே வளர்த்தேன்சிவ போகத்தையே. ()

தாயாருஞ்சுற்றமும் பெண்டீருங்கைவிட்டுத் தாழ்ந்திடுநா
ணீயாருநானு ரெனப்பகர்வாரந்த நேரத்திலே
நோயாரும்வந்து குடிகொள்வரேற்கொண்ட நோயுமொரு
பாயாருநீயுமல்லாற் பின்னையேதுநட்பாமுடலே. (௪௬)

ஆயும்பொழுது மயிர்க்கால்கடோறு மருங்கிருமி
தோயுமலக்குட்டை யாகியகாயத்தைச் சுட்டுவிட்டாற்
பேயுநடன மிடுங்கடமாமென்று பேசுவதை
நீயுமறிந்தில்லையோ பொருட்டேட நினைந்தனையே. (௪௭)

பூணும்பணிக்கல்ல பொன்னுக்குத்தானல்ல பூமிதனைக்
காணும்படிக்கல்ல மங்கையர்க்கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங்கடந்த சிவனடிக்கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்க வடியேன்படுந்துயர் சற்றல்லவே. (௪௮)

வெட்டாதசக்கரம் பேசாதமந்திரம் வேறொருவர்க்
கெட்டாதபுட்ப மிறையாததீர்த்த மினிமுடிந்து
கட்டாதலிங்கங் கருதாதநெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே. (௪௯)

எருமுட்டைபுட்டி னுதிர்ந்திடுஞ்செல்லுக் கெவரழுவார்
கருமுட்டைபுக்குக் கழலகன்றுய்கண துக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர் போலழும்பேதையிர் பேத்துகிறீ
ரொருமுட்டும்விட்டு மரணுமமென்றைக்கு மோதுமினே. ()

மையாடுகண்ணியு மைந்தரும்வாழ்வு மனையுஞ்செந்தீ
யையாநின்மாயை யுருவெளித்தோற்ற மகிலத்துளே

---

! அஞ்சக்கரம்-பஞ்சாட்சரம்.

மெய்யாயிருந்தது நாட்செலநாட்செல வெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே

ஆயாய்ப்பலகலை யாய்ந்திடுந்தாயருவந்தவர்பாற்
போயாகிலுமுண்மை வைத்திருந்தாயில்லை பூதலத்தில்
! வேயாரந்தோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாய்விருக்கின் றனைமனமேயென்ன பித்தனக்கே (௫௨)

அடியாருறவு மரன்பூசைநேசமு மன்புமன்றிப்
படிமீதில்வேறு பயனுளதோபங் கயன்வகுத்த
குடியானசுற்றமுந் தாரமும்வாழ்வுங் குயக்கலங்கள்!
தடியாலடியுண்ட வாறொக்குமென்றினஞ் சார்ந்திலரே. ()

ஆங்காரப்பொக்கிஷங் கோபக்களஞ்சிய மாணவந்தா
னீங்காவரண்மனை பொய்வைத்தகூடம்வின் னீடிவளர்
தேங்கார்பெருமதிற் காமவிலாசமித் தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந் தெப்படிஞானம் பலிப்பதுவே. (௫௪)

ஒழியாப்பிறவி யெடுத்தேங்கியேங்கி யுழன்றநெஞ்சே
யழியாப்பதவிக் () கவுடதங்கேட்டி யஞ்ஞதியனை
மழுமான்கரத்தனை மால்விடையானை மனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்தி விம்மியழுநன்மை வேண்டுமென்றே. ()

நாய்க்கொருசூலு மதற்கோர்மருத்துவ நாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம் மிடிபடுமோபெருங் காஞ்சிரங்கா
யாக்குவரார தருந்துவராரது போலுடம்பு
நீக்கிரையாவதல்லா லேதுக்காமிதைச் செப்புமினே. (௫௬)

? கச்சிற்கிடக்குங் கனதனத்திற்கடைக் கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்ற வேழைநெஞ்சே ? யிடவான் ? பயந்த
பச்சைப்பசுங்கொடி யுண்ணாமுலைப்பங்கர் பாதத்திலே!
தைச்சிக்கிடமனமே யொருகாலுந் தவறில்லையே. (௫௭)

---

! வேய்-மூங்கில், () அவுடதம்-மருந்து, ? கச்சு-முலைக்க ட்டு, (அதாவது ரவிக்கை) ? இடவான்-மலையரையன், ? பய ந்த-பெற்ற.

? மாணர்விழியைக் கடந்தேறிவந்தனன் வாழ்குருவுங்
கோனுகியென்னைக் குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனுலும் 0 பேறிருந் தாலுநற்பேறிது பொய்யன்றுகா
ணனுலுமிந்த வுடம்போடிருப்ப தருவருப்பே. (கஅ)

சற்றாகிலுந் தன்னைத் தானறியாய்தனை யாய்ந்தவரை
யுற்றுகிலுமுறைக் கப்பொருநதாயுனக் கானகில்லை
பற்றாய்குருவைப் பணியாய் பரத்தையர்பாலிற்சென்றென்
பெற்றாய்மடநெஞ்சமே யுனைப்போலில்லை பித்தனுமே. (கக)

உளியிட்டகல்லையு மொப்பிட்டசாந்தையு மூத்தையற்
றைப், யுளியிட்டசெம்பையும் போற்றுகிலேனுயர் பொன்
னெனவே, யொளியிட்டதாளிரண் டுள்ளேயிருத்துவ துண்
மை யென்று, வெளியிட்டடைத்து வைத்தேனினிமே லொ
ன்றும்வேண்டிலனே. (சு0)

கலலாலெறியுண்டு காலாலுதையுண்டு காளைகையில்
வில்லாலடியுண்டு முன்னாள்விடமுண்டு மேலளித்துப்
பல்லாற்புரமெரி யேகம்பவாணர் பதாம்புயத்தின்
சொல்லாற்செவியினிற் கேளாதிருந்ததென் றொல்வினையே.

ஒருநான்குசாதிக்கு மூவகைத் தேவர்க்கு மும்பருக்குந்
திருநாளுந்தீர்த்தமும் வேறுளதோவத் திசைமுகனுல்
வருநாளில்வந்திடு மந்தக்கண்ணாளன் வகுப்பொழியக
குருநாதனுணைகண்டீர் பின்னையேதிக் ! குவலயத்தே. (சுஉ)

விருத்தம்.

பாரோநீரோ, தீரோ ? வளியோ படர்வானோ
ஆரோநானென் றாய்வுறுகின்றே னறிவில்லேன்
பாரோநீரோ தீயோவளியோ படர்வானோ
ஆரோநானென் றாய்வுறுகின்ற வதுநீயே. (சுங)

! மாணர்-மாதர், 0 பேறு-பிரயோசனம்’ ! குவலயம்-
உலகம், ? வளி-காற்று.

நாப்பிளக்கப் பொய்யுரைத்துநன்னிதியந்தேடி-நலமொ ன்றுமறியாத நாரியரைக்கூடிப், * பூப்பிளக்கவருமேழைப் புற்றீசல்போலப்-புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்,காப்பதற்கும்வகையறியீர் கைவிடவுமாட்டீர்-கவட் டுத்தோல்மரத்துளையிற் காணுழைத்துக்கொண்டீர்' ! ஆப்ப தனையசைத்துவிட்ட குரஙகதனைப்போல வகப்பட்டீர்கிடக் துழலவகப்பட்டீரே. கூஅ

மத்தளைதயிருண்டானு மலர்மிசையவனுந்தேடிப்
பித்தளைகொண்டபோதும் வெளிப்படாப்பிரானேயிஙகுச்
செய்த்தளைகூறவந்த சேந்தனைவேந்தனிட்ட
கைத் ? தளை நீக்கியென்முற் காட்டுவெண்காட்டுளானே.கூசு

தாயாருக்குத்

தகனகிரியை செய்கையிற்பாடிய

வெண்பா.

ஐயிரண்டு திஙகளா வஙகமெலா நொந்துபெற்றுப்
! பையலென்றபோதே பரிந்தெடுத்துச-செய்யவிரு
கைப்புரத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
யெப்பிறப்பிற் காண்பே னினி. (க)

முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே
யந்திபகலாச சிவனை யாதரித்துத-தொந்தி
சரியச்சுமந்து பெற்ற தாயார்தமக்கோ
வெரியத் தழன்மூட்டு வேன். (உ)

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து-முட்டச
சிறகிலிட்டு காப்பாற்றிச் சிராட்டுந் தாய்க்கோ
விறகிலிட்டுத் தீமூட்டு வேன். (ங)

* பூ-பூமி, ! ஆப்பு-முளை, ? தளை விலங்கு ! பையல்-ஆ ண்குழந்தை.

நொந்து சுமந்துபெற்று நோவாம லேந்திமுலை
தந்துவளர்த் தெடுத்துத் தாழாமே-யந்திபகல்
கையிலே கொண்டென்னைக் காப்பாற்றுந்தாய்தனக்கோ
? மெய்யிலே தீமூட்டு வேன். (ச)

அரிசியோநானிடுவே ளுத்தா னடக்கு
வரிசையிட்டுப் பார்த்து மகிழாம-லுருசியுள்ள
தேனே யமிர்தமே செல்வத் திரவியப்பூ
மானேயெனவழைத்த வாய்க்கு. (ரு)

அள்ளியிடு தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமன்-மெள்ள
முகமேன் முகம்வைத்து முத்தாடி யென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு. (சு)

விருத்தம்.

முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையி
லன்னையிட்டதீ யடிவயற்றிலே
யானுமிட்டதீ மூள்கமூள்கவே. (எ)

வெண்பா.

வேகுதே தீயதனில் வெந்துபொடி சாம்ப
லாகுதே பாவியே னையகோ - * மாகக்
குருவி பறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை. (அ)

வெந்தாளோ சோணகிரி வித்தகாநின்பதத்தில்
வந்தாளோ வென்னை மறந்தாளோ-சந்ததமு
முன்னையே நோக்கி யுகந்துவரங் கிடந்தென்
றன்னையே யீன்றெடுத்த தாய். (கூ)

வீற்றிருந்தா ளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்-பாற்றெளிக்க

?மெய்-உடம்பு, * மாகம்-ஆகாசம்.

வெல்லீரும் வாருங்க ளேதென் றிரகாம
மெல்லாஞ் சிவமயமே யாம். (க0)

வெளிப்பட்டபின் பாடியது.

மென்று விழுங்கி விடாய்கழிக்க நீர்தேட
லென்று விடியுமெனக் கென்கோவே-நன்றி
* கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து. (கக)

சிற்றம் பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம் பலர்தேடி விட்டோமே-நித்தம்
பிறந்திடத்தைத் தேடாதே பேதைமட நெஞ்சங்
கறந்திடத்தை நாடாதே கண். (கஉ)

தோடவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு-நாடிநீ
யென்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனு
னுன்னை நினைத்தா லுதை. (கங)

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப்படுவதில்லை யண்ணலே-யாசைதனைப்
பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல். (க௪)

கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதா
மண்டத்தைப்போல வழகியதாந்-தொண்ட
ருடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு. (கரு)

! ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பது வாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன் 0 கடுவருந்து
தேவாதிதேவன் றிருவொற்றி யூர்த்தெருவிற்
போவாரடியிற் பொடி. (கசு)

---

* கருதார்-பகைவர். ! ஓடு-ஓர்வகைக்கட்டி, 0 கடு-விஷம்.

வாவியெல்லாந்தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவனங்களெல்லாங் கணநாதர்-பூவுலகில்
வீதிசிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோ
ரோதுந் திருவொற்றி யூர். (கஎ)

* நச்சரவம் பூண்டானை நன்றாத்தொழுவதுவு
மிச்சையிலே தானங் கிருப்பதுவும்-பிச்சைதனை
வாங்குவதுமுண்பதுவும் வந்துதிருவாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம். (கஅ)

இருக்குமிடந்தேடி யென்பசிக்கேயன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்-பெருக்க
வழைத்தாலும் போகே னரனே யென்றேக
மிளைத்தாலும் போகே னினி. (ககூ)

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுடனே யுடலைச்
சுட்டுவிடப்போகிறார் சுற்றத்தார்-பட்டதுபட்
டெந்நேரமுஞ் சிவனை யேற்றுங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம். (உ0)

ஆவியொடு காய மழிந்தாலு மேதினியிற்
பாவியென்றுநாமம் படையாதே-மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப் போலே திரி. (உக)

ஆரூ ரிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றூரூர்கடோறு முழலுவீர்-தேரே
யுளக்குறிப்பை நாடாத வூமர்காணீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடு வீர். (உஉ)

எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்க
ளெத்தனைபே ரிட்டழைக்க வேனென்றே-னித்த
மெனக்குக் களையாற்று யேகம்பா கம்பா
வனக்குத் திருவிளை யாட்டோ. (உரு)

---

* நச்சு-விஷம்.

மண்ணூர் தனலாற வாஹும்புகையார
வெண்ணரிய தாயு மிளப்பாறப்-பண்ணுமயன்
கையாறவு மடியேன் காலாறவுங் கண்பா
ரையா திருவை யாறு. (உச)

இப்பிறப்பை நம்பி யிருப்பையோ நெஞ்சமே
வைப்பிருக்கவாயின் மனையிருக்கச்-சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு. (உரு)

மேலுமிருக்க விரும்பினையோ வெள்விடையோன்
சீலமறிந்திலையே சித்தியே-கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக் குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச சுட்டுவிடக் கண்டு. (உசு)

ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
யன்புவைத்து நெஞ்சே யலைந்தாயே-வன்கழுக்க
டத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட்டிப்புட்டுக்
கின்னக் கண்டு. (உஎ)

இன்னம்பிறக்க விசைவையோ நெஞ்சமே
மன்னரிவ ரென்றிருந்து வாழ்ந்தவரை-முன்ன
மெரிந்தகட்டை மீதி லிணக்கோ வணத்தை
புரிந்துருட்டிப் போட்டது கண்டு. (உஅ)

முதற்சங் கமுதூட்டு மொய்குழலார் தம்மை
நடுச்சங்க நல்விலங்கு பூட்டுங்-கடைச்சங்க
மாம்போததுவூது மம்மட்டோ விம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம். (உகூ)

பொய்யை யொழியாய் புலாலைவிடாய் காளத்தி
யையரேயென்று யறஞ்செய்யாய்-வெய்ய
சினமேயொழியாய் திருவெழுத்தைந்தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு.

* எருவாய்க்கிருவிரண்மே லேறுண் டிருக்குங்
? கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்-திருவாரூர்த்
தேரோடும்வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடும் ! தாரைக்கா நீ. (௯க)

மாதாவுடல் சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
0 வேதாவுங் கைசலித்து விட்டானே-நாதா
() விருப்பையூர் வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா. (௯உ)

* அத்திமுத லெறும்பீ றானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந் தளிக்குந் தேசிகா-மெத்தப்
பசிக்குதையா பாவியென்றன் பாழ்வயிற்றைப் பற்றி
யிசிக்குதையா காரோண ரே. (௯௩)

எத்தனைநாள் கூடி யெடுத்த சரீரமிவை
யத்தனையு மண்டின்ப தல்லவோ-வித்தகனார்
காலைப் பிடித்துமெள்ளக் ? கங்குல்பக லற்றிடத்தே
மேலைக் குடியிருப்போ மே. (௯௪)

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதே
யெச்சி லிருக்கு மிடமறியீ ரெச்சிதனை
யுய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படுமேல்
சித்த நிராமய மாமே. (௯௫)

? காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே
பாலுண் கடைவாய் படுமுன்னே-மேல்விழுந்தே
யுற்றாரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு. (௯௬)

---

* எருவாய்-குதம், ? கருவாய்-குய்யம் ! தாரை - வழி. 0 வேதா-பிரமன். () இருப்பையூர்-ஓர்திருப்பதி. * அத்தி-யானை ? கங்குல்-இரவு, ? காலன்-யமன்.

எத்தனைபேர் நட்டகுழி யெத்தனைபேர் தொட்டமுலை
யெத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்-நித்தநித்தம்
பொய்யடாபேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய். (௩எ)

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணிநெஞ்சே
யொருத்தருக்குந் தீங்கினை யுன்னாதே-பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தானிருக்குந் தான். (௩அ)

எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலு
முத்தர்மனமிருக்கு மோனத்தே-வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
* தாதிமன நீர்க்குடத்தே தான். (௩௯)

மாலைப் பொழுதி ° னறு மஞ்சளரைத் தேகுளித்து
வேலை மினுக்கிட்டு விழித்திருந்து-சூலாகிப்
பெற்றாள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தானாலென்செய்வாள் பின். (௪0)

வான்றேமெறையேயோ மறைதேடும் பொருளேயோ
வூன்றேடுமுயிரேயோ வுயிர்தேடு முணர்வேயோ
தான்றேடநான்றேடச் சகமெலாந்தனைத்தேட
நான்றேடி நான்காண நானாரோ நானாரோ. (௪க)

## பட்டணத்தார் வெண்பா

முற்றுப் பெற்றது.

* தாதி-வேலைக்காரி. ° நறுமஞ்சள்-பரிமளமுள்ள மஞ்சள்.

# உடற்கூற்றுவண்ணம்.

தனதனதான தனதனதான
    தந்ததனந்தன தானதனந்த
தனனதன்ந்த தனனதனந்த
    தானன தானன தானனதந்த—
    தந்ததனதான தனதானனா.

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு
மன்புபொருந்தி யுணர்வுகலங்கி யொழுகியவிந்து
    ஊறுசிரோணித மீதுகலந்து—

பனியிலொர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்து
புகுந்துதிரண்டு பதுமவரும்பு கமடமிதென்று
    பார்வைமெய்வாய்கசவி கால்கைகளென்ற—

உருவமுமாகி யுயிர்வளமாத மொன்பதுமொன்று
நிறைந்துமடந்தை யுதரமகன்று புவியில்விழுந்து
    யோகமும்வாரமு நாளுமறிந்து—

மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கையமுதமருந்தி
    யோரறிவீரறி வாகிவளர்ந்து—

ஒளிநகையூற லிதழ்மடவாரு வந்துமுகந்திட—
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைமொழிந்து
    வாவிரு போவென நாமம்விளம்ப—

உடைமணியாடை யரைவடமாடவுண்பவர்தின்பவர்
தங்களொடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
    தேடியபாலரொ டோடிநடந்து—

அஞ்சுவயதாகிவிளையாடியே (வ)

உயர்தருஞானகுருவுபதேச முக்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
    வாழ்பதினாறு பிராயமும்வந்து—

மயிர்முடிகோதி யறுபதுநீல வண்டமிர்தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபோனிலங்குபணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—

மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டு
மருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில் போலவர் போவதுகண்டு

மனதுபொறாம லவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—

ஒருமுகலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—

வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோதகு ரோதமடைந்து—
செங்கையினிலோர் தடியுமாகியே (க)

வருவதுபோவ தொருமுதுகூனு மந்தியென்னும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல் விடாமன்மொழிந்,

துயில்வருநேர மிருமல்பொறாது தொண்டையுநெஞ்சு
முலர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமழிந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழிமேல்வழி சாரநடந்து—

தெளிவுமிராம லுரைதடுமாறி சிந்தையுநெஞ்சமு
லைந்துமருண்டு திடமுமலைந்து மிகவுமலைந்து
தேறிகலாதரவேதனைநொந்து—

அன்னையெனுங்கெர்ப்பமதில் வந்தமதிலேயிருந்து
நன்னயமாய்பத்துதிங்கள் நானகத்திலேயிருந்தேன்
என்னென்னஅதிசயங்கா ணிவ்வுலகிலேயமைத்து
உன்னிதமெல்லாமமைத்தே நுண்மையிதுகாண்கிலரே. (௧)

அம்புலியிலேயுதித்து ஆய்ந்துமரிபாலைதன்னை
வம்புலகத்தார்வசிய மாய்கைபிடித்தேபிரிந்து
கும்பிதனிலேயுழன்று குண்டலிதன்பொற்கமலம்
நம்பியிருந்தேசிலநாள் ரகசியத்தைக்காண்கிலனே. (௨)

அண்டரண்டவான்புவியு மாகமத்திலுட்பொருளும்
கண்டிதமாயான்விளங்குங் காயமதிலேயறியும்
வண்டரெனைநீசனென்று வாறுதனையேயொழித்தேன்
விண்டரகசியந்தனை விளக்கமதுகாண்கிலரே. (௩)

வையமதிலேயுதிக்கு மாண்டர்களேயுங்களுயிர்
மெய்யன்றிருந்தசைவு வெளிப்படுவதென்னவிதம்
அய்யமில்லாவாழ்ந்துலகி லாண்மையுகமூண்டமதி
பொய்யனுமிவ்வாழ்க்கையது போகுஞ்சுடுகாடுளதே. (௪)

வீடானமூலச் சுழிநாதவீட்டில் விளங்கும்விந்து
நீடாழிலோகந் தழைத்துப்பெருகி நின்றிலகும்
தேடாதழித்தபொருளான பொக்கிஷந் தேடியென்ன
காடானநாடு சுடுகாடுசேர்வதுங் கண்டிலரே. (௫)

எழுவகைத்தோற்றமும் நால்வகையோனியி லெய்திடினும்
பொழியச்சுரோணிதம்நாதவிந்துட்பொருள்போதகத்தால்
கழியக்கழிய கடலுயிர்தேய்பிறை கண்டுமிருந்
தழியப்பெருந்தறை யென்னுளிருந்து மனித்தியமே. (௬)

என்னுளிருந்தென்ன முன்னுளனுப்படி யிந்தவுடல்
உன்னுலழிவதுந் தான்றியாதென தந்தைவிதி
தன்னுலழிவது முடலுயிர்காய மொழிவதுங்காண்
டன்னுளனுப்படி கண்டிருந்தறி யாதவரே. (௭)

சிவமயம்.

பத்திரகிரியார் அருளிச்செய்த

# மெஞ்ஞானப்புலம்பல்.

முத்தி தரும்வேத மொழிந்தபுலம்பல்சொல்ல
அத்திமுகவன்றன் அருள்பெருவதெக்காலம். (க)

ஆங்காரமும்மடக்கி ஐம்புலனைச்சுட்டறுத்துத்
தூங்காமற்றூங்கிச் சுகம்பெருவதெக்காலம். (உ)

நீங்காச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து
தேங்காக்கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம். (ங)

தேங்காக்கருணைவெள்ளந் தேக்கியிருந்துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்காலம். (ச)

ஓயாக்கவலையினு லுள்ளுடைந்துவாடாமல்
மாயாப்பிறவி மயக்கறுப்பதெக்காலம். (ரு)

மாயாப்பிறவி மயக்கத்தையூடறுத்துக்
காயாபுரிக்கோட்டை கைக்கொள்வதெக்காலம். (சு)

காயாபுரிக்கோட்டை கைவசமாய்கொள்வதற்கு
மாயாவனுபூதி வந்தடுப்பதெக்காலம். (எ)

சேயாய்சமைந்து செவிடூமைபோற்றிரிந்து
பேய்போலிருந்துன் பிரமைகொள்வதெக்காலம். (அ)

பேய்போற்றிரிந்துன் பிணம்போற்கிடந்துபெண்ணைத்
தாய்போனினைத்துத் தவமுடிப்பதெக்காலம். (கூ)

கால்காட்டிக்கைகாட்டிக் கண்கள்முகங்காட்டி
மால்காட்டுமங்கையரை மறந்திருப்பதெக்காலம். (க0)

பெண்ணினல்லாராசைப் பிரமைதனைவிட்டொழிந்து
கண்ணிரண்டுமூடிக் கலந்திருப்பதெக்காலம். (கக)

வெட்டுண்டபுண்போல் விரிந்தவல்குற்பைதனிலே
தட்டுண்டுகிற்கை தவிர்வதுவுமெக்காலம். (கஉ)

ஆருதபுண்ணி லமுழ்ந்திக்கிடவாமல்
தேருதசிந்தைதனைத் தேத்துவதுமெக்காலம். (கரு)

தந்தைதாய்மக்கள் சகோதரரும்பொய்யெனவே
சிந்தைதனிற்கண்டு திருக்கறுப்பதெக்காலம். (கசு)

மன்னுயிரைக்கொன்று வதைத்துண்டுழலாமல்
தன்னுயிர்போலெண்ணித் தவமுடிப்பதெக்காலம். (கஎ)

பாவியென்றேபேர்படைத்துப் பாழ்நரகில்வீழாமல்
ஆவிநின்றருத்திரத்தை யறிவதினியெக்காலம். (கஅ)

உளியிட்டகல்லு முருப்பிடித்தசெஞ்சாந்தும்
புளியிட்டசெம்புபோற் பொருளாவதெக்காலம். (கஎ)

வேடிக்கையுஞ்சொகுசு மெய்ப்பகட்டும்பொய்ப்பகட்டும்
வாடிக்கையெல்லா மறந்திருப்பதெக்காலம். (கஅ)

பட்டுடையுமொப்பனையும் பாவனையுந்தீவினையும்
விட்டுவிட்டுன்பாதம் விரும்புவதுமெக்காலம். (கக)

ஆமைவருமாட்கண் டைந்தடக்கஞ்செய்தாற்போல்
ஊமையுருக்கொண் டொடுங்குவதுமெக்காலம். (உ0)

தண்டிகையுஞ்சாவடியுஞ் சாளிகையுமாளிகையுங்
கண்டுகளிக்குங் கருத்தொழிவதெக்காலம். (உக)

அத்தனிருப்பிடத்தை ஆராய்ந்துபார்த்துநிதஞ்
செத்தசவம்போற் றிரிவதினியெக்காலம். (உஉ)

ஒழிந்ததருமைத்தினைவைத் துள்ளெலும்புவெள்ளெலும்பாய்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம். (உரு)

அற்பசுகமறந்தே யறிவையறிவாலறிந்து
கெர்ப்பத்தில்வீழ்ந்துகொண்டு கோளறுப்பதெக்காலம். (உச)

கெர்ப்பம்-யானைப்ப[illegible]

கருப்படுத்திஎன்னையான் கைப்பிடித்துக்கொள்ளாமுன்
உருப்படுத்தியாள உடன்படுவதெக்காலம். (உகு)

தூண்டுவிளக்கணைய தொடர்ந்திருள்முன்சூழ்ந்தாற்போல்
மாண்டுபிழைத்துவந்த வகைதெரிவதெக்காலம். (உசு)

தூரியினின்மீன்போற் சுழன்றுமனம்வாடாமல்
ஆரியனைத்தேடி யடிபணிவதெக்காலம். (உஎ)

எண்ணூறுகமிருந்து எய்தாதவீடுபெற
வெண்ணீறுபூசி விளங்குவதுமெக்காலம். (உஅ)

அவ்வேடம்பூண்டிங்ஙன் கலைந்துதிரியாமற்
சிவ்வேடம்பூண்டு சிறந்திருப்பதெக்காலம். (உகூ)

அண்டருக்காகஞ்சருந்தி அம்பலத்திலாடுசிவன்
தொண்டருக்குத்தொண்டனெனத்தொண்டுசெய்வதெக்காலம்

பன்றிவடிவெடுத்துப் பாரிடந்துமால்காணு
குன்றில்விளக்கொளியை கூறுவதுமெக்காலம். (௩க)

தித்திக்குந்தெள்ளமிர்தை சித்தாந்தத்துட்பொருளை
முத்திக்குவித்தை முதனினைப்பதெக்காலம். (௩உ)

வேதாந்தவேதமெல்லாம் விட்டொழிந்தேநிஷ்டையிலே
ஏகாந்தமாக யிருப்பதினியெக்காலம். (௩௩)

மற்றிடத்தைத்தேடியென்றன வாழ்நாளைப்போக்காமல்
உற்றிடத்தைத்தேடி யுறங்குவதுமெக்காலம். (௩௪)

இன்றுளோர்நாளை யிருப்பதுவும்பொய்யெனவே
மன்றுளோர்சொல்லும் வகையறிவதெக்காலம். (௩௫)

கஞ்சாவயினியுடன் கள்ளுண்டுவாடாமற்
பஞ்சாவமிர்தம் பருகுவதுமெக்காலம் (௩௬)

செஞ்சலத்திலூற்றிரண்டசெனனமோக்ஷம்பெறவே
சஞ்சலத்தைவிட்டுன் சரணடைவதெக்காலம். (௩எ)

கும்பிக்கிரைதேடிக் கொடும்பாரிடத்தோறும்
நம்பித்திரிகை தவிப்பதினியெக்காலம். (௩அ)

ஆடுகின்றசூத்திரந்தா னறுமளவுமேதிரிந்து
போடுகின்றநாள்வருமுன் போற்றுவதுமெக்காலம். (௩கூ)

நவசூத்திரம்போட்டு நானலேநீயென்றிருந்த
சிவசூத்திரத்தைத் தெறிந்தறிவதெக்காலம். (௪0)

மறந்துமலசலங்கள் மாயும்புழுக்கூட்டைவிட்டுக்
கரந்தனடியிணைக்கீழ்க் கலந்துநிற்பதெக்காலம். (௬௧)

இம்மைதனிற்பாதகனு யிருவினைக்கீடாயெடுத்த
பொய்மைதனிற்போட்டுன்னைப் போற்றிநிற்பதெக்காலம்.

உப்பிட்டபாண்ட முடைந்துகருக்கொள்ளுமுன்னே
அப்பிட்டவேணியனுக் காள்படுவதெக்காலம. (௬௩)

சேவைபுரிந்து சிவரூபகாட்சிகண்டு
பாவைதனைக்கழித்துப் பரமடைவதெக்காலம். (௬௪)

காண்டத்தைவாங்கிக் கருமேகமீண்டதுபோல்
பாண்டத்தைநீக்கிப் பரமடைவதெக்காலம். (௬௫)

சோற்றுத்துருத்திதனைச் சுமந்தலுத்துவாடாமல்
ஊத்தைச்சடம்போட் டுனையடைவதெக்காலம். (௬௬)

வல்லினவேதுகை.

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாமல்
உடக்கைசுழற்றி உனையறிவதெக்காலம். (௬௭)

ஆசைவலைப்பாசத் தகப்பட்டுமாயாமல்
ஓசைமணிதீபத்தி லொன்றிநிற்பதெக்காலம். (௬௮)

கூரறியகால்வேதங் கூப்பிட்டுங்காணாத
பாராரகசியத்தைப் பார்த்திருப்பதெக்காலம். (௬௯)

புல்லாய்விலங்காய்ப் புழுவாய்ஜடிவடிவா
யெல்லாப்பிறப்பி னிருளகல்வதெக்காலம் (௫0)

தக்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேநினைவில்
பக்குவம்வந்துன்னருளைப் பார்த்திருப்பதெக்காலம். (௫௧)

புருவத்தை வரோடும் புல்கியின்பங்கொள்வதற்குத்
தெரிவைப்பருவம்வந்து சிக்குவதுமெக்காலம். (௫௨)

தெரிவையறும்பக்குவத்தின் சீராட்டெல்லாமறிந்து
குருவையறிந்தேனினைத்துக் கும்பிடுவதெக்காலம். (௫௩)

வம்படிக்குமாதருடன் வாழ்ந்தாலுமன்னுப்புளி
யம்பழமுமோடும்போ லாவதினியெக்காலம். (௫௪)

பற்றற்று நீரிற் படர்ந்தவன்னம்பச்சிலைபோல்
சுற்றற்று நீக்கிமனந் தானிற்பதெக்காலம். (ருரு)

சல்லாபலீலையிலே தனமனைவிசெய்தசுகம்
சொல்லாரக்கண்டெனக்குச்சொல்வதினியெக்காலம் (ருசு)

மருவுமயற்புருடன் வருநேரங்காணுமல்
உருகுமனம்போலெனுள முருகுவதுமெக்காலம். (ருஎ)

தன்கணவன்றன்சுகத்திற் றன்மனம்வேறுனதுபோல்
என்கருத்திலுன்பதத்தை யேற்றுவதுமெக்காலம். (ருஅ)

கூடிப்பிரிந்துவிட்ட கொம்பனையைக்காணுமல்
தேடித்தவிப்பன்போல சிந்தைவைப்பதெக்காலம், (ருகூ)

எவ்வனத்தின்ஸ்திரீமோகம் எப்படியுண்டப்படிபோல்
கவ்வனத்திலுன்னைக் கலந்திருப்பதெக்காலம். (சுo)

கண்ணூலருவி கசிந்துமுத்துப்போலுதிரச்
சொன்னபரம்பொருளைத் தொகுத்தறிவதெக்காலம். (சுக)

ஆகமிகவுருவ வன்புருகவென்புருகப்
போகவநுபூதி பொருந்துவதுமெக்காலம். (சுஉ)

நீரிற்குமிழிபோ னிலையற்றவாழ்வைவிட்டுன
பேரிற்கருணைவெள்ளம் பெருக்கெடுப்பதெக்காலம். (சுங)

அன்பையுருக்கி யறிவையதன்மேற்புகட்டித்
துன்பவலைபாசத் தொடக்கறுப்பதெக்காலம். (சுச)

கருவின்வழியறிந்து கருத்தைச்செலுத்தாமல்
அருவிவிழிசொரிய அன்புவைப்பதெக்காலம். (சுரு)

தெளியத்தெளியத் தெளிந்தசிவானந்தத்தேன்
பொழியப்பொழியமனம் பூண்டிருப்பதெக்காலம். (சுசு)

ஆதாரமூலத் தடியிற்கணபதியைப்
பாதாரவிந்தம் பணிந்துநிற்பதெக்காலம். (சுஎ)

மண்வளைந்தாற்கறிக்கில் வளைந்திருந்தவேதாவைக்
கண்வளைந்துபார்த்துள்ளே கண்டிருப்பதெக்காலம். (சுஅ)

அப்புராநடுவே யமர்ந்திருந்தவிட்டுணுவை
உப்புக்குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவதெக்காலம். (சுகூ)

மூன்றுவளையமிட்டு முளைத்தெழுந்தகோணத்தில்
தோன்றுமுருத்திரனை தொழுதுநிற்பதெக்காலம். (எ0)

வாயுமறுகோணமதில் வாழுமகேச்சுரனைத்
தோயும்வகைகேட்கத தொடங்குவதுமெக்காலம். (எக)

வட்டவழிக்குள்ளே மருவுஞ்சதாசிவத்தைக்
கிட்டவழிதேடக கிருபைசெய்வதெக்காலம் (எஉ)

உச்சிக்கிடைநடுவே யோகநுகுருபதத்தை
நிச்சயித்துக்கொண்டிருந்து நேர்வதினியெக்காலம். (எங)

பாறுகிபார்மீதிற் பஞ்சவர்னம்தானுகி
வேறுகிநீமுளைத்த வித்தறிவதெக்காலம். (எச)

கட்டறுக்கவொண்ணுக் கருவிகரணுதியெல்லாஞ்
சுட்டறுத்துநிட்டையிலே தூங்குவதுமெக்காலம். (எரு)

கள்ளக்கருத்தையெல்லாங் கட்டோடுவேரறுத்திங்
குள்ளக்கருத்தை யுணர்ந்திருப்பதெக்காலம். (எசு)

அட்டகாசஞ்செலுதது மவத்தைச்சடலத்துடனே,
பட்டபாடத்தனையும் பகுததறிவதெக்காலம். (எஎ)

அறிவிக்கருவியுட னவததைபடும்பாட்டையெல்லாம்
பிறியவுடனிருத்திப் பெலப்படுவதெக்காலம். (எஅ)

பூதம்பொறிக்கரணம் போக்கவிந்துநாதமுமாய்
பேதம்பலவிதமும் பிறித்தறிவதெக்காலம். (எகூ)

தோன்றுசைமூன்றுந் தொடர்ந்துவந்துசற்றுமல்
ஊன்றுசைவேரையடி யூடறுப்பதெக்காலம். (அ0)

புன்சனனம்போற்றுமுன்னே புரிவட்டம்போகினினி
யென்சனனமீடேறு மென்றறிவதெக்காலம். (அக)

நட்டனடுவினின்று நற்றிரோதாயியருள்
கிட்டவழிகாட்டிக் கிருபைசெய்வதெக்காலம். (அஉ)

நானேநானென்றிருந்தேன் நடுவினிற்கட்டழுகி
தானேவெளிப்படுத்தித் தருவனென்பதெக்காலம். (அங)

அடர்ந்தமனக்காட்டை யஞ்செழுத்தாம்வாளாலே
தொடர்ந்துதொடர்ந்துவெட்டி சுடுவதினியெக்காலம்.(அச)

ஐந்துபொறிவழிபோ யலைந்துமிந்தப்பாழ்மனதை
வெந்துவிழப்பார்த்து விழிப்பதினியெக்காலம். (அரு)

)ன மாண்டுசேர்ந்திருந்தோ ரெல்லாருந்தான்வரண்டு
சினமாண்டுபோகவருள் சேர்ந்திருப்பதெக்காலம். (அசு)

அமையாமனதமையு மானந்தவீடுகண்டால்
ழமையாமநோக்கி யிருப்பதினியெக்காலம். (அஎ)

டண்டுவிடுஞ்சிவன்மெள்ளக் கொட்டாவிகொண்டாற்போல்
மாண்டுவிடுமுன்னஞன் மாண்டிருப்பதெக்காலம். (அஅ)

ஊனிறைந்தகாய முயிரிறந்துபோகுமுன்னம்
நானிறந்துபோகவினி நாள்வருவதெக்காலம். (அகூ)

கெட்டுவிடுமாந்தர் கெர்விதங்கள்பேசிவந்து
சுட்டுவிடுமுன்னென்னைச் சுட்டிருப்பதெக்காலம். (கூ0)

தோளேணிவைத்தேறித் தூரநடந்தெக்காலம்
நாலேணிவைத்தேறி நோக்குவதுமெக்காலம். (கூக)

வாயோடுகண்மூடி மயக்கமுற்றுநில்லாமல்
தாயோடுகண்கூடித் தழுவிநிற்பதெக்காலம். (கூஉ)

காசினியெலாநடந்து காலோய்ந்துபோகாமல்
வாசிதனிலேறி வருவதினியெக்காலம் (கூங)

ஒலிபடருங்குண்டலியை யுன்னியுணர்வாலெழுப்பிச்
சுழிமுனையின்றுள்திறந்து தூண்டுவதுமெக்காலம். (கூச)

இடைபிங்கலைநடுவே யியங்குஞ்சுழிமுனையில்
தடையறவேநின்று சலிப்பறுப்பதெக்காலம். (கூரு)

மூலநெருப்பைவிட்டு மூட்டிநிலாமண்டபத்தில்
பாலையிறக்கியுண்டு பசியொழிவதெக்காலம். (கூசு)

ஆகவெளிக்குள்ளே யடங்காப்புரவிசெல்ல
ஏகவெளியி லிருப்பதினியெக்காலம். (கூஎ)

பஞ்சரித்துப்பேசும் பலகலைக்கெட்டாப்பொருளில்
சஞ்சரித்துவாழ்ந்து தவம்பெறுவதெக்காலம். (கூஅ)

மலமுஞ்சலமுமற்று மாயையற்றுமானமற்று
நலமுங்குலமுமற்று நானிருப்பதெக்காலம் (கூகூ)

ஓடாமலோடி யுலகைவலம்வந்துசுற்றித்
தேடாமலென்னிடமாய்த் தெரிசிப்பதெக்காலம். (க00)

அஞ்ஞானம்விட்டே யருண்ஞானத்தொல்லைதொட்டு
மெய்ஞ்ஞானவீடுபெற்று வெளிப்படுவதெக்காலம். (க0க)

வெல்லுமட்டும்பார்த்து வெகுளியெலாம்விட்டகன்று
செல்லுமட்டுஞ்சிந்தை செலுத்துவதுமெக்காலம். (க0உ)

மேலாம்பதந்தேடி மெய்ப்பொருளையுள்ளிருத்தி
நாலாம்பதந்தேடி நான்பெறுவதெக்காலம். (க0ங)

எண்ணாததூரமெல்லா மெண்ணியெண்ணிப்பாராமல்
கண்ணாடிக்குள்ளொளிபோற் கண்டறிவதெக்காலம் (க0ச)

என்னையறிந்துகொண்டே னெங்கோமானோடிருக்கும்
தன்மையறிந்து சமைந்திருப்பதெக்காலம். (க0ரு)

ஆறுதாரங்கடந்த் வானந்தப்பேரொளியை
பேறுதக்கண்டுநான் பெற்றிருப்பதெக்காலம். (க0சு)

ஆணவமாயத்தா லழிந்துடலம்போகாமுன்
காணுதலாலின்பமற்றுக் கண்டறிவதெக்காலம். (க0எ)

மும்மலமுஞ்சேர்ந்து முளைத்தெழுந்தகாயமிதை
நிர்மலமாய்க்கண்டுவினை நீங்கிருப்பதெக்காலம், (க0அ)

முன்னைவினைகெடவே மூன்றுவகைகாட்சியினால்
உன்னைவெளிப்படுத்தி யுருவதினியெக்காலம். (க0கூ)

கண்ணிணொளிபாய்ந்ததுவுங் கருத்தறிந்துகொண்டதுவும்
விண்ணிலொளிகண்டதுவும் வெளிப்படுவதெக்காலம். (கக0)

கனவுகண்டாற்போலெனக்குக் காட்டிமறைந்தேயிருந்த
நினைவைப்பரவெளிமேல் நிறுத்துவதுமெக்காலம். (ககக)

ஆரென்றுகேட்டதுவு மறிவுவந்துகண்டதுவும்
பாரென்றுசொன்னதுவும் பகுத்தறிவதெக்காலம் (ககஉ)

நினைக்குநினைவுதொறும் நிறைந்தபரிபூரணத்தை
முனைக்குமேற்கண்டுகண்ணில் முளைத்தெழுப்பதெக்காலம்.

முப்பாழும்பாழாய் முதற்பாழுஞ்சூனியமாய்
அப்பாழும்பாழா யன்புசெய்வதெக்காலம். (கச)

ஒரன்றெழுந்து தெளிந்துநின்றவான்பொருளை
ஒரன்றாகண்டு நிலைபெறுவதெக்காலம். (ககரு)

வ்வெழுத்துமவ்வெழுத்தும் வாளாருஞ்சிவ்வெழுத்தும்
வ்வெழுத்தினுள்ளே யடங்கி நிற்பதெக்காலம். (ககசு)

ழுத்தெல்லாமாண்டிறந்தே யேகமாய்நின்றதிலே
ழுத்தமாசனிக்கையைத் தன்புகொளவதெக்காலம, (ககஎ)

ருவாகியுருவாகி ஆதியந்தமாகிநின்று
ருவாகிவந்தெனையாட் கொண்டருள்வதெக்காலம். (ககஅ)

ானென்றறிந்தவனை நானறியாக்காலமெல்லாந்
ானென்றாநீயிருந்த தனுவறிவதெக்காலம. (கக௯)

ன்மயமாய்க்கண்டதெல்லாமெண்ணிஎணணிபார்த்தபின்பு
ன்மயமாய்க்கண்டதிலே சார்ந்துநிற்பதெக்காலம். (கஉ0)

ளியிலொளியா முருப்பிறந்தவாறதுபோல
வளியிலவெளியான விதமறிவதெக்காலம். (கஉக)

ளியிட்டமெய்ப்பொருளை யுளவழியிலேயடைந்து
வளியிட்டுசாததிவைதது வீடுறுவதெக்காலம். (கஉஉ)

ாந்தம்வலித்திருமபைக கரததிழுத்துகொண்டதுபோல்
ாய்ந்துபிடித்திழுத்துன் பதத்திலவைப்பதெக்காலம். (கஉ௩)

த்தாயமகொண்டு பிரணவத்தையூடறுத்துச்
சத்தாரைப்போலே திரிவதினியெக்காலம். (கஉச)

ழிந்தகருத்தினைவைத் துள்ளொலும்புவெள்ளொலும்பாய்க்
ழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம். (கஉரு)

திகபிலர்சொன்ன வாகமத்தின்சொற்படியே
ாதிவகையி ... சஞ்சரிப்பதெக்காலம். (கஉசு)

துமகளவுந் தொடராவினையஞ்சுட்டிடக்காற்
ாதுந்துருததியைப்போட் டுனையடைவதெக்காலம். (கஉஎ)

சைவலைப்பாசத் தகப்பட்டுமாயாமல்
சைமண்டீபத்தி லொன்றிநிற்பதெக்காலம் (கஉஅ)

ல்லாய்மரமாய் கயலாய்ப்பறவைகளாய்
ல்லாய்ப்பிறந்தஜென்மம் போதுமென்பதெக்காலம். (கஉ௯)

தக்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேவிணேயில்
பக்குவமாயுன்னருளேப் பார்த்திருப்பதெக்காலம். (கரு0)

தூரோடிசைந்து சுழன்றதத்துவத்தை
வேரோடிசைந்து விளங்குவதுமெக்காலம், (கருக)

பாதகமொறிப் பயந்தெழுந்தசித்திரத்தை
காதகமூலத திருத்துவதுமெக்காலம். (கரு௨

ஓரின்பங்காட்டு முயர்ஞானவீதிசென்று
பேரின்பவீடுகண்டு பெற்றிருப்பதெக்காலம். (கருரு)

காரணமாய்வந்தென் கருததினுரைத்ததெல்லாம்
பூரணமாகக்கண்டு புகழ்ந்திருப்பதெக்காலம்.

ஆயுங்கலேகளெல்லா மாராய்ந்துபார்த்ததற்பின்
நீயன்றுமில்லா நிசங்காண்பதெக்காலம்.

குறியாகக்கொண்டு குலமளித்தநாயகனேப்
பிரியாமற்சேர்ந்து பிறப்பறுப்பதெக்காலம்,

மத்தடுத்துநின்று மருளாடுவார்போலே
பித்தடுத்துநின்னருளேப் பெற்றிருப்பதெக்காலம்.

சாவாமற்செத்திருந்து சற்குருவின்பொன்னடிக்கீழ்
வேவாமல்வெந்திருக்க வேண்டுவதுமெக்காலம்.

என்னேயறியாம லிருந்தாட்டுஞ்சூத்திரநின்
தன்னேயறிந்து தவம்பெறுவதெக்காலம்.

உள்ளமறியா தொளிந்திருந்தநாயகனே
கள்ளமனந்தொளிந்து காண்பதினியெக்காலம். (க௬0)

வாசித்துங்காணுமல் வாய்விட்டும்பேசாமல்
வீசித்துந்தோன்றுப் பொருள்காண்பதெக்காலம். (க௬க

பன்னிரண்டுகாற்புரவி பாய்ந்தசில்லடந்தட்டாமல்
பன்னிரண்டுசெங்கிலிக்குட் பிணேப்பதினியெக்காலம். (க௬க)

நாட்டுக்காலிரண்டும்விட்டு நடுவுக்காலூடேபோய்
ஆட்டுக்காலிரண்டுடனுள்ள யமர்ந்திருப்பதெக்காலம்.

பாற்பசுவையோட்டி பதியில்வந்துசேராட்டிக்
காற்பசுவையோட்டியதிற் கட்டிவைப்பதெக்காலம். (க௬௪)

பலவிடந்தேமனைவிதப் பாயட்டுமபாராமல
நிலவரையினூடேபோய் சேர்ப்பதெக்காலம். (கசரு)

காமக்கடல்கடந்து கரையேறிப்போவதற்கே
ஓமக்கனல்வளர்த்தி யுள்ளிருப்பதெக்காலம். (கசசு)

உதயசசுடர்மூன்று முள்வீட்டிலேகொளுத்தி
இதயத்திருநடன மினிகாண்பதெக்காலம். (கசஎ)

வேதாந்தவேதமெல்லாம் விட்டேறியேகடந்து
நாதாந்தமூல நடுவிருப்பதெக்காலம் (கசஅ)

பட்டமற்றுக்காற்றிற் பறந்தாற்போலைம்புலமும்
விட்டுவெளியாக விசுவசிப்பதெக்காலம். (கசகூ)

அட்டாங்கயோகமதற் கப்பாலுக்கப்பாலாய
கிட்டாப்பொருள்தன்னைக் கிட்டுவதுமெக்காலம். (கரு0)

ஒட்டாமலொட்டிநிற்கு முடலுயிரும்பிரிந்தே
எட்டாப்பழம்பதிக்கே யேணிவைப்பதெக்காலம் (கருக)

பாசத்தைநீக்கிப் பசுவைப்பதியில்விட்டு
நேசத்தினுள்ளே நினைந்திருப்பதெக்காலம் (கருஉ)

ஆசாரநேய வனுட்டானமும்மறந்து
பேசாமெஞ்ஞானநிலைப் பெற்றிருப்பதெக்காலம். (கருங)

பல்லாயிரங்கோடிப் பகிரண்டமும்படைப்பே
அல்லாதுவேறில்லையென் றறிவதினியெக்காலம் (கருச)

ஆதிமுதலாகிநின்ற அரியென்றவட்சரத்தை
[illegible]தியறிந்துள்ளே யுணர்வதினியெக்காலம். (கருரு)

சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப்பொய்யாக்கிச்
சூத்திரத்தைக்கண்டு துயரறுப்பதெக்காலம். (கருசு)

அல்லும்பகலுமென்ற னறிவையறிவாலறிந்து
சொல்லுமுறைமறந்து தூங்குவதுமெக்காலம். (கருஎ)

இறங்குஞ்சராசரத்தி லென்றுமென்னனையும்போல்
முயங்குமந்தவேத முடிவறிவதெக்காலம். (கருஅ)

ஊனாகி யூனி லுருவாகி யெவ்வுலகந்
தானாகி நின்ற தரிப்பறிவதெக்காலம். (௧௫௯

என்னைவிட்டு நீங்காம லென்னிடத்தில் நீயிருக்க
உன்னைவிட்டு நீங்கா தொருப்படுவதெக்காலம். (௧௬0

இன்னதென் றுசொல்லவொண்ணா வெல்லையற்றவான்பொரு
ளை, சொன்னதென் றுநானறிந்து சொல்வதினியெக்கால

மனதையொருவில்லாக்கி வான்பொறியைநாணாக்கி
எனதறிவை யம்பாக்கி யெய்வதினியெக்காலம். (௧௬௨

என்னையிறக்கவெய்தே யென்பதியையீடழித்த
உன்னைவெளியில்வைத்தே யொளித்துநிற்பதெக்காலம்.

கடத்துகின்றதோணிதனைக் கழைகள்குத்தி விட்டாற்போ
நடத்துகின்றசித்திரத்தை நானறிவதெக்காலம் (௧௬௪

நின்றநிலைபேராம னினைவிலொன்றுசாராமல்
சென்றநிலைமுத்தியென்று சேர்ந்தறிவதெக்காலம். (௧௬

பொன்னுமவெள்ளியும்பூண்டு பொற்பதத்தையுள்ளமைத்து
மின்னுமொளிவெளியே விட்டடைப்பதெக்காலம். (௧௬௬

கூட்டிலடைப்பட்டபுழு குளவியருகொண்டதுபோல்
வீட்டிலடைப்பட்டருளை வேண்டுவதுமெக்காலம்: (௧௬

கடலிலொளித்திருந்த கனலெழுந்துவந்தாற்போல்
உடலிலொளித்தசிவ மொளிசெய்வதெக்காலம். (௧௬

அருணம்பிரகாச மண்டமெங்குமபோர்த்ததுபோல்
கருணைத்திருவடியிற் கலந்துநிற்பதெக்காலம். (௧௬

பொன்னிற்பலவிதமாய் பூஷணமுண்டானதுபோல்
உன்னிற்பிறந்துன்னி லொடுங்குவதுமெக்காலம். (௧௭

நாயிற்கடைபிறப்பாம் நான்பிறந்துதுன்பமற
வேயிற்கனலொளிபோல் விளங்குவதுமெக்காலம். (௧௭

சூரியகாந்திவெளி சூழ்ந்துபஞ்சைசுட்டதுபோல்
ஆரியனேரறத் தருள்பெறுவதெக்காலம். (௧௭

இரும்பிறகனன்முட்டி யவ்வுருபோயவ்வுருவாய்க்
கருயபிறசுவைரசத்தைக் கண்டறிவதெக்கால

கருக்கொண்டமுட்டைதனைக் கடலாமைதானினைக்க
உருக்கொண்டவாறதுபோ லுனையடைவதெக்காலம். (கஎச)

வீடுவிட்டுப்பாய்ந்து வெளியில்வருவார்போல்
கூடுவிட்டுப்பாயுங் குறிப்பறிவதெக்காலம். (கஎரு)

கடைந்தவெண்ணெய்மோரிற் கலவாதவாறதுபோல்
உடைந்துதமியே னுனைக்காண்பதெக்காலம். (கஎசு)

இருளைவெளிவிழுங்கி யேகவுருக்கொண்டாற்போல்
அருளை விழுங்குமிரு ளகன்றுநிற்பதெக்காலம். (கஎஎ)

மின்னெழுத்துமின்னொடுங்கி விண்ணிலுறைத்தாற்போல்
என்னுணின்றதென்னுள்ளே யானறிவதெக்காலம். (கஎஅ)

கண்டபுனற்குடத்திற் கதிரொளிகள்பாய்ந்தாற்போல்
கொண்டசொரூபமதைக் கூறறிவதெக்காலம். (கஎகூ)

பூணுகின்றபொன்னணிந்தாற் பொன்சுமக்குமோவுடலைக்
காணுகின்றவென்கரத்திற் கண்டறிவதெக்காலம். (கஅ0)

செம்பிற்களிம்புபோல் சித்தைவிழுங்குமிக
வெம்பினின்றமும்மலத்தை வேறுசெய்வதெக்காலம். (கஅக)

ஆவியுங்காயமும்போ லாத்துமத்துநின்றதனைப்
பாவியறிந்துமனம் பற்றிநிற்பதெக்காலம் (கஅஉ)

ஊமைக்கனுக்கண் டுரைக்கறியாவின்பமதை
நாமறிந்துகொள்வதற்கு நாள்வருவதெக்காலம். (கஅங)

சாகாசிவனடியைத் தப்பாதாரெப்போதும்
போகாஉடலகன்று போவரென்பதெக்காலம் (கஅச)

நிட்டைதனைவிட்டு நினைவறிவுதப்பவிட்டு
வெட்டவெளிதன்னில் விரவிநிற்பதெக்காலம். (கஅரு)

வெட்டவெளிதன்னில் விளைந்தவெம்பாசத்தை
திட்டமுடன்கண்டு தெளிவதினியெக்காலம். (கஅசு)

எங்கும்பரவடிவா யென்வடிவுநின்வடிவாய்க்
கங்குல்பகலின்றியுனைக் கண்டிருப்பதெக்காலம். (கஅஎ)

உண்டதுவுமாத ருடன்கூடிச்சேர்ந்தின்பங்
கண்டதுவுநீயெனவே கண்டுகொள்வதெக்காலம். (கஅஅ)

ஏமென்றுகேட்டதுவு மென்னுள்ளேநின்றதுவும்
ஓமென்றுசொன்னதுவு முற்றறிவதெக்காலம். (௧௮௯)

சத்தம்பிறந்தவிடந் தன்மயமாய்நின்றவிடஞ்
சித்தம்பிறந்தவிடந் தேர்ந்தறிவதெக்காலம் (௧௯௦)

போகும்வரவும் பரம்புள்ளுமாகிநின்றும்
தாக்குமொருபொருளைச் சந்திப்பதெக்காலம் (௧௯௧)

நானெனவு நீயெனவு நாமிரண்டுமற்றொன்றும்
நீயெனவேசிந்தைதனி னேர்படுவதெக்காலம். (௧௯௨)

அறிவையறிவாலறிந்தே யறிவுமறிவுதனில்
பிரிவுபடசில்லாமல் பிடிப்பதினியெக்காலம். (௧௯௩)

ஈரேழ்புவனமெல்லாம் நிறைந்துநின்றாரமுதாய்
ஆடுந்திருக்கூத்தை யறிவதினியெக்காலம். (௧௯௪)

தித்தியென்றகூத்துந் திருச்சிலம்பினோசைகளும்
பத்தியுடனேகேட்டுப் பணிவதினியெக்காலம் (௧௯௫)

நயனத்திடைவெளிபோய் நண்ணும்பரவெளியில்
சயனத்திருந்து தலைப்படுவதெக்காலம். (௧௯௬)

அருவிமலைநடுவே யாயிரக்கால்மண்டபத்தில்
திருவிளையாடகண்டு தெரிசிப்பதெக்காலம். (௧௯௭)

மீனைமிகவுண்டுநக்கி விக்கிநின்றகொக்கதுபோல்
தேனைமிகவுண்டுநக்கி தெவிட்டிநிற்பதெக்காலம். (௧௯௮)

பொல்லாதகாயமுனைப் போட்டுவிக்குமுன்னே
கல்லாவின்பால்சுறப்பக் கறப்பதினியெக்காலம். (௧௯௯)

வெட்டவெளிக்குள்ளே விளங்குஞ்சதாசிவத்தைக்
கிட்டவரத்தேடக் கிருபைசெய்வதெக்காலம் (௨௦௦)

பேரறிவிலேமனதை பேராமலேயிருத்தி
ஓரறிவிலெந்நாளுமூன்றி நிற்பதெக்காலம். (௨௦௧)

அத்துவிதம்போலுமென்ற னுத்தமத்தினுள்ளிருந்து
முத்திதரநின்ற முறையறிவதெக்காலம். (௨௦௨)

நாநின்றபாசபதி னுளிருந்துமாளாமல்
நீநின்றகோலமதில் நிரவிநிற்பதெக்காலம். (௨௦௩)

எள்ளுங்கரும்பு மெழுமலருமகாயமும்போல்
உள்ளும்புறம்புநின்ற துற்றறிவதெக்காலம். (௨0௪)

அன்னம்புலனை வகுத்தமிர்தையுண்டதுபோல்
என்னைவகுத்தவனை யினிக்காண்பதெக்காலம். (௨0௫)

அந்தரத்தினீர்பூத் தலர்ந்தெழுந்ததாமரைபோல
சிந்தையைத்துக்கண்டு தெரிசிப்பதெக்காலம். (௨0௬)

பிறப்புயிறப்புமற்றுப் பேச்சுமறமூச்சுமற்று
மறப்புநினைப்புமற்று மாண்டிருப்பதெக்காலம். (௨0௭)

மன்னும்பரவெளியை மனவெளியிலடைத்தறிவை
என்னுமொருநினைவை யெழுப்பிநிற்பதெக்காலம் (௨0௮)

ஆசைகொண்டமாத ரடைகனவுநீக்கியென்மேல
ஓசைகொண்டுநானு மொடுங்குவதுமெக்காலம். (௨0௯)

தன்னுயிரைக்கொண்டு தானரிந்தவாரதுபோல்
உன்னுயிரைக்கொண்டிங் கொடுங்குவதுமெக்காலம். (௨௧0)

சேற்றிற்கிளைநாடுந் திடமாமுடலைப்பிரிக்
காற்றிலுழல்சூத்திரமாய்க் காண்பதினியெக்காலம் (௨௧௧)

என்வசமுங்கெட்டிங் கிருந்தவசமும்மழிந்து
தன்வசமுங்கெட்டருளைச் சார்ந்திருப்பதெக்காலம். (௨௧௨)

தன்னைமறந்து தலைத்துநிலைமறைந்து
கன்மமறந்து கனிபெறுவதெக்காலம். (௨௧௩)

என்னையென்னிலேமறந்தே யிருந்தபதியும்மறந்து
தன்னையுந்தானேமறந்து தனித்திருப்பதெக்காலம். (௨௧௪)

தன்னையுந்தானேமறந்து தலைவாசற்றாள்போட்டே
உன்னைநினைந்துள்ளே யுறங்குவதுமெக்காலம். (௨௧௫)

இணைபிரிந்தபோதலரி யின்பமுறுமன்றிலைப்போல்
துணைபிரிந்தபோதருணூல் தொடர்ந்துகொள்வதெக்காலம்.

ஆட்டமொன்றுமில்லாம லசைவுசற்றுங்காணமல்
தேட்டமற்றவான்பொருளைத் தேடுவதுமெக்காலம். (௨௧௭)

முன்னைவினையாலறிவு முற்றுமற்புன்மறைந்தால்
அன்னைதனைத்தேடி யமுதுண்பதெக்காலம் (௨௧௮)

கள்ளுண்டவர்போற் களிதருமானந்தமதாற்
றள்ளுண்டுநின்றாடித் தடைபடுவதெக்காலம். (௨௧௯)

தானென்றவாணவமுந் தத்துவமுங்கெட்டொழிந்தே
ஏனென்றபேச்சுமிலா திலங்குவதுமெக்காலம். (௨௨௦)

நானவனைக்காண்பதெல்லா ஞானவிழியாலறிந்து
தானவனாய்நின்று சரணடைவதெக்காலம். (௨௨௧)

தானந்தமில்லாத தற்பரத்தினூடுருவி
ஆனந்தங்கண்டே யமர்ந்திருப்பதெக்காலம். (௨ ௨)

உற்றவெளிதனிலே உல்லப்பாரந்தரத்தே
மற்றமறமாய்கை மாள்வதினியெக்காலம். (௨௨௩)

ஏடலர்ந்தபங்கயமு மிருகருணைநேத்திரமுந்
தோடணிந்தகுண்டலமுந் தோன்றுவதுமெக்காலம். (௨௨௪)

ஐயாறுமாறு மகன்றுவெறுவெளியில்
மையிருளில்நின்றமன மாள்வதினியெக்காலம். (௨௨௫)

காட்டுமருண்ஞானக் கடலிலன்புகப்பல்விட்டு
மூட்டுங்கருணைக்கடலின் மூழ்குவதுமெக்காலம். (௨௨௬)

நானாரோநீயாரோ நற்றாம்பரமானந்
தானாரோவென்றுணர்ந்து தவமுடிப்பதெக்காலம். (௨௨௭)

எவரெவர்களெப்படிகண் டெந்தப்படிநினைத்தார்
அவரவருக்கப்படிநின் றாமென்பதெக்காலம் (௨௨௮)

உற்றுற்றுப்பார்க்க வொளிதருமானந்தமதை
நெத்திக்குநேர்கண்டு நிலைப்பதினியெக்காலம். (௨௨௯)

விளங்குகின்றதாரகையை வெய்யோன்மறைததாப்போல்
களங்கமறவுன்காட்சி கண்டறிவதெக்காலம். (௨௩௦)

என்னையேநானறியே னிந்தவண்ணஞ்சொன்னதல்லால்
முன்னையோர்கைக்கொள்ள முன்பணிவதெக்காலம். (௨௩௧)

ஐஞ்சுகரத்தானை யடியிணைப்போற்றிசெய்து
நெஞ்சிற்பொருந்தி நிலைபெறுவதெக்காலம். (௨௩௨)

## பத்திரகிரியார் புலம்பல்.

முற்றிற்று.

# பாம்பாட்டிச் சித்தர் பாடல்

கடவுள் வணக்கம்.

தெளிந்துதெளிந்துதெளிந் தாடுபாம்பே-சிவன்
சீர்பாதங்கண்டுதெளிந் தாடுபாம்பே
ஆடுபாம்பேதெளிந் தாடுபாம்பே-சிவன்
அடியிணைகண்டோமென் றாடுபாம்பே. (க)

நீடுபதமக்கென்றுஞ் சொந்தமென்றே
நித்தியமென்றேபெரு முத்தியென்றே
பாடுபெடும்பாதமதி பதநினைந்தே
பன்னிப்பன்னிப்பாடிநின் றாடுபாம்பே. (உ)

பொன்னிலொளிபோலவெங்கும் பூரணமதாய்ப்
பூவின்மணம்போலத்தங்கும் பொற்புடையதாய்
மன்னும்பலவுயிர்களின் மன்னிப்பொருந்தும்
வள்ளலடிவணங்கிநின் றாடுபாம்பே.

எள்ளிலெண்ணெய்போலவுயி ரெங்குநிறைந்த
ஈசன்பதவாசமல ரெண்ணியெண்ணியே
உள்ளபடியன்புபதி யோங்கிநிற்கவே
ஒடுங்கியடங்கித்தெளிந் தாடுபாம்பே.

அண்டபிண்டந்தந்தவெங்க ளாதிதேவனை
அகலாமலேநினைந் தன்புடன்பணிந்து
தெண்டிசையும்புகழ்ந்திட வேத்தியேத்தியே
ஏகமனமாகநாடி யாடுபாம்பே.

மெய்மயமானபரி சுத்தவஸ்துவைத்
தொழுதழுதாவலறித் தொடர்ந்தோமெனவே
நீதிதவறாவழியி னின்றநிலையாய்
நினைந்துநினைந்துருகி யாடுபாம்பே. (சு)

அருவாயுமுருவாயு மாதியாயும
அந்தமாயுமொளியாயு மாகமமாயும்
திருவாயுமகுருவாயுஞ் சிவனுயும்
செறிந்தவஸ்தவைப்போற்றி யாடுபாம்பே. (எ)

சுட்டிக்காட்டவொண்ணாத பாழ்சூனியந்தனைச்
சூட்சமதறியாலறிந்து தோஷமறவே
எட்டிப்பிடித்தோமென் றானந்தபாம்பை
யெடுத்துவிரித்துநின் றுடுபாம்பே. (அ)

எவ்வுயிருமெவ்வுலகு மீன்றும்புறம்பாய்
இருந்துதிருவிளையாட் டெய்தியும்பின்னர்
அவ்வுயிருமவ்வுலகு மாகியுநின்ற
ஆனந்தவெள்ளங்கண் டாடுபாம்பே. (கூ)

குருவணக்கம்.

சாற்றுமுடல்பொருளாவி தத்தமாகவே
தானம்வாங்கிநின்றவெங்கள் சற்குருவினைப்
போற்றிமனம்வாக்குக்காய மூன்றும்பொருந்தப்
புகழ்ந்துபுகழ்ந்துநின் றுடாய்பாம்பே. (க0)

பொய்மதங்கள்போதனைசெய் பொய்க்குருக்களைப்
புத்திசொல்லிநன்னெறியிற் போகவிடுக்கும்
மெய்மதந்தானின்னதென்று மேவவிளம்பும்
மெய்க்குருவின்பதம்போற்றி யாடாய்பாம்பே. (கக)

வேதப்பொருளின்னதென்றும் வேதங்கடந்த
மெய்ப்பொருளைக்கண்டுமன மேவிவிரும்பிப்
போதப்பொருளின்னதென்றும் போதனைசெய்யும்
பூரணசற்குருதாள்கண் டாடாய்பாம்பே. (க௨)

உள்ளங்கையிற்கனிபோல உள்ளபொருளை
உண்மையுடன்காட்டவல்ல வுண்மைக்குருவைக்



கள்ளமனந்தன்னைத்தள்ளி கண்டுகொண்டன்பாய்க்
களித்துக்களித்துநின் றாடாய்பாம்பே. (௧௩)

அங்கையிற்கண்ணாடிபோல வாதிவஸ்துவை
அறிவிக்குமெங்களுயி ரானகுருவைச்
சங்கையறச்சந்ததமுந் தாழ்ந்துபணிந்தே
தமனியப்படமெடுத் தாடாய்பாம்பே. (௧௪)

நாயகிலையழிகையைக் கண்டுகொண்டுபின்
கற்பநிலையுள்ளிற்கொண் டெக்காலமும்வாழும்
தாயநிலைகண்டபரி சுத்தகுருவின்
துணையடிதொழுதுநின் றாடாயபாம்பே. (௧௫)

கூடுவிட்டுக்கூடுபாயுங் கொள்கையுடைய
குருவின்வல்லபமெவர் கூறவல்லவர்
வீடுபெறும்வகையை மேன்மேலுங்காட்டு
மெய்க்குருவைப்பணிந்துநின் றாடாய்பாம்பே. (௧௬)

அட்டதிக்குமண்டவெளி யானவிடமும்
அடக்கியகுளிகையோ டாடிவிரைவாய்
வட்டமிட்டுவலம்வரும் வல்லகுருவின்
மலரடிதஞ்சமென் றாடாய்பாம்பே. (௧

கற்பகாலங்கடந்தாதி கர்த்தாவோடுங்
கடடிழியாதுவாழுங் காரணக்குரு
பொற்பதமேதஞ்சமென்று போற்றுதல்செய்து
பூரணசிந்தையோ டாடாய்பாம்பே. (௧அ)

வச்சிரத்திற்கோர்பழுது வாய்க்குமாயினும்
வல்லுடம்புக்கோர்குறை வாய்த்திடாது
மெச்சகடமுள்ளவெங்கள் வேதகுருவின்
மெல்லடிதுதித்துநின் றாடாய்பாப்பே. (௧௯)

## பாம்பினது சிறப்பு.

நாதர்முடிமேலிருக்கு நாகப்பாம்பே
நச்சிப்பையைவைத்திருக்கு நல்லபாம்பே
பாதலத்திற்குடிபுகும் பைகொள்பாம்பே
பாடிப்பாடிநின் றுவிளை யாடுபாம்பே. (உ0)

வளை புகும்போதேதலை வாங்கும்பாம்பே
மண்டலமிட்டுடல்வளை வண்ணப்பாம்பே
தளைக்கஞ்சிநின்றிடும் சத்தியப்பாம்பே
தலையெடுத்தேவிளை யாடுபாம்பே. (உக)

குற்றமறுசிவனுக்கு குண்டலமானாய்
கூறுந்திருமாலினுக்குக் குடையானாய்
கற்றைக்குழற்பார்வதிக்குக் கஙகணமானாய்
கரவாமலுளங்களித் தாடுபாம்பே. (உஉ)

மண்டலத்தைதாங்குமிகு வல்லமைகொண்டாய்
மாயனுக்குபடுக்கைக்கு வண்ணப்பாயானாய்
கண்டபடைநடுங்கிடக் காட்சியும்பெற்றாய்
கண்ணேசெவியாகக்கொண்டா யாடுபாம்பே. (உங)

சந்திரனைச்சூரியனைத் தாவித்தீண்டினாய்
சஙகரனுக்காபரணந் தானுமாகினாய்
மந்திரத்திற்கடங்கினாய் மண்டலமிட்டாய்
வளைந்துவளைந்துநின் றாடுபாம்பே. (உச)

## சித்தர்எல்லபங்கூறல்.

இந்திரனுலகத்தை யிங்கேகாட்டுவோம்
கட்டுக்கடஙகாதபாம்பைக் கட்டிவிடுவோம்
கடுவிஷந்தனைக்கக்கி யாடுபாம்பே. (உரு)

ஆதிசேடனுகினுமெம் மஙகையினாலே
ஆட்டிவிடுவோமெங்க ளாக்கினைக்குள்ளே

ர்தியோடடங்கியே நின்றிடச்செய்வோம்
நின்றநிலைதவறாம லாடுபாம்பே. (௨௬)

ஆனைச்சிறுதுரும்பாக தோன்றிடச்செய்வோம்
துரும்பைப்பெருந்தூணாக தோற்றச்செய்குவோம்
ஆணைப்பெண்ணும் பெண்ணையாணுமாகச்செய்குவோம்
ஆரவாரித்தெதிராய்நின் றாடுபாம்பே. (௨௭)

எட்டுமலைகளைப்பந்தா யெடுத்தெறிகுவோம்
எழுகடலையுங்குடித் தேப்பமிடுவோம்
மட்டுபடாமணலையு மதித்திடுவோம்
மகாராஜன்முன்புநின் றாடுபாம்பே. (௨௮)

மண்டலமுற்றுங்கையான் மறைத்திடுவோம்
வானத்தையும்வில்லாக வளைத்திடுவோம்
தொண்டருக்குசூனியஞ் சொல்லிகாட்டுவோம்
தோன்றலுக்குமுன்புநின் றாடாய்பாம்பே. (௨௯)

மூண்டெரியுமக்கினிகுள் மூழ்கிவருவோம்
முந்நீருள்ளிருப்பினும் மூச்சடக்குவோம்
தாண்டிவரும்வன்புலியைத் தாக்கிவிடுவோம்
தார்வேந்தன்முன்புநின் றாடுபாம்பே. (௩0)

செப்பரியமூன்றுலகுஞ் செம்பொன்னாக்குவோம்
செங்கதிரைத்தண்கதிராய்ச செய்துவிடுவோம்
இப்பெரியவுலகத்தை யில்லாமற்செய்வோம்
எங்கள்வல்லபங்கண் டாடுபாம்பே. (௩௧)

வேதன்செய்ததிருஷ்டிகள்போல் வேறுசெய்வோம்
வேதனையுமெங்கள்கீழே மேவச்செய்வோம்
நாதனுடன்சமமாக நாங்களும்வாழ்வோம்
நாங்கள்செய்கையிதுவென் றாடாய்பாம்பே. (௩௨)

அறுபத்துநாலுகலை யாவுமறிந்தோம்
அதற்குமேலொருகலை யானதறிந்தோம்

மறுபற்றுசற்றுமில்லா மனமுடையோம்
மன்னனேயாசானென் றாடுபாம்பே. (௩௩)

சிறுபுலியானையாளி சிங்கமுதலாய்ச்
சிற்றடிக்குற்றேவல் செய்யச்சொல்லுவோம்
வீறுபெருங்கடவுளை யெங்களுடனே
விளையாடச்செய்வோமென் றாடாய்பாம்பே. (௩௪)

சித்தர்சம்வாதம்.

வாசுகியையொருபக்க மன்னநிறுத்து
மகத்தானபதுமனை மறுமக்கம்வை
தேசுலவுதக்கனைத் தன்றிக்கிற்சேரு
செய்யபதுமனைக்கொள் சித்தனாரே. (௩௫)

அனந்தனை யொரு பக்கமாகநிறுத்தி
அதன்பக்கங்குளிகனை யண்டச்சேரு
கனங்கொண்டகார்க்கோடன் காணக்காட்டுங்
கடுஞ்சங்காபலனைத்தா சித்தனாரே. (௩௬)

அட்டதிக்குஞ் சக்கரங்களாகக்கீறி
அக்கோணநிலைகளி லக்கரஞ்சேரு
திட்டமுடன்மந்திரத்தைச் செபித்துநில்லு
சித்தந்தடுமாறாதே சித்தனாரே. (௩௭)

அட்டதிக்குஞ்சக்கரங்க ளமைத்துவிட்டோம்
அவ்வவற்றிற்சக்கரங்க ளமைத்துவிட்டோம்
எட்டுநாகமிருக்கின்ற விடத்தில்விட்டோம்
இனியென்னசெய்வதுசொல் சித்தனாரே. (௩௮)

நடுவாகவாதிசேடன் றன்னைநாட்டு

கடுவிஷங்கக்கவே கட்செவிகளைக்
கையிலெடுத்தாடுங்கள் சித்தனாரே.

## பொருளாசைவிளக்கம்.

நாடுநகர்வீடுமாடு நற்பொருளெல்லாம்
நடுவன்வரும்பொழுது நாடிவருமோ
கூடுபோனபின்பவற்றாற் கொள்பயனென்னே
கூத்தன்பதங்குறித்துநின் றூடாய்பாம்பே. (௯0)

யானைசேனைதேர்ப்பரி யாவுமணியாய்
யமன்வரும்போதுதுணை யாவுமணியாம்
ஞானஞ்சற்றுமில்லாத நாய்கட்குப்புத்தி
நாடிவரும்படிநின் றூடுபாம்பே. (௯௧)

மாணிக்கமாமணிமுடி வீரகுவலயம்
மார்பிற்றொங்கும்பதக்கங்கள் மற்றும்பணிகள்
ஆணிப்பொன்முத்தாரமம்பொ னந்தக்கடகம்
அழிவானப்பொருளென் றூடாய்பாம்பே. (௯உ)

மாடகூடமாளிகைகள் வண்ணமண்டபம்
மதில்சூழ்ந்தவரண்மனை மற்றுமுள்ளவை
கூடவாராதென்றவந்தக் கொள்கையறிந்தோர்
குலவாமல்வெறுப்பாரென் றூடாய்பாம்பே. (௯௩)

மலைபோன்றசெம்பொற்கு வைத்திருப்பவர்
மறலிவருகையில் வாரிச்செல்வரோ
அலையாமலகத்தினை யத்தன்பால்வைத்தோர்
அழியாரென்றேதுணிந் தாடாய்பாம்பே. (௯௪)

பஞ்சணையும்பூவணையும் பாயலும்வெறும

முக்கனியுஞ்சக்கரையு மோதகங்களும்
முதிர்சுவைப்பண்டங்களு முந்தியுண்டவா
மிக்கவுயிர்போனபின்பு கண்ணைவிழுங்க
மெய்யாகக்கண்டோமென் றூடாய்பாம்பே. (சசு)

வண்ணப்பட்டுவாசனையும் வாய்த்தகோலமும்
வண்கவிகையாலவட்ட மற்றுஞ்சின்னமும்
திண்ணமுடன்யமபுரஞ் செல்லுங்காலத்தில்
சேரவரமாட்டாயென் றூடாய்பாம்பே. (சஎ)

மக்கள்பெண்டீர்சுற்றமரு மக்கண்மற்றவர்
மாளும்போது கூடவவர் மாள்வதில்லையே
தக்கவுலகனத்தையுந் தந்தகர்த்தனைத்
தாவித்தாவித்துதித்துநின் றூடாய்பாம்பே. (சஅ)

கானலைமானீரெனவே கண்டுசொல்லல்போல்
காசினிவாழ்வினைமூடர் கண்டுகளிப்பார்
மேனினைகண்டார்கள்வீணாய் வீம்புபேசிடார்
மெய்யன்பதநாடுவாரென் றூடாய்பாம்பே. (சகூ)

பெண்ணாசை விளக்கம்.

வெயில்கண்டமஞ்சள்போன்ற மாதரழகை
விரும்பியேமேல்விழுந்து மேவுமாந்தர்
ஒயில்கண்டயிலவுகாத் தோடுங்கிளிபோல்
உடல்போனாலோடுவாரென் றூடாய்பாம்பே. (ருO)

செண்டுமுலைவண்டுவிழி கொண்டமோகையைச்
சித்தப்பாம்பால்விழுங்கியே சீயென்றொருத்தோம்
குண்டுகட்டெருமையேறுங் கூற்றப்பருந்தைக்
கொன்றுதின்றுவிட்டோமென் றூடாய்பாம்பே. (ருக)

வட்டமுலையென்றுமிக வற்றுந்தோலை
மகமேருவென்றுவமை வைத்துக்கூறுவர்

கெட்டநாற்றமுள்ளயோனிக் கேணியில்வீழ்ந்தார்
கெடுவரென்றேதுணிந் தாடாய்பாம்பே. (௯௨)

மலஞ்சொரிகண்ணைவடி வாளுக்கொப்பாக
வருணித்துச்சொல்வர்மதி வண்மையில்லாதார்
குலநலம்பேசுகின்ற கூகைமாந்தர்கள்
கும்பிக்கேயிரையென் றாடாய்பாம்பே.

சிக்குநாறுங்கூந்தலைச் செழுமேகமாய்ச்
செப்புவார்கள்கொங்கைதனைச் செப்புக்கொப்பதாய்
நெக்குநெக்குருகிப்பெண்ணை நெஞ்சினினைப்பார்
நிமலனைநினையாரென் றாடாய்பாம்பே.

நாறிவருமெச்சிறனை நல்லமுதென்றும்
நண்ணுஞ்சளிநாசிதனை நற்குமிழென்றும்
கூறுவார்கள்புத்தியில்லாக் கூகைமாந்தர்
கோனிலையையறியாரென் றாடாய்பாம்பே.

மயிலென்றுங்குயிலென்று மாணிக்கமென்றும்
மானேயென்றுந்தேனேயென்றும் வானமுதென்றும்
ஒயிலானவன்னமதிற் கொத்தவளென்றும்
ஓதாமற்கடிந்துவிட் டாடுபாம்பே.

மின்னற்கொடியென்றுஞ்சோதி விளக்கமென்றும்
மெல்லியென்றும்வல்லியென்று மேனகையென்றும்
கன்னற்கட்டியென்றுஞ்சீனி கற்கண்டென்றும்
கழறாமற்கடிந்தோமென் றாடாய்பாம்பே.

பூவையென்றும்பாவையென்றும் பொன்னேயென்றும்
பூத்திருவேயென்றுமென்றன் பொக்கிஷமென்றும்
கோவையென்றுஞ்சீதையென்றுங் கோகிலமென்றும்
கூறாமற்றுறந்தோமென் றாடாய்பாம்பே. (௯௮)

மலக்குடமீதிலே மஞ்சள்பூச்சென்றும்
மல்கும்புழுக்கூட்டின்மேல் வண்ணத்தோலென்றும்

சலக்குழிக்குள்ளேநாற்றஞ் சார்ந்தசேறென்றும்
தானிறைந்துதள்ளினேனென் றாடாய்பாம்பே.

## சரீரத்தின் குணம்.

லை மண்ணையய

உதிரப்புனலிலே யுண்டைசோததே
வாய்த்தகுயவனார் பண்ணுமபாண்டம்
வரகோட்டைக்குமாகாதென் றாடாய்பாம்பே. (௬0)

இருவர்மண்சேர்த்திட வொருவர்பண்ண
ஈரைந்துமாதமாய் வைததசூளை
அருமையாயிருப்பினு மந்தசூளை
அரைக்காசுக்காகாதென றாடாய்பாமபே. (௬௧)

பரியாசம்போலவே டித்தபாம்பு
பலபேரறியவே மெததவீங்கி
பரியா மொருமாது பார்த்தபோது
பையோடேகழன்றதென் றாடாய்பாம்பே. (௬௨)

சீயுமலமுஞ்செந் நீருநிணமுஞ்
சேர்ந்திடுநாற்றக் குடமுடைந்தால்
நாயுநரியும பேயுங்கழுகும்
நமதென்றேதின்னுமென்றாடாம்பாம்பே. (௬௩)

நீரிலெழுநீர்க்குமிழி நிலைகடல்போல்
நில்லாதுடல்நீங்கிவிடும் நிசசயமென்றே
பாரிற்பலவுயிர்களைப் படைததவன்றனைப்
பற்றவேபற்றித்தொடாந் தாடாய்பாம்பே.

நாறுமீனைப்பலதர நல்லதண்ணீரால்
நாளுங்கழுவினுமத நாற்றம்போமோ
கூறுமுடல்பலகதி யாடிக்கொண்டதால்
கொண்டமலநீங்காதென் றாடாய்பாம்பே. (௬௫)



## பாம்பாட்டி சித்தர்பாடல்.

காய்த்தமரமதுமிகக் கல்லடிபடும்
கன்மவினைகொண்டகாயங் கண்டனைபெறும்
வாய்த்ததவமுடையவர் வாழ்பவரென்றே
வஸ்துத்திருவடிதொழு தாடாய்பாம்பே.

பேசரியாகவவாயிற் பீறற்றுருததி
பெருங்காற்றுள்புகுந்ததாற் பேச்சுண்டாச்சே
ஈசனிலையறியாருக் கிந்தத்துருத்தி
எரிமண்ணிற்கிரையென் றுடாய்பாம்பே.

மரப்பாவைபோலவொரு மண்ணுருச்செய்து
வளமானசிவனென்னுஞ் சூத்திரமாட்டித்
திரைக்குள்ளிருந்தசைப்பேன் நீர்ந்தபொழுதே
தேகம்விழுமென்றுதெளிந் தாடுபாம்பே.

தசநாடிதசவாயு சத்ததாது
சார்ந்தமரக்கப்பலது ததிவிழுமே
இசைவானகப்பலினை யேகவெள்ளத்தில்
என்னுளுமோட்டததுணிந் தாடாய்பாம்பே.

### அகப்பற்று நீக்கல்.

தாமரையினிலையிலே தண்ணீர்தங்காத்
தன்மைபோலச்சகத்தாசை தள்ளிவிட்டெங்கும்
தூமணியாவிளங்கிய சோதிபதத்தைத
தொழுதுதொழுதுதொழு தாடாய்பாம்பே.

கள்ளங்கொலைகாமவாதி கண்டித்தவெல்லாம்
கட்டறுத்துவிட்டுஞான கண்ணைத்திறந்து
தெள்ளிதானவெட்டவெளி சிற்சொரூபத்தைத்
தேர்ந்துபார்த்துச்சிக்தைதெளிந் தாடாய்பாம்பே.

சொல்லும்புளியம்பழத்தி னோடுபோலவே
சுற்றத்திருந்தாலுமவர் தொந்தங்களற்று

ெல்லுமனதேபர நின்மலத்திலே
ென்றுனை தான்வெறும்பாழென் றாடாய்பாம்பே. (எஉ)

ேசற்றிற்றிரிபிள்ளைப்பூச்சி சேற்றைநீக்கல்போல்
ேதசத்தோடொத்துவாழ்பவ ரச்செய்கைகண்டபின்
ாற்றுபரவெளிதனைச் சாரும்வழியே
ாணடக்கவேணுமென் றாடாய்பாம்பே. (எங)

ண்ணைக்குந் தண்ணீர்க்குந் தொந்தமில்லாவாறுபோல்
ப்போதுமிப்புவியி லெய்தவேண்டும்
ண்ணுக்குகண்ணனவொளி கண்டுகொள்ளவே
ட்டறுத்துவாழ்ந்திடநின் றாடாய்பாம்பே. (எச)

க்கிவிட்டசோறுகறி கந்தமூலங்கள
ண்களுக்கசுத்தமான காட்சிபோலவே
ெக்கிக்கொண்டசகத்தினைச சியென்றொருத்துச்
ர்பாதங்காணத்தெளிந் தாடாய்பாம்பே. (எரு)

ேகாபமென்னுமதயானை கொண்டமதத்தை
டர்கொள்புத்தியங்குசத்தாற் கொன்றுவிட்டோங்காண்
ேபமென்னுஞ்சிற்சொருப செய்யபொருளைச்
ேசர்ந்துறவுகொண்டோமென் றாடாய்பாம்பே. (எசு)

ெத்தியமென்றுமலையி னின்றுகொண்டோம்யாம்
ெனைத்தபடிமுடித்து நின்மலமானோம
த்தியமாயெங்கள்கடந் தானழியாதே
ந்ததமும்வாழ்வோமென் றாடாய்பாம்பே. (எஎ)

னமென்னுங்குதிரையை வாகனமாக்கி
தியென்னுங்கடிவாளம் வாயிற்பூட்டிச
ெனமென்றுஞ்சீனிமேற் சீராயேறித்
ெதளிவிடஞ்சாரிவிட் டாடாய்பாம்பே (எஅ)

ைசயென்னுஞ்செருப்பின்மே லடியைவைத்தே
ங்காரமுட்காட்டை யதமிதித்தே

ாசையெனுந் தூற்குணத்திற் கனல்கொளுத்திக்
ாலகாலங்கடந்தே மென் றாடாய்பாம்பே. (எக)

ாலனெனுங்கொடிதான கடும்பகையைக்
ற்பமெனும்வாளினாற் கடிந்துவிட்டோம
ாலப்பிறப்பினைத் தான்கடந்தோம்
ற்பரங்கண்டோமென் றாடாய்பாம்பே. (அ0)

தேனில்வீழ்ந்தயீயைப்போலச் சிந்தைகுலைந்து
யாமற்சிற்சொரூ
வானிற்பறந்திடச்சூத வான்மட
வாயிற்போட்டேகின் றாடாய்பாம்பே. (அக)

ாக்கியபாதங்கண்டேன் சோதிகண்டேன்
த்தவெளிக்குள்ளேயொரு கூத்தன்கண்டேன்
தாக்கியசிரசின்மேல் வைத்தபாதம்
ர்க்குருவின்பாதமென் றாடாய்பாம்பே. (அஉ)

ஆலடிபொந்திலே வாழ்ந்தபாம்பே
அரசடிபொந்திலே புகுந்துகொண்டாய்
வாலடிதன்னிலே பார்த்துபார்த்து
வாங்கியேதூங்கிகின் றாடாய்பாம்பே. (அங)

நாலுதெருவிலே நாலுகம்பம்
நடுத்தெருவிலே பொன்கம்பம்
போலும்விளங்குபொன் கம்பத்தினுக்கே
பூமாலைசூட்டிகின் றாடாய்பாம்பே (அச)

ஆழிபெயர்ந்தாலுமேரு மட்டேயலையும்
அடியோடுபெயர்ந்தாலு மன்றிக்கால
ஊழிபெயர்ந்தாலுமாதி யுண்மைப்படிக்கே
உறுதிபெயராதுநின் றாடாய்பாம்பே. (அரு)

வாயுவினையிரையாக வாங்கியுண்டே
வருடிக்குண்டலினிவாயுண்மகித்தே

தேயுபிறைகுளிர்காய்ந்து வெட்டவெளியில்
திசைப்பறசேர்ந்துநின் றூடாய்பாம்பே. (அசு)

மாசில்கதிவளையிலே மண்டலமிட்டே
மதியானபெரும்பட மடல்விரித்தே
ஆசில்பராபரமான வாதிபாதத்தை
அடுத்தடுத்தேதுதித் தாடாய்பாம்பே. (அஎ)

காடுமலைநதிபதி காசிமுதலாய்க்
கால்கடுக்கவோடிற்பலன் காணலாகுமோ
வீடுபெறும்வழிநிலை மேவிக்கொள்ளவே
வேதாந்தத்துரையினின் றூடாய்பாம்பே. (அஅ)

எள்ளளவுமன்பகத்தி லில்லாதார்முத்தி
எய்துவதுதொல்லுலகி லில்லையெனவே
கள்ளப்புலன்கட்டறுத்துக் காலகாலனைக்
கண்டுதொழுதேகளித் தாடாய்பாம்பே. (அக)

சூரியனைக்கண்டபனி தூரவோடல்போல்
சொந்தபந்தஞ்சிந்தபரி சுத்தநலத்தில்
ஆரியனைக்கண்டுதெரி சித்தேயன்புடன்
அகலாமற்பற்றிதொடர்ந் தாடாய்பாம்பே. (கo)

காந்தம்வலியிரும்புபோல் மாசின்மனதைக்
காட்சியானவஸ்துவுடன் கலக்கச்சேர்த்துச்
சாந்தமுடன்றூண்டியின் றாம்பும்போலச்
சலியாமற்றொடர்ந்துநின் றூடாய்பாம்பே. (கக)

உளியிட்டகற்சிலையி லுண்டோபலன்கள்
உலகத்தின்மூடர்களுக் குண்டோவுணர்ச்சி
புளியிட்டசெம்பிற்குற்றம் போமேவஞ்ஞானம்
போகாதுமூடர்க்கென் றூடாய்பாம்பே. (கஉ)

திரளானபோரிலூசி தேடல்போன்முத்தி
சிக்காதுதேசாசார தேசிகர்தம்மால்

ருளானமூலகுரு வையர்செயலால்
னர்ந்தங்கண்டோமென் றாடாய்பாம்பே. (௧௩)

ட்டுச்சுரக்காய்கறிக் கெய்திடாதுபோல்
ண்டிசைதிரிந்துங்கதி யெய்தலில்லையே
ட்டுக்கொருகோயிற்கட்டி நாளும்புசித்தே
ாதன்பாதங்காணார்களென் றாடாய்பாம்பே. (௧௪)

தன்னையறிந்தொழுகுவோர் தன்னைமறைப்பார்
தன்னையறியாதவரே தன்னைக்காட்டுவார்
பின்னையொருகடவுளைப் பேணநினையார்
பேரொளியைப்பேணுவாரென் றாடாய்பாம்பே. (௧௫)

பாலிற்சுவைபோலுமெங்கும் பாய்ந்தவொளியைப்
பற்றுப்பொன்மற்றவைத்த பான்மைபோலே
காலிற்சுழிமுனைநின்று கண்டுகொண்டு
களித்துகளித்துநின் றாடாய்பாம்பே. (௧௬)

தேக்கெடுத்தேயோடும்வானத் தேனையுண்டபின்
தேகபந்தகொண்டனமித் தேசவாழ்வினை
ஒக்காளமென்றெண்ணி யோகையுடனீ
உள்ளந்தெளிந்துநின் றாடாய்பாம்பே. (௧௭)

சதுர்வேதமாறுவகை சாஸ்திரம்பல
தந்திரம்புராணங்கலை சாற்றுமாகமம்
விதம்விதமானதான வேறுநூல்களும்
வீணானநூல்களென் றாடாய்பாம்பே. (௧௮)

சமயபேதம்பலவான சாதிபேதங்கள்
சகத்தோர்க்கேயல்லாது சற்சாதுக்களுக்கோ
சிவமயத்திலேறினபேர் சித்தமாறுமோ
சித்தர்சித்தாந்தோந் தாடுபாம்பே. (௧௯)

பூசைசெய்ததால்சுத்த போதம்வருமோ
பூமிவலஞ்செய்ததனாற் புண்ணியமுண்டோ

ஆசையற்றகாலத்திலே ஆதிவஸ்துவை
அடையலாமென்றுதுணிந் தாடாய்பாம்பே. (௧00)

மூலவேரறிந்துகொண்டால் மூன்றுலகமும்
முன்பாகக்கண்டுனித்திய முத்திசேரலாம்
சகலவேரறிந்தாலே தான்பயனுண்டோ
சகத்தைப்பொய்யென்று தெளிந்தாடாய்பாம்பே (௧0௧)

சகத்தனாதியென்றிடாது தானனாதியாற்
சமைந்ததென்றுரைப்பவர்கள் சத்தையறியார்
மகத்துவமிலகற்ப வன்மையல்லாது
மற்றும்வன்மையில்லையென் றாடாய்பாம்பே. (௧0௨)

ஆயிரத்தெட்டிதழ்வீட்டி லமர்ந்தசித்தன்
அண்டமெல்லாநிறைந்திடு மற்புதசித்தன்
காயமில்லாதோங்கிவளர் காரணசித்தன்
கண்ணுளொளியானனென் றாடாய்பாம்பே. (௧0௩)

நாற்பத்துமுக்கோணநிலை நாப்பணதாக
நாடுமக்கரச்சொரூப நாயகன்தனை
மேற்படுத்திக்கொண்டாலந்த மேலுலகெலா
மெல்லடிக்குத்தொண்டேயென் றாடாய்பாம்பே. (௧0௪)

கண்டவர்களொருக்காலும் விண்டிடார்கள்
விண்டவர்களொருக்காலுங் கண்டிடார்கள்
கொண்டகோலமுள்ளவர்கள் கோனிலைகாணார்
கூத்தாடிகூத்தாடி யாடுபாம்பே. (௧0௫)

ஆருகலைக்குசக்குள்ளே யாடுமொருவன்
அயல்வீடுபோகுமுன்னே யரன்கோலிக்கொள்
வேறுபட்டாலவன்றனை மீட்டலரிதே
மேவுமுன்னேவிடாதுகொண் டாடுபாம்பே. (௧0௬)

எண்ணரியபுண்ணியங்க ளெல்லாஞ்செய்துமென்
எகனடிநெஞ்சமதி லெண்ணவிடிலே

பண்ணரியதவப்பயன் பத்தியில்லையேற
பாழ்படுமென்றுதுணிந் தாடாய்பாம்பே. (கO

எவ்வுலகஞ்சொந்தமதா யெய்தும்பயனென்
எங்களாதிபாதாம்புய மெணுக்காலையில
இவ்வுலகவாழ்வதானு மின்றேயருமென்
றெண்ணிக்கர்த்தனடிநினைந் தாடாய்பாம்பே. (கO

மணக்கோலங்கொண்டுமிக மணமகிழ்ந்து
மக்கள்மனைசுற்றத்தோடு மயங்குகின்றாய்
பிணக்கோலங்கண்டுபின்னுந் துறவாவிட்டால்
பிறப்புக்கேதுணையென் றாடாய்பாம்பே. (க

பிறப்பையுமிறப்பையு மறுத்துவிடயான
பெருமருந்தொன்றுசொல்வேனபெட்புடன்கேளாய
திறப்புடன்மனப்பூட்டுஞ் சிந்தைக்கதவும
திறந்திடும்வகையறிந் தாடாய்பாம்பே. (

இறந்தவரைவரவ ரிஷ்டமானவர்
எய்துமவரிறந்தாரென் றெல்லவர்க்குஞ்சொல்
மறந்தவரொருவரென்றே மண்ணினுள்ளோர்
வகையறிந்திடவேநின் றாடாய்பாம்பே, ( )

நான்கடிச்செய்யுள்.

ஆகாரமுதலிலே பாம்பதாக
ஆனந்தவயலிலே படம்விரிததே
ஊகாரமுதலிலே யொத்தொடங்கி
ஓடிவகாரத்தி னுக்கைநீட்டிச்
சிகாரங்கிடந்ததோர் மந்திரத்தைச
சித்தப்பிடாரனுர் போதஞ்செய்ய
மகாரப்பிறப்பையும் வேரறுத்து
மாயபந்தங்கடந்தோமென் றாடாய்பாம்பே (கக௨)

தந்திரஞ்சொல்லுவார் தம்மையறியார்
  தனிமந்திரஞ்சொல்லுவார் பொருளறியார்
மந்திரஞ்செபிப்பார் வட்டவீட்டினுள்
  மதிலினைச்சுற்றுவார் வாயல்காணார்
அந்தரஞ்சென்றுமே வேர்பிடுங்கி
  அருளென்னுஞானத்தா லுண்டைசேர்த்தே
இந்தமருந்தினைத் தின்பீராகில்
  இனிப்பிறப்பில்லையென் றாடாய்பாம்பே. (ககங)

களிமண்ணினாலொரு கப்பல்சேர்த்தே
  கனமானபாய்மரங் காணநாட்டி
அளிபுலந்தன்னையே சுக்காணாக்கி
  அறிவென்னுமாதாரச்சீனிதூக்கி
வெளியென்னும்வட்டத்தே யுள்ளடக்கி

தெளிவுறுஞானியா ரோட்டுங்கப்பல்
  சீர்பாதஞ்சேர்ந்ததென் றாடாய்பாம்பே. (ககச)

உள்ளதனுக்குள்ளே யுணரவேண்டும்
  உள்ளும்புறம்பையு மறியவேண்டும்
மெள்ளக்கனலை யெழுப்பவேண்டும்
  வீதிப்புனலிலே செலுத்தவேண்டும்
கள்ளப்புலனைக் கடிந்துவிட்டுக்
  கண்ணுக்குமூக்குமேற் காணநின்று
தெள்ளுபரஞ்சோதி தன்னைத்தேடிச்
  சீர்பாதங்கண்டோமென் றாடாய்பாம்பே. (ககரு)

ஓங்காரக்கம்பத்தி னுச்சிமேலே
  உள்ளும்புறம்பையு மறியவேண்டும்
ஆங்காரக்கோபத்தையறுத்துவிட்டே
  ஆனந்தவெள்ளத்தைத் தாக்கிக்கொண்டே
சாங்காலமில்லாமற் றானுடனே
  சட்டதிட்டமாகச்சேர்ந்துசாந்தமாகவே
தூங்காமற்றூங்கியே சுகமடைந்து
  தொந்தோம்தொந்தோமென் றாடாய்பாம்பே. ககசு

விரகுடத்திலே பாம்படைப்போம்
வேதாந்தவெளியிலே விட்டாட்டுவோம்
கரணங்களைப்பிடுங்கி யிரைகொடுப்போம்
காலக்கடுவெளியின் ருட்டுவிப்போம்
தாரகந்தனிலேறித் தொல்லுலகெங்கும்
சுற்றிவலம்வந்து னித்திய சூக்ஷங்கண்டும்
உறையற்றமந்திரஞ் சொல்லிமீட்போம்
ஒருநான்கும்பெற்றோமென் றாடாய்பாம்பே. (ககஎ)

காயக்குடத்திலே நின்றபாம்பெ
கருணைக்கடலிலே துயங்கவிட்டு
நேயசுழிமுனை நீபோய்ச்சி
நித்யமானவஸ்துவை நிலைக்கநாடி
மாயப்பெருவெளிதன்னிலேறி
மாசற்றப்பொருளினை வாய்க்கத்தேடி
ஆயத்துறைகடந் தப்பாற்பாழின்
ஆனந்தஞ்சேர்ந்தோமென் றாடாய்பாம்பே. (ககஅ

... ...
முற்றுஞ்சுழிமுனை தன்னிலூடே
மேலத்தலத்திலே விந்துவட்டம
மேலைவழியிலேமேவிவாழும்
பாலத்திதாய்க்கருணையினல்
பரகதிஞான சொரூபமாகி
ஆலச்சயனத்து மாலுடனின்றே
ஆனந்தஞ்சேர்ந்தோமென் றாடாய்பாம்பே. (ககக)

புலனைந்துவீதியில் வையாளிபாயும
புரவியெனுமனதை யொருமைப்படுத்தி
மலபந்தவுலகங் கடந்ததாலே
மன்னுகுருபாதத்தி னிலைநாடித்
தலமைந்துபூலோகங் கடந்ததாலே
சந்திரமண்டலங் கடந்ததாகும்

அலம்வந்தபூலோகக் கடலைநீக்கி
ஆனந்தமாகிநின் றாடாய்பாம்பே. (கஉ0)

குருவென்னுமாசா னுருவெடுத்துக்
குறியானஞானந் தப்பாக்கியாக்கி
அருளென்னுமருளே யுண்டையாக்கி
ஆனந்தமாகவே யதைக்கடந்தே
மருளென்னுமாதர்தந் நெறிதொட்டு
வாமகாமலைரிந்திட நெட்டையிட்டு
பருவனைக்குள்ளே பட்டதென்றே
பற்றனைபற்றிநின் றாடாய்பாம்பே. (கஉக)

கன்னன்குகையிலே கான்மறிப்போம்
கருமானுலையிலே தீமூட்டுவோம்
சொன்னாதலையிலே பொன்னுக்குவோம்
சுறுதியருகல்வி யொப்பஞ்செய்வோம்
மின்னார்கள்பாசததை விட்டெறிப்போம்
மெய்ப்பொருட்குறிகண்டு விருப்படைவோம்
பன்னுதேபன்னுதே சும்மாவிரு
பராபரஞ்சேர்ந்தோமென் றாடாய்பாம்பே. (கஉஉ)

சாதிப்பிரிவிலேதீமூட்டுவோம்
சந்தவெளியினிற் கோல்நாட்டுவோம்
வீதிப்பிரிவினில விளையாடுவோம்
வேண்டாதமனையி லுறவுசெய்வோம
சோதித்துலாவியே அடங்கிவிடுவோம்
சுகமானபெண்ணையே சுகித்திருப்போம்
ஆதிப்பிரமாக்க ளைந்துபேரும்
அறியார்களிதையென் றாடாய்பாம்பே. (கஉ௩)

நெட்டெழுத்ததனிலே நிலைபடிதது
நீகாவெழுத் தினிலே வாலைமுறுக்கி
விட்டவ்வெழுத்துக்கலைபடம்விரித்து
விண்ணின்வழியிலே மேவியாடிப்

பட்டவெழுத்தையும் பதிந்திருப்போம்
பன்னிரண்டாமெழுத்தினிற் பன்னிக்கூடித்
திட்டமுடனெமக்கரு டேசிகனார்தன்
சீர்பாதஞ்சேர்ந்தோமென் றூடாய்பாம்பே. (௧௨௪)

ஊசித்துளைக்குடத்தினிற பாம்படைப்போம்
மூலகலாஞ்சுற்றி யுலாவிவருவோம்
மாசுள்ளபிறவியை மறந்திருப்போம்
மனமொத்தவெளியிலே விட்டாட்டுவோம்
மாசுப்புலன்களை யிறைகொடுப்போம்
மனதுற்றஉச்சியி லேறியாடுவோம்
பேசுமெழுத்தையும் விழுங்கவிடுவோம்
பிறப்பிறப்பற்றோமென் றூடாய்பாம்பே. (௧௨௫)

ஆணிக்குடத்திலே பாம்படைப்போம்
அக்கினிக்கோட்டைமே லேறப்பார்ப்போம
மாணிக்கத்தூணின்மேல் விட்டாட்டுவோம்
மனம்வாக்குகாயத்தை யிரைகொடுப்போம்
நாணிக்கயிற்றையு மறுத்திடுவோம்
நமனற்றநாதன்பத நாடியேநிற்போம்
ஏணிப்படிவருகண் டேறிவிடுவோம்
யாருமிதையறியாரென்றூடாய்பாம்பே. (௧௨௬)

வடக்குகிழக்குமாய் நூலிழைப்போம்
மற்றுஞ்சுழலிலே பாவூட்டுவோம்
நடக்கும்வழியிலே யுண்டைசேர்ப்போம்
நடவாவழியிலே புடவைநெய்வோம்
குடக்குக்கரையிலே கோல்போடுவோம்
கொய்ததையெங்குமே விற்றுவிடுவோம்
அடக்கியேகத்துள்ளே வைக்கவும்வல்லோம்
ஆதிபதங்கண்டோமென் றூடாய்பாம்பே. (௧௨௭)

சூத்திரக்குடத்திலே பாம்படைப்போம்
சுழிமுனைக்குள்ளே சுகித்திருப்போம்

பாத்திரங்கொண்டுமே பலியிரப்போம்
பத்தெட்டுமூன்று படிகடந்தோம்
ஊத்தைச்சடத்தினைப் புடமிடுவோம்
உளவனெமக்குநல் லுறுதிசொல்லப்
பார்த்துரையிதன்மெய் பலிக்கவெண்ணிப்
பதனம்பதனமென் றாடுபாம்பே. (கஉஅ)

மவ்வகுடத்திலே பாம்படைப்போம்
மணிவட்டவாசியை வாரியுண்போம்
பவ்வக்குடங்களைத் தள்ளிவிடுவோம்
வக்கிரசொர்ப்பனந் தாண்டிவிடுவோம்
மவ்வவெளியிலே விட்டாட்டுவோம்
பஞ்சகருவியைப் பலிகொடுப்போம்
சிவ்வுருவாகியே நின்றோமென்றே
சீர்பாதங்கண்டுதெளிந் தாடுபாம்பே. (கஉக)

பாம்பாட்டிசித்தர்பாடல்- முற்றிற்று.

கடவுள்துணை.

# இடைக்காட்டுச்சித்தர் பாடல்.



காப்பு.

கலிநிலைத்துறை.

ஆதியந்தமில் லாதவனுதியைத்
தீதுறும்பவன் றீப்படுபஞ்சுபோல்
மோதுறும்படி முப்பொறியொத்துறக
காதலாகக் கருத்திற்கருதுவாம்.

தாண்டவராயக்கோன்கூறுதல்.

எல்லாவுலகமு மெல்லாவுயிர்களு
மெல்லாப்பொருள்களு மெண்ணரிய
வல்லாளனுதி பரமசிவனது
சொல்லாலாகுமோ கோனாரே. (க)

வானியல்போல வயங்கும்பிரமமே
சூனியமென்றறிந் தேத்தாக்கால்
ஊனியலாவிக் கொருகதியில்லையென்
றோர்ந்துகொள்ளுவீர் கோனாரே. (உ)

முத்திக்குவித்தான மூர்த்தியைத்தொழுது
முத்திக்குறுதிகள் செய்யாக்கால்
சித்தியும்பத்தியுஞ் சத்தியுமுத்தியுஞ்
சேராவாகுமே கோனாரே. (ங)

தொல்லைப்பிறவியின் றுன்பமுற்றறவே
சோம்பலற்றுத்தவஞ் செய்யாக்கால்
எல்லையில்கூடவு ளெய்தும்பதமுனக்
கில்லையென்றெண்ணுவீர் கோனாரே. (ச)

ஆரணமூலத்தை யன்புடனேபர
மானந்தக்கோலத்தை யன்புடனே
பூரணமாகவே சிந்தித்துமெஞ்ஞானப்
போதத்தைச்சார்ந்துக்கொள் கோனாரே. (௫)

காலகாலங் கடந்திடுஞ்சோதியைக்
கற்பனைக்கடந்த வுற்பதநீதியை
தூலாற்பெரிய சொன்னநுண்பொருளை
நோக்கத்திற்காண்வலு கோனாரே. (௬)

சொலலருஞ்சகள நிட்களமானதைச்
சொல்லாற்சொல்லாமல் கோனாரே
அல்லும்பகலு மகத்திலிருத்திடி
லந்தகன்கிட்டுமோ கோனாரே. (௭)

சூரியன்வாள்பட்ட துய்யபனிகெடுந்
தோற்றம்போல் வெவ்வினை தூள்படவே
நாரியிடப்பாகன்று ணெஞ்சிற்போற்றியே
நற்கதிசேர்ந்திடுகோனாரே. (௮)

மும்மலநீக்கிட முப்பொறிக்கெட்டாத
முப்பாழ்க்கிடந்தவப்பாழைச்
செம்மறியோட்டிய வேலையமைத்துஞ்
சிந்தையில்வைப்பீரே கோனாரே (௯)

பஞ்சவிதமாய்ச சஞ்சலம்பறக்கப்
பற்றறநின்றதைப் பற்றியன்பாய்
நெஞ்சத்திறுத்தி யிரவும்பகலும்
நேசித்துக்கொள்வீர் கோனாரே. (௧0)

நாராயணக்கோன் கூறுதல்.

கொச்சகக்கலிப்பா.

பாராதிவான்பொருளைப்பஞ்ச வுருவானவொன்றைப்

பேரானவிண்ணொளியைப் பேரின்பவாரிதியை
நேராகவென்னாளு நெஞ்சிருத்திவாழ்வேனே. (கக)

கண்ணுண்மணியைக் கற்பகத்தைக்காஞ்சனத்தைப்
பெண்ணுருவிப்பாற்பயினை பேசரியமுப்பொருளை
விண்ணினமுதைவிள கொளியைவெங்கதிரை
தண்ணொளியையுள்ளில்வைத்துச் சாரூபஞ்சாருவனே. (கஉ)

தரு.

மமாடடமுற்ற ருண்டவக்கோனே-முத்தி
வாய்த்ததென்றெண்ணேடா தாண்டவக்கோனே. (கங)

சினமென்னும்பாம்பிருந்தாற் ருண்டவக்கோனே-யாவுஞ்
சித்தியென்றேநினையடா ருண்டவக்கோனே. (கச)

ஆசையெனும்பசுமாளிற் ருண்டவக்கோனே-இந்த
அண்டமெல்லாங்கண்டறிவாய் தாண்டவக்கோனே. (கரு)

ஓசையுள்ளடங்குமுன்னர் தாண்டவக்கோனே-மூலத்
தோங்காரங்கண்டறிந் தாண்டவக்கோனே. (கசு)

மூலப்பகுதியறத் தாண்டவக்கோனே-உள்ளே
முளைத்தவேர்பிடுங்கேடா தாண்டவக்கோனே. (கஎ)

சாலக்கடத்தியல்பு தாண்டவக்கோனே-மலச்
சாலென்றேதேர்ந்தறி தாண்டவக்கோனே. (கஅ)

பற்றேபிறப்புண்டாக்குந் தாண்டவக்கோனே-அதைப்
பற்றறுத்துவிடு தாண்டவக்கோனே. (கசு)

சற்றேபிரமத்திச்சை தாண்டவக்கோனே-உன்னுள்
சலியாமல்வைக்கவேண்டும் தாண்டவக்கோனே. (உ0)

அவித்தவித்துமுளையாதே தாண்டவக்கோனே-பத்தி
அற்றவர்கதியடையார் தாண்டவக்கோனே. (உக)

செவிதனிற்கேளாத மறை தாண்டவக்கோனே-குரு
செப்பில்வெளியாமல்லவோ தாண்டவக்கோனே. (உஉ

கட்டளைக் கலித்துறை.

மாடுமனைகளு மக்களுஞ்சுற்றமும் வான்பொருளும்வீடு
ம்பனைகளும் வெண்பொன்னுஞ் செம்பொன்னும் வெண்கல
மும், காடுங்கரைகளுங்கல்லாம் பணியுங்கரிபரியுந், தேடும்
பலபண்டமு நில்லாசியகதிசேர்மின்களே. (உங)

நேரிசை வெண்பா

போகம்போம்போக்கியம்போம்போசனம்போம்புன்மைபோம்
மோகம்போம்மூர்க்கம்போம்மோகம்போம் தாகம்போம்
வேதமுதலாகமங்கண் மேலான தென்றும்பலகால்
ஓதுபிரமத்துற்றக்கால். (உச)

தாண்டவராயக்கோன் தரு.

தாந்திமித்திமி தந்தக்கோனாரே
தீந்திமித்திமி திந்தக்கோனாரே
ஆநந்தக்கோனாரே அருள்
ஆநந்தக் கோனாரே.

ஆயிரத்தெட்டு வட்டமுங்கண்டேன்
அந்தவட்டத்துள்ளே நின்றதுங்கண்டேன்
மாயிருஞாலத்து நூற்றெட்டும்பார்த்தேன்
மந்தமனத்துறுஞ் சந்தேகந்தீர்த்தேன். (தாந்) (உரு)

அந்தக்கரண மெனச்சொன்னுலாட்டையும்
அஞ்ஞானமென்னும் மடர்ந்தவன்காட்டையும்
சந்தத்தவமென்னும் வாளினால்வெட்டினேன்
சாவாதிருந்திடக் கோட்டையுங்கட்டினேன். (தாந்) (உசு)

மெய்வாய்கண்மூக்குச் செவியெனுமைந்தாட்டை
வீறுஞ்சுவையொளி யூறோசையாங்காட்டை
எய்யாமலோட்டினேன் வாட்டினேனூட்டினேன்
ஏகவெளிக்குள்ளே யோகவெளிக்குள்ளே. (தாந்) (உஎ)

பற்றிரண்டுமறப் பண்புற்றேனண்புற்றேன்
பாலையுமுட்கொண்டேன் மேலையாங்கட்கொண்டேன்
சிற்றின்பநீக்கினேன் மற்றின்பநோக்கினேன்
சிற்பரஞ்சேர்ந்திட்டேன் தற்பரஞ்சார்ந்திட்டேன். (தாந்)

அண்ணாக்கையூடே யடைத்தேயமுதுண்ணேன்
அந்தரந்தரத்தை யப்பொழுதேயெண்ணேன்
விண்ணாருமொழியை மேவிப்பூசைபண்ணேன்
மெஞ்ஞானமொன்றன்றி வேறேயொன்றைநண்ணே

ம்னே

மாயாவிகாரங்கள் யாவையும்விண்டேனே
விண்ணாளுமொளியை மெய்யினுட்கொண்டேனே
மேதினிவாழ்வினை மேலாகவேண்டேனே. (தாந்)	(௩0)

வாக்காதியைந்தையும் வாக்காய்தெரிந்தேனே
மாயைசம்பந்தங்களைந்தும்பிரிந்தேனே
நோக்கரும்யோகங்களைந்தும்புரிந்தேனே
நுவலுமற்றைந்தியோக நோக்கம்பரிந்தேனே. (தாந்)	(௩௧)

ஆறாதாரத் தெய்வங்களைநாடு
அவர்க்குமேலான வாதியைத்தேடு
கூறானவட்டவா நந்தத்திற்கூடு
கோசமைந்துங்கண்டு குற்றேறிக்கூத்தாடு. (தா)	(௩௨)

நாராயணக் கோன்கூறுதல்.

ஆதிபகவனையே	பசுவே
யன்பாய்நினைப்பாயேல்
சோதிபரகதிதான்	பசுவே
சொந்தமதாகாதோ.	(௩௩

எங்குநிறைபொருளைப்	பசுவே
யெண்ணிப்பணிவாயேல்
தங்கும்பரகதியில்	பசுவே
*சந்ததஞ்சாருவையே.	(௩௪

## இடைக்காட்டுச்சித்தர் பாடல்.

அல்லும்பகலுநிதம் பசுவே
யாதிபதந்தேடில்
புல்லுமோட்சநிலை பசுவே
பூரணங்காண்பாயே. (௫௫)

ஒன்றைப்பிடித்தோர்க்கே பசுவே
உண்மைவசப்படுமே
நின்றநிலைதனிலே பசுவே
நேர்மையறிவாயே. (௫௬)

எல்லாமிருந்தாலும் பசுவே
யீசரருளிலையே
இல்லாத்தன்மையென்றே பசுவே
யெண்ணிப்பணிவாயே (௫௭)

தேவனுதவியன்றிப் பசுவே
தேர்ந்திடில்வேறொன்றில்லை
ஆவிக்குமாவியதாம் பசுவே
யத்தன்றிருவடியே. (௫௮)

தாயினுமன்பனன்றோ பசுவே
சத்திக்குள்ளானவன்றான்
நேயமுடையவர்பால் பசுவே
நீங்காதிருப்பானே. (௫௯)

முத்திக்குவித்தானோன் பசுவே
மூலப்பொருளானோன்
சத்திக்குறவானோன் பசுவே
தன்னைத்துதிப்பாயே. (௬௦)

ஐயன்றிருப்பாதம் பசுவே
யன்புற்றுநீபணிந்தால்
வெய்யவினைகளெல்லாம் பசுவே
விட்டோடுங்கண்டாயே (௬௧)

தாழ்ந்துபணிவாயேல்
இந்திரன்முன்முதலோா பசுவே
யேவல்புரிவாரே. (சஉ)

கட்புலன்காணவொண்ணுப் பசுவே
கர்த்தனடியிணையை
உட்புலன்கொண்டேததிப் பசுவே
மெய்வாயே. (சங)

சுட்டியுகாணவொண்ணுப் பசுவே
சூனியமானவஸ்தை
ஒட்டிப்பிடிப்பாயேல் பசுவே
ர்ப்பவாயாா. (சச)

தன்மனந்தன்னுலே
தானுவைசசாராதார்
வன்மரமொப்பாகப் பசுவே
வையததுரைப்பாரே. (சரு)

சொல்லென்றுநற்பொருளாம் பசுவே
சோதியைப்போற்றுக்கால்
இல்லெனறுமுத்திநிலை
யெப்பொருளுஞ்சொலலுமே. (சசு)

பல[illegible]டு இளத்தல்.

[illegible]ண்ணுணமணியைக கருதியபேரொளியை
விண்ணின்மணியை விளக்கொளியைப்போற்றீரே. (சஎ)

மனம்வாககாயமெனும் வாய்த்தபொறிக்கெட்டாத
தினகரனைநெஞ்சமதிற் சேவிததுப்போறறரே. (சஅ)

காலமூன்றுமகடந்த கதிரொளியையுள்ளத்தாற்
சாலமின்றிப்பற்றிச் சலிப்பறவேபோற்றீரே. (சகூ)

பாலிற்சுவைபோலும் பழத்தின்மதுப்போலும்
நூலிற்பொருள்போலு நுண்பொருளைப்போற்றீரே. (௫0)

மூவர்முதலை முக்கனியைச்சர்க்கரையைத்
தேவர்பொருளைத் தெள்ளமுதைப்போற்றீரே. (௫௧)

தூயமறைப்பொருளைச் சுகவாரிதியமிர்தை
நேயமுடனுரு நிலைபெறவேபோற்றீரே. (௫௨)

சராசரத்தைத்தந்த தனிவானமூலமனனும
பராபரத்தைப்பற்றிப் பயமறவேபோற்றீரே. (௫௩)

மண்ணாதிபூதமுதல் வகுத்தவொருவான்பொருளைக்
கண்ணாரக்காணக் கருதநினைந்துபோற்றீரே.

பொய்ப்பொருளைவிட்டுப் புலமறியவொண்ணாத
மெய்ப்பொருளைநாளும் விருப்புற்றுப்போற்றீரே. (௫௫)

எள்ளிற்றைலம்போ லெங்குநிறைபொருளை
உள்ளிற்றுதித்தே யுணர்வடைந்துபோற்றீரே. (௫௬)

நெஞ்சொடுகிளத்தல்.

பூமியெல்லாமோர்குடைக்கீழ் பொருந்தவரசாளுதற்கு
காமியம்வைத்தாலுனக்குக் கதியுளதோகன்மனமே. (௫எ)

பெண்ணாசைக்கொண்டு பேணித்திரிந்தாக்கால்
விண்ணாசைவைக்க விதியிலையேகன்மனமே. (௫அ)

மேயும்பொறிகடமை மேவிடவொட்டார்க்குவினை
தேயுமென்றேநலவழியிற் செல்லுநீகன்மனமே. (௫௯)

பொன்னிச்சைகொண்டு பூமிமுற்றும்திரிந்ததனல்
மன்னிசைமோக்கம் வாய்க்குமோகன்மனமே. (௬0)

பொய்யானகல்விகற்றுப் பொருண்மபக்கங்கொள்ளாமல்
மெய்யானஞானகல்வி விரும்புவாய்கன்மனமே. (௬௧)

பேய்க்குரங்குபோலப் பேருலகிலிச்சைவைத்து
நாய்நரிகள்போலலைந்தா னன்மையுண்டோகன்மனமே.

இரும்பையிழுத்திடுங்காந்தத் தியற்கைபோற்பலபொருளை
விரும்பினதலைவிலையோ விளப்புவாய்கன்மனமே.　　(௬௩)

கற்பனிலையாலலவோ கற்பகாலங்கடத்தல்
சொற்பனிலைமற்றனிலை சூட்சங்காண் கன்மனமே.　　(௬௪)

தேகமிழப்பதற்குச் செபஞ்செய்தென்றபஞ்செய்தேன்
யோகமட்டுஞ்செய்தாலென் யோசிப்பாய் கன்மனமே.(௬௫)

சாகாதிருப்பதற்குத்தான் கற்றருயகல்வியன்றே
வாகானமெய்க்கல்வி வருத்தறுங்கன்மனமே.　　(௬௬)

அறிவொடுகிளத்தல்.

எல்லாப்பொருள்களையு மெண்ணப்படிபடைத்த
வல்லாளன்றன்னை வருத்தறிநீபுலலறிவே.　　(௬௭)

கட்புலனுக்கெவ்வளவுங் காணுதிருந்தெங்கும்
உட்புலனுல்நின்றவொன்றை யுய்த்தறிநீபுலலறிவே.　　(௬௮)

விழித்திருக்கும்வேளையிலே விரைத்துறக்கமுண்டாக்கும்
செழித்திலங்குவான்மாவைத தேர்ந்தறிநீபுல்லறிவே.　　(௬௯)

மெய்யிலொருமெய்யாகி மேலாகிக்காலாக்கிப்
பொய்யிலொருபொய்யாகும் புலமறிநீபுல்லறிவே.　　(௭0)

ஆத்துமத்தின்கூறு
கூத்துபரிகின்ற கோளறிவாய் புல்லறிவே.　　(௭௧)

இருட்டறைக்கு நல்விளக்கா யிருக்குமுன்றன்வல்லமையை
அருட்டுறையினிறுத்திவிளக் காருநீபுல்லறிவே.　　(௭௨)

நல்லவழியிற்சென்று நம்பதவிய்யய்தாமல்
கொற்றவழியிறசென்று குறுகுவதேனபுலலறிவே　　௭௩

கைவிளக்குக்கொணடு கடலில்வீழ்வார்போல
மெய்விளக்குன்னுள்ளிருக்க வீழ்குவதேன்புல்லறிவே

பாசிக்குமேலான வான்கதியுன்னுள்ளிருக்க
பாசிக்குமேற்கதிதா னுனககரிதோபுல்லறிவே.　　௭௫

அன்னையைப்போலெவ்வுயிருமன்புடனே காத்துவரும்
முன்னவனைக்கண்டு முத்தியடைபுல்லறிவே.

அஞ்ஞானம்போயிற்றென்று தும்பீபற-பர
மானந்தங்கண்டோமென்று தும்பீபற
மெஞ்ஞானம்வாய்த்ததென்று தும்பீபற-மலை
மேலேறிக்கொண்டோமென்று தும்பீபற. எ௭

அல்லல்வலையில்லையென்றே தும்பீபற-நிறை
ஆணவங்களற்றோமென்றே தும்பீபற
தொல்லைவினைநீங்கிற்றென்றே தும்பீபற
பரஞ்சோதியைக்கண்டோமெனத் தும்பீபற. எ௮

ஐம்பொறியடங்கினவே தும்பீபற நிறை
அருவேபொருளெனத் தும்பீபற
செம்பொருள்கள்வாய்த்தனவே தும்பீபற-ஒரு
தெய்வீகங்கண்டோமென்றே தும்பீபற. எ௯

மூவாசைவிட்டோமென்றே தும்பீபற-பர
முத்திநிலைசித்தியென்றே தும்பீபற
தேவாசைவைத்தோமென்று தும்பீபற-இந்தச
செகத்தையொழித்தோமென்று தும்பீபற. ௮0

பாழ்வெளிநோக்கியே தும்பீபற-மாயப்
பற்றற்றோமெனறே தும்பீபற
வாழ்விடமென்றெய்தோம் தும்பீபற-நிறை
வுள்ளநிலைசா[illegible]தோமே தும்பீபற. ௮௧

எப்பொருளுங்கனவென்றே தும்பீபற-உல
கெல்லாமழியுமென்றே தும்பீபற
அப்பிலெழுத்துடலென்றே தும்பீபற-என்று
மழிவில்லாதாதியென்று தும்பீபற. ௮௨

குயிலொடுகிளத்தல்.

காரணங்களொருநான்கு மடங்கினவே-கெட்டக்
காமமுதலோராறு மொடுங்கினவே
சரணங்களொருநான்குங் கண்டனமென்றே-நிறை
சந்தோஷமாகவே கூவுகுயிலே. ௮௩

உலகமோக்காளமென் றோதுகுயிலே-எங்க
ளுத்தமனைக்காண்பரிதென் றோதுகுயிலே
பலமதம்பொய்ம்மையென்றோது குயிலே எழு
பவமகன்றிட்டோமென் றோதுகுயிலே ௮௪

சாதனங்கள்செய்தவர்கள் சாகார்குயிலே-எல்லாத்
தத்துவங்கடேர்ந்தவர்கள் வேகார்குயிலே
மாதவங்கள்போலம்பலன் மாயாகுயிலே-மூல
மந்திரங்களானமகிமை வாய்க்குங்குயிலே. ௮௫

எட்டிரண்டறிந்தோர்க்கிட ரில்லைகுயிலே-மன
மேகாமனிற்கிற்கதி யெய்தகுயிலே
நட்டணையைச்சார்ந்தறிந்து கொள்ளுங்குயிலே-ஆதி
நாயகனைநினைவில்வைத் தோதுகுயிலே. ௮௬

மயிலொடுகிளத்தல்.

ஆடுமயிலே நடமாடுமயிலே-எங்கள்
ஆதியணிசேடனெங்க ளாடுமயிலே
கூடுபோகுமுன்னங்கதி கொள்ளுமயிலே-என்றும்
குறையாமன்மோனநெறி கொள்ளுமயிலே. ௮௭

இல்லறமேயல்லவென்றாடுமயிலே-பதி
இல்லவர்க்குமுத்திசித்தி யில்லைமயிலே
நல்லறமேதுறவறங் காணுமயிலே-சுத்த
நாதாந்தவெட்டவெளி நாடுமயிலே. (௮௮)

கற்றாணைப்போன் மனதைகாட்டுமயிலே-வரும்
காலனையுந்தூரத்தி லோட்டுமயிலே

பற்றாருருவேபாயுமயிலே-அகப்
பற்றுச்சற்றில்லாமற் பண்ணுமயிலே (அக)

## அன்னத்தொடு கிளத்தல்.

சிறுதவளை தான்கலக்கிற் சித்திரத்தினிழன் மறையும்
மறுவாயைதான்கலக்கின் மதிமயங்குமடவனமே. (க0)

காற்றின்மரமுறியுங் காட்சியைப்போனல்லறிவு
தூற்றிவிடிலஞ்ஞானந் தூரப்போமடவனமே. (கக)

அக்கினியாற்பஞ்சுபொதி யழிந்திட்டவாறேபோல்
பக்குவநல்லறிவாலே பாவம்போமடவனமே. (கஉ)

குளவிபுழுவைக்கொணர்ந்து கூட்டிலுருப்படுத்தல்போல்
வளமுடையவுன்மனதைவசப்படுத்துமடவனமே. (க௩)

அப்புடனேயுப்புச்சேர்ந் தளவுசரியானதுபோல்
ஒப்புறவேபிரமமுட னொன்றிநில்லுமடவனமே. (க௪)

காய்ந்தவிரும்புநிறங் காட்டுதல்போலாத்துமத்தை
வாய்த்திலங்கச்செய்து வளம்பெருநீமடவனமே. (க௫)

## புள்ளாங்குழலூதல்.

தொல்லைப்பிறவி தொலைத்தார்க்கு முத்திதான்
இல்லையென்றாதுகுழல்-கோனே
இல்லையென்றாது குழல். (க௬)

இந்திரபோகங்க ளெய்தினும்தொல்லையென்
றந்தமாயூதுகுழல்-கோனே
அந்தமாயூதுகுழல். (க௭)

மோனநிலையினின் முத்தியுண்டாமென்றே
கானமாயூதுகுழல்-கோனே
கானமாயூதுகுழல். (க௮)

நாய்போற்பொறிகளை நாலுவிதம்விட்டோர்
பேயரென்றூதுகுழல்-கோனே
பேயரென்றூதுகுழல். (க௯)

ஓடித்திரிவோர்க் குணர்வுகிட்டும்படி
  சாடியேயூதுகுழல்- கோனே
  சாடியேயூதுகுழல். (க00)

ஆட்டுக்கூட்டங்களை யண்டும்புலிகளை
  ஓட்டியேயூதுகுழல்-கோான
  ஓட்டியேயூதுகுழல். (க0க)

மட்டிக்குணமுள்ள மாரீசாாய்களை
  கட்டிவைத்தூதுகுழல்-கோனே
  கட்டிவைத்தூது குழல். (க0உ)

கட்டாதாாயெல்லாங் காவலுக்கெப்போதும்
  கிட்டாதென்றூதுகுழல்-கோனே
  கிட்டாதென்றூதுகுழல். (க0ரு)

பெட்டியிற்பாம்பெனப் பேய்மனதடங்க
  ஓட்டியேயூதுகுழல்-கோனே
  ஓட்டியேயூதுகுழல். (க0சு)

எனதென்றும்யானென்று மில்லாதிருக்கவே
  தனதாகவூதுகுழல்-கோனே
  தனதாகவூதுகுழல். (க0ு)

அற்றவிடமொன்றே யற்றதோடுற்றதைக்
  கற்றனென்றூதுகுழல்-கோனே
  கற்றனென்றூதுகுழல். (க0சு)

பால்கறத்தல்.

சாவாதிருந்திடப்பால்கற- சிறம்
  தன்னிலிருந்திடும் பால்கற
வேவாதிருந்திடப்பால்கற- வெறும்
  வெட்டவெளிக்குள்ளே பால்கற. (க0எ)

தோயாதிருந்திடும்பால்கற-முன்
  தொல்லைவினையறப் பால்கற
வாயாலுமிழ்ந்திடும்பால்கற-வெறும்
  வயிறாரவுண்டிடப் பால்கற. (க0அ)

நாறுதிருந்திடும்பால்கற-நெடு
நாளுமிருந்திடப் பால்கற
மாறுதொழுகிடும்பாலகற -தலை
மண்டையில்வளரும் பால்கற. (௧0௯)

உலகம்வெருதிடும்பால்கற-மிக
ஒக்காளமாகியபாலகற
கலசத்தினுள்விளை பால்கற- நிறை
கண்டத்தினுள்விழப் பால்கற. (௧௧0)

எப்பம்விடாமலேபால்கற- வரும்
எமன்விலகவேபால்கற
தீப்பொறியோய்ந்திடப்பால்கற- பர
சிவத்துடன்சாரவே பால்கற. (௧௧௧)

அண்ணாவின்மேல்வரும்பால்கற- பேர்
அண்டத்திலூறிடும் பால்கற
விண்ணாட்டிவில்லாதபால்கற- தொல்லை
வேதனைக்கெடவே பால்கற. (௧௧௨)

வினையாமாடுகளை யேகவிடுகோனே-உன்
இடக்குமனமாடொன்றை யடக்கிவிடுகோனே. (௧௧௩)

சாற்றரியஞானட்டிகரே தற்பரத்தைச்சார்வார்-நாளும்
தவமவமாக்கழிப்பவரே சனனமதில்வருவார். (௧௧௪)

அகங்காரமாடுகண்மூன் றகற்றிவிடுகோனே- நாளும்
அவத்தையெனு மாடைந்தை யடக்கிவிடுகோனே. (௧௧௫)

ஒருமலத்த னென்னுமாட்டை யொதிக்ககட்டுகோனே-கி
ன், உறையுமிருமலந்தனையு மோட்டிககட்டுகோனே. ()

மும்மலத்தி னெனுமாட்டை முறுக்கிக்கட்டுகோனே-மிக
முக்காலநேர்மையெல்லா முன்பறிவாய்கோனே. (௧௧௭)

ருந்நியத்திரையங்களை இறுக்கவுங்காமனை-வையமெய்
இல்லையென்றே மாற்ற வகுழலெடுத்தூதுகோனே. (௧௧௮)

பாதியென்று புனைப்படையோட்டி விடுகோனே-உனக்
குள்ளிருக்குங் கள்ளமெல்லாம் மோடிப்போகுங்கோனே. ()

முக்காயமாடுகளை முன்னங்கட்டுகோனே- மூனி
மோசமில்லை நாசமில்லை முத்தியுண்டாங்கோனே. (௧௨0)

கன்மபலமாடுகளை கட்டிக்கட்டுகோனே-மற்றக்
கனபத்திரியப்பக்கவைக் கடையிற்கட்டுகோனே (௧௨௧)

காரணக்கோ மூனாமுனையுங் காலபிணிப்பாய்கோனே-நல்ல
கைவசமாகுஞ்சாதனங்கள் கடைப்பிடிப்பாய்கோனே. (௧௨௨)

வேறு-தரு.

பிரமாந்தரத்திற்பேரொளிகாணெங்களகோனே-வாய்
பேசாதிருந்துப்பருகிட்டைசாரெங்களகோனே. (௧௨௩)

சிரமத்திறக்கமலசம்பை தெரிந்தெங்களகோனே-முத்தி
சிகதிக்கும்பதிப்பு சேர்க்கத்தறியெங்கள கோனே. (௧௨௪)

விண்ணாடிவஸ்துவைப் மெய்யறிவிற்காணுங்கோனே-என்றும
மெய்யேமெய்யிற்மெய்காணுமெய்யறிவிற்செல்லுங் கோனே.

கண்ணாடி யுள்ளுளே கண்டுபோததுகொள்ளுங்கோ
னேஞானக, கண்ணன்னறிக கண்ணாடி காணவொண்ணதெங்
களக்கோனே. (௧௨௬)

சூனியமானதைச் சுட்டுவாரெங்குணுகோனே-புத்தி
சூக்குமமேயதைச் சுட்டிமன்னெறணணெங்கள கோனே.

நித்தியமானதுகோபடிலே நிலைகோனே-என்றும
நிறகுமென்றேகனைசசயங்காணெங்கள கோனே. (௧௨௮)

சத்தியு மப்பமும் தன்னுட்கலந்ததேகோனே-நிட்டை
சாதிக்கிலிரண்டுந் தன்னுள்ளே காணலாங் கோனே. (௧௨௯)

கைபோலிருந்து மோனத்தைச்சாதியெங் கோனே-பர
லநிலைக்கண்டு முட்டுப்பிறப்பறு கோனே. (௧௩0)

## இடைக்காட்டுச் சித்தர்பாடல்.

முற்றிற்று.

சிவமயம்.

# அகப்பை பாடல்.

அகப்பேய்
நாயகன்றாள்பெறவே
நெஞ்சுமலையாதே அகப்பேய்
நீயொன்றுஞ்சொல்லாதே (க)

பராபரமானதடி அகப்பேய்
பரையாகவந்ததடி
தராதலமேழ்புவியும் அகப்பேய்
தானேபடைத்ததடி. (உ)

நாதவேதமடி அகப்பேய்
நன்னடனகண்டாயோ
பாதஞ்சத்தியடி அகப்பேய்
பரவிந்துநாதமடி. (ங)

விந்துநாதமடி அகப்பேய்
மெய்யாகவந்ததடி
ஐந்துபெரும்பூதம் அகப்பேய்
அதனிடமானதடி. (ச)

நாலுபாதமடி அகப்பேய்
நன்னெறிகண்டாயோ
மூலமானதல்லால் அகப்பேய்
முத்தியல்லவடி.

வாக்காதியைந்தடியோ அகப்பேய்
வந்தவகைகேளாய்
ஓங்காரமானதடி அகப்பேய்
உண்மையதல்லவடி. (கு)

சத்தாதியைந்தடியோ அகப்பேய்
சாத்திரமானதடி
மித்தையமாகுமடி அகப்பேய்
மெய்யதுசொன்னேனே. (௭)

வசனாதியைந்தடியோ அகப்பேய்
வண்மையாய்வந்ததடி
தெசநாடிபத்தேடி அகப்பேய்
திடனிதுகண்டாயே. (௮)

காரணமானதெல்லாம அகப்பேய்
கண்டதுசொன்னேனே
மாரணங்கண்டாயே அகப்பேய்
வந்தவிதங்களெல்லாம் (௯)

நாதத்துவமும் அகப்பேய்

மாருதமண்டலமும் அகப்பேய்
வந்ததுமூன்றடியே. (௰)

பிருதிவிபொன்னிறமே அகப்பேய்
பேதமையல்லவடி
ருவதுநீரடியோ அகப்பேய்
யடி (௧௧)

தேயுசெம்மையடி அகப்பேய்
திடனதுகண்டாயே
ரயுநீலமடி அகப்பேய்
வான் (௧௨)

ரணமஞ்சடியோ அகப்பேய்
வந்ததுநீகேளாய்
னமதாகாதே அகப்பேய்
உள்ளதுசொன்னேனே. (௧௩)

# அகப்பைசித்தர் பாடல்.

அகாரமித்தனையும் — அகப்பேய
 அங்கென்றெழுந்ததடி
உகாரங்கூடியடி — அகப்பேய
 உருவாகிவந்ததடி. (க)

மகாரமாயையடி — அகப்பேய்
 மலமதுசொன்னேனே
சிகாரமூலமடி
 சிந்தித்துக்கொள்வாயே. (௨)

வன்னம்புவனமடி — அகப்பேய
 மந்திரத்
இன்னமுஞ்சொல்வேனே
 இம்மென்றுகேட்பாயே.

அத்திவரைவாடி
 ஐம்பத்தோரட்சரமும
மித்தையாங்கண்டாயே
 மெய்யென்றுநம்பாதே.

தத்துவமானதடி
 சகலமாய்வந்ததடி
புதியுஞ்சொன்னேனே
 பூதவடிவல்லவோ.

இந்தவிதங்களெல்லாம்
 எம்மிறையல்லவடி

 ஆருயிர்தகாணுயோ.

பாவந்தீரவென்றால்
 பாவிக்கலாகாதே
சாவதுமில்லையடி
 சற்குருபாதமடி.

எத்தனைசொன்னாலும் அகப்பேய்
என்மனந்தேறாதே
சித்தமசித்தம்விட்டு அகப்பேய்
சேர்ந்துநீகாண்பாயே. (உக)

சமயமாறுமடி அகப்பேய்
தானாகவந்ததடி
அமையாநின்றவிடம் அகப்பேய்
ஆராய்ந்துசொல்வாயே (உஉ)

ஆறாறுமாகுமடி அகப்பேய்
ஆகாதுசொன்னேனே
வேறேயுண்டானால்
மெய்யாகச்சொல்வாயே. (உ௩)

உன்னையறிந்தக்கால் அகப்பேய்
ஒன்றையுஞ்சேராயே
உன்னையறியும்வகை அகப்பேய்
உள்ளதுசொல்வேனே. (உ௪)

சரியையாகாதே அகப்பேய்
சாலோகங்கண்டாயே
கிரியைசெய்தாலும் அகப்பேய்
கிட்டுவதொன்றுமில்லை உ௫

யோகமாகாதே அகப்பேய்
உள்ளதுமணடாக்கால
தேசஞானமடி அகப்பேய்
தேடாதேசொன்னேனே. (உ௬)

ஐந்துதலைநாகமடி அகப்பேய்
ஆதாயங்கொஞ்சமடி
இந்தவிஷந்தீர்க்கும் அகப்பேய்
எம்மிறைகண்டாயே. (உ௭)

இறையவனென்றதெல்லாம் அகப்பேய்
எந்தவிதமாகும்
அறையவேநீகேளாய் அகப்பேய்
ஆனந்தமானதடி. (உ௯)

கண்டுகொண்டேனே அகப்பேய்
காதல்விண்டேனே
உண்டுகொண்டேனே அகப்பேய்
உள்ளதுசொன்னுயே. (௩௰)

உள்ளதுசொன்னாலும் அகப்பேய்
உன்னாலேகாண்பாயே
கள்ளமுந்தீராதே அகப்பேய்
கண்டார்க்குகாமமடி. (௩0)

அறிந்துநின்றாலும் அகப்பேய்
அஞ்சார்கள்சொன்னேனே
புரிந்தவல்வினையும் அகப்பேய்
போகாதேயுன்னைவிட்டு ௩௧

ஈசன்பாசமடி அகப்பேய்
இவ்வண்ணங்கண்டதெல்லாம்
பாசம்பயின்றதடி அகப்பேய்
பரமதுகண்டாயே ௩௨

சாத்திரசூத்திரமும். அகப்பேய்
சங்கற்பமானதெல்லாம்
பாத்திடலாகாதே அகப்பேய்
பாழ்பலங்கண்டாயே. (௩௩)

ஆறுகண்டாயோ
அந்தவினைதீர அகப்பேய்
தேறிதெளிவதற்கே அகப்பேய்
தீர்த்தமுமாடாயே. (௩௪)

## அகப்பேய்ச்சித்தர் பாடல்.

எத்தனைகாலமுந்தான்
யோகமிருந்தாலென் அகப்பேய்
முத்தனுமாவாயோ
மோட்சமுமுண்டாமோ. அகப்பேய் (ரு௫)

நாசமாவதற்கே
நாடாதேசொன்னேனே அகப்பேய்
பாசம்போனாலும்
பசுக்களும்போகாதே. அகப்பேய் (ரு௬)

நாணமேதுக்கடி
நல்வினைதீர்ந்தாககால அகப்பேய்
காணவேணுமென்றால்
காணக்கிடையாதே அகப்பேய் (ரு௭)

சும்மாயிருந்துவிடாய்
சூத்திரனே அகப்பேய்
சும்மாயிருந்தவிடம்
சுட்டதுகண்டாயே. அகப்பேய் (ரு௮)

அகப்பேய்

என்ற
இடத்திலேவந்தாயே. அகப்பேய் (ரு௯)

வானமோடிவாரில்
வந்துபிறப்பாயே அகப்பேய்
தேனையுண்ணாமல
தெருவோடலைந்தாயே. அகப்பேய் (௬0)

சைவமானதடி
தானாகநின்றதடி அகப்பேய்
சைவமில்லையாகில்
சலம்வருங்கண்டாயே. அகப்பேய் (௬௧)

ஆசையற அகப்பேய்
ஆசாரங்கண்டாயே
ஈசன்பாசமடி அகப்பேய்
எங்ஙனஞ்சென்றாலும். (௪உ)

ஆணவமூலமடி அகப்பேய்
அகாரமாய்வந்ததடி
கோணுமுகாரமடி அகப்பேய்
உப்பிறந்ததுவே. (௪௩)

ஒன்றுமில்லையடி அகப்பேய்
உள்ளபடியாச்சே
நன்றில்லைதீதில்லையே அகப்பேய்
நாணமுமில்லையடி. (௪௪)

சும்மாயிருந்தவிடம் அகப்பேய்
சுட்டதுசொன்னேனே
எம்மாயமீதறியேன் அகப்பேய்
என்னையுங்காணேனே. (௪௫)

கலைகளேதுக்கடி அகப்பேய்
கண்டார்நகையாரோ
நிலைகளேதுக்கடி அகப்பேய்
நீயார்சொல்வாயே. (௪௬)

இந்தவிர்தமடி அகப்பேய்

இந்துவெள்ளையடி அகப்பேய்
இரவிசிவப்பாமே. (௪௭)

அகப்பேய்

அக்கினிகண்டாயே
தானுவுமிப்படியே அகப்பேய்
சற்குருகண்டாயே (௪அ)

என்னபடித்தாலும் அகப்பேய்
எம்முறையாகாதே

சொன்னதுகேட்டாயே அகப்பேய்
சும்மாயிருந்துவிடு (௪௯)

நூமேலையுமடி அகப்பேய்
கடந்தவமானாலென்
வீடும்வெளியாமோ அகப்பேய்
மெய்யாகவேண்டாமோ (௫௦)

பரத்திலேசென்றாலும் அகப்பேய்
பாரிலேமீளுமடி
பரத்துக்கடுத்தவிடம் அகப்பேய்
பாழதுகண்டாயே. (௫௧)

பஞ்சமுகமேது அகப்பேய்
பஞ்சுபடுத்தாதே
குஞ்சிதப்பாதமடி அகப்பேய்
குருபாதங்கண்டாயே (௫௨)

பங்கமில்லையடி அகப்பேய்
பாதமிருந்தவிடம்
கங்கையில்வந்ததெல்லாம் அகப்பேய்
கண்டுதெளிவாயே. (௫௩)

தானறநின்றவிடம் அகப்பேய்
சைவங்கண்டாயே
ஊனறநின்றவற்கு அகப்பேய்
ஊனமொன்றில்லையடி. (௫௪)

சைவமாருக்கடி அகப்பேய்
தன்னையறிந்தவற்கே
சைவமானவிடம் அகப்பேய்
சற்குருபாதமடி (௫௫)

பிறவிதீரவென்றால் அகப்பேய்
பேதகம்பண்ணாதே
துறவியானவர்கள் அகப்பேய்
சும்மாயிருப்பார்கள் (௫௬)

ஆரலைந்தாலும்
    நீயலையாதேயடி
ஊரலைந்தாலும்
    ஒன்றையுங்காடாதே.

தேனுறுபாயுமடி
    திருவடிகண்டவர்க்கே
ஊனுறுமில்லையடி
    ஒன்றையுங்காடாதே.

வெள்ளை கறுப்பாமோ
    வெள்ளியுஞ்செம்பாமோ
உள்ள[illegible] [illegible]டாடி

அறிவுண்மன்னுமடி
    ஆதாரமில்லையடி
அறிவுபாசமடி
    அருளதுகண்டாயே.

வாசியிலேறியடி
    வான்பொருள்தேடாயோ
வறசியிலேறியடி
    வாராதுசொன்னேனே.

ஆராதிஆரமடி
    ஆரமுமில்லையடி
பாராமற்பாரடியோ
            வென்றால்.

உண்டாக்கிக்கொண்டதல்ல
    உள்ளதுசொன்னேனே
கண்டார்கள்சொல்வாரோ
    கற்பனைநீற்றதடி.

நாலுமறைகாணு
    நாதனையார்காண்பார்



## அகப்பைசித்தர் பாடல்.

ாலுமறைமுடிவில் அகப்பேய்
நற்குருபாதமடி. (கூச)
அகப்பேய்
றலமில்லையடி
முப்பொருளில்லையடி அகப்பேய்
றலமுண்டானால் (கூ௫)
முத்தியுமுண்டாமே
அகப்பேய்
ந்திரசாலமது
எண்பத்தொருபதமும் அகப்பேய்
ந்திரமப்படியே (கூ௬)
வாஎ
அகப்பேய்
பாழாகவேணுமென்றால்
பார்த்ததைகம்பாதே அகப்பேய்
களாமற்சொன்னேனே (கூஎ)
கேள்வியுமில்லையடி
அகப்பேய்
ாதிபேதமில்லை
தானாகநின்றவற்கு அகப்பேய்
ஓதியுணர்ந்தாலும் (கூஅ)
ஒன்றுந்தானில்லையடி.
அகப்பேய்
குழவானமடி
சுற்றிமாக்காவில் அகப்பேய்
பழமுண்டகனி (கூகூ)
மெய்யதுகண்டாயே.
அகப்பேய்

அகப்பேய்
ானுமில்லையடி (எ0)
சற்குருவில்லையடி.
அகப்பேய்
ந்திரமில்லையடி
வாதனையல்லவடி அகப்பேய்
(எக)
சமயமழிந்தபடி.

பூசைபசாசமடி அகப்பேய்
போதமேகோஷ்டமடி
ஈசன்மாயையடி அகப்பேய்
எல்லாமுமிப்படியே. (எஉ)

சொல்லலாகாதே அகப்பேய்
சொன்னலுந்தோஷமடி
இல்லையில்லையடி அகப்பேய்
ஏகாந்தங்கண்டாயே. (எ௩)

தத்துவதெய்வமடி அகப்பேய்
சதாசிவமானதடி
மற்றுள்ளதெய்வமெல்லாம் அகப்பேய்
மாயைவடிவாமே. (எச)

வார்த்தையல்லவடி அகப்பேய்
வாசாமகோசரத்து
ஏற்றதல்லவடி அகப்பேய்
என்னுடன்வந்ததல்ல (எரு)

சாத்திரமில்லையடி அகப்பேய்
சலனங்கடந்ததடி
பார்த்திடலாகாதே அகப்பேய்
பாவனைகெட்டாதே. (எசு)

என்னபடித்தாலென் அகப்பேய்
ஏதுதான்செய்தாலென்
சொன்னவிதங்களெல்லாம் அகப்பேய்
சுட்டதுகண்டாயே. (எஎ)

தன்னையறியவேணும் அகப்பேய்
சாராமற்சாரவேணும்
பின்னையறிவதெல்லாம் அகப்பேய்
பேயறிவாகுமடி. (எஅ)

பிச்சையெடுத்தாலும் அகப்பேய்
பிறவிதொலையாதே

இசைையறறவிடம் அகப்பேய்
எம்மிறைகண்டாய்ய. (எக)

கோலமாகாதே அகப்பேய்
குதர்க்கமுமாகாதே
சாலமாகாதே அகப்பேய்
சஞ்சலமாகாதே. (அ0)

ஒப்பனையல்லவடி அகப்பேய்
உன்னுணைசொன்னேனே
அப்புடனுப்பெனவே அகப்பேய்
ஆராய்ந்திருப்பாயே. (அக)

மோட்சம்வேண்டவர்கள் அகப்பேய்
முத்தியும்வேண்டார்கள்
தீட்சைவேண்டார்கள் அகப்பேய்
சின்மயமானவர்கள். (அஉ)

பாலன்பிசாசமடி அகப்பேய்
பாத்தாக்கால்பித்தனடி
காலமூன்றுமல்ல அகப்பேய்
காரியமல்லவடி. (அங)

கண்டதுமில்லையடி அகப்பேய்
கண்டவருண்டானல்
உண்டதுவேண்டிடாயோ அகப்பேய்
உன்னுணைசொன்னேனே. (அச)

அஞ்சையுமூணுதே அகப்பேய்
ஆசையும்வேண்டாதே
நெஞ்சையும்விட்டுவிடு அகப்பேய்
நிஷ்டையிற்சாராதே. (அரு)

காதாந்தவுண்மையிலே அகப்பேய்
காடாதேசொன்னேனே
மீதானகுதானும் அகப்பேய்
மெய்யென்றுநம்பாதே. (அசு)

ஒன்றேடொன்றுகூடில் அகப்பேய்
ஒன்றுங்கெடுங்காணே
நின்றபரசிவமும் அகப்பேய்
நில்லாதுகண்டாயே. (அஎ)

தோன்றும்வினைகளெல்லாம் அகப்பேய்
சூனியங்கண்டாயே
தோன்றுமற்றொன்றிவிடும் அகப்பேய்
சுத்தவெளிதனிலே. (அஅ)

பொய்யென்றுசொல்லாதே அகப்பேய்
போக்குவருத்துதானே
மெய்யென்றுசொன்னக்கால் அகப்பேய்
வீடுபெறலாமே. (அக)

வேதமோதாதே அகப்பேய்
மெய்கண்டோமென்னு
பாதகம்பாதே அகப்பேய்
பாவித்துப்பாராதே. (கo)

அகப்பைசித்தர்பாடல்.

முற்றும்.

# குதம்பை  பாடல்.

வெட்டவெளிதன்னை மெய்யென்றிருப்பார்க்கு
பட்டயமேதுக்கடி  † குதம்பாய்
பட்டயமேதுக்கடி. க

மெய்ப்பொருள்கண்டு விளங்குமெய்ஞ் ஞானிக்குக்
கற்பங்களேதுக்கடி  குதம்பாய்
கற்பங்களேதுக்கடி  உ

காணமற்கண்டு கருத்தோடிருப்பார்க்கு
வீணைசையேதுக்கடி  குதம்பாய்

வஞ்சக மற்றவழிதன்னைக் கண்டோர்க்கு
சஞ்சலமேதுக்கடி  குதம்பாய்
சஞ்சலமேதுக்கடி. ச

ஆதாரமான வடிமுடிகண்டோர்க்கு
வாதாட்டமேதுக்கடி  குதம்பாய்
வாதாட்டமேதுக்கடி.

சித்திரைகெட்டு நினைவோடிருப்பார்க்கு
முத்திரையேதுக்கடி  குதம்பாய்
முத்திரையேதுக்கடி. சு

தந்திரமானதலந்தனினிற்போர்க்கு
மந்திரமேதுக்கடி  குதம்பாய்
மந்திரமேதுக்கடி. எ

---

* குதம்பை-ஆபரணம்.
† குதம்பாய்-ஆபரணத்தையுடையவள்.

சத்தியமான தவத்திலிருப்போர்க்கு
உத்தியமேதுக்கடி குதம்பாய்
உத்தியமேதுக்கடி. (௯)

நாட்டத்தைப்பற்றி நவேணைசேர்வோர்க்கு
வாட்டங்களேதுக்கடி குதம்பாய்
வாட்டங்களேதுக்கடி. ௯

முத்தமிழ்கற்று முயங்குமெய்ஞ்ஞானிக்குச்
சத்தங்களேதுக்கடி குதம்பாய்
சத்தங்களேதுக்கடி. ௧௦

உச்சிக்குமேற்சென் றுயர்வெளிகண்டோர்க்கு
இச்சிப்பிங்கேதுக்கடி குதம்பாய்
இச்சிப்பிங்கேதுக்கடி. ௧௧

வேகாமல்வெந்து வெளியொளிகண்டோர்க்கு
மோகாந்தமேதுக்கடி குதம்பாய்
மோகாந்தமேதுக்கடி. ௧௨

சாகாமற்றாண்டி தனிவழிபோவோர்க்கு
ஏகாந்தமேதுக்கடி குதம்பாய்
ஏகாந்தமேதுக்கடி. ௧௩

அந்தரந்தன்னி லசைந்தாடுமுத்தர்க்கு
தந்திரமேதுக்கடி குதம்பாய்
தந்திரமேதுக்கடி.

ஆனந்தம்பொங்கி யறிவோடிருப்பார்க்கு
ஞானந்தானேதுக்கடி குதம்பாய்
ஞானந்தானேதுக்கடி.

சித்திரக்கூத்தைத் தினந்தினங்காண் போர்க்குப்
பத்திரமேதுக்கடி குதம்பாய்
பத்திரமேதுக்கடி. ௧௬

முக்கோணந்தன்னின் முளைத்தமெய்ஞ்ஞானிக்குச்
சட்கோணமேதுக்கடி குதம்பாய்
சட்கோணமேதுக்கடி. ௧௭

அட்டதிக்கெல்லா மசைந்தாடுநாதர்க்கு
நட்டணையேதுக்கடி குதம்பாய்
நட்டணையேதுக்கடி. ௧௮

முத்திபெற்றுள்ள முயங்குமெய்ஞ்ஞானிக்குப்
பத்தியமேதுக்கடி குதம்பாய்
பத்தியமேதுக்கடி. ௧௯

அல்லலைநீக்கி யறிவோடிருப்பார்க்குப்
பல்லாக்கேதுக்கடி குதம்பாய்
பல்லாக்கேதுக்கடி. ௨0

அட்டாங்கயோக மறிந்தமெய்ஞ்ஞானிக்கு
முட்டாங்கமேதுக்கடி குதம்பாய்
முட்டாங்கமேதுக்கடி. ௨௧

வேகமடக்கி விளங்குமெய்ஞ்ஞானிக்கு
யோகந்தானேதுக்கடி குதம்பாய்
யோகந்தானேதுக்கடி. ௨௨

மாத்தானைவென்று மலைமேலிருப்போர்க்கு
பூத்தானமேதுக்கடி குதம்பாய்
பூத்தானமேதுக்கடி. ௨௩

செத்தாரைப்போலத் திரியுமெய்ஞ்ஞானிக்குக்
கைத்தாளமேதுக்கடி குதம்பாய்
கைத்தாளமேதுக்கடி. ௨௪

கண்டாரைநோக்கிக் கருத்தோடிருப்பார்க்குக்
கொண்டாட்டமேதுக்கடி குதம்பாய்
கொண்டாட்டமேதுக்கடி. ௨௫

காலனைவென்ற கருத்தறிவாளர்க்குக்
கோலங்களேதுக்கடி குதம்பாய்
கோலங்களேதுக்கடி, உ௬

வெண்காயமுண்டு மிளகுண்டுசுக்குண்டு
உங்காயமேதுக்கடி குதம்பாய்
உங்காயமேதுக்கடி. உ௭

மாங்காய்ப்பாலுண்டு மலைமேலிருப்போர்க்குத்
தேங்காய்ப்பாலேதுக்கடி குதம்பாய்
தேங்காய்ப்பாலேதுக்கடி. உ௮

பட்டணஞ்சுற்றிப் பகலேதிரிவார்க்கு
முட்டாக்கேதுக்கடி குதம்பாய்
முட்டாக்கேதுக்கடி உ௯

தாவாரமில்லை தனக்கொருவீடில்லை
தேவாரமேதுக்கடி குதம்பாய்
தேவாரமேதுக்கடி. ௩0

தனையறிந்து தலைவனைச்சேர்ந்தோர்க்குப்
பின்னாசையேதுக்கடி குதம்பாய்
பின்னாசையேதுக்கடி. ௩௧

பத்தாவுந்தானும் பதியோடிருப்பார்க்குக்
குத்தாரமேதுக்கடி குதம்பாய்
குத்தாரமேதுக்கடி ௩உ

குதம்பை சித்தர்பாடல்.

முற்றிற்று.

உ

சிவமயம்

# கடுவெளிசித்தர் பாடல்.

## ஆனந்தக்களிப்பு

பாபஞ்செய்யாதிரு மனமே-நாளை
கோபஞ்செய்தேயமன்
கொண்டோடிப்போவான்
பாபஞ்செய்யாதிரு மனமே.

சாபங்கொடுத்திட லாமோ-விதி
தன்னைநம்மாலே தடுத்திடலாமோ
கோபந்தொடுத்திட லாமோ-இச்சை
கொள்ளக்கருத்தைக் கொடுத்திடலாமோ. பாப

சொல்லருஞ்சூதுபொய் மோசம்-செய்தால்
சுற்றத்தைமுற்றாய்த் துடைத்திடுநாசம்
நல்லபத்திவிசு வாசம்-எந்த
நாளுமனிதர்க்கு நன்மையாய்நேசம். பாப

நீர்மேற்குமிழியிக் காயம்-இது
நில்லாதுபோய்விடு நீயறிமாயம்
பார்மீதினமெத்தவு நேயம்-சற்றும்
பற்றிருந்திடப் பண்ணுமுபாயம். பாப

நந்தவனத்திலோ ராண்டி-அவன்
நாலாறுமாதமாய்க் குயவனைவேண்டி
கொண்டுவந்தானொரு தோண்டி-மெத்தக்
கூத்தாடிக்கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி. பாப

தூஷணமாகச் சொல்லாதே-தேடுஞ்
சொத்துக்களிலொரு தூசுநில்லாதே

எடனைமூனறும பொலலாதே-சிவத
திசசைவைததாலெம லோகம்பொலலாதே. பாப

நலலவழிதனை நாடு-எந்த
காளும்பரமனை நததியேதேடு
வலலவா கூட்டததிற கூடு-அநத
வள்ளலைநெஞ்சினில் வாழ்ததிக்கொணடாடு. பாப

நல்லவாதமமைத தள்ளாதே-அறம
நாவெட்டிலொன்றேனு நாடிததள்ளாதே
பொலலாஙகிலொன்றுங கொள்ளாதே-கெட்ட
பொய்ம்மொழிகோள்கள பொருந்தவிள்ளாதே. பாப

வேதவிதிப்படி நிலலு-நலலோர
மேவும்வழியினை வேண்டியேசெலலு
சாதகநிலைமையே சொலலு-பொலலாச
சண்டாளகோபததைச சாதிததுககொலலு பாப

பிசசையென்றொனறுங கொள்ளாதே-எழில
பெண்ணாசைகொண்டு பெருக்கமாளாதே
இசசையதனனை யாளாதே-சிவன்
இச்சைகொண்டவ்வழி யேறிமீளாதே. பாப

மெய்ஞ்ஞானப்பாதையி லேறு-சுதத
வேதாந்தவெட்ட வெலியினைததேறு
அஞ்ஞானமார்க்கத்தைத் தூறு-உன்னை
அண்டினோர்ககானந்த மாம்வழிகூறு. பாப

மெய்க்குருசொறகடக காதே-நன்மை
மென்மேலுஞ்செய்கை மிகவடக்காதே
பொய்க்கலையானடக காதே-நலல
புததியைபொய்வழி தனினடக்காதே. பாப

கூடவருவதொன றில்லை-புழுக
கூடெடுததினை லுலாவதேதொல்லை
தேடருமோட்சம தொல்லை-அதைத
தேடும்வழியைத் தெளிவோருமிலலை. பாப

ஐந்துபேர்சூழ்ந்திடுங் காடு - இந்த
ஐவர்க்குமைவ ரடைந்திடுநாடு
முந்திவருந்திநீ தேடு-அந்த
மூலமறிந்திட லாமுத்திவீடு. பாப

உள்ளாகநால்வகைக் கோட்டை-பகை
ஓடப்பிடித்திட்டா லாளலாநாட்டை
கள்ளப்புலனென்னுங் காட்டை-வெட்டிக்
கனலிட்டெரித்திட்டாற் காணலாம்வீட்டை. பாப

கச்சிக்கோடில்வினை போமோ-அந்தக்
கங்கையாடில்கதி தானுமுண்டாமோ
பேசுமுன்கன்மங்கள் சாமோ-பல
பேதம்பிறப்பது போற்றினும்போமோ. பாப

பொய்யாகப்பாராட்டுங் கோலம்-எல்லாம்
போகவேவாய்த்திடுமி யார்க்கும்போங்காலம்
மெய்யாகவேசுத்த சாலம்-பாரில்
மேவப்புரிந்திடி லென்னனுகூலம். பாப

சந்தேகமில்லாத தங்கம்-அதைச்
சார்ந்துகொண்டாலுந் தாழ்வில்லாப்பொங்கம்
அந்தமில்லாதவோர் துங்கம் - எங்கும்
ஆனந்தமாகவே நிரம்பியபுங்கம. பாப

பாரிலுயர்ந்தது பக்தி - அதைப்
ப ீ ற்றினபேர்க்குண்டு மேவருமுத்தி
சீரியவுயரட்ட சித்தி - யார்க்குஞ்
சித்திக்குமேசிவன் யேசலினல்பத்தி.

அன்பெனுநன்மலர் தூவி - பர
மானந்தத்தேவ னடியிணைமேவி
இன்பொடுமுன்னுட லாவி - நாளும்
ஈடேற்றத்தேடாய்நீ இங்கேகுலாவி.

ஆற்றும்வீடேற்றங்கண்டு - அதுக்
கானவழியை யறிந்துநீகொண்டு

சிற்றமில்லாமலே தொண்டு - ஆதி
சிவனுக்குச்செய்திடிற் சேர்ந்திடுங்கெண்டு.

ஆன்மாவாலாடிடு மாட்டந் - தேகத்
தான்மாவற்றபோதே யாமுடல்வாட்டம்
வான்கதிமீதிலே நாட்டம் - நாளும்
வையிலுனக்கு வருமோகொண்டாட்டம்.

எட்டுமிரண்டையு மோர்ந்து - மறை
யெல்லாமுனக்குள்ளே யேகமாய்த்தேர்ந்து
வெட்டவெளியினைச் சார்ந்து - ஆனந்த
வெள்ளத்தின்மூழ்கி மிகுகளிகூர்ந்து.

இந்தவுலகமு முள்ளுஞ் - சற்றும்
இச்சைவையாமலே யெந்நாளுந்தள்ளு
செந்தேன்வெள்ளமதை மொள்ளு - உன்றன்
சிந்தைதிதிக்கத் தெவிட்டவுட்கொள்ளு.

பொய்வேதந்தன்னைப் பாராதே - அந்தப்
போதகர்சொற்புத்தி போதவோராதே
மைவிழியாரைச் சாராதே - தன்
மார்க்கர்கள்கூட்டத்தின் மகிழ்ந்துசேராதே.

வைதோரைக்கூடவையாதே - இந்த
வையகமுற்றும்பொய்த் தாலும்பொய்யாதே
வெய்யவினைகள் செய்யாதே - கல்லை
வீணிற்பறவைகண் மீதிலெய்யாதே.

சிவமன்றிவேறேவேண்டாதே-யார்க்குந்
தீங்கானசண்டையைச் சிறக்கத்தூண்டாதே
தவநிலைவிட்டுத் தாண்டாதே - நல்ல
சன்மார்க்கயில்லாத நூலைவேண்டாதே.

பாம்பினைப்பற்றியாட் டாதே - உன்றன்
பத்தினிமார்களைப் பழித்துக்காட்டாதே
வேம்பினையுலகிலூட்டாதே - உன்றன்
வீறுப்புதன்னை விளங்கநாட்டாதே.

போற்றுஞ்சடங்கை நண்ணாதே - உன்னைப்
புகழ்ந்துபலரிற் புகலவொண்ணாதே
சாற்றுமுன்வாழ்வை யெண்ணாதே - பிறர்
தாழும்படிக்குநீ தாழ்வாகப்பண்ணாதே. பாப

கஞ்சாபுகைபிடியாதே - வெறி
காட்டிமயங்கியே கட்குடியாதே
அஞ்சவயிர்மடியாதே - பத்தி
யற்றவஞ்ஞானத்தி னூல்படியாதே. பாப

பத்தியெனுமேணி நாட்டித்-தொந்த
பந்தமற்றவிடம் பார்த்ததைநீட்டி
சத்தியமென்றதை யீட்டி - நாளுந்
தன்வசமாக்கிககொள் சமயங்களோட்டி. பாப

செப்பரும்பலவித மோகம்-எல்லாஞ்
சீயென்றொறுத்துத் திடங்கொள்விவேகம்
ஒப்பருமட்டாங்க யோகம் - நன்றாய்
ஓர்ந்தறிவாயவற் றுண்மைசம்போகம், பாப

எவ்வகையாகநன் னீதி - அவை
யெல்லாமறிந்தே யெடுத்துநீபோதி
ஒவ்வாதென்றபல சாதி - யாவும்
ஒன்றென்றறிந்தே யுணர்ந்துறவோதி. பாப

கள்ளவேடம்புனையாதே - பல
கங்கையிலேயுன் கடனையாதே
கொள்ளைகொள்ளநினை யாதே-நட்புக்
கொண்டுபிரிந்துநீ கோண்முனையாதே. பாப

எங்குஞ்சயபிர காசன் - அன்பர்
இன்பவிருதயத் திருந்திடும்வாசன்
துங்கவடியவர் தாசன் - தன்னைத்
துதிக்கிற்பதவி யருளுவனீசன். பாபஞ்செய்யா

கடுவெளிசித்தர் பாடல்முற்றிற்று.

சிவமயம்.

# அகஸ்தியா ஞானம் ஒன்பது.



சத்தியேபராபரமே யொன்றேதெய்வம்
சகலவுயிர்ஜீவனுக்கு மதுதானுச்சு
புத்தியினலறிந்தவர்கள் புண்ணியோர்கள்
பூதலத்திற்கோடியிலே யொருவனுண்டு
பத்தியினுன் மனமடங்கி நிலைபிநிற்பார்
பாழிலேமனதைவிடார் பரமஞானி
சுத்திபேயலைவதில்லைச சூக்ஷஞ்சூக்ஷம்
சுழியிலேநிலையறிந்தால் மோக்ஷந்தானே. (க)

மோக்ஷமதுபெறுவதற்குச சூக்ஷஞ்சொன்னேன்
மோகமுடன்பொய்களவு கொலைசெய்யாதே
காச்சலுடன்கோபத்தைத தள்ளிப்போடு
காசினியிற்புண்ணியத்தைக் கருதிக்கொள்ளு
பாச்சலதுபாயாதே பாழ்போகாதே
பலவேதசாஸ்திரமும் பாருபாரு
ஏசசல்லவர்பிழைக்கச் செய்தமார்க்கம்
என்மக்காளெண்ணியெண்ணி நன்றாய்ப்பாரே (௨)

பாரப்பாநால்வேத நூலும்பாரு
பற்றாசைவைப்பதற்கோ பிணையோகோடி
வீரப்பா ஒன்றொன்றுக்கொன்றைமாறி
வீணிலேயவர்பிழைக்கச செய்தமார்க்கம்
தேரப்பாதெருத்தெருவே புலம்புவார்கள்
தெய்வநிலைஒருவருமே காணார்காணார்
ஆரப்பாநிலையில்நிற்கப் போறாரையோ
ஆசசரியமகோடியிலே யொருவன்தானே,

# அகஸ்தியஞானம ஒனபது.

ஒருவனென்றேதெய்வத்தை வணஙகவேணும்
உததமனுய்பூமிதனி லிருககவேணும்
பறுவமதற்கேறுபயிர செய்யவேணும
பாழிலேமனதைவிடாா பரமஞானி
திரிவார்கடிருடரப்பா ஞானிகோடி
தேசத்திற்கள்ளரப்பா கோடாகோடி
வருவார்களப்பனே யனேகஙகோடி
வார்த்தையிஞலபசப்புவார் திருடர்தானே.

தானென்றதானேதா னென்றேதெயவம்
தகப்பனுந்தாயுமஙகே புணருமபோது
நானென்றுகருப்பிடிக்குக கொண்டுவந்த
நாதனைநீயென்ருளும் வணஙகிநில்லு
கோனென்றதிருடனுக்குந் தெரியுமப்பா
கோடானகோடியிலே யொருவனுண்டு
ஏனென்றமனத்தாலே யறியவேணும்
என்மக்காநிலைநிற்க மோக்ஷந்தானே.

மோக்ஷமது பெருவதறகுச சூக்ஷஙகேளு
முன்செய்தபோகளுடன் குறியைக்கேளு
எச்சலதுகுருக்களது குலஙகளகேளு
எல்லாருஙகூடழிந்த தெஙகேகேளு
பேசசலதுமாய்கையப்பா வொன்றுமிலலை
பிதறறுவாரவரவரு நிலையுஙகாணுர்
கூசசலதுபாழை யந்தான் போகும்போது
ட்டோடேபோச்சுதப்பா மூசசுக்கானே

மூச்சொடுங்கிப்போனவிடம் ஆருஙகாணுர்
மோக்ஷத்தின்நரதாதி னிருப்புஙகாணுர்
வாச்சென்றேவந்தவழி யேற்றஙகாணா
[illegible]மாறிநிற்குபணி வழியுஙகாணுர்
[illegible]ப்பாவெட்டவெளி நன்ருய்ப்பாரு
வேதங்கள்சாஸ்திரஙகள் வெளியாய்ப்போசசு

ஆச்சப்பாகருவுதனி லமைத்தாறபோலாம்
அவனுக்கேதெரியுமல்லா லறிவாய்ப்பாரே. (எ)

பீரப்பாவலகுகனிற பிறவிகோடி
படைப்புகளோபலவிதமாய்க் கோடாகோடி
வீரப்பாவண்டத்திற் பிறவிகோடி
வெளியிலேயாடுதப்பா வுற்றுப்பாரு
ஆரப்பாவனுவெளியி|னுள்ளேநீதான்
ஆச்சரியம்புழுக்கூடு வலேமோதப்பா
கூரப்பாவண்டதிற் பிண்டமாகும்
குணவியவானுனுக்காற் சத்தியமாமே. (அ)

சத்தியமேவேணுமடா மனிதனுனல்
சண்டாளஞ்செய்யாதே தவறிடாதே
நித்தியகர்மம்மறவாதே நேமம்விட்டு
நிஷ்டையுடன்சமாதிவிட்டு நிலேபோராதே
புத்திகெட்டுத்திரியாதே பொய்சொல்லாதே
புண்ணியத்தைமறவாதே பூசல்கொண்டு
கத்தியதோகர்ள்ளிட்டுத தர்க்கியாதே
கர்மியென்றுநாடவாதே கதிரொளிதான்முற்றே. (கூ)

அகஸ்தியர் ஞானம் கூ.

முற்றிற்று.

சிவமயம்

# அழுகணிசித்தர் பாடல்.

மூலப்பதியடியோ மூவிரண்டுவீடதிலே
கோலப்பதியடியோ குதர்க்கத்தெருநடுவே
சாலப்பதிதனிலே தணலாய்வளர்ந்தகம்பம்
உந்தன்மேலப்பதிதனிலே என்கண்ணம்மா
விளையாட்டைப்பாரேனோ. (௧)

எண்சாணுடம்படியே ஏழிரண்டுவாயிலடி
பஞ்சாயக்காரரைவர் பட்டணமுந்தானிரண்டு
அஞ்சாமற்பேசுகிறாய் ஆக்கினைக்குத்தான்பயந்து
நெஞ்சாரநில்லாமல் என்கண்ணம்மா
நிலைகடந்துவாடுறேண்டி. (௨)

முத்துமுகப்படியோ முச்சந்திவீதியிலே
பத்துவிதழ்பரப்பிப் பஞ்சணையின்மேலிருத்தி
அத்தையடக்கிநிலை யாருமில்லாவெளியிலே
குத்துவிளக்கேற்றி என்கண்ணம்மா
கோலமிட்டுப்பாரேனோ, (௩)

சம்பாஅரிசியடி சாதஞ்சமைத்திருக்க
உண்பாநீயென்றுசொல்லி உழக்குழக்குநெய்வார்த்து
முத்துப்போலன்னமிட்டு முப்பழமுஞ்சர்க்கரையுந்
தித்திக்கும்தேனமிர்தம் என்கண்ணம்மா
தின்றுகளைப்பாரேனோ. (௪

பைம்பொற்சிலம்பணிந்து பாடகக்கால்மேல்தூக்கி
செம்பொற்கலையுடுத்தி சேல்விழிக்குமையெழுதி
அம்பொற்பணிபூண் டறுகோணவீதியிலே
அம்பரத்தின்மேலிருந்து என்கண்ணம்மா
கண்குளிரப்பாரேனோ. (௫)

எட்டாப்புரவியடி யீராறுகாலடியோ
விட்டாலும்பாரமடி வீதியிலேதான்மறித்துக்
கட்டக்கயிறெடுத்துக் காலைநாலுஞ்சேர்த்திருக்கி
அட்டாளதேசமெல்லாம் என்கண்ணம்மா
ஆண்டிருந்தாலாகாதோ. (௬)

கொல்லனுலைபோற் கொதிக்குதடியென்வயிறு
நில்லென்றுசொன்னால் நிலைநிறுத்தக்கூடுதில்லை
நில்லென்றுசொல்லியல்லோ நிலைநிறுத்தவல்லார்க்குக்
கொல்லென்றுவந்தநமன் என்கண்ணம்மா
குடியோடிப்போகானோ. (௭)

ஊத்தைச்சடலமடிஎன்கண்ணே உப்பிருந்தபாண்டமடி
மாற்றிப்பிறக்க மருந்தெனக்குக்கிட்டுதில்லை
மாற்றிப்பிறக்க மருந்தெனக்குக்கிட்டுமென்றால்
ஊத்தைச்சடலம்விட்டு என்கண்ணம்மா
உன்பாதஞ்சேரேனோ. (௮)

வாழைப்பழந்தின்றால் வாய்நோகுமென்றுசொல்லி
தாழைப்பழந்தின்று சாவெனக்குவந்ததடி
தாழைப்பழத்தைவிட்டுச் சாகாமற்சாகவல்லோ
வாழைப்பழந்தின்றால் என்கண்ணம்மா
பாழாய்முடியாதோ. (௯)

பையூரிலேயிருந்து பாழூரிலேபிறந்து
மெய்யூரில்போவதற்கு வேதாந்தவீடறியேன்
மெய்யூரில்போவதற்கு வேதாந்தவீடறிந்தால்
மையூரும்மெய்யூரும் என்கண்ணம்மா
பாழாய்முடியாதோ. (௧௦)

மாமன்மகளடியோ மச்சினியோகாணறியேன்
காமன்கணையெனக்கு கனலாகவேகுதடி
மாமன்மகளாகி மச்சினியும்நீயானால்
காமன்கணைகளெல்லாம் என்கண்ணம்மா
கண்விழிக்கவேகாதோ. (௧௧)

அந்தாரததைவில்லாககி ஐந்தெழுததையமபாக்கி
மந்திரத்தேரேறியல்லோ மான்வேட்டையாடுதற்குச
சந்திரருஞ்சூரியருந் தான்போந்தகாவனததே
வந்துவிளையாடியல்லோ என் கண்ணம்மா
மனமகிழ்ந்துபார்ப்பதென்றோ. (௧௨)

காட்டானைமேலேறி கடைததெருவேபோகையிலே
நாட்டார்நமைமரிதது நகைபுரியபார்ப்பதெனறோ
நாட்டார்நமைமறித்து நகைபுரியபபாராததாலும
காட்டானைமேலேறி என் கண்ணம்மா
கண்குளிரப்பாரேனோ. (௧௩)

உசசிககுககிழடியோ ஊசிமுனைவாசலுககுள
மசசிககுள்மேலேறி வாணிதிரநதாமெனடுத்து
கசசைவடமபுரியக காலூராபாதையிலே
வசசுமறந்தலலோ என கணணம்மா
வகைமோசமானேனடி. (௧௪)

முககாலரும்பெடுதது மூவிரண்டாய்தானதாககி
நாக்காலவளை பரப்பி நாற்சதுரவீடுகட்டி
நாக்காலவளைபரப்பி நாறசதுரவீட்டினுளளே
முக்காலைகதாணுமல் என் கண்ணம்மா
முழுதுந்தவிக்கிரண்டி (௧௫)

காமமலாதுவக கருத்தெனக்குவந்ததடி
பாசவலிதொலைக்கம் பாசவலைஒட்டுதில்லை
பாசவலிதொலைக்கப் பாசவலிநிற்குமெனறுல
காலமலாமூன்றும் என கண்ணம்மா
கண்ணெதிரேகில்லாதே. (௧௬)

தஙகாயந்தோற்றுமல் சாணகலககொல்லைகட்டி
வெஙகாயநாத்துமிட்டுவெகுநாளாய்காத்திருந்தேன்
வெஙகாயந்தின்னுமல் மேற்றோலைதின்றலவோ
வெஙகாயந்தோணுமல் என் கண்ணம்மா
சாகிரண்டிசாகாமல் (௧௭)

பற்றற்றநீரதிலே பாசிபடர்ந்ததுபோல்
உற்றுற்றுபார்த்தாலும் உன்மயக்கந்தீரவில்லை
உற்றுற்றுபார்த்தலவோ உன்மயக்கந்தீர்ந்தாக்கால்
பற்றற்றநீராகும் என்கண்ணம்மா
பாசியதுவோராமே. (௧௮)

உற்றாருமுற்றாருந் தொண்ணூற்றியாரதிலே
உற்றாரும்பெற்றாரும் ஒன்றென்றேயானிருந்தேன்
உற்றாரும்பெற்றாரும் ஊரைவிட்டுபோகையிலே
சுற்றாறுமில்லாமல் என்கண்ணம்மா
துணையிழந்துநின்றதென்ன. (௧௯)

கண்ணுக்குமூக்கடியோ காதோரமத்திபத்தில்
உண்ணாக்குமேலேறி உன்புதுமைமெத்தவுண்டு
உண்ணாக்குமேலேறி உன்புதுமைகண்டவற்கு
கண்ணுக்குமூக்கடியோ என்கண்ணம்மா
காரணங்கள்மெத்தவுண்டே. (௨0)

சாயச்சரக்கெடுத்தே சாதிலிங்கந்தான்சேர்த்து
மாயப்பொடிகலந்து வாலுழுவைநெய்யூற்றி
பொட்டென்றுபொட்டுமிட்டால் புருவத்திடைநடுவே
இட்டமருந்தாலே என்கண்ணம்மா
நமானேண்டி. (௨௧)

பாதாளமூலியடி பாஷாணந்தான்சேர்த்து
வேதாளங்கூட்டியல்லோ வெண்சாரைநெய்யூற்றி
செந்தூரமையடியோ ஜெகமெலாந்தான்மிரட்டி
தந்தமருந்தாலே என்கண்ணம்மா
தணலாகவேகுராண்டி. (௨௨)

கள்ளர்பயமெனக்குக் கால்தூக்கவொட்டாமல்
பிள்ளையழுதுநின்றால் பெற்றவட்குபாரமடி
பிள்ளையழுகாமல் பெற்றமனம்நோகாமல்
கள்ளர்பயமெனக்கு என்கண்ணம்மா
கெளவுகாணுதே. (௨௩)

பட்டணத்தையாளுகின்ற பஞ்சவாகளிராஜாக்கள்
விட்டுப்பிரியாமல் வீரியங்கள்தானபேசி
விட்டுப்பிரிந்தவரே வேறுபடுங்காலம
பட்டணமுந்தானபரிபோய் என கண்ணம்மா
படைமன்னாமாண்டதென்ன. (உ௪)

ஆகாப்புலையனடி யஞ்ஞானந்தான்பேசி
சாகாததலையறியேன தானறியேன
வேகாதகாலறியேன் விதிமோசமானனடி
நோகாமலநொந்தலலோ என் கண்ணம்மா
நொடியிலமெழுகானனடி. (உ௫)

தாயைசசதமென்றே தநதையரையொப்பென்றே
மாயக்கலவிவந்து மதிமயக்கமானனடி
மாயககலவிவிட்டு மதிமயக்கந்தீர்ந்தாக்கால
தாயுஞ்சதமாமே என கண்ணமமா
தந்தையரு மொப்பாமே. (உ௬)

அஞ்சாதகள்ளனடி ஆருமற்றபாவியடி
நெஞ்சாரபபொய்சொலலும நேயமிலலாநியஷ்டூரன
கஞ்சாவெறியனடி கைசேதமாகுமுன்னே
அஞ்சாதேயென்றுசொலலி என் கண்ணம்மா
ஆண்டிருநதாலாகாதோ (உ௭)

உனனைமறநதலலோ உளுத்தமயமானேன
தனனைமறந்தார்க்குத தாயதந்தையிலலையடி
தனனைமறககாமற் றுயாருமுண்டாறேல
உன்னைமறககாமல என கண்ணமமா
ஒததிருந்துவாழேனே. (உ௮)

காயப்பதிதனிலே கநதமூலமவாங்கி
மாயபபணிபூண்டு வாழுஞ்சரக்கெடுத்து
ஆயததுறைதனிலே ஆராய்ந்துபாாககுமுன்னே

மாயச்சுருளோலை என்கண்ணம்மா
மடிமேல்விழுந்ததென்ன. (உக)

சித்திரத்தைகுத்தியல்லோ சிலையையெழுதிவைத்து
உத்திரத்தைகாட்டாமல் ஊரம்பலமானேன்
உத்திரத்தைகாட்டியல்லோ ஊரம்பலமானால்
சித்திரமும்வேறாமோ என்கண்ணம்மா
சிலையுங்கொலையாதே. (௯0)

புல்லரிடத்திற்போய் பொருள்தனக்குகையேந்தி
பல்லைமிகக்காட்டிப் பறக்கவிழிக்கிறண்டி
பல்லைமிகக்காட்டாமல் பறக்கவிழிக்காமல்
புல்லரிடமபோகாமல் என்கண்ணம்மா
பொருளெனக்குத் தாராயோ (௯க)

வெட்டுண்டசக்கரத்தால் வேணதனமளித்துக்
குட்டுண்டுநின்றேண்டி கோடிமனுமுன்னாலே
குட்டுண்டுநில்லாமற் கோடிமனுமுன்னாக
வெட்டுண்டபிணிநீக்கி என்கணணம்மா
விழித்துவெளிகாட்டாயோ. (௯உ)

அழுகணிசித்தர்பாடல்.

முற்றிறறு

சிவமயம்.

# நந்தீஸ்வரர் பூஜாவிதி ௰௨.

சேளப்பாஓம்ஸ்ரீ கங்கென்றுந்தான்
  கெடியாகமூலத்தில் கும்பித்தாககால்
வாளப்பாபழந்தேங்கா யவல்வடைகள்தோசை
  வளமாகவிக்கினற்குப் புஷ்பபரிமளங்கள்சாற்றி
நாளப்பாமனதடங்கித் தோத்திரஞ்செய்து
  நலமானவிக்கினரைப் பூசித்தாக்கால்
ஆளப்பாயாசீர்வாத மீவாரையா
  அப்பனேவிக்கினரைப் பூசைசெய்யே. (௧)

செய்யப்பாவிக்கினர்தன் பூசைசொன்னேன்
  செயமானஷண்முகவன் பூசைகேளு
வையப்பா சங் வங மங் சரவணபவாவென்று
  வளமாகஅனுகதத்தில் பூசைபண்ணு
வையப்பாபுஷ்பபரி மளங்கள்கொண்டு
  மைந்தனே தூபநை வேத்தியங்காட்டி
கையப்பாகனகசபை யதிலேபூசி
  கண்மணியேசண்முகத்தை வரங்கள்கேளே. (௨)

காணப்பாஆதார பூசைசொன்னேன்
  கண்மணியேசிவபூசை சொல்லக்கேளு
வாணப்பாநமசிவய சிம்ஆம்மென்று
  வளமாகப்பூரணத்தி லிருத்திக்கொண்டு
ஆணப்பாதூபதீப நைவேத்தியத்தோடு
  அப்பனேசதாசிவத்தை தோத்திரஞ்செய்நீ
மாணப்பாநீகேட்ட தெல்லாமீவார்
  மைந்தனேசிவத்தினிட மகிமைதானே. (௩)

தாணனசிவத்தினிட பூசைசொன்னேன்
  தன்மையுள்ளசத்தியுடபூசைகேளு

வாஞனயிம்மென் றங் கும்பகத்தில்
　　வட்டிவளமாகவொரு மனதாய்நின்று
ஆனைகதம்பகஸ்தூரி புஷ்பம்வைத்து
　　அப்பனேபால்பழங்கள் வஸ்துவைத்து
மானைதேவியைத்தான் தோத்தரித்து
　　மைந்தனேசாஷ்டாங்கஞ் சரணம்பண்ணே. (௫)

பண்ணப்பாவென்னவம்மா வென்றுகேளு
　　பலவிதமாய்நீதொடுத்த தெல்லாமெய்யாம்
அண்ணப்பாவென்றவள் சொன்னாற்போதும்
　　அப்பனேயட்சரத்திற் பலிக்கும்பாரு
வண்ணப்பாசத்தியுட பூசைசொன்னேன்
　　வளமானசிவத்தினுட பூசைசொன்னேன்
கண்ணப்பாவிஷ்ணுபூசை சொல்லக்கேளு
　　கண்மணியே மங நங சிங்கென்றேத்தே. (௬)

ஏத்தப்பாபுஷ்பபரி மளங்கள்சாத்தி
　　என்மகனேகதம்பம்கஸ் தூரிசாத்து
வாத்தப்பாசங்கீதத் துடனேபூசி
　　வளமானவிஷ்ணுவுக்கும் பூசி பூசி
போற்றப்பாமனதடங்கிப் பத்தியாகப்
　　போற்றவேவிஷ்ணுவவர் கேட்டதெல்லாம்
ஆற்றப்பாவிஷ்ணுவின் பூசைசொன்னேன்
　　அரகராஷெகமுகவன் பூசைகேளே. (௬)

ரேசகபூசை.

பாரப்பாரேசகத்தின் பூசைகேளு
　　பண்பானரேசகத்தின் ஆமென்றேத்
ஆரப்பாகைவேத்தியங் கும்பகஞ்செய்து
　　அப்பனேரேசகத்தில் மனதைநாட்டு
வாரப்பாமனதுதான் ரேசகமேயாச்சு
　　வளமானரேசகந்தான் வசியமாச்சு
காரப்பாரேசகத்தின்பூசைசொன்னேன்
　　நலமானபூரகத்தின் பூசைகேளே. (எ)

### பூரகபூசை.

கேளப்பாமணிபூர கத்தில்மைந்தா
கெடியாகயிம்மென்று கும்பித்தேத்து
வாளப்பாவகையாக நின்றுக்கொண்டு
வளமானபூரகத்திற் றேத்திரம்பண்ணி
வாளப்பா வேண்டியவரங்கள்கேளு
வளமாகவிஷ்ணுவர மீவார்பாரு
ஆளப்பாபூரகத்தின் பூசைசொன்னேன்
அப்பனேகும்பகத்தின் பூசையாமே. (அ)

### கும்பகபூசை.

ஆமப்பாகும்பகத்துள் உம்மென்றுநாடி
அப்பனேயுன்மனதைக் கும்பத்தில்வைத்து
வாமப்பாபூசைசை வேத்தியஞ்செய்து
வளமானகும்பகத்தை மனதால்வேண்டி
காமப்பாகும்பகத்தை வரங்கள்கேளு
கண்மணியேவேண்டுவர மீவாரையா
காமப்பாசூரியன்றன் பூசைகேளு
நலமாக மங் சிங் கென்றுசொல்லே. (௯)

### சூரியன்பூசை

சொல்லப்பாசூரியனிற் கும்பகமேசெய்து
சொற்பெரியபூசைசை வேத்தியஞ்செய்து
அல்லப்பாசாஷ்டாங்க சரணஞ்செய்து
அப்பனேதோத்திரஞ்செய் கும்பகத்தை
மல்லப்பாஅஷ்டசௌ பாக்கியமீவார்
அகத்தியன்றன்கும்பத்தில் வரங்களீவார்
வல்லப்பாசூரியன்றன் பூசைசொன்னேன்
வளமானசந்திரன்றன் பூசைகேளே. (௧0)

### சந்திரன்பூசை.

கேளப்பாயங்நங் கென்றுகும்பி
கெடியாகப்பால்பழங்கள் பாயாசம்வைத்து

ஆளப்பா தூபதீபம் நைவேத்தியஞ்செய்து
அப்பனேசந்திரனைத் தோத்தரித்து
வாளப்பாசோடசமாய்ச் சந்திரனில்நின்று
வளமானசந்திரனை வரங்கள்கேளு
நாளப்பாவேணவர மீவாரையா
நலமானசந்திரன்றன் மகிமைபாரே.          (௧௧)

சனிபூசை.

பாரப்பாசனிபூசை சொல்லக்கேளு
பண்பானவஙவென்றுஞ் சஙவென்றுந்தான்
நாரப்பாமேருவிலே குந்திக்கொண்டு
நலமாகத்தோத்தரித்துப் பூசைசெய்நீ
வாரப்பா தூபனை வேத்தியத்தோடு
வளமாகத்தோத்தரித்து பானஞ்செய்து
ஆரப்பாவேணவரங் கேட்டுக்கொண்டு
அப்பனேயட்சணத்தி லீவார்காணே.          (௧௨)

நந்தீஸ்வரர்பூஜாவிதி-௧௨.

முற்றிற்று.

சிவமயம்.

# ராமதேவர் பூஜாவிதி ய.

ஆதியென்ற மணிவிளக்கை யரியவே
அகண்டபரிபூரணத்தைக் கா
சோதியென்ற துய்யவெளி மார்க்கமெல்லாஞ்
சுகம்பெறவேமனோன் மணியின்றாள்தன்னை
நீதியென்றபராஞ்சோதி ஆயிபாதம்
நிற்குணத்தினின்றநிலை யாருங்காணார்
வேதியென்றவேதாந்தத் துள்ளேநின்று
விளங்குவதும்பூசையிது வீண்போகாதே. (க)

போகாமல்நின்றதோ ரையாநீர்தான்
பூரணத்தினனகலை ஐந்தும்பெற்று
ஆகாமலானந்த வல்லியாலே
அடிமுடியினடுவாகி வாறுக்குள்ளே
வாகாமல்வாலையுட மூலத்தாலே
வழிதோற்றுமூன்றெழுத்தை யுரைக்கவேணும்
சாகாமல்சாகுமடா யிந்தமூலஞ்
சதிர்வட்டம் நடுகோண முக்கோணமாமே. (உ)

முக்கோணமூலமதற் கோணமாகி
முதலானமூலமணி வாலைத்தன்னில்
நாற்கோணநாலுவரை நயந்துகார்க்க
நாயகியாள்பராஞ்சோதிநாற்றமுற்றுத
தீக்கோணதிக்குதிசை யிருந்தமாயம்
தெரிந்திடவேயுரைத்திட்டேன் விபரமாக
தக்கோணவிட்டகுறை வந்ததென்றால்
தனியிருந்துபார்த்தவனே சித்தனாமே. (ங)

சித்தானமூன்றெழுத்து செயலானசோதி
சீருவரும்ஐயுங்கிலியும்சவ்வுமாகி

முத்தானலட்சமுரு செபிக்கச்சித்தி
முற்றிடுமேயெதிரியென்ற பேய்கட்குந்தான்
வித்தானவித்தையடா முட்டாடும்பாரு
விரிவானமுருக்கருவு மூன்றுகேளு
சத்தானஅதன்கருவும் சிலைதனிவ்வைத்து
சதுரானவிதுவிபர மறியக்கேளே. (ச)

கேளப்பாபெலிகொடுத்து பூசைசெய்து
கிருபையுள்ளவுருவேற்றி திட்டமாக
வாளப்பாசுடுகாட்டின் சாம்பல்தன்னில்
வளமாகபுதைத்துவிடு கடுசாமம்பார்த்து
ஆளப்பா அடிவயற்று மரணமாகி
ஆண்டிருந்தவசுகிலே தான்குலைந்து
காணப்பாகண்மணியே வீழ்வான்பாவி
கறைதெரியச்சொல்லுகிறே னின்னம்பாரே. (ரு)

இன்னமின்னகைகண்மூன் சோதினியுமாகு
மீடேறவேணுமென்று விதனிற்சூட்சம்
அன்னமின்றுவயிர்கட்டை தேவதாரம்
அறிவுடையமுளைசீவி சிகைளத்தையோதி
வன்னமின்றார்பேர்சொல்லி நசியென்றுதானும்
வலுவானநூற்றெட்டு வுருவும்போடு
சன்னமின்றுமரத்தடியி லிருந்துகொண்டு
சதிராகஆணிகொண் டடித்திடாயே. (கூ)

அடித்தமுளைபிடிகைகியே வைத்திருக்கிப்போடு
ஆனந்தவுருக்குலைந்து பட்டுப்போகும்
தொடுத்தமுதல்நாலானுல் கண்டுதானும்
தொகைமுடிந்துவாச்சுதடா விந்தப்போக்கு
விடுத்தபின்புவிஷமேறி கருவிப்போகும்
விரித்துரைத்தேன்பூட்டிதுவே வீண்போகாது
தடுத்துவிடகைரத்தி லடித்துப்பாரு
தட்டழிந்துஉயிர்முதலாய்ச் சேதமாமே. (எ)

ஆமப்பாஅடிதரித்த சிங்களத்திலானல்
அதிசயங்காண்கண்டவர்க்கு வடைக்கலம்போகும்
வீமப்பாவெளிதிரந்து சொன்னேன்பாரு
விளையாட்டியில்லையடா விந்தப்போக்கு
சோமப்பாசுத்தியுடன் தலையும்மூழ்கி
சுருக்கென வேதியாளிப்பா யாத்தாள்மூலம்
தாமப்பாசத்தியமே சொன்னேம்பாரு
தவராதிராமனுட வாக்கியந்தானே. (அ)

தானென்றமூலமுடன் சித்திட
தனதான நூற்றெட்டுக் குள்ளேசித்தி
ஆனென்றஅண்டர்பதி யெட்டுமாகும்
அறுபத்துநால்மூலி யெல்லாமாகும்
கோனென்றகொடிசித்து கூணத்திலாகும்
குணமாகரேவதிநாட் செய்யநன்று
வாவென்றவஷ்டமியிற் செய்யநன்று
வளர்பிறையில்செய்தவனேயோகியாமே. (கூ)

யோகிகளாயாவதற்கு வுனக்குச்சொன்னேன்
ஓகோகோமுன்னுறைத்த மூலத்தாலே
யோகிகளாயேகாந்த வல்லியாட்கு
யேட்டிலேயெழுதினதால் யெல்லாமாச்சு
தாகிகளாதாயுடைய கிருபையாலே
தவமாகுமவமாகும் சுபமுண்டாகும்
மோகிகளாய்மூலசுழி பூஜாவிதிபத்தாலே
முத்திபெறசித்திவினை பத்துமுற்றே. (கo)

இராமதேவரருளிச்செய்த பூஜாவிதி

முற்றிற்று.

சிவமயம்.

கொங்கண நாயனார் அருளிச்செய்த

# வாலைக் கும்மி.

விநாயகர் துதி.

பின்முடுகு- வெண்பா.

கல்விநிறைவாலைப்பெண் காதலியென்றோதுகின்ற
செல்வியின்மேற்கும்மிதனைச - செப்புதற்கே
நாதனின்சொல்வேதனஞ்சு போதன்மிஞ்சுமானகஞ்ச
பாதம்வஞ்சநெஞ்சினில வைப்பாம்.

கும்மி.

சத்திசடாதரி வாலைப்பெண்ணுமந்த
வுத்தமிமேற்கும்மி பாட்டுரைக்க
வித்தைக்குதவிய வொற்றைக்கொம்பாம்வாலை
சித்திவிநாயகன் காப்பாமே.

சரஸ்வதி துதி.

சித்தர்கள்போற்றியே வாலைப்பெண்ணுமந்த
சத்தியின்மேற்கும்மிப் பாட்டுரைக்க
தத்திமித்தோமெனவாடுஞ் சரஸ்வதி
பத்தினிபொற்பதங் காப்பாமே. (உ)

எங்குந்நிறைந்தவள் வாலைப்பெண்ணுமாலின்
தங்கையின்மேற்கும்மி பாடுதற்குக்
கங்கையணிசிவ சம்புவாஞ்சற்குரு
பங்கயப்பொற்பதங் காப்பாமே. (௩)

ஞானப்பெண்ணுமருள் சோதிப்பெண்ணுமாது
வாலைப்பெண்மேற்கும்மி பாடுதற்கு
மாணைப்பெண்ணுக்கிய வல்லிக்கிசைந்திடும்.
மால்முருகேசனுங் காப்பாமே. (ச)

ஆண்டிப்பெண்ணும்ராஜ பாண்டிப்பெண்ணும்வாலை
அம்பிகைமேற்கும்மிப் பாடுதற்கு
காண்டீபனும்பணி பூண்டவன்வைகுந்தம்
ஆண்டவன்பொற்பதங் காப்பாமே. (ரு)

அந்தரிசுந்தரி வாலைப்பெண்ணுமந்த
அம்பிகைமேற்கும்மி பாடுதற்குச்
சிந்தையில்முந்திநல் விந்தையாய்வந்திடு
நந்தீசர்பொற்பதங் காப்பாமே. (சு)

நூல்.

தில்லையில்முல்லையி லெல்லையுளாடிய
வல்லவள்வாலைப்பெண் மீதினிலே
சல்லாபகும்மித் தமிழ்ப்பாடவரும்
தொல்லைவினைப்போகும் வாலைப்பெண்ணே (எ)

மாதாபிதாகூட இல்லாமலேவெளி
மண்ணுமவிண்ணுமுண்டு பண்ணவென்று
பேதைப்பெண்ணுமுதல் வாலைப்பெண்ணென்று
புகுந்தாளிந்தப் புவியடக்கம் (அ)

வேதமும்பூதமுண்டானது வும்வெளி
ஞானசாஸ்திர மானதுவுதும்
நாதமுகசீதமுண் டானதுவும்வழி
நான்சொல்லக்கேளடிவாலைப்பெண்ணே (கூ)

## வாலைக்கும்மி.

உச்சிக்குநேரேயுண் ணாவுக்குமேல்நிதம்
வைத்தவிளக்கு எரியுதடி
அச்சுள்ளவிளக்கு வாலையடியவி
யாமலெரியுது வாலைப்பெண்ணே. (உச)

எறியுதுஅறு வீட்டிலேயதி
லெண்ணையில்லை யமிர் தந்தண்ணியில்லை
தெரியுதுபோக வழியுமில்லைபாதை
சிக்குதுசிக்குது வாலைப்பெண்ணே. (உரு)

சிலம்பொலியென்னக் கேட்குமடிமெதத
சித் ருள்ளபாதை துடுக்கமடி
வலம்புரிசங்க மூதுமடிமேலே
வாசியைப்பாரடி வாலைப்பெண்ணே. (உசு)

வாசிப்பழக்க மறியவேணுமறு
மண்டலவீடுகள் கட்டவேணும
நாசிவழிகொண்டு யோகமுமவாசியும
நாட்டத்தைப்பாரடி வாலைப்பெண்ணே (உஎ)

மூசசுடரான விளக்குக்குள்ளேமூல
மண்டலவாசி வழக்கத்திலே
எச்சுடராகி யந்தச்சுடர்வாலை
இவள்விடவேறில்லை வாலைப்பெண்ணே (உஅ)

சூடாமல்வாலை யிருக்கிறதும்பரி
சுத்தசிவனுக்குள் ளானதினால்
வீடாமல்வாசிப் பழக்கத்தைப்பாருநாம்
மேல்வீடுகாணலாம் வாலைப்பெண்ணே. (உகூ)

மேல்வீடுகண்டவன் பாணியடிவிண்ணில்
விளக்கில்நின்றவன் வாணியடி
தாய்வீடுகண்டவன் ஞானியடிபரி
தாண்டிக்கொண்டவன் பட்டாணியடி. (௩௰)

## வாலைக் கும்மி.

அத்தியிலேகாரம பத்தியிலே[illegible]ணம்
பத்தியிலேநடு மத்தியிலே
நெற்றிசதாசிவ மென்றுசொன்னேனுந்தன்
நிலைமையைப்பாரடி வாலைப்பெண்ணே.

அழுத்திலேசொல்லஞ் செழுத்திலேநானும்
வழுத்தினேன்ஞானப் பழத்திலே
கழுத்திலே மயேஸ்வரனுமுண்டு
கண்டுபாரடி வாலைப்பெண்ணே.

அஞ்சிலேபிஞ்சிலே வஞ்சியரேசிதம்
கொஞ்சிவிளையாடும் வஞ்சியரே
நெஞ்சிலேருத்திரன் சூழிருப்பான்
நேருடனுமடி வாலைப்பெண்ணே.

தொந்தியிலேநடுப் பந்தியிலே,திடச்
சிந்தையூலேமுந்தி யுந்தனுடன்
உந்தியில்விஷ்ணுவுந் தானிருப்பாரிதை
உண்மையாய்ப்பாரடி வாலைப்பெண்ணே

ஆலத்திலேயிந்த ஞாலத்திலேவருங்
காலத்திலேயனு கூலத்திலே
மூலத்திலேபிரமனுந் தானிருந்துவாசி
மூடுக்கிறான்பிண்டம் பிடிக்கிறான்.

தேருண்டுஅஞ்ஞூறு ஆணியுண்டுஅதில்
தேவருமுண்டு சங்கீதமுண்டு
ஆருண்டுபாரடி வாலைத்தெய்வமதில்
அடக்கந்தானடி வாலைப்பெண்ணே.

ஒன்பதுவாசல் கோட்டையுண்டுஅதில்
உள்ளேநிலைக்கார ரஞ்சுபேராம்
அன்புடனேபரி காரர்களாறுபேர்
அடக்கந்தானடி வாலைப்பெண்ணே

வாலைக்கும்மி

இந்தவிதத்திலே தேகத்திலே தெய்வம்
இருக்கையில்புத்திக் கறிக்கையினால்
சந்தோஷமாலையைப் பாராமல்மனிதர்
சாகிறதேதடி வாலைப்பெண்ணே. (௩௮)

நகாரத்திஷ்டிப்பு ஆனதினாலந்த
வானவகார நயமாச்சு
உகாரமுச்சி சிரசாச்சுஇதை
உற்றுப்பாரடி வாலைப்பெண்ணே. (௩௯)

வகாரமானது ஓசையாச்சுஅந்த
மகாரமானது செர்ப்பமாச்சு
சிகாரமானது மாய்கையாச்சுஇதை
தெளிந்துபாரடி வாலைப்பெண்ணே (௪0)

ஓமென்றவட்சரந் தானுமுண்டதற்கு
ஊமையெழுத்து மிருக்குதடி
நாமிந்தெழுத்தை யறிந்துகொண்டோம்வினை
யாடிப்பாரடி வாலைப்பெண்ணே. (௪௧)

கட்டாதகாளையைக் கட்டவேணுமாசை
வெட்டவேணும் வாசியொட்டவேணும்
எட்டாதகொம்பை வளைக்கவேணுங்காய
மெண்ணைக்கிருக்குமோவாலைப்பெண்ணே. (௪௨)

இந்தமார்க்கமாய்த் தானிருந்துவாசி
ஏற்காமலேதா னடக்கவேணும்
திரிந்தோடி யலைந்துவெந்துதேக
மிறந்துபோச்சுதே வாலைப்பெண்ணே. (௪௩)

பூத்தமலராலே பிஞ்சுமுண்டுஅதில்
பூவில்லாபிஞ்சு மனேகமுண்டு
மூத்தமகனாலே வாழ்வுமுண்டுமற்ற
மூன்றுபேராலே யழிவுமுண்டு. (௪௪

வாலைக்கும்மி.

கற்புள்ளமாதர் குலம்வாழ்கவிறை
கற்பையழித்தவரேவாழ்க
சிற்பரனைபோற்றிக் கும்மியடிகுரு
தற்பரனைபோற்றிக் கும்மியடி.

அஞ்சிலேரண் டழிந்ததில்லையஞ்
சாறிலேயுகாலொழிந்ததில்லை
பிஞ்சிலேபூவிலே தூஞ்சுவதுஅது
பேணிப்போடலாம் வாலைப்பெண்ணே.

கையில்லாக்குட்டையன் கட்டிக்கிட்டானிரு
காலில்லாநெட்டையன் முட்டிக்கிட்டான்
ஈயில்லாத்தேனெடுத் தூண்டுவிட்டானது
இனிக்குதில்லையே வாலைப்பெண்ணே. (சஎ)

மேலூருகோட்டைக் காதரவாய்நன்றாய்
விளங்குங்கன்னனூர் பாதையிலே
காலூருவம்பலம் விட்டதினாலது
கவிழ்நடையடி வாலைப்பெண்ணே. (சஅ)

தொண்டையுள்முக்கோணக்கோட்டையிலேயிதில்
தொத்திக்கொடிமரம் நாட்டையிலே
சண்டைசெய்துவந்து ஓடிப்போனான்கோட்டை
வெந்துதணலாச்சு வாலைப்பெண்ணே. (சகூ)

ஆசைவலைக்கு ளகப்பட்டதும்வீடு
அப்பவேவெந்து அழிந்திட்டதும்
பாசவலைவந்து மூடியதும்லூாலை
பாதத்தைப்போற்றடி வாலைப்பெண்ணே. (ருo)

அன்னமிருக்குது மண்டபத்தில்விளை
யாடித்திரியுது ஆண்புலியும்
இன்னமிருக்கு தஞ்சுகிளியதை
யெட்டிப்பிடிக்குதுமூன்றுகிளி. (ருக)

தோப்பிலேமாங்குயில் கூப்பிடுதே புது
மாப்பிள்ளைமார்வந்து சாப்பிடவும்
மெய்க்குறிப்படி யஞ்சாறுந்தை
யிருந்துமுழிக்குது பாருங்கடி (௬உ)

மீனுமிருக்குது தாரணியிலிதை
மேய்ந்துதிரியுங் கலசாவல்
தேனுமிருக்குதுபோரையிலே யுண்ணத
திகட்டுதில்லையே வாலைப்பெண்ணே. (௬௩)

காகமிருக்குது கொம்பிலேதான்கத
சாவலிருக்குது தெம்பிலேதான்
பார்க்கவெகுதூர மில்லையிதுஞானம்
பார்த்தால்தெரியுமே வாலைப்பெண்ணே. (௬௪)

கும்பிக்குளத்திலே யம்பலமாமந்தக்
குளக்கரையூரில் சேறுமெத்த
தெம்புயிடைக்காட்டுப் பாதைகளாய்வந்து
சேர்ந்தாராய்ந்துபார் வாலைப்பெண்ணே. (௬௫)

பண்டுமேயாழக் கிணற்றுக்குள்ளேரண்டு
கெண்டையிருந்து பகட்டுதடி
கண்டிருந்துமந்தக் காக்காயுமஞ்சு
கழுகுகொன்றது பாருங்கடி. (௬௬)

ஆற்றிலேயஞ்சு முதலையடியரும்
புற்றிலேரண்டு காடியடி
கூற்றனுமூன்று குருடனடிபாசங்
கொண்டுபிடிக்கிறான் வாலைப்பெண்ணே. (௬௭)

முட்டையிடுதொருபாவை குட்டை
மோசம்பண்ணு தொருபறவை
வட்டமிட்டாருர் கன்னியில்ரண்டு
னின்றுதவிக்குது வாலைப்பெண்ணே (௬௮)

அட்டமாவின்வட்டப் பொட்டலிலேயூண்டு
அம்புலிநிற்குது தேர்மேலே
திட்டமாய்வந்து அடிக்குதிலேதேகம்
செந்தணலானதே வாலைப்பெண்ணே. (௩௯)

முக்கோணவட்டக் கிணற்றுக்குள்ளேமூல
மண்டலவாசிப் பழக்கத்திலே
அக்கோணவட்டச் சக்கரத்தில்வாலை
யமர்ந்திருக்கிறாள் வாலைப்பெண்ணே. (௪0)

இரண்டுகாலாலொரு கோபுரமாம்நெடு
நாளாயிருந்து அமிழ்ந்துபோகும்
கண்டபோதுகோ புரமிருக்கும்வாலை
காணவுமொட்டா ளிலக்கவொட்டாள். (௪௧)

அஞ்சுபூதத்தையுண்டுபண்ணிக்கூட்டி
ஆராதாரத்தை யுண்டுபண்ணி
கொஞ்சப்பெண்ணை யுண்டுபண்ணிவாலை
கூட்டுறாள்காலனை மாட்டுகிறாள். (௪உ)

காலனைக்காலா லுதைத்தவளாம்வாலை
ஆலகாலவிஷ முண்டவளாம்
மாளாச்செகத்தைப் படைத்தவளாமிந்த
மானுடன்கோட்டை யிடித்தவளாம். (௪௩)

மாதாவாய்வந்து அமுதந்தந்தாள்மனை
யாட்டியாய்வந்து சுகங்கொடுத்தாள்
ஆதரவாகிய தங்கையானாள்நமக்
காசைகொழுந்தியு மாமியானாள். (௪௪)

சிரித்துமெல்லப் புரமெரித்தாள்
செங்காட்டுச்சேட்டியைத் தானுடைத்தாள்
ஒருத்தியாகவே சூரர்தனைவென்றாள்
ஒற்றையாய்க்கஞ்சனைக் கொன்றுவிட்டாள். (௪௫)

இப்படியல்லோ விவள்தொழிலாமிந்த
ஞமலடி கொடுஞ்சூலி
மைப்படுங்கன்னியர் கேளுங்கடி
வயசுவாலை திரிசூலி. (கக)

சத்திபெரிதோ யுரைபெரிதோ
கண்ணுபெரிதோ விவள்பெரிதோ
சத்திபெரிதோ சிவம்பெரிதோ
சற்றேசொலலடி வாலைப்பெண்ணே (கஎ)

அன்னமபெரிதல்லால் தண்ணீர்பெரிதில்லை
அப்படிவாலை பெரிதானல்
பொன்னுபெரிதல்லால் வெள்ளிபெரிதில்லை
பொய்யாதுசொல்லுகிறேன் கேளுங்கடி. (கஅ)

மாமிசமாகு வெலும்புண்டுசைதை
வாங்கியோடு சுழன்றுவிடும்
ஆமிசமிப்படி சதியென்றேவிளை
யாடிக்குமமி யடியுங்கடி. (கக)

பண்டுமுளைப்ப தரிசியேயானாலும்
விண்டுமிபோனல் விளையாதென்று
கண்டுகொண்டுமுன் னவ்வைசொன்னது
உண்டோவில்லையோ வாலைப்பெண்ணே. (எ0)

பணனுமில்லாமலே விண்ணுமில்லைகொஞ்சும்
வாசமில்லாமலே பூவுமில்லை
பெண்ணுமில்லாமலே யாணுமில்லையிது
பெணிப்பாரடிவாலைப்பேண்ணே. (எக)

நந்தவனத்திலே சோதியுண்டுகிலங
காந்தபெருக்கு நெல்லுமுண்டு
விந்தையாய்வாலையைப் பூசிக்கமுன்னால்
விட்டகுறைவேணும் வாலைபபெண்ணே. (எஉ)

வாலையைப்பூசிக்கச் சித்தராளுர்வாலைக்
கொத்தாசையாய்ச்சிவ கர்த்தராளுர்
வேலையைப்பார்த்தல்லோ கூலிவைத்தாரிந்த
விதந்தெரியுமோ வாலைப்பெண்ணே. (எங)

வாலைக்குமேலான தெய்வமில்லைமானங்
காப்பதுசேலைக்கு மேலுமில்லை
பாலுக்குமேலான பாக்கியமில்லைவாலைக்
கும்மிக்குமேலான பாடலில்லை. (எரு)

நாட்டத்தைக்கண்டா லரியலாகுமந்த
நாலாறுவாசல் கடக்கலாகும்
பூட்டைக்கதவைத் திறக்கலாகுமிது
பொய்யல்லமெய்யடி வாலைப்பெண்ணே. (எசு)

ஆணும்பெண்ணுங்கூடி யானதிஞற்பிள்ளை
ஆச்சுதென்றேநீரும் பேசுகின்றீர்
பெண்ணுமாணுங்கூடி யானதல்லோபேத
மற்றொருவித்தாச்சு வாலைப்பெண்ணே. (எசு)

இன்றைக்கிருப்பதும் பொய்யல்லவேவீடு
வென்வாழ்க்கையென்பதும் பொய்யல்லவே
அன்றைக்கெழுத்தின் படிமுடியும்வாலை
ஆத்தாளைபோற்றடி வாலைப்பெண்ணே. (எஎ)

வீணசைகொண்டு திரியாதேயிது
மெய்யல்லபொய் வாழ்வு பொய்க்கூடு
காணுதவாலையைக் கண்டுகொண்டால்காட்சி
காணலாமாகாய மாளலாமே. (எஅ)

பெண்டாட்டியாவதும் பொய்யல்லவோபெற்ற
பிள்ளைகளாவதும் பொய்யல்லவோ
கொண்டாட்டமான தகப்பன்பொய்யேமுலை
கொடுத்ததாயும் நிசமாமோ. (எகூ)

## வாலைக்கும்மி.

தாயும்பெண்டாட்டியுந் தன்சரியேதன்யம்
தாமேயிருவருந் தாங்கொடுத்தார்
காயும்பழமுஞ் சரியாமோவுந்தன்
கருத்தைப்பார்த்துக்கொள் வாலைப்பெண்ணே. (அ0)

பெண்டாட்டி மந்தை மட்டும்வருவாள்பெற்ற
பிள்ளை மசானக் கரையுமட்டும்
தொண்டாட்டுத்தர்மம் நடுவிலேவந்து
சேர்ந்துபரகதி தான்கொடுக்கும். (அக)

பாக்கியமும்மகள் யோக்கியமும்ராஜ
யோக்கியமும்வந்த தானாக்கால்
சீக்கிரந்தருமஞ் செய்யவேண்டுவெகொஞ்சந்
திருப்பணிகள் முடிக்கவேண்டும். (அஉ)

திருப்பணிகள் முடித்தோருஞ்செத்துச்
சாகாதபேரி லொருவரென்றும்
அருட்பொலிந்திடும் வேதத்திலேயவ்வை
அறிந்துசொன்னாளே வாலைப்பெண்ணே.

மெத்தைதனிலே படுத்திருக்குநாமும்
மெல்லியருடன் சிறக்கும்போது
யுத்தகாலன்வந்து தாம்பிடித்தால்நாமும்
செத்தசவமடி வாலைப்பெண்ணே.

ஏழைபனாதிக ளில்லையென்றாலவர்க்
கிருந்தாலன்னங் கொடுக்கவேண்டும்
நாளையென்றுசொல்ல லாகாதேயென்று
நான்மறைவேத முழங்குதடி.

பஞ்சைப்பனாதியை யடிக்காதேபந்த
பாவந்தொலைய முடியாதே
தஞ்சமென்றோரைக் கெடுக்காதேயார்க்கும்
வஞ்சனைசெய்ய நினையாதே.

ணடதுமகேட்டதுஞ சொலலாதேகண்ணில
ராணுதவுததரம விள்ளாதே
பெண்டாட்டிககுறறது சொலலாதேபெறற
பிளளைக்கிளப்பமகள கொடுககதாதே. (௮௭)

சிவனடியரை வேதியரைசசில
புலவாஞான பெரியோரை
மவுனமாகவும செய்யாதேயவா
மனதுநோகவும செயயாதே (௮௮)

வழக்கழிவுகள சொலலாதேகறபு
மஙகையாமேல்மனம வையாதே
பழககவாசியைப் பாாததுககொண்டுவாலை
பாததைப்போறறடி வாலைபபெண்ணே. (௮௯)

கூடியபொய்களை ச சொலலாதேபொலலா
கொலைகளவுசெய்ய லாகாதே
ஆடியபாமபை யடியாதேபிது
அறிவுதானடி வாலைப்பெணணே. (௯0)

காரியநாகிலும வீரியமபேசவும
காணுதென றவ்வை சொன்னளே
பாரினிலவமபுகள செய்யாதேபுளியம
பழமபோலுநிாநது விடுந்தானே (௯௧)

ராசாக்களபகை செய்யாதேநடுக
காட்டுப்புலிமுன்னே நிலலாதே
தேசாந்தரமகளுஞ் செலலாதே மாய்கைத
தேவடியாளதனம பண்ணுதே. (௯௨)

தனவீடிருகக அசல்வீடுபோகாதே
தாயாாதகப்பனை வையாதே
உன்வீடுக்குளளே யூகமிருக்கையில
ஓடிததிரியுறாய் வாலைப்பெண்ணே. (௯௩)

## வாலைக்கும்மி.

சாதிபேதஞ் சொல்லுகிறீர்தெய்வம்
தானென்றொருவுடல் பேதமுண்டோ
ஓதியபாலதி லொன்றாகியதில்
உற்பத்திசெய்தயிர் மோராச்சு. (௯௪)

பாலோடுமுண்டு பூனையுமுண்டு
மேலாகக்காணவுங் காண்பதில்லை
மேலந்தவாசையைத் தள்ளிவிட்டுமனதில்
வேண்டிப்பூசையைச் செய்திடுங்கள். (௯௫)

கோழிக்காறுகா லென்றுசொன்னேன்கிழக்
கூளிக்குமூன்றுகா லென்றுசொன்னேன்
கூளிக்கிரண்டெழுத் தென்றுசொன்னேன்முழுப்
பானைக்குவாயில்லை யென்றுசொன்னேன். (௯௬)

ஆட்டுக்கிரண்டுகா லென்றுசொன்னேனம்
மானைக்குப்பானைக்கு நிற்குமேல்சூல்
மாட்டுக்குக்காலில்லை யென்றுசொன்னேன்கதை
வகையைச்சொல்லடி வாலைப்பெண்ணே. (௯௭)

கோயிலுமாடும் பறித்தவனுயகளறி
கூற்றுமேகற் றிருந்தவனும
வாயில்லாக்குதிரை கண்டவனுமாட்டு
வகைதெரியுமோ வாலைப்பெண்ணே. (௯௮)

இத்தனைசாத்திரந் தான்படித்தோர்செத்தா
ரென்றுலுலகத் தோர்கள்சிரிப்பார்
செத்துப்போய்க்கூடக் கலக்கவேண்டுமவன்
தேவர்களுடனே சேரவேண்டும். (௯௯)

உற்றதுசொன்னு லற்றதுபொருந்தும்
உண்டோவுலகத்தி லவ்வைசொன்னாள்
அற்றதுபொருந்து முற்றதுசொன்னால்
அவனேகுருவடி வாலைப்பெண்ணே. (௧00)

பூரணநிர்கும் நிலையறியான்வெகு
பொய்சொல்வான்கோடி மந்திரஞ்சொல்வான்
காரணகுரு வவனுமல்லவிவன்
காரியகுரு பொருள்பறிப்பான். (கOக)

எல்லாமறிந்தவ ரென்றுசொல்லியிந்த
பூமியில்முழு ஞானியென்று
உல்லாசமாக வயர்பிழைக்கவிவர்
ஓடித்திரியுறார் வாலைப்பெண்ணே. (கOஉ)

ஆதிவாலைபெரி தானாலுமவள்
அக்காள்பெரிதோ சிவன்பெரிதோ
நாதிவாலைபெரி தானாலுமவள்
நாயகனல்ல சிவம்பெரிது (கOங)

ஆயுசுகொடுப்பாள் சீரிழிவுமுதல்
கண்டதுமற்ற வியாதியெல்லாம்
பசாசுபறந்திடும்பிலவிலினைவடி
பத்தினிவாலைப்பெண் பேரைச்சொன்னால். (கOச)

சித்திரைதன்னிலும் வீற்றிருப்பாளந்த
நேரததிலும்வாலை முன்னிருப்பாள்
சத்துருவந்தாலும் தள்ளிவைப்பாள்வாலை
யுற்றகாலனையுந் தானுதைப்பாள். (கOரு)

பல்லாயிரங்கோடி யண்டமுதல்பதி
னன்குபுவன மூர்த்திமுதல்
எல்லாந்தானாய்ப் படைத்தவளாம்வாலை
யெள்ளுக்குளெண்ணெய்போல் நின்றவளாம். (கOகா)

தேசம்புகழ்ந்திடும் வாலைக்கும்மித்தமிழ்
செய்யவெனக்குப தேசஞ்செய்தாள்
கேசவான்வீரப் பெருமாள்குருசாமி
நீள்பதம்போற்றிக்கொண் டாடுங்கடி. (கOஎ)

ஆறுபடைப்புகள் விடுகேடைகுருத்திர
வஞ்செழுத்தாக்கும் வகையறிந்து
கூறுமுயர்வல யேந்திரன்றுரைவள்ளல்
கொற்றவன்வாழக்கொண் டாடுங்கடி. (௧0அ)

ஆடுங்கள்பெண்டுகே ளெல்லோருமந்த
அன்பானகொங்கணர் சொன்னதமிழ்
பாடுங்கள்சித்தர்க ளெல்லோரும்வாலைப்
பாதத்தைப்போற்றிக் கொண்டாடுங்கடி (௧0௯)

சித்தர்கள்வாழி சிவன்வாழிமுனி
தேவர்கள்வாழி ரிஷிகள்வாழி
பத்தர்கள்வாழி பதம்வாழிகுரு
பாரதிவாலைப்பெண் வாழியவே. (௧௧0)

வாலைக்கும்மி

முற்றிற்று.

சிவமயம்.

# உரோமரிஷிஞானம்.

மூலவட்டமானகுரு பாதங்காப்பு
முத்திக்குவித்தான முதலேகாப்பு
மேலவட்டமானபிறப் பிரமங்காப்பு
வேதாந்தங்கடந்துநின்ற மெய்யேகாப்பு
காலவட்டந்தங்கிமதி யமுர்தப்பாலைக்
கண்டுபெசியாற்றிமனக் கவடுநீக்கி
ஞாலவட்டஞ்சித்தாடும் பெரியோர்பாதம்
நம்பினதாலுரோமனென்பேர் நாயன்றானே. (க)

கண்ணூடிசிலமூடித் தனுப்பினாலே
கருவதனையறியாமல் மாண்டுபோனான்
விண்ணூடேப்பாராத குற்றம்குற்றம்
வெறுமண்ணைப் போச்சுதவன்வித்தையெல்லாம்
ஒண்ணான மவுனமென்றே யோகம்விட்டால்
ஒருபோதும்சித்தியில்லை வாதந்தானும்
பெண்ணார் தன்னாசை தன்னை விட்டுவந்தால்
பேரின்பமுத்திவழி பேசுவேனே. (உ)

பேசுவேனிடகலையே சந்திரகாந்தம்
பின்கலைதானுதித்த ஞாயிறாச்சு
நேசமதாய்கூடிவிருந்த சுடர்தானீங்கி
நீங்காமலொன்றானா லதுதான்முத்தி
காதலாய்பார்த்தோர்க்கு இதுதான்மோசங்
காணாதபேர்க்கென்ன காமதேகஞ்
சோதனையாயிடகலையி லேறவாங்கி
சுழிமுனையில்கும்பித்துச் சொக்குவீரே. (ங)

வாங்கியக்தப்பனிரண்டி னுள்ளேரேசி
வன்னிநின்றவிடமல்லோ சூரியன்வாழ்க்கை

யோங்கியிந்தரெண்டிடமு மறிந்தேன்யோகி
உற்றபரமடிதானே பதிஞருகுர்
தாங்கிகின்றகாலடிதான் பன்னிரண்டு
சார்வானபதிஞறில் மெள்ளவாங்கி
யேங்கினதைபன்னிரண்டில் நிறுத்திழூது
எழுந்துபுரியட்ட மடங்கித்துப்பாரே. (௪)

பாரையாகுதிரைமட்டம் பாய்ச்சல்போச்சு
பரப்பிலேவிடுகாதே சத்தந்தன்னை
நேராய்யாரண்டிதழி னடுவேவைத்து
நிறைந்தசதாசிவஞரைத் தியானம்பண்ணு
கூரையா அங்குலந்தா ஞலுஞ்சென்ருன்
குறிக்குள்ளே தானடக்கிக் கொண்டுதையா
ஆரையாஉனக்கீடு சொல்லப்போரேன்
அருமையுள்ளவென்மகனென்றழைக்கலாமே. (௫)

அழைப்பதுவுநல்லபிள்ளை யாஞல்நன்று
ஆகாதசீடர்களைச் சேர்த்தால்தோஷம்
பிழைப்பதற்குவழிசொன்ஞல் பார்க்கமாட்டான்
பெண்டாட்டி மனங்குளிர்ப் பேசுமாடு
உழைப்பதற்குச்செனனமெடுத் தாலேயல்லால்
உதவிதனக்கெவ்வளவு முண்டோவில்லை
யிளப்பமிவன்பேச்சையடிக் கடிதாஞரு
மேதுக்குச்சொல்லுகிரேு மினிமேல்தானே (௬)

மேலென்னவிருக்கையிலும் நடக்கும்போதும்
வேறுரையால்சாரஙகள் விடமேலேற்று
காலென்னவேட்டென்ன வெல்லாமொன்று
நவமானஅஷ்டாங்க மப்பியாசித்துக்
காலென்னபிராஞய முன்னேசெய்யில
கணக்காகப்பூரகமாங் கும்பகமேநாலு
கோலென்னரேசகந்தா ஞென்றுமூன்று
குரையாமற்சரபீசங் கூட்டத்தீரே (௭)

கூட்டியேபழகினபின் சரீசத்தில்
குறையாமல்சாதித்தால் பிரமாந்திரங்
காட்டிவிக்குமல்லாமல் விழிக்குறியினாலே
கண்மூக்குமத்தியிலே கண்டுபாரு
மூட்டிவிக்குமாதார மாறுந்தானே
மூலவட்டகணபதிதான் முகத்தோன்மாயன்
தாட்டிகமணிப்பூரங் கையன்வட்டந்
தணலானருத்திரனுந் தணலுமாமே. (அ)

தணலாகும்விசுத்தியறு கோணவட்டஞ்
சதாசிவனார்வட்டமல்லோ குருபீடந்தான்
மனையானபதியினிலே குறித்துப்பார்க்க
மத்தியமுதல்கரிகொண்டு தூங்குந்தூங்கும்
கனலேறிக்கொண்டிருந்தா லெல்லாமுண்டு
காற்றைவெளிவிட்டாக்கால் கருமதீதான்
புனலூறும்வழிபாதை யிந்தமார்க்கம்
பொல்லாததுரோகிக்குப் பொய்யாமன்றே. (௯)

செலுத்துவது உண்ணாக்கிலண்ணாக்கையா
சென்றேறிப்பிடரிவழித் தியானந்தோணும்
வலுத்ததடாகாலுமுனக் கமுதமாச்சு
மவுனமென்றே நிருவிகற்பவாழ்க்கையாச்சு
சொலித்திருக்கும் பன்னிரண்டிலிருந்திழூது
சோடசமாம்சந்திரகலை தேய்ந்துபோச்சு
பலித்ததடாயோகசித்தி ஞானசித்தி
பருவமாய்காடிவைத்துப் பழக்கம்பண்ணே. (௧0)

மூடாமல்சிறிதுசன முகபாடம்பண்ணி
முழுதுமவன் வந்ததுபோல் பிரசங்கித்து
வீட்டேதுடலேது யோகமேது
வீண்பேச்சாசொல்லியல்லோ மாண்டுபோனார்
காடேறிமலையேறி நதிகளாடிக்
காய்கிழங்குசருகுதின்று காமத்தியால்

ரூடேரிமாண்டவர்கள் கோடாகோடி
சொருபமுத்திபெற்றவர்கள் சுருக்கமாச்சே. (௧௧)

சுருபமுத்திக்கடையாள மேதென்றாக்கால்
சுடர்போலேகாணுமாடா தூலதேகம்
அருபமுத்தியிடமல்லோ பிரமஞான
மபராட்சமென்றுசொல்லுஞ் சிரவணத்தான்
பருபதத்தை அசைப்பனெனச் சிற்றெறும்பின்
பழங்கதைபோலாச்சுதிந்த யோகம்விட்டால்
வெறுங்கடத்திலீப்புகுந்த வாறுபோலே
வேதாந்தமறியாத மிலேச்சர்தானே. (௧௨)

ஓமென்றகெட்டபுத்தி மாணாக்காளே
உலகத்தில்மானிடர்க்கு ஆண்டுநூறு
ஆமென்று இருபத்தோ ராயிரத்து
அறுநூறுசுவாசமல்லோ ஒருநாளைக்குப்
போவென்றுபோனதினால் நாள்குறைந்து
போச்சுதுபோகாவிட்டால் போரதில்லை
தாமென்றுநினைக்கயிலே தெய்வமொன்று
தானினைந்ததன்மையல்லோ விதிகள்தானே. (௧௩)

உரோமரிஷிஞானம்.

முற்றிற்று.

# திருமூல நாயனார் ஞானம்.



காப்பு-விருத்தம்.

அடியாகியண்டரண்டத் தப்பாலாகி
அகாரமெனு மெழுத்ததுவே பாதமாகி
முடிவாகிநடுவாகி மூலந்தன்னில்
முப்பொருளுநாதானுகி முதலுமாகிய
படியாகிமுப்பாழற்றுப் படிக்குமப்பார்
படிகடந்தபாருஞ்சோதிப் பதியுமாகி
அடியாகுமூலமதே அகாரமாகி
அவனவளாய்நின்றநிலை யணுவதாமே. (க)

அணுவாகியவனவளாயல்லாமாகி
அடிநடுவுமுடிவாகியகண்டமாகி
பொதுவாகிப்பல்லுயிர்க ளனைத்துக்கெல்லாம்
புகலிடமாயப்பொருட்கு மூலமாகி
பதுவாகிவண்டாகிச் சுவையுமாகி
பலராகிமணமாகி மதிக்கவொண்ணு
அவராப் அகாரமதே மூலமாகி
அண்டமெல்லாந்தாங்கிநின்ற வம்பரமூலம்மே. (உ)

மூலமெனுமாதார வட்டந்தானே
முச்சுடருமுக்கோண மூன்றுனடி

திருவடியுந்திருமேனி நடனமாகும்
கோலமுடனண்டமெலாந் தாங்கிக்கொண்டு
கொழுந்துவிட்டகம்பமதாய் மேலேனோக்கி
ஆலமுண்டரண்டமெலாந் தானாய்நின்ற
அகாரமுதல்வவ்வெழுத்தை அறிந்துபாரே. (ங)

அறிந்ததுவுந்தற்பரமே யகாரமாகும்
அறிவுடையஉகாரமே சிற்பரமதாகும்
பிறிந்ததுவுமுலகமெல்லாம் சமையந்தானும்
பேதமெனுங்கருவிவகை யெல்லாமாகும்
அறிந்ததுவும் அகாரமெனும் பாதந்தன்னை
அடிமுடியென்றனுதினமு மறிந்துநோக்கே. (௪)

நோக்கமுடன்மூலமெனும் பாதந்தன்னை
நட்பொருளாஞ்சிற்பரத்தி னூடேநோக்குந்
தீர்க்கமுடனாதார வகையுந்தாண்டித்
திருநயனம்நாசிநெற்றி நடுவேபார்த்து
போக்கறிந்துயிந்தநிலை நோக்கவல்லர்
புரிசடையொன்றன்னுடைய புதல்வராவர்
ஆக்கமுடனருட்சுடர்போற் குருவைத்தானே
அனுதினமும்நோக்கிநிற்பா ராசனுமே. (௫)

ஆசானுமீசானு மொன்றேயாகு
மவனவளுமொன்றாகும்அதுதானாகும்
பேசாதமந்திரமு மிதுவேயாகும்
பேரொளியின்வடிவாகும் பேருமாகும்
நேசாருங்கலைகளெல்லாந் தானேயாகும்
நிலையானஓங்கார பீடமாகும்
யீசானையாசானைக் காணும்பேர்க்கு
யின்பமுடன்கயிலாச மெய்தலாமே. (௬)

எய்தரியபரசிவத்தின் மூலந்தன்னி
லிருசுடருமுதித்தொங்கு மிடமேயென்று
மெய்தொழியுஞ்சுழிமுனையே கம்பமாகி
மெய்ப்பொருளாஞ்சோதியென மேவிநிற்கும்
யிவ்வகையேமூலமெனும் பாதந்தன்னை
யிருநோமற்றிடத்தே யிரஞ்சிகாணே. (௭)

காண்பதுதான்பேரொளியின்காட்சியாகும்
காணரியபொருளாகுங் காட்டும்போது

ஆண்பெண்ணாய் அலியாகிஅடியுமாகி
அப்பாலைக்கப்பாலா யமர்ந்தசோதி
வீண்பயிலும்வேதமெல்லாந் தேடிக்காணா
வெறும்பாழதாகியே மேவிநின்றார்
சேண்பயிலும்செகசோதி மூலர்தன்னை
தேடரியபாதமென்றே தெளிந்துணேக்கே. (அ)

தெளிவரியபாதமது அகாரமாகி
சிற்பரமுந்தற்பரமுந் தானேயாகி
அளிவரியசோதியதில் தானேயாகி
அடிநடுவுமுடியாகி யமர்ந்துநின்று
மொருவரியமுதலாகி மூலமாகி
முச்சுடருந்தானாகி முடிந்தசோதி
சுழியினிலேமுனையாகிக் கோபமாகிச்
சொல்லரியவெழுததென்றே தொகுத்துப்பாரீர். (௯)

தொகுப்பது தான்மந்திரஙகள் கருவிநூல்கள்
சொல்லரியதத்துவஙகள் தன்னையெல்லாம்
வகுத்துடனேயிதையெல்லாங் கண்டுநீஙகி
வாகானஉடலுயிரை வகையாற்கண்டு
பகுப்புடனேசேராமற் பாதந்தன்னைப்
பரகதிக்கிவழியெனவே பற்றிக்கொண்டு
விகர்ப்பமில்லாமூலமதில் நின்றசோதி
மேலானபாதமென்றே மேவிநில்லே. (௧0)

மேவியதோர்சற்குருவின் பாதந்தன்னை
மெஞ்ஞானமென்றதனை மேவிக்கொண்டு
ஆவியுடல்காலமெல்லா மறிந்துபார்த்து
அத்தனார்வடிவென்றே அறிந்துக்கொண்டு
பாவினையுள்ளானதெல்லாம் விட்டுநீஙகிப்
பகலிரவுமற்றிடத்தே கருததுவைத்துச
சிவனையுஞ்சிவந்தனையு மொன்றாய்த்தானே
திருமூலர்பாதமென்றே திடமாய்க்காணே. (௧௧)

திருமூலநாயனார் ஞானம் - முற்றிற்று.

சிவ

# கருவூரார் பூசாவிதி.

## காப்பு.

தெளிவதனில்தெளிவதரு மருளுங்காணும்
　　க்ஷணத்திலே சிவமையஞ்சேரத்தோணும்
வழியதனில்நல்லவழி ஞானங்கூடும்
　　மகத்தானவேதாந்தஞ் சித்திக்காட்டும்
ஒளிவுதனிலொளிவுதரு முருதிசொல்வா
　　ருற்பனத்திலுற்பனமா யுறுதிதோணும்
வெளியதனில்வெளியாகி நாதத்துள்ளே

## நூல்

ஆதியந்தம்வாலையவ ளிருந்தவீடு
　　ஆச்சரியம்மெத்தமெத்த வதுதான்பாரு
சோதியந்தநடுவீடு பீடமாகிச்
　　சொகுசுபெறவீற்றிருந்தாள் துரைபெண்ணாத்தாள்
வீதியந்தஆறுதெரு வமர்ந்தவீதி
　　விளையாடிநின்றதிரு மாளிகண்டாய்
பாதிமதிசூடியே யிருந்தசாமி
　　பத்துவயதாகுமிந்த வாமிதானே. (௧)

வாமியிவள்மர்மம் வைத்துப் பூசைபண்ண
　　மதியுனக்குவேணுமடா வதிகமாக
காமியிவள்வெகுகாமி சிவகாமிரூபி
　　காணரிதுசிறுபிள்ளை கன்னிகன்னி
ஆமிவளையறிந்தவர்கள் சித்தர்சித்தர்
　　அறிந்தாலுமனதடக்க மறியவேணும்
நாமிவளைப்பூசைபண்ண நினைத்தவாறு
　　நாட்டிலேசொல்லவென்றால் நகைப்பார்காணே. (௨)

காணப்பாவிவளுடைய கற்புமெத்த
கண்டவர்க்குப்பெண்ணரசு நானேயென்பாள்
ஊணப்பாவமிர்தமவ ளூட்டிவைப்பா
ளுள்வீட்டுக்குள்ளிருந்து மேலேயேற
பூணப்பாமனமுறைந்து வாவாவென்பாள்
புத்திரனேயென்மகனே யென்றுசொல்லி
வேணப்பாவேணுதெல்லாந் தருவேனென்பாள்
வேதாந்தசூட்சமெல்லாம் விளங்குந்தானே. (௩)

தானென்றவாலையிவள் ரூபங்காணச
சமர்த்துண்டோவாண்பிள்ளை தானுமுண்டோ
பானென்றவாமத்துக்குள் ளேயப்பா
பராபரையாள்பலகோடி விதமுமாடி
தேனென்றமொழிச்சியிவள் சித்தர்க்கெல்லாஞ்
சிறுபிள்ளைபத்துவய துள்ளதேவி
ஊனென்றவுடலுக்குள் நடுவுமாகி
யுத்தமியாள்வீற்றிருந்த வுண்மைதானே. (௪)

உண்மையிவள்நாணமில்லா திருந்தவீடு
ஊருக்குள்நடுவீடு உற்றுப்பாரு
செம்மையாய்கண்டவர்க ளுண்டோவப்பா
ஜெகஜாலவித்தையிவ ளாடும்வித்தை
உண்மையடாபஞ்சவர்ன மாகிநின்ற
உலகதனிலலைந்தவர்கள் கோடாகோடி
சின்மயமாய்கண்டவர்கள் சொல்லாரப்பா
னேசமுடனெனக்குரைத்த நிசங்கண்டேனே. (௫)

கண்டதொருபூரணத்தில் மகிமைகேளு
கால்மேலுந்தலைகீழும் நடுவுமாகி
அண்டரொடுமுனிவர்களுங்கண்டுபோற்ற
ஆதவனுமம்புலியு மதிலேநின்று
தொண்டுபெண்ணுமைவர்களில் நாலுபேர்கள்
சுகம்பெறலாமென்றுசொன்ன வாசல்நாலு

கொண்டவர்கள்கண்டுவெந்த தொண்ணூற்றாறு
    கொள்கையெனக்காத்திருந்த குறிப்பைப்பாரே. (௬)

பார்த்தவர்கள்செய்தொழிலு மனதுவேறாய்ப்
    பலநூலைப்படித்து படுகுழியில்வீழ்வார்
ஏற்றபடிமனம்போனாற் புத்திபோச்சு
    ஏழைமதிபோகாதே யென்தாய்பாதம்
போற்றுதற்குஐவரையு மனதிலொன்றாய்ப்
    புத்திசித்தமோர்நிலையில் நிறுத்திவாசம்
பூர்த்தமலரெடுத்துதிருப் பாதம்போற்றப்
    பொறியைந்துகருவிகர ணாதிபோமே. (௭)

போச்சுதடாமனமாய்கை வீறுபோச்சு
    பொறியைந்துகருவிகரணாதிபோசசு
எச்சுதடாவென்றுமன மிறக்கலாச்சு
    எனக்கொருவரிணையில்லை யென்றபேச்சு
வாச்சுதடாமனமடங்க வங்கென்றோர்சொல்
    வாய்பேசாமவுனத்தை யதிலேசேர்க்கக்
காச்சுதடாபூத்தமலர் கருத்தைபூணா
    கனியாகுமக்கனியைக் கண்டுகொள்ளே. (௮)

கொள்ளுதற்குஇன்னமொரு குறிப்பைக்கேளு
    கோடிஇடிமின்மிழங்கும் கண்ணைமூடு
விள்ளுதற்குமனமடங்காப் பூதங்காணும்
    விள்ளாதேயுள்ளபடி சிங்கென்றோர்சொல்
விள்ளவுமேயுபாயமதால் நடுவேநில்லு
    வேகமெல்லாமொடுங்குமடா சத்தம்போச்சு
கள்ளரைப்போல்மயங்காதே மவுனத்தாணு
    கண்ணையுந்திறக்காதே கருதிப்பாரே (௯)

பாரேதுபுனலேது அனலுமேது
    பாங்கானகாலேது வெளியுமாகும்
நாரேதுபூவேது வாசமேது
    நல்லபுட்பந்தானேது பூசையேது

ஊரேதுபேரேது சினமுமேது
ஓசோகோவதிசயந்தா னென்னசொல்வேன்
ஆரேதுகுளமேது கோயிலேது
ஆதிவஸ்தையறிவினாலறியலாமே. (௧0)

ஆமெனவுமஊமெனவு மிரண்டுங்கூட்டி
யப்பனேஓமென்ற மூன்றுமொன்றாய்
நாமெனவுந்தாமெனவு மொன்றேயாகும்
நல்லவர்களறிவார்கள் காமிகாணார்
வாமம்வைத்துப்பூசைபண்ண விந்தமார்க்கம்
வந்தவர்க்குச்சத்திசிறு பிள்ளைவாலை
சோமநதியமிர்தமுண்ண வாவாவென்பாள்
சுகமுனக்குப்பரமசுக மருள்செய்வாளே. (௧௧)

செய்குவாய்பூசையது செய்யும்போது
செய்குறிகள் தவறாமல் நடக்கவேணும்
உய்குவாய்பெண்ணரவம் கடியாவண்ணம்
ஊமையென்றநடுத்தீயை யதிகங்கண்டால
பைகுவாயரவுவிஷம் புசிக்குப்போகும்
பங்கமுனக்கில்லையடா அங்கமீதில்
ஐகுவாயுள்ளடங்கிப் பேச்சைவிட்டு
அழைத்திடவேயஞ்சமது கொஞ்சங்காணே. (௧௨)

காணாதகாட்சியெல்லாங கண்ணிற்காணும்
கலங்காதேமெய்மயக்க மெத்தவாகும
பூணாதபணிபூண்டு சிறுபெண்ணாகப்
போதமெனும் பொருள்பறிக்கவருவாள்கண்டாய்
வாணாளைமடக்கியவள் ரூபங்கண்டு
மயங்காதேமவுனத்தில் நில்லுநில்லு
கோணாதமுக்கோணக் குறியைப்பாரு
கூசாதேகண்கூசுங் கூசுங்காணே. (௧௩)

கூச்சமற்றுப்பார்க்கையிலே யிருள்போல்மூடும
கொள்ளிகொண்டு கொளுத்தியதைவெளிச்சம்போடு

வாய்சமர்த்துபேசாதே மவுனத்தாலு
    வாவாவென்றேநீயும் வருந்திக்கூவு
சூட்சமதுவிருந்தவிடஞ் சொல்லலாமோ
    சொல்லுதற்குவாய்விட்டுச் சொல்லலாமோ
தாய்சமர்த்துப்பாராதே தாயைப்போற்று
    சற்குருபோலுற்பனத்தைத் தாய்சொல்வாளே. (௧௪)

சொல்வதற்குஇவளையல்லால் சுகம்வேறுண்டோ
    சூட்சமெல்லா மிவளைவிடச்சூட்சமுண்டோ
நல்லவற்குநடுவில்வினை யாடும்வல்லி
    நாதவிந்துஓங்கார நிலையுங்காட்டி
வல்லவர்க்குள்வல்லவளும் நானேயென்பாள்
    வல்லவர்க்குவேணதெல்லாம் வழங்குமரூபி
புல்லறுக்குஆயுதமும் புகலேயாகும்
    புத்திகெட்டலோபிகட்குப் புகலொண்ணாதே. (௧௫)

புகலுவர்வேதமெல்லாம் வந்ததென்று
    பொய்பேசிசாஸ்திரங்கள் மிகவுங்கற்று
அகலுவார்பெண்ணாசை விட்டோமென்று
    அறிவுகெட்டூர்தோறுஞ் சுற்றிச்சுற்றி
சகலமுமேமறிந்தவர்போல் வேடம்பூண்டு
    சடைமுடியுங்காஷாயந் தன்னைச்சாற்றி
இகலுமனமடங்காமல் நினைவுவேறாய்
    எண்ணமெல்லாம்பெண்ணாசை பூசைதானே, (௧௬)

பூசையதுசெய்வமென்று கூட்டங்கூடி
    புத்திகெட்டுக்கைம்முறையின் போக்கைவிட்டு
* பாசையதுமிகப்பேசி பாட்டும்பாடிப்
    படிப்பார்கள்மந்திரத்தின் பயனைக்காணார்
ஆசையதுபெண்ணாசை மயக்கத்தாலே
    யங்கிருந்தவாமத்தைப் பங்குபோட்டுப்
பேசையிலேமனம்வேறாய் நினைப்பான்பாவி
    புரட்டுருட்டாய் நினைவுதப்பிப்பேசுவானே. (௧௭)

---

* பாசை பாஷை யெனக்கொள்க.

பேச்சென்றால்வாய்ச்சமர்த்தாய்ப் பேசிப்பேசி
பின்னுமுன்னும்பாராமல் மதமேமீறி
நீச்சென்றும்நிலைப்பென்று மேதாங்காணார்
நிர்மூடரனேகவித ஜாலங்கற்று
ஆச்சென்றாலதனாலே வருவதேது
ஆத்தாளைப்பூசித்தோ னவனேசித்தன்
மூச்சென்னசெய்யுமடா நரகிற்றள்ளும்
மோசமதுபோகாதே முக்கால்பாரே. (௧௯)

முக்காலும்பொருந்துமென்று சொன்னபோதே
மோசமில்லை சூட்சமது மொழிந்துகூடும்
தக்காமற்போனபே ரனேகருண்டு
சமர்த்தறிந்தாலவன்வாமி யவனேசித்தன்
எக்காலு நடத்திருநீ காலுமுன்னி
யிருந்தடங்கியுள்ளிருந்து வெளியிற்போன
அக்காலைகாணும லலைந்தேயோடி
அழிந்துகெட்டுப்போனவர்க ளறிந்துகொள்ளே. (௨௧)

அறிந்தகுறியடையாளங் காணவேணு
மக்குறியிற்சொக்கிமனந் தேறவேணு
மறிந்தவன்போலடங்கிமன மிறக்கவேணு
மலைகையதுவழிபாதை யறியவேணும்
மறைந்தவரைநிறைந்தவரை நீர்தான்காண
மயக்கத்தைக்கண்டுனையு மதிக்கவேணும்
நிறைந்தமதிகுரைந்தவகை யறியவேணும்
நிட்சயத்தையறிந்தவர்க்கு முத்திதானே. (௨0)

முத்திதருமென்றுமனம் புத்தியற்று
மோசமதபோகாதே பாசக்கையில்
சித்தமதில்சந்திரனை நிறுத்திக்கொண்டு
செந்தியிலுன்தீயை நடுவில்வாங்கி
சத்தியுடன்ஆதியந்த மனதில்வைத்துச்
சொல்லாதமந்திரத்தின் தீயைமூட்டு

சித்தியமலரார்ச்சனைசெய் பாதம்போற்றி
　　நீயுமதிமதியுமதி லதிகமாமே. (உக)

மதிபெருகுங்கெதிபெருகும் வாதம்வாதம்
　　வருந்தாதேயந்தமுறை யாகாதப்பா
நிதிபெருகுமிவள்குறியே வாதமாகும்
　　நிர்மூடரறியாமல் வகாரம்பேசி
நதிகள்தனையறியாமல் சலத்தில்மூழ்கி
　　நானேநானென்றுவாய் மதங்கள்பேசி
உரியபொருளுள்ளதெல்லாஞ் சுட்டுசுட்டு
　　உட்பொருளைபாராம லழிந்திட்டாரே. (உஉ)

இட்டகுறிநாதவிந்து ரூபங்காணா
　　யியலறியாச்சண்டாளர் சுட்டுமாய்வார்
விட்டகுறைவந்ததென்றால் தானேயெய்தும்
　　விதியில்லார்க்கெத்தனை தான் வருந்தினாலும்
பட்டுமனமாய்வதல்லால் வேறொன்றிலலை
　　பதியில்லார்க்குரைத்துமனம் பாழ்போக்காதே
திட்டமாய்பாணம்வைத்தாத் தேவிபூசை
　　சீர்பெற்றார்பதினெட்டுச் சித்தர்தாமே. (உ௩)

எட்டிரண்டுமொன்றுமது வாலையென்பா
　　ரிதுதானேபரிதிமதி சுழினையென்பார்
ஒட்டிமுறிந்தெழுந்ததுவே முக்கோணமென்பார்
　　உதித்தெழுந்த மூன்றெழுத்தை யறியாறையோ
கொட்டுமொருதேனுருவாய் நிற்கும்பாரு
　　கூட்டமிட்டுப்பாராதே குறிகள்தோணும்
சுட்டசுடுகாடுமது வெளியுமாகும்
　　சொல்லுதற்குவாய்விளங்காச் சூட்சந்தானே. (உ௪)

சூட்சமிவள்வாசமது நிலைத்தவீடு
　　சொல்லுதற்கு எங்குமாய்நிறைந்தவீடு
தேசமதில்போல்விளங்கு மிந்தவீடு
　　சித்தாந்தசித்தரவர் தேடும்வீடு
ஓசைமணிப்பூரமதி லுதிக்கும்வீடு
　　ஓகோகோவதிசயங்க ளுள்ளவீடு

ஆசுகவிமதுரமது பொழியும்வீடு
அவனவளுங்கூடிவிளை யாடும்வீடே. (உ௫)

வீடுமதுதலைவாச லதுமேல்வாசல்
வெளியானசுழிக்கதவு அடைக்கும்வாசல்
தேடுகிறமூவருமே வணங்குமவாசல்
திறமான பனனிருவா கார்க்கும்வாசல்
ஆடுகிறபுலியாகி நின்றவாசல்
அரகர சிவசிவா வாசிவாசல
கூடுகிறமுக்கோணப் பரங்களாகிக்
குறுதிமதிபெருகுமதி கூறெண்ணுதே. (உ௬)

ஒண்ணுகி இரண்டாகி விளைவுமாகி
உத்தமியாளுட்கருத்தை யறியப்போமோ
திண்ணுதவிடக்கொடுத்துதகின்னச்சொன்ஞல்
செத்தசவம்போலிருந்து செபிக்கச்சொன்ஞள்
பண்ணுத்தணைக்கோடிப் பண்ணிவைத்தாள்
பார்த்திருந்துகழுத்தறுக்கப் பார்த்தாள்பாவி
எண்ணுதுமெண்ணிமனம் ஏஙகிஞளாம்
எனக்கபயமேதெனவே யெழுந்திட்டேனே. (உ௭)

எழுந்திட்டதிவள்பார்த்துத் தொடர்ந்துகூடி
என்னையுமேயிழுத்துமடி பிடித்துக்கொண்டு
கொழுந்துவிட்டு வளர்ந்தெரியு மனலைமூட்டிக்
குடிகேடிசத்துருப்போல் கூச்சலிட்டாள்
அழுதேனேமுந்தியினி யந்தவீரி
லரகராதுணையெனக்கு யாருமில்லை
எழுந்திட்டாரெல்லாரு மோடிப்போஞர்
என்னசெய்வேன்தனித்திருந்து ஏஙகினேனே. (உ௮)

ஏஙகினேன்வீடழிந்தேன் வீடுமற்றேன்
என்னையுந்தான் கண்டவர்கள் சீசியென்ன
தூங்கினேன்காலறிந்து மடக்கமாட்டேன்
துணையெனக்கு யாருமில்லை சூழ்ச்சியாக
வாங்கினேன்காலறிந்து மடக்கவேண்டும்
வகையாகவெனக்கொருத்தி யுறுதிச்சொன்ஞள்

தேங்கினேன் முன்னுமவள்பின்னுமாகத்
 திடமெனக்குச்சொன்னதிந்த தெளிவுதானே. (௨௯)

தெளிவதற்குசூட்சமிது தெளிவாய்ப்பாரு
 சிவனிருந்துவிளையாடுந் தெருவைப்பாரு

முன்னுதியந்தமொடு நடுவுஞ்சொன்னோம்
சுழியதற்குள்சுழியிருந்த சூட்சம்சொன்னோம்
 சொல்லாதமவுனமுதற் கருவுஞ்சொன்னோம்
ஒளிபிறக்குமுறுதியிந்த வுறுதிசொன்னோம்
 உற்பனமாய்ப் பார்த்தவர்கள் சித்தர்தானே. (௩0)

கருவூரார் பூஜா
முற்றிற்று.

---

உ

சிவமயம்

## அகஸ்தியமகாமுனிவ ரருளிச்செய்த

# ஞானம்-௯

பாரப்பா சிவன்விட்டுப் போகும்போது
 பாழ்த்தபிணங் கிடக்குதென்பார் உயிர்போச்சென்பார்
ஆரப்பாவறிந்தவர்க ளாருமில்லை
 ஆகாய சிவத்துடனே சேருமென்பார்
காரப்பா தீயுடனே தீச்சேருமென்பார்
 கருவறியா மானிடர்கள் கூட்டமப்பா
சீரப்பா காமிகள்தா னென்றுய்ச்சேர்ந்து
 தீயவழி தனைத்தேடி போவார்மாடே (௧)

மாதோ ரொன்றும் வொருபோக்குண்டு
 மனிதனுக்கு அவ்வளவுந் தெரியாதப்பா

நாடுமெத்த நகரமென்பார் சொர்க்கமென்பார்
　　நல்வினையோ தீவினையோ யெண்ணமாட்டார்
ஆடுகின்ற தேவதைக ளப்பாகேளு
　　அரியதந்தை யினஞ்சேரு மென்றுந்தோணுர்
சாடுமெத்த பெண்களைத்தான் குறிப்பாயெண்ணி
　　தனமான தீயில்விழத் தியங்கிளுரே. (உ)

தயங்காமற் பிழைப்பதற்கு யிந்தஞானஞ்
　　சார்வாகப் பாராட்டு ஞானம்வேறே
மயங்குதற்கு ஞானம்பார் முன்னோர்கூடி
　　மாட்டினுர் கதைகாவிய புராணமென்றும்
இயலான ரசந்தனிலே யீபுகுந்தாற்போலும்
இசைந்திட்டார் சாஸ்திரங்க ளாறென்றேதான்
வரையான பயன்பெறவே வியாசர்தானு
　　மாட்டினுர் சிவனுர்தன் வுத்திரவினுலே. (௩)

உத்தரந்தா னிப்படியே புராணங்காட்டி
　　லோகத்தில் பாரதம்போல் கதையுண்டாக்கி
கர்த்தாவைத்தானென்று தோணவொட்டாமல்
　　கபடநா டகமாக மேதஞ்சேர்த்து
சித்தாக வழியாக சேர்ந்தோர்க்கெல்லாஞ்
　　சதியுடனே வெகுதர்க்கம் பொருள்போற்பாடி
றத்தாக சைவர்க்கு வொப்பிணையுஞ்செய்து
　　பாடினுர் சாஸ்திரத்தைப் பாடினுரே. (௪)

பாடினதோர்வகையேதுசொல்லக்கேளு
　　பாதக புராணமென்ற சோதியப்பா
நீடியதோ ராவணன்தான் பிறக்கவென்றும்
　　நிலையான தசரதன்கை வெல்லவென்றும்
நீடியதோ ராசனென்றும் முனிவரென்றும்
　　அருள்பெற்ற வர்களென்றுந் தேவரென்றும்
ஆடியதோ ரரக்கரென்றும் மனிதரென்றும்
　　பாடினுர்காண்தோறும் வகையாய்த்தானே. (௫)

கழிந்திடுவார் பாவத்தாலென்றுசொல்லும்
கட்டிய நால்வேத மாருசாஸ்திரமு
மழிந்திடவே சொன்னதல்லால் வேறொன்றுமில்லை
யதர்மமென்றுந் தர்மமென்று மிரண்டுண்டாக்கி
யொழிந்திடுவா ரென்றுசொல்லிபிறப்புண்டென்றும்
வுத்தமனாய்ப் பிறப்பனென்று முலகத்தோர்கள்
தெளிந்திடுவோர் குருக்களென்றுஞ் சீஷரென்றுஞ்
சீவனத்துக் கங்கேயல்லோ தெளிந்துகாணே

அகஸ்தியர் ஞானம் ரு.

முற்றிற்று.

# அகஸ்தியர் ஞானம்-கரு

பூரணமேதெய்வமென் றுரைத்தாரையா
பூரணத்தையின்னதென்று புகலவேணும்
காரணத்தைச்சொல்லுகிறேன் கினைவாய்க்கேளு
கலையானபதினாறும் பூரணமேயாகும்
மாரணமாமுலகத்தில் மதிமயங்கி
மதிகெட்டுபூரணத்தை யிகழ்ந்தாரையா
வாரணத்தைமனம்வைத்துப் பூரணத்தைக்காத்தால்
வாசியென்றறிவேயோக வாழ்க்கையாச்சே. (க)

ஆச்சப்பாவிந்தமுறை பதினெண்பேரும்
அயன்மாலுமரனோடுந் தேவரெல்லாம்
மூச்சப்பாதெய்வமென் றறியச்சொன்னார்
முனிவோர்கள்ரிஷியோர்க ளிப்படியேசொன்னார்

பேசசப்பாபேசாமல் நூலைப்பார்த்து
பேரானபூரணத்தை நினைவாய்க்காரு
வாச்சப்பாபூரணத்தைக் காக்கும்பேர்கள்
வாசிநிலைமையத்துள் வாழ்வார்தாமே (௨)

தானென்றபெரியோர்க ளுலகத்துள்ளே
தாயானபூரணத்தை யறிந்தபின்பு
தேனென்றவமுதமதைப் பானஞ்செய்து
தெவிட்டாதமவனைசிவ யோகஞ்செய்தார்
ஊனென்றவுடலைநம்பி யிருந்தபேர்க்கு
ஒருநான்குவேதமென்றும் நூலாறென்றும்
நானென்றும்நீயென்றும் பலஜாதியென்றும்
நாட்டினாருலகத்தோர் பிழைக்கத்தானே (௩)

பிழைப்பதற்கு நூல்பலவுஞ் சொல்லாவிட்டால
பூரணத்தையறியாம லிறப்பாரொன்றும்
உழைப்பதற்கு நூல்கட்டிப் போடாவிட்டால்
உலகத்திரபுத்திகெட்டே யலைவாரொன்றும்
தழைப்பதற்குச்சாதியொன்றும் விந்துவென்றும்
தந்தைதாய்பிள்ளையென்றும் பாரியென்றும்
உளைப்பதற்குச்சொன்னதல்லாற் கெதிவேறில்லை
புத்தமனேயறிந்தோர்கள் பாடினாரே. (௪)

பாடினாரிப்படியே கதைசொல்லாவிட்டால்
பரிபாஷையறியார்க ளுலகமூடர்
சாவோர்சிலபேர்கள் பலநூறபார்த்து
தனைமறந்துபடுகுழியில் விழுவார்சாவார்
வாவோர்நாமமென்றும் ரூபமென்றும்
வையகத்திற்கற்செம்பைத் தெய்வமென்றும்
நாவோர்பூரணத்தை யறியார்மூடர்
நாய்போலேகுலைத்தல்லோ வொழிவார்தானே. (௫)

காணமலலைந்தோர்கள் கோடாகோடி
காரணத்தையறிந்தோர்கள் கோடாகோடி

வீணைகப்புலம்பினதா லறியப்போமோ
வாய்ஞானம்பேசுவது மேதுக்காகும்
கோணுமற்சுழிமுனையில் மனதைவைத்து
குருபாதமிருநான்கில் நாலைசேர்த்து
நாணுமலொருநினைவாய்க் காக்குமபோது
நாலுமெட்டுமொன்றாகும் நாட்டியுதே. (சு)

ஊதியதோருதறிந்தா லவனேசித்தன்
உத்தமனேபதினாறும் பதியேயாகும்
வாதிகளேயிருநான்கும் பதியின்பாதம்
வகைநான்குமுயிராகு மார்க்கங்கண்டு
சோதிபரிபூரணமு மிதமூன்றுந்தான்
தூங்காமற்றூங்கியங்கே காக்கும்போது
ஆதியென்றபராபரையு மானுமொன்றாய்
அண்ணாக்கின்வட்டத்துள் ளாரும் பாரே. (எ)

பாரப்பாவுதயத்தி லெழுந்திருந்து
பதறாமற்சுழிமுனையில் மனதைவைத்து
காரப்பாபரிதிமதி ரண்டுமாரி
கருவானசுழிமுனையி லுதிக்கும்போது
தேரப்பாவண்ணாக்கு ணின்றுகொண்டு
தியங்காமற்சுழிமுனைக்குள் ளடங்கும்பாரு
சீரப்பாபதினாறில் எட்டுநான்கும்
சிதறாமல்மூன்றுமொன்றாய்ச் சேர்ந்துபோமே. (அ)

ஒன்றானபூரணமே யிதுவேயாச்சு
உதித்தகலைதானென்று மிதுவேயாச்சு
நன்றாகத்தெளிந்தவர்க்கு ஞானஞ்சித்தி
நாட்டாமற்சொன்னதினால் ஞானமாமோ
பன்றானவாதிகுரு சொன்னஞானம்
பரப்பிலேவிடுக்காதே பாவமாகும்
திண்டாடுமனத்தோர்க்குக் காணப்போகா
தெளிந்தவர்க்குத்தெரிவித்த வுகமைதானே. (க)

டகமையின்னஞ்சொல்லுகிறே னுலகத்துள்ளே
யுவமையுள்ளபரிகாசம் நனிபேசாதே
பகைமைபண்ணிக்கொள்ளாதே வீண்பேசாதே
பரப்பிலேதிரியாதே மலையேறாதே
நகையாதேசினங்காதே யுறங்கிடாதே
நழுகாதேசுழினைவிட்டுப் பின்வாங்காதே
ஜகமுழுதும்பரிபூரண மறிந்துவென்று
தெளிந்துபின்புலகத்தோ டொத்துவாழே. (௧௦)

வாழாமலுலகம்விட்டுப் பலவேடம்பூண்டு
வயிருபிழைக்கவாய்ஞானம் பேசிப்பேசி
தாழ்வானகுடிதோறு மிரப்பான்மட்டை
தனையறியாச்சண்டாளர் முழுமாடப்பா
பாழாகப்பாவிகடன் சொற்கேளாதே
பதறாதேவயிர்பிழைக்க மயங்கிடாதே
கேளாதேபேச்செல்லாங் கேட்டுக்கேட்டுக்
கலங்காதேயுடலுயிரொன் றுணாத்திடாதே. (௧௧)

உடலுயிரும்பூரணமு மூன்றுமொன்று
வுலகத்திற்சிறிதுஜனம் வெவ்வேறென்பார்
உடலுயிரும்பூரணமு மேதென்றாக்கால்
உத்தமனேபதினாறு மொருநான்குமெட்டு
உடலுயிரும்பூரணமு மயன்மாலீசன்
உலகத்தோரறியாமல் மயங்கிப்போனார்
உடலுயிரும்பூரணமு மடிமுடியுமாச்சு
உதித்தகலைநிலையறிந்து பதியில்நில்லே. (௧௨)

பதியின்னவிடமென்ற குருவைச்சொல்லும்
பரப்பிலேவிள்ளாதே தலைரண்டாகும்
விதியென்னவிடமென்று சொல்லக்கேளு
விண்ணானவிண்ணுக்கு ளண்ணாக்கப்பா
மதிரவியும்பூரணமுங் கண்வாய்மூக்கு
மகத்தானசெவியோடு பரிசமெட்டும்

பதியவிடஞ்சு ழிமுனையென் றதற்குப்பேராம்
பகருவார்சொர்க்கமென்றும் கைலாசமென்றே. (௧௫)

கைலாசம்வைகுந்தந் தெய்வலோகம்
காசிகன்னியாகுமரியென்னுஞ் சேதுவென்றும்
மயிலாடுமேகமென்றும் நாகமென்றும்
மாய்கையென்றும்மின்னலென்று மவுனமென்றுந்
துயிலானவாடையென்றுஞ் சூக்ஷமென்றும்
சொல்லற்றவிடமென்று மொடுக்கமென்றும்
கயிலானபாதமென்று மலரடியென்றும்
தாயானவஸ்துவென்றும் பதியின்பேரே. (௧௬)

பேர்சொன்னேனூர்சொன்னேனிடமுஞ்சொன்னேன்
பின்கலையுமுன் கலையு மொடுக்கஞ்சொன்னேன்
பாருலகிற்பலநூலின் மார்க்கஞ்சொன்னேன்
பலபேர் கண்டத்துகின்ற தொழிலுஞ்சொன்னேன்
சீருலகிலின்னதென்று தொடச்சொன்னேன்
சித்தானசித்தெல்லாஞ் சுருக்கிச்சொன்னேன்
நேர்சொன்னேன்வழிசொன்னேன் நிலையுஞ்சொன்னேன்
நின்னுடம்பையின்னதென்று பிரித்துச்சொன்னேன். ()

பிரித்துரைததேன்சூத்திரமீ ரெட்டுக்குள்ளே
பித்தர்களேநன்றாகத் தெரிந்துபார்க்கில்
விரித்துரைத்தநூலினது மார்க்கஞ்சொன்னேன்
விள்ளாதேயிந்தநூ லிருக்குதென்று
கருத்துடனேயறிந்துகொண்டு கலைமாறாதே
காரியத்தைநினைவாலே கருத்திற்கொள்ளு
சுருதிசொன்னசேதியெல்லாஞ் சுருக்கிசொன்னேன்
சூத்திரம்போல்பதினாறுந் தொடுத்தேன்முற்றே. (௧௧)

அகஸ்தியர் ஞானம - ௰௬

சிவமயம்.

பதினெண்சித்தர்கள்

# பெரிய

# ஞானக்கோவை.

## இரண்டாம்பாகம்.

இஃது

வா - சரவணமுத்துப்பிள்ளையால்

ஞானவான்களுக்கு

உபயோகமாகும்பொருட்டு

சில ஏட்டுப்பிரதிகளிலிருந்தும்

அச்சுப்பிரதிகளிலிருந்தும்

சேர்க்கப்பட்டு.

[illegible] பதிப்பு

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயு

அவர்களாற்றமது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1906.

சிவமயம்.

## இரண்டாவது

## ஞானக்கோவையின்

# முகவுரை.

தவமனறியின் மிக்கபதி னெண்மராலே
தானருளிச் செய்தபல சாத்திரத்தில்
சிவனவனே யாகவென சிவகோடி
சிவமெனவே சிறப்பித்த சிவனூல்யாவும்
அவமனத்தாற் சிந்தண்டு வகலாவண்ண
மரிந்தவறை யேதிரட்டிக் கோவையாக்கி
புவனமனு வெளிதனிலே ஞானபாதை
புரிந்துய்ய போதிக்கப் புரந்தவாறே. (க)

போதசிவ சுந்தரமா முனிவராலே
போதித்த சிவானந்த போதமோடு
ஆதிகண பதிதாச ரருளும்நெஞ்சு
அறிவிளக்க மொடுஞானக்
நீதகுரு முனிதனக்கு நெடியவேலோன்
நிகழ்த்தியமுப் பானிரண்டாம் ஞானச்செய்யுள்
சோதிமய மாங்காயக் கப்பலெலம்
சொற்பெரிய வால்மீக சூத்திரமாமே. (உ)

ஆகமத்தின் கட்டறுத்தே அருளைத்தேக்கும்
அகத்தியனார் சோடசமு மருளின்மிக்க
யோகமனைப் பேறுபெற்றே யொளியோடொற்ற
வுயர்ராம லிங்கவள்ள லுரைத்தகீதம்
தேகஞா னக்குறத்தின் வஞ்சியேத்தம்
திகழ்ஞான சரம்நாமா வளியின்மட்டே
ஏகமுற வேதிரட்டி யிரண்டாங்காண்ட
மிதுவாகு மற்றையநூற் கெதிர்கொள்வீரே. (ஈ)

சிவமயம்.

இதில் அடங்கியிருக்கும்

# புத்தகங்கள்.

| நூல்பெயர். | | செய்யுள்தொகை. |
|---|---|---|
| அகஸ்தியர் உயர்ஞானம் பாடல் | | 1 |
| ஷை தனிஞானம் | ,, | 1 |
| ஷை தனிஞானம் | ,, | 2 |
| ஞான சரநூல்சாஸ்திரம் | ,, | 58 |
| சிவானந்தபோதம் | ,, | 100 |
| நெஞ்சறிவிளக்கம் | ,, | 103 |
| ஞானரத்தினக்குறவஞ்சி | ,, | 63 |
| ஞானக்கும்மி | ,, | 185 |
| சுப்ரமண்யர்ஞானம் | ,, | 32 |
| வால்மீகர் சூத்திரஞானம் | ,, | 16 |
| இராமலிங்கப்பிள்ளை பாடல் நாமாவளிகள் | | |
| காயகப்பல் | | |
| சேஷயோகி ஞானயேற்றம் | | |

## அறிவிப்பு.

| | | | |
|---|---|---|---|
| பதினெண்சித்தர்கள் ஞானக்கோவை புல்பவுண்டு விலை அணா | 0 | 8 | 0 |
| ஷை ஞானக்கோவை இரண்டாம்பாகம் | 0 | 8 | 0 |
| ஷை ஞானக்கோவை இரண்டுபாகம் ஒரேகட்டடமாய் வேண்டியவர்க்கு புத்தகம் விலை | 1 | 0 | 0 |
| கிளேஸ் ஒரேகட்டடம் | 1 | 8 | 0 |

இட்டா - பார்த்தசாரதிநாயுடு.

ஸ்ரீபத்மநாபவிலாசம் பிரஸ்.

ஆச்சாரப்பன் தெரு, 84-வது.நெ.

மதராஸ்

வ ம ய ம.

# ஞானக் காவை.

## [illegible] டாம்பாகம்.

### காப்பு விருத்தம்.

மனமதுசெம்மையானல் மந்திரஞ்செபிக்கவேண்டாம்
மனமதுசெம்மையானல் வாயுவையுயர்த்தவேண்டாம்
மனமதுசெம்மையானல் வாசியைநிறுத்தமேண்டாம்
மனமதுசெம்மையானல் மந்திரஞ்செம்மையாமே.

அகஸ்தியமுனிவர்

### உயர்ஞானம் ஒன்று.

உண்ணும்போ தயிரெழுத்தை வுயரவாங்கி
 உறங்குகின்ற போதெல்லா மதுவேயாகும்
பெண்ணின்பா லிந்திரியம் விடும்போதெல்லாம்
 பேணிவலம் மேல்னேக்கி அவத்தில்நில்லு
திண்ணுங்கா யிலையருந்து மதுவேயாகும்
 தினந்தோறும் அப்படியே செலுத்தவல்லார்
மண்ணூழிகாலமட்டும் வாழ்வார்பாரு
 மறலிகையில் அகப்படவு மாட்டார்தானே.

அகஸ்தியமுனிவர்

### தனிஞானம் ஒன்று.

ஒண்ணான உச்சிவெளி தாண்டிநின்று
 உமையவளுங் கணபதியு முர்த்தியாகி
விண்ணொளியாம் யம்பரமாம் ஓம்அவ்வும்உவ்வும்
 விதித்தபரம் ஒருவருக்கும் யெட்டாதப்பா

விந்தடவுட லுயிர்நிலையை யறியாதாருக்
கியாமறிய வியம்பும்வகை யாதோவென்னிற்
பைந்தொடியே யான்சொல்லுஞ் * சரநூறன்னைப்
பரிந்துநீபாரென்று பரமன்சொல்வான்.

இ-ள். சந்திரன், சூரியன், கோள், நாள், பக்ஷம், கரணம், யோகம், வாரம் இவை முதலாகச் சொல்லப்பட்ட சோதிட விலக்கணத்தை யறியாதவர்கள் தத்தம் மனநினைவினுலே யறிந்துக்கொள்ளு மார்க்கம் உள்ளதோ உண்டாயின் அருளிச்செய்ய வேண்டுமென்று உமையவள்கேட்க சங்கரனுர் சொல்லுகிறுர் அழகிய வளையல்கள் பூண்ட கைகளையுடைய பெண்ணே யான் சொல்லுஞ் சரநூலாகிய இந்தச்சாஸ்திரத்தைப் பரிவுடன் பார்ப்பாயாக பார்க்கில் நன்றுணர்வையென்று சொல்லுகிறுர்.

சொல்லரு நெடுங்கயிற்றின் வருணமான
சூத்திரனுர் துவக்கெனுமா சிர்மந்தன்னி
னல்லாரு மூக்கணுங் கயிறுகோத்து
நலந்தீயகாய் வருகின்ற நஞ்சுட்கொண்டு
பொல்லாத காலப்பாம் புண்டுமிழ்ந்து
பூதலத்திற் பிறந்திறந்து போவாரேனு
மெல்லாரு மியாஞ்சொல்லுஞ் சரநூறன்னை
யிகழாதார் சுரர்மூங்க ரிகழ்வோர்தாமே.

இ-ள், சொல்லப்பட்ட நாற்புரிகூடிய நீண்டகயிற்றைப் போல் பரம்பரையாய் விர்த்தியாகி வராநின்ற பிர்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திராதி வருணுசிரமம்பெற்ற இந்தமானிடதேகத்தில் இச்சாரம் நாசிகையின் வழியாய் நின்று எருதுக்கு ஒரு மூக்கணுங் கயிறிருந்து ஆட்டுவிப்பதுபோல் நம்மை தீமையென்னு நஞ்சினை யூட்டுவிக்கும் அப்படிப்பட்ட நஞ்சுட்கொண்டு கொடிய காலனென்னும் பாம்பானது

* சரம் என்பது - காற்று, மனம், சிவன், சுவாசம், மூச்சு பிராணன், ஆவி, உயிர், உயிர்ப்பு இவைமுதலாகச் சொல்லப்பட்டவைதான் என்றறிக.

ண்ணவு மூமிழவுந் தா முட்பட்டு இருவினைக் கிசைந்தவரா
ப் பிறந்து மிறந்துபோவார்கள், ஆயினும் நான் சொல்லி
ருஞ் சரநூலையிகழாமல் குருமுகாந்தரத்தில் அறிந்து அனு
வித்து அந்நெறியி னிற்பவர்கள் யாவரேனு மொருங்கே
தவராவார்கள் அப்படி யறியமாட்டாதவர்கள் ஊமைகளுக்
குச் சரியாவார்கள்-எ-று. (௨)

சரம்பார்க்க ஆசனவிதி கூறுகின்றார்.

றய்கிற்பாய் மிடிகல்லு நோய்மண்டுக்க
முறிபலகை நன்மையிலை முடைந்தபுல்லு
தீங்கிவிடுங் கீர்த்திதழை மனநடுக்க
கிகரில்கலைத் தோல்ஞான
லோங்கியசெல் வம்வீடு மூன்குகைப்பு
வெளிர்தூசு நன்மையுயர் படந்தானென்று
தாங்கியதாக் கம்போக்கு நன்மையாகத்
துலங்கியவா தனத்திருந்து தோகைசொல்வாம்.

இ-ள்' மூங்கிற்றடுக்கு ஆதனம்-வறுமை, கல்-வியாதி, மண்
ஆதனமில்லாமல் வெறுமணலில் (உளுக்கார்ந்துகொண்டால்)
துக்கம், உடைந்த அல்லது அறுபட்ட பலகை மனை-நன்மை
யில்லை, கோரைப்பாயல்கள்முதலிய புற்பாயல்கள் கீர்த்திநா
சம், பச்சிலை தழை மனநடுக்கம், மான்றோல் ஞானம், புலித்
தோல் செல்வம், தர்பாசனம் மோக்ஷம், வெள்ளைவஸ்திரம்
தீமையில்லை, சித்திராசனம் அல்லது இரத்தகம்பளம் நன்
மை, இவைகளில் நன்மையாக விளங்கும்படியான ஆதனத்
திலிருந்து (சரம்பார்க்கவேண்டும்) மற்றுஞ் சொல்லுகிறேன்
கேள் மயில்போலும் அழகிய பெண்ணே-எ-று. (௩)

சரம்பார்க்கு மார்க்கங் கூறுகின்றார்.

சொல்லியவா தனங்கள்பல வவற்றுணன்றிற்
றய்யபங்க யாதனமா யிருந்துதோன்று
மல்லலறத் தேகமன மாக்கியொட்டி
யாணபந்த பிராணைய மங்கள்பண்ணி

மெல்லிலயிலுந் தியின்கீழா மெழுத்தைம்பற்றி
யெழுபத்தீ ராயிரநா டியிலீரைந்து
நல்லனவா யதின்மூன்று நாடியோடு
நலந்தரும்பே ரவ்வெழுத்தை நவிலப்பாரே,

இ-ள், முன் கூறப்பட்ட வாதனங்கள்பலவுண்டு அவைகளில் தீங்கில்லாத ஒருஆதனத்திற் பதுமாதனமென்னப்பட்டஅங்கமாயிருந்து (பார்க்கும்போது) மனதுக்கு மிகவும்கிலேவினுல் அல்லல்வரும், அப்படி வரும் அல்லல்களை நீக்கி வேறு கினை வில்லாமல் ஒரே மனமாக்கி ஒட்டியாண பந்தமென்று செல்லும் பிராணுயாமஞ்செய்து அதன்மேற் பார்க்கில் எல்லை யில்லாத திருவருளுக்கிடமாகிய உந்தியின்கீ ழிருக்கு மெழுத்தைத்தொடங்கி எழுபத்தீராயிரம் நாடிகள் இந்தத் தேகத்திலுண்டானவை தெரியும். அந்நாடிகளுள் பத்துநாடிகள் நல்லனவாம் அப்பத்துநாடிகளுள் மூன்று நாடி நல்லன அம்மூன்றின்வழியாய்த்தான் சரம் எளிதிற்காண வோடும் இவையறியப் பெரிதாகிய நன்கினை யளிக்கும் அவ்வெழுத்தைப் பார் மான்போலுங் கண்களையுடையபெண்ணே-எ-று.

அன்றியு மிதன் விவரத்துக்கு மற்றும் வருவனவற்றுள் ௩ இ-வது கவியைப்பார்க்க. (௬)

நவ்விவிழி யாயிதய கமலந்தன்னி
னன்றாக வசவையுயிர் நடக்கும்போதுஞ்
செவ்வியுடன் மீளும்போ திருபத்தோரா
யிரத்தறுநூற் றச்செபிக்கி லொருநாளாகு
மவ்வியபூ தாதாரஞ் சுவாதிட்டான
மணிபூரக மநாகதம் விசுத்தியாக்ஞை
பவ்வமற யாஞ்சொல்லுஞ் சரநூறன்னைப்
பார்ப்பவரே பராபரத்தின் பயன்பார்ப்பாரே.

இ-ள், மான்போலும் விழிகளையுடைய பெண்ணே இருதய கமலத்தின் வழியூடுருவிக்கொண்டு யாதொரு தீங்குமில்லாமல் அசவையுயிரென்னப்பட்ட இச்சரம் நாசிகையின்வழியாய் போகும்போது (௬ - அங்குலங்கள்போக) மற்றவைசெவ்வையாய்த் திரும்பி வரும்போதும் (கணித்துப்பார்க்கில்) இருப

தோராயிரத் தறுநூறுதாம் நடக்கும் அது சும்-நாழிகைசே ந்த ஒரு நாளாகும் அப் பரிசெல்லாம் மூலாதாரம், சுவாதி டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி; ஆக்ஞை என்று சொல்லப்பட்ட பரநிலையின பரிசுதான் (அங்கிருந்து உண்டா னவெனுங் கருத்து) இதனைக் காணும் வழி யாதெனில், யா ர்சொல்லுஞ் சரநூலை மயக்கமறப்பார்ப்பதுதான் அபபடிப் ார்ப்பவர் பரமாகவும் அபரமாகவும் விளங்குகின்ற ஒருவஸ் வின லுண்டாகும் பிரயோசனத்தை யறிந்துகொள்வார்.

சந்திரர், சூரியர், சுழிமுனை இலக்கணமும்
மற்றும் யாத்திரைபலனுங்
கூறுகின்றார்.

பார்க்கிலிடை யிடமதுவே திங்களாகும்
பகலவனும் பின்கலையே வலமதாகும்
மேற்கவுரை சுழிமுனைதா னவோமமகி
யிடையான சந்திரனே யமுதமாகுந்
தீர்க்கமுடன் பொருள்விளைக்கும் கரியவண்ணந்
திராசி யாமவனே செப்புங்காலை
வேற்றடங்கண் மடமாதே விரும்பிக்கேளாய்
விரிவாக விவையனைத்தும் விளங்கச்சொல்வோம்.

இ-ள். ஆராய்ந்துபார்க்கில் இடைகலையென்பதுவேயிடது பக்கம் நாசியில்வருஞ் சுவாசம் அதுவே சந்திரகலை யென்ன ப்படும் பின்கலை யென்பதுவே வலதுபக்கம் நாசியில் வருஞ் சுவாசம் சூரியகலை யென்னப்படும் யாவருக்கும் ஒக்கசொல் லுங்காலத்தில் சுழிமுனையென்பது நவோகும் அக்கினியென் னப்படும், பின்னும் அந்தச சந்திரனே சொல்லுமிடத்தில் அ முதம்தீர்க்கமாக எப்பொருள்களையும்உண்டாக்குவன் நிறங் கருத்தவன் ராசியில திராசி, வேல்போலுங் கண்ணினையு டைய பெண்ணேமற்றுமுண்டாகியவைனத்தும் பரிஷ்காரமா கசசொல்ல அதனை நீ விருப்பமுற்றுக் கேட்பாயாக-எ-று.

அறியும் அசசுழிமுனை இரண்டு நாசிகையிலும்பரவியோ டும் அதற்குப் பூரணமென்றும் பெயர். (௬).

இதுவுமது.

சொல்லுங்காற் கதிரவனுஞ் சகவியாபி
சுத்தநிறம் வெண்மைசர ராசியாகும
சொல்லுமெலாக் கருமங்கள் கொடியவன்னி
கூறுங்கா னிறஞ்சிவப்பா முபயராசி
நல்லவிடை தெரிந்துணர்கிற் றிங்கள்பெண்ணாம்
நலம்பயில்பின் கலைகதிரோன் புருஷனாகுஞ்
செல்லுமிரு பதின்காத வழிக்கப்பாலாந்
திசைக்கிடமாய்ச் செவ்வலமூர் சேரக்கேளே.

இ-ள், சூரியனுடைய குணகுறிகளைச் சொல்லுமிடத்தில் அந்தச் சூரியன் உலகத்தில் வியாபகமுற்றவன் பரிசுத்தமான வெண்மை நிறத்தை யுடையவன் ராசியில் சரராசி சுழிமுனை யென்னும் அக்கினியை சொல்லவென்றால் சகல கருமங்களை யு மழிக்கும் பொல்லாதநிறம் அக்கினிச் சிவப்பு ராசியில் மேற்சொல்லிய விரண்டு ராசியுங்கூடியது இன்னமும் நன்றாய்த தெரிந்துபார்க்கில் இடகலையென்று சொல்லப்பட்ட சந்திரன் பெண்பால், பின்கலையென்று சொல்லப்பட்ட அந்தச் சூரியன் ஆண்பால், சுழிமுனை யென்னப்பட்ட அந்த உபயராசியானது அலிணைப்பால் (அல்லது அலியாகும்) அன்றியும் இருபதின் காதவழிக்கு மேற்பட்ட தூலவானதே சந்திரக்குப் போகும்போது சந்திரகலை யோடும்போது புறப்பட்டுச் சூரியகலை யோடும்போது அததேசததில் போய்ச் சேரவேண்டியது இன்னமுஞ் சொலகிறேன் கேள்- எ-று. (எ)

சந்திரனிலக்கணம் அதிலும் அச் சந்திரன்
நடக்கும்போது இன்னவை செய்யலா
பல
மென்று கூறுகிறார்.

உகிலிடந் தூதாடை யணிபொன்பூணற்
கா ளிளர்க்குமண மடிமைகொளாற் கீழ்நீர்காண்டல்
ல் ழ்க்கைமனை யெடுத்தல்குடி புகுதல்விற்றன்
பே மன்னவரைக் காணலுண்மை மருவல்சார்தி
ய

வேட்கைதெய்வப் பதிட்டைசுரம் வெறுப்புதீர்த்தால்
விதகைபெறற் றல மபுகைததன் மிகவுமீத
நட்கமல மலர்முகத்தாய் நரகந்தீரத்த
னன்றேயா மிவையலலா நயந்துபாரே.

இ-ள். சந்திரகலை இடதுநாசிகையி னடக்கும்பொழுதுஎந் தெந்தகாரியஙகள செய்யலாமென்று வினவிக்கேட்கில் அந்த இடகலையில் ஒருவரைத தூதனுப்புதல தூதுதானேபோகுத ல், புதியவஸ்திரந்தரித்தல, ஆபரணாதிகள் பூண்டுகொள்ளல், விவாகஞ்செய்து கொள்ளுதல (தாலிகட்டல) ஒருவனை யடி மையாகப் பெற்றுகொள்ளல, கிணறுமுதலிய குளம்எரிவெ ட்டுதல், வாழும்படியான வீம்மனைவாஙகுதல ஒருவீட்டிற்குக் குடிபோகுதல், ஒரு வஸ்துவை விற்குதல, நூதனமாய் அரச ரைக்காணல்,தனககு ஒருபடிமேற்பட்டயாராலுஞ்சரிதான் உண்மையாகிய வஸ்துவைச சார்தல,சாந்திகழித்தல, இஷ்ட தெய்வ பிரதிஷ்டைசெய்தல், சிரநீரா ததல,வெருப்புதீர்த்தல (ஒருவனைச் சமாதானஞ்செய்தல) கல்விகேட்டுக கொளளுத ல, தனந்தானியமுதலிய ஆஸ்திசேர்த்து வைத்தல, தியாகங கொடுத்தல், பாப விமோசனஞ் செய்தல, இவையெல்லாம் நன்மையாகும் மற்றக்காரியஙகள மததிய மென்றறிக அன்று மலர்ந்த தாமரைப்பூப்போலுமுகததினையுடைய பெண்ணே.

இன்னமு மிதிற செயலறியவெனறுல-௬௮-ங கவியை யும்-௬௭-ங கவியையும் பார்க்க (அ)

சூரியனிலக்கனம அ[illegible] சூரிய [illegible]
குமபோது [illegible]னனதை செயயலா
மென்று கூறுகின்றார்.

பார்க்கில்வலதுபடேதசம விதகைசேவை
படையோட்டல் பயிரசெட்டுக களவுசூது
பேர்க்கவொணு வழக்குரைத்தல கரிபரிமேலூரதல
பிறகுமெழுத் திடுதலசங கீதமாடல

வார்த்தைபகை பங்கங்கோள் பசாசுதீர்த்தல்
மந்திரஞ்சாதித்தன் மருந் துணவுறங்கற்
கோத்தபுனலாடல்கொல்லிடங்கடீர்த்தல்
கொடும்பிணித்தம் பனயோகங் குறிக்குங்காலே.

இ-ள்- வலதுநாசிகையில சரமோடும்போது எவை செய்யத்தக்கவையென்று விசாரித்துப் பார்க்கும் போது குருவுபதேசம்பெறல், தா மொருவருக்கு உபதேசம்பண்ணல், வித்தை பாராயணஞ்செய்தல், வித்தைஒருவருக் கோதல், ஒருவனை வணங்கல், எதிரியின்படை துரைத்தல், பயிர்விளைதல், வியாபாரஞ்செய்தல், திருடல், சூதமாடல், ஒருவனுலுந் தீர்த்தற்கரிதாகிய வழக்குபேசல் இயானை, குதிரை; தேர் இவைகளிலேறி சவாரிபோதல் விளங்கிவரும்படியான் எழுத்தெழுதல், சங்கீதம்பாடல் பேசத்தொடங்கல், பகைமையுண்டாக்கல், ஒருவனைப் பங்கம்பண்ணல், கோள்சொல்லுதல் பசாசுஓட்டுதல், மந்திரசிட்டை சாதிக்குதல், மருந்துசாப்பிடுதல், போசனம்புசித்தல், நித்திரை செய்தல், ஸ்நானஞ்செய்தல், கொல்லுதற் கேதுவாகிய விஷங்களை நிவர்த்திசெய்தல், தம்பனயோக சாதனஞ் செய்தல் இவைகளை யெல்லாங்குறித்தனுபவித்துப் பார்க்கில் நன்மையாகும்- எ-று.

மற்றச் சூரியசந்திரர் இருவருக்கும் விபரம் ௬௬-ங் கவியையும் ௬௭ ங கவியையும பார்க்க. (௬)

சுழிமுனை பூரணசூனியபலன் கூறுகின்றார்.

காலிரண்டுமொதத்தக்காற்சமாதிகன்றுங
கருதியதொன்றுகாது காணுமெனிற்காணு
சிலமிருக்தவமுடையாய் நன்மையில்லை
தீயானவாங்கருமஞ் சேரக்கூடுஞ்
சாலநிறைபூரணத்தில் வழக்குவாது
தர்க்கம்போரங்கமன்னர் தம்மைக்காண்டன்
மூலமருஞ்சூனியத்து னிறுதநில்வெல்வர்
முயல்வதெல்லாங்கயல்விழியால் முயலலாமே.

இ-ள், சுழிமுனையா யிரண்டுசாமும ஒத்தோடுகையில் என்னவை செய்யலா மென்றுல சமாதியோகஞ்செய்தல் (கரு

விகரணங்களோயச் சும்மாவிருக்குதல்) நன்மைவினைத்தகாரி
யம் ஒன்றேனுமாகாது அப்போது ஒருவன்வந்து இப்பொரு
ளகப்படுமோ வென்றால் அது அகப்படாது சிலம்பொருந்திய
தவமுடைய பெண்ணே? இந்தச் சுழிமுனை நடக்கும்போது
நன்மையேகிடையாது கெட்டகாரியங்களெல்லாம்பலிக்கும்
இது இங்ஙனம்நிற்க (சரம்) மூக்கில் எந்தப்புழையில் ஓடுகி
ன்றதோ அந்தப்பக்கம் பூர்ணமென்றும் சரம்ஓடாதபக்கம் சூ
னியமென்றும் பேர் இப்படியான குறைவில்லாத பூரணபக்
கத்தில் நின்று வழக்குப்பேசுகிறவர்களோ தர்க்கம்பண்ணுகிற
வர்களோ சண்டைபண்ணுகிறவர்களோ ஒருவன்போய்க்காணும்
அரசனை(அல்லது) தமக்குமேற்பட்டவனை இவ்வாறு கூறப்ப
ட்டவர்களோ இதனால்காணலா மென்று ஒரு சாட்சியும் இல்
லாதபடி சரமோடாத பக்கமாகிய சூனியபக்கத்தில் நிறுத்தி
னால் பூரணபக்கத்தி லிருக்கிறவன் வெல்வான் அல்லாமலும்
ஒருவன் இப்படிப்பட்டவர்வனைத் தனக்குச் சரமோடாத
சூனியபக்கத்தில் நிறுத்தினால் அவன்பேச்சே மேலாய் வெ
ல்வன் எவ்வெவற்றை எவ்வெவ்வாறு நாட்டமுற் றறியவேண்
டுமோ அவ்வவ்வாறே யறியலாம் சேல்மீன்போலுங் கண்க
ளையுடைய பெண்ணே-எ-று (ம)

யாத்திரை பிரயாணமாகும்போது சரம்

இசைவு பிசகாயிருந்தால் அதற்கு

உபசாந்தங் கூறுகின்றார்.

முயலுங்கா றபூரணத்தி லிடத்திலிரண்டடிபோ
முன்வலமென் மூன்றடிபோ மொழியும்யாத்திரைக்கு
கயலடருங் கண்மடவாய்;கருமமதுமுற்றுங்
கருதுவடக் குங்கிழக்கு மிடதநேபோகி
லியலுமொரு பகையுண்டா மீளமாட்டா
ரிசைந்தவலந் தெற்குமேற் கேகவென்னிற்
புயலடரும் புனல்புகுந்து மரணமாவார்
புணர்முலைக்கச் சிறுமிடையாய் போற்றிக்காணே.

இ-ள். பின்-௰௬-ம் கவியில் சொல்லியபடி மேற்றிசையும் தென்றிசையும் சந்திரன்றிசை-வடக்கு கிழக்கும் சூரியன்றிசை இது இங்ஙனமிருக்க சொல்லப்பட்ட யாத்திரைபோக நாடியவன் சந்திரனில் சந்திரன் திசையே போகவேண்டியது சூரியனில் சூரியன்றிசையே போகவேண்டியது அல்லாமலும் முன் எழாங்கவியிற் சொல்லியபடி இருபதின் காதவழிக்கப்புரமான தலங்களுக்கும் சந்திரனில் புறப்பட்டுச் சூரியனில் ஊர்போய்ச் சேரவேண்டியது அப்படி சேரத் தருணபேதமாய்ச் சமூமிசைவுபிசகாய் மாறியோடினால் (அதற்கு உபசாந்தம்யாதெனில் சூரியகலையிற் போகவேண்டியதிக்கின் யாத்திரைக்குச் சந்திர கலையாயிருந்தால் அந்தச் சந்திரன் சுவாசத்தை யேற வுள்ளேயிழுத்து பூரணமாக்கி இந்தக்காலையே ரெண்டுதா முன்னிட்டுவைத்து பின்பு சுதாவாய் நடந்து வழியில் கொஞ்சதூரம் நிற்காமல்போக வேண்டியது (இதுசாந்தி) சந்திரன்பலன்கெட்டுப்போகும்தீமையில்லை சந்திரகலையிற் போகவேண்டியதிசையின் யாத்திரைக்குச்சூரிய கலையாயிருந்தால் சூரியன்சுவாசத்தை ஏற வுள்ளேயிழுத்து அக்காலையே மூன்றடி முன்னிட்டுவைத்துப் பின்புசுதாவாய் நடந்துவழியில் கொஞ்சதூரநிற்காமல்போகவேண்டியது (இதுஅதற்குச்சாந்தி) சூரியன்பலன் கெட்டுப்போகும்தீமையில்லை சேல்போலங் கண்களையுடைய பெண்ணேபோகிறகாரியம் ஜெயமாகும் இப்படியல்லாமல் வடக்குத்திசையும் கிழக்குத்திசையும் யாத்திரை) சந்திரன்நடக்கும்போதுபோனால் போகிறவிடத்தில் ஒருவனுக் கொருவன் விரோதப்பட்டுப் போவான் திரும்பமாட்டான் மேற்குத்திசையும் தெற்குத் திசையும் சூரியகலை பாயும்போது யாத்திரைபோனால் சலத்தினால் அல்லது மழையினால் இறந்துபோவார்கள் கச்சினாலிறுகி நெருக்கிய தனங்களையும் இப்போதுதா னற்றுப்போவதுபோற் றோற்றுகின்ற இடையினையுமுடைய பெண்ணே விசுவாசித்துப்பார்-எ-று (௰௧)

ஒருவனுக்கு நன்மை தீமை சொல்லு
மார்க்கங் கூறுகின்றார்.

காணவொரு கருமத்தைக் குறித்துவந்தோன்
கருதியமுன் னுமிடமு மேலுமிந்து

பேணுவல முகங்கீழும் பின்னும்வெய்யோன்
பேசியசொல் லெழுத்திரட்டை சோமனுகு
மாணுமெழுத் தொற்றையேற் கரிமோனு
மதிக்குமவன் பூரணத்தில் வந்த கேட்கிற்
பூணவுரைத் தனவெல்லா நன்றேயாகும்
பொல்லாது சூனியதகிற் புகலுவோர்க்கே.

இ-ள், நாம் விழையுங்காரியம் நன்மைரு தீமைதா கண்டறிவோ மென்று வந்தவன்முன ம-ம கவியிற்சொலலியபடி சூரியகலை நடக்கும்போது அவன் அப் பூரணமாகவே யிருந்தானாகில் அவன் பொருந்தச சொன்ன காரியஙகளெல்லாம் அவனுக்குச் சித்திக்கும் அப்படியில்லாமல வலதுபக்கத்தில் நின்றாலும்சரம்பார்க்கிறவன் மேலிருக்க வந்தவன் கீழிருந்து கேட்டாலும் நேர்நேரே பின்னிருந்து கேட்டாலும் அச சூரியகலைக்குடைய பலிதமேசொலக சந்திரகலை நடக்கும்போது அவன் அப் பூரணபக்கமாகவேயிருந்து வினவினுனாகில் அவன்சொன்ன காரியஙகளெலலாம் அவனுக்குப்பலிக்கும் அப்படியில்லாமல் இடதுபக்கத்தில் நின்றாலும் நேர்நேரே முன்னேநின்றாலும் மேலிடத்திலிருந்தாலும் அசசந்திரகலைக்குடையகுணமேசொல்க இதுதவிற சரம்ஓடாத சூனியபக்கத்தில்நின்று கேட்பானாகில் அவன்கேட்ட காரியம்பொல்லாதாகும்பலிக்கமாட்டாதென்க அல்லாமலும அவன் முதல்வாய்திறந்துசொன்னவார்த்தையின் எழுததை யெண்ணிப் பார்தது ஒற்றைப்படஙகாகில்சூரியனுடைய குணஞ்சொலக இரட்டையாகில் சந்திரனுடைய குணஞ்சொல்க மேல் கீழ் என்றது மெத்தைவீட்டையும்கிணறுமுதலிய பளளக்குழிகளைக்குறித்ததென்றறிக இப்படியாக ௫-௯-வகையிற் சொல்லி யிருக்கின்றதே இவையெல்லா மேககாலத்தி லொத்திருக்கவேண்டு மென்பதில்லை எதாவது ஒன்றைப்பார்த்துசசொல்லலாமென்பதுகருத்து மற்றும்வருவனவற்றுற்காண்க இன்னமும்விரித்துசசொல்லுமளவில் சந்திரனுடையதிசையும்பக்கமும் அதுபூரணமானாலுஞ்சரிதான் கிஞ்சித்து மத்திபம் சூரியனுடைய திசையும் பக்கமும் அது சூனியமானாலுஞ் சரிதான் திரணமாயினு நன்மையுண்டேய

ல்லது வியர்த்தமாகாது அதற்குப்பிரமாணம் ௬-ம கவியிலும் ௭-ம் கவியிலும் சந்திரனைத் திராசி யென்றுஞ் சூரியனைச சராசியென்றுஞ் செப்பி யிருப்பதனை யறிக இக்கவிகளில் உரி-பண்பு அல்லது அடைமொழிகளை சேரவிடாமல் பதவு ரையாய்ச சொல்லிவருவோமென்றால் விரிவுரைக்கு இசைவு பட்டு வருவதரிது ஆயினும் அவ்வுரிசுளைமாத்திரம் சேர்த்துக் கொண்டு வருவோமென்றால் ஒருஸ்திரீ யானவள் தன்புருஷ னுக்கு அமளியிற் சம்போக காலத்தில் கால்கை படுதல் முத லிய கற்புவமை தவறுதல் கூடாதென்று அங்கு முலைகளை யிருக்கக் காண்பிக்கப்புகுவாள் புகுந்தால்அச்சதிபதிகள்கொ ண்ட கருத்து ஒருமித்தது தடையின்றி நிறைவேறுமோ எரு துபோல் இங்கும் விகாரமில்லாமல் உரை புணர்வுறமாட்டா தாதலால் சமையவுச்சிதமாய் சேர்படுத்தவும் நிராகரிக்கவு மாயிற்று.

இதுவுமது.

அதினும் முன் ௰-ம் கவியிற்சொல்லிய பூரண
சூனியங்களின் விகற்பங்கூறுகின்றார்.

கேடென்றேன் பறிகொடுத்தோ னஞ்சுகின்றேன்
 இடையினிற் சாவென்றேன் இளர்நோய்கொண்டோன்
பாடொன்று மில்லைசூனியத்தேயாகிற்
 பலித்துவிடும் பூரணத்திற் பகர்ந்தவெல்லாம்
ஆடும்பையரவென்ன வலகுளாளே
 யடுத்தொருவன் வந்ததிசை சோமனுகி
நீடுஞ்சொல் விரவியாய் நிற்குமாகில்
 நினைத்தமொழியாகாது நின்றபாரே.

இ-ள். ஒருவன்வந்து நானின்னதனால் கெட்டுப்போனே னென்றாலும் விடங்கடித்தது அல்லது விடமுண்டே னென் றாலும் இதோ படுக்கையிற்றானே பிராணன் போகின்றது என்றாலும் அல்லது இவைமுதலாகச் சொல்லப்பட்ட அபாய குண குறிகளவையாயினுஞ் சரிதான்சரம் ஓடாதசூனியபக் கமாய்வந்து நின்றானகில் ஒருவருத்தமுமில்லை நிவர்த்தியாகி

ப் போகுமென்க அப்படியல்லாமல் சரம் ஓடுகிறபக்கமாகிய பூரணபக்கத்தில் வந்துநின்று சொல்லுவானாகில் வந்தவன் எப்படியெப்படிச் சொன்னானோ அப்படி அப்படியேபலித்து ப்போகும்பறிபோன பொருள்படாது நஞ்சுமீளாது படுக்கையினையாளிதேறான் அன்றியும்சூனியத்தில் எவனாவது வந்து எதையாவதுசொன்னானாகில் அது ஒருகாலத்தில்அபத்தமான வார்த்தைகளானாலுமாகும் பூரணத்திற் சொன்ன சொல் உண்மையாயிருக்கும் இதல்லாமலும் ஆடும்பையரவென்ன வல்குலையுடையபெண்ணே வந்தவனுடைய திசையும்மேல் சொல்லியபடி எழுத்தையும் எண்ணிப்பார்க்கில் அவன் திசை சந்திரன் கூறாகவும் முதற்சொன்னசொல் சூரியன் கூறாகவுமிருந்தால் மேற்சொல்லிய காரியங்களுக்குக்கிஞ்சித்து மத்திபமாயினு முழுமோசமல்லவென்னமுஞ் சொல்லுகிறேன்கேள். (௧௩)

கருப்பக்குறி கூறுகின்றார்.

கேட்டவனுருயிர்தன்னி லேறிநிற்றற்
 கிளர்கையிலுயிருளவை பிடித்துநிற்றல்
வாட்டமற வருமதலை யிடத்திற்பெண்ணும்
 வலமாகிநின்றுரைத்தல் மைந்தனாகு
மீட்டமில்சூனியத்துரைக்கிற்கேடேயாகு
 மிருஞ்சுழிமுனை மேலுரைக்கி லலியேயாகு
காட்டுமொழிசூனியம் பூரணத்தேயாகி
 கடுக்கமுடன் மகவுயிர்க்கக்கிடைக்குமன்றே.

இ-ள், ஒருவன் கர்ப்பத்தைக்குறித்துக் கேட்குங்காலத்தில் வந்தவன் ஒரு ஜீவன்பேரி லேறிக்கொண் டிருந்தானானாலும் உயிருள்ள யாதொன்றைக் கைப்பிடித்துக்கொண் டிருந்தானானாலும் ஒருஜீவனைத்தொட்டு நின்றானானாலும் அவன்நின்ற பக்கம் வலமாகில் அதிலும் பூரண மானாற்றான் ஆண்பிள்ளை பிறக்கு மென்க, இடமாகில் பூரணமானாற்றான் பெண்ணென்க, அப்படி பூரணபக்கமில்லாமல் சூனியபக்கமா யிருந்து எதனைத் தொட்டு நின்றாலும் சும்மா நின்றாலும் வலமாகில்.

ஆண்தான் இடமாகில் பெண்தான் ஆனால்பிறக்கின்றபிள்ளை ஈரும் அப்போது சரம்பார்க்கிறவனுக்கு சுழிமுனையாயிருந் தால் பிள்ளை ஆணுருவின தல்லாமலும் பெண்ணுருவின தல் லாமலும் அலியாகுமென்க, இப்படியாக வந்தவன் முன்வல த்தில் நின்று அவன் வந்த காரியத்தைச் சொல்லிக்கொண்ட பின் இடத்தில்வந்து நிற்கில் தாய்வயற்றி லிருக்கிற பிள்ளை வருத்தப்பட்டு பின் பிறக்குமென்க எ-று

அன்றே அசை. (௧௪)

கெற்பக்குறியும் போர்வெல்லுங் குறியுங்

கூறுகின்றார்.

கிடைக்கின்ற மைந்தனுஞ் சூனியத்திற்கேடாகு
கெடாதிருவர் போருவதும் சூனியத்திலோது
வடிகின்ற மொழியின்முதற் சொன்னோரேற்பன்
மருவியபூரணத்தின் பின்புசொன்னோன்றேற்பன்
நடக்கின்ற சுழிமுனையில் வேட்டலர்கள்போர்த
ணட்பாகும் வலயத்தியங்க நடப்போன்வெல்வன்
இடத்தியங்கி லேந்தோடிபோ யெதிர்ததோன்வெல்வ
னிருஞ்சுழினை நிறகிலிட ரில்லைபாரே.

இ-ள், இதற்கு முன்கவியில் சூனியத்திற் கேட்ட பிள்ளை மரிக்குமென்றாலும் போர்வழக்குவாதைக்குறித்து ஒருவன்வ ந்து இன்னவன் இன்னவன் எவன் வெல்வானென்றால்வந் தவன் சூனியபக்ஷத்திலிருந்துசொன்னானாகில் முன் சொல்ல ப்பட்ட பெயரை யுடையவன்தோற்பன் பூரணமாகில் பின்பு சொல்லப்பட்ட பெயரை யுடையவன்தோற்பன் அப்போது சரம் பார்க்கிறவனுக்குச் சுழிமுனை நடந்தால் அவ்விருவரு மொருமித்துப் போவார்கள் இதல்லாமலும் சண்டை வாது வழக்கு நேர்கிறவனுக்கு அப்போது சூரியகலையாயிருந்தால் வெல்வன் சந்திரகலையா யிருக்கிறவன் தோற்பன் சுழிமுனை யாகில் ஒருமித்துப்போவார்கள் அப்படி சந்திரகலை நடக்கப் பெற்றவன்முன் ௰௩-ம் கவியிற் சொல்லியபடி சரத்தை யுள்

ளிழுத்தப் பூரணமாக்கி அச்சரம் நடக்கிறகாலேயே முன் ளிட்டுஜெந்தடிபோய்ப் பின்பு நேர்நடந்தால் வெல்வன்-எ-று.

சரத்தின் ஸ்பரிசங் கூறுகின்றார்.

பாரக்குங்கா லிடமெனினும் வலமெனினுமொக்கும்
பஞ்சபூதந் தியக்கம் பகருங்காலை
சாற்றியகண் டென்சேரிற் பிரிதிவியாந்
தப்பாம லப்பினுக்குத் தாழவோடு
மேற்றிசையை நோக்கியெழுமங்கிவாயு
மெய்யுணர்ந்தோர் புறத்தோடு மேன்மைகுன்று
நீர்துரையா நாற்றிசையுஞ் சிதறியோட
னெடுவானெனன் றுரைத்திடு நிலத்துளோர்க்கே.

இ-ள். இடை, பின்கலை, சுழிமுனை யென்று சொல்லப்பட்ட இம் மூன்று கலைகளையும் அவற்றின் பயன்களனுபவத்தையும் பரிட்சித்துப் பார்க்குங்காலத்தில் ஒத்துவரும் அந்தர்த நாடிகளுக்குள் பஞ்ச பூதியங்கள் நடப்பதுண்டு அவற்றைத் தேர்ந்தறிந் தனுபவிப்பதே அரியதாகும் யாதெனில் மூக்கிலிருந்து வருகிற சரம் அம்மூக்குத்தண்டைச் சார்ந்துவந்தால், பிருதிவின் கூறென்றறிக கீழ்நோக்கியோடில் அப்புவின் கூறென்றறிக மேலாகப் பாய்ந்தால் தேயுவின் கூறென்றறிக அத் தண்டிற்குநேராகிய மற்றொருபுரததைச் சார்ந்து வீசினால் வாயுவின் கூறென்றறிக இப்படி நான்குபக்கங்களுள் ஒரு பக்கமல்லாமல் அந் நான்குபக்கமும்கலந்து நடந்தால் அது ஆகாயத்தின் கூறென்றறிந்துஉலகத்துள்ளவர்களுக்குச் சொல்லென்றவாறு இப் பஞ்சபூதியம் இடத்திற்கும் வலத்திற்கும் ஒன்றுதான்-எ-று. (கள)

சரத்தின் வடிவமும் நிறமும் அச்சரத்தின்
ரசக்கியமுங்கூறுகின்றார்.

நிலம்பொன்மை யிரதசெடுநெ கோணநான்கா
நீளம்பன் னிருவிரலா நீர்தான்வெண்மை
வடிவுகண்டந் துவர்த்திருக்கு
மெட்டிரண்டு விரலோடு மெரிதான்செம்மை

நலங்கொண்ட முக்கோண மழற்சிமேலாய்
நாலிரண்டு விரலோடு நளிர்கானீலத்
துலங்குபுலி யறுகோண மொருபக்கத்திற்
றய்யநால் விரலோடுஞ் சொல்லுங்காலே.

இ-ள், பஞ்சபூதியசரம் நடப்பதை இன்ன மெப்படிக்கண்டு தெளியலா மெனில் பிருதிவு சரம் பொன்மை அப்புச்சரம் வெண்மை தேயுச்சரம் செம்மை வாயுச்சரம் கருமையாயிருக்கும் அப்போது கண்டத்தில் எவ்வித உணர்ச்சியாகுமெனில் பிரிதிவுக்கு கண்டம் தித்திக்கும் அப்புவிற்கு துவர்க்கும் தேயுவிற்கு உவர்க்கும் அல்லது அழற்சியா யிருக்கும் வாயுவிற்கு புளிக்கும். எவ்வடிவா யிருக்குமெனில் பிரிதிவு எண்கோணம் அப்பு எட்டுநாள் பிறைபோ லிருக்கும் தேயு முக்கோணம் வாயு அறுகோணம அன்றியும் அது ஓடுகிற நீட்சியைச்சொல்லுங்கால் பிரிதிவு பன்னிரண்டங்குலம் அப்பு பதினறு அங்குலம் தேயு எட்டு அங்குலம் வாயுநான்கு அங்குலமென்றறிக இதல்லாமலும் இக்கவியில் இரதமென்று தனியே போட்டபடியினல் முதல் இரசமாகவே வைத்துக்கொள்ளலாயிற்று உலகத்தவருக்குச் சொல்லுங்காலத்தில் இப்பேதங்களை யவர்க ளறிவது அறியதென்று ஒருபூதியத்திற்கு நான்கு குறிசொல்லியிருக்கின்றனர் ஒன்றில்லாவிட்டாலும் மற்றொன்றிலாவது தெரியவேண்டியது- எ-று. (௧௭)

இதுவும் அதுவுடன் அப்பூதியநடக்கையில்
செய்கருமங்களின் குணுகுணங்

சொல்லியவான் வடிவதுதான் வட்டமாகுந்
துய்யதொரு விரஞசி யெல்லாஞ்சுற்று
மொல்லைநிறம் படிகங்கைப் பிரதம்வாயு
மோடிவரும் பூதங்கட் குளதோசொல்க
மல்லலில நீர்க்குமிகு பயனுஞ்செந்தீ
மத்திபமாம் பகர்காலும் வானுந்தீதாம்
பல்வினையாய் சரம்பார்ப்போன் றன்னைபோற்றி
பாலிலையென் றோதியிட்டுப் பணித்துபாரே.

இ-ள். ஆகாயபூதியம் நடக்கும்போது நிறம் படிகம்இரசம் கண்டங் கசக்கும், வடிவு; வட்டம், நீட்சி. ஓரங்குலம்இப்படியாக பூதியங்களின் குணகுணங்களை சொல்லவெனில் பிரிதிவுக்கும் அப்புக்கும் உத்தமம், தேயுமத்திபம், வாயுவும்ஆகாசமும் தீதாம், வளையல்களைத்தரித்த கரதனையுடைய பெண்ணே சரம்பார்த்து குறி சொல்லுகிறவனுக்குத் தாம்பூலமுதலானவைகள் கொடுத்து உபசாராதிகள் செய்து பின் கேள் இது இங்ஙனம் நிற்க முன் எஅ - ங்கவியிற் சொல்லியபடி சூரிய சந்திரகலையிற் செய்யவேண்டிய கருமங்களும் இக்கவியை யனுசரிக்கவேண்டியது-சஅ-சகூ-ங் கவியைப்பார்க்கவேண்டியது அதிலும் சரம்பார்க்கிறவன் தாம்பூலந் தரித்துக்கொள்ளுகையில் வினவிக் கேட்கிறவனுக்குஞ் சொல்லுகிறவனுக்கும் நன்கு ஒருவன் பேரைக்குறித்து வினவில் அவனுக்குரியவைகளைக் கூறுகின்றார் எ-று.

பாராகுமுதுகுநீர் காலதாகும்
  பைந்தழல்மார் பவனங்கைப் படாவானசென்னி
பேராமல் வினவினபோ துதித்தபூதம்
  பேர்படைத்த விடங்களிலே பிழையில்லாம
லேராகும் பூரணமாம் பக்கந்தன்னி
  லேறிவெட்டுங் கோல்படுதே விசைததெல்லாங்
கூராழி மால்வந்து விலக்கினாலுங்
  குறையாமல் படுப்பதெங்காண் குறிக்குங்காலே.

இ-ள், முன் ௯௫-ங்கவியிற் சொல்லியபடி இருவரைச் சட்டிக்காட்டாமலும் சூனியபக்கத்தி விராமலும் பூரணபக்கமாகவிருந்து சண்டைக்குப் போகிறவன் என்னவானெனில ஆயுதங்களினால் காயம்பட்டு வருவானென்று சொல்க அதிலும் அப்போது பிரிதிவு நடந்தால முதுகில் படுமென்க அப்புவாகில் காலில், தேயு,மார்பு. வாயு,கை, ஆகாயமாகில் தலையிற் படுமெனச் சொல்க விஷ்ணுதேவன் வந்து விலக்கினாலுந் தப்பித்துக்கொண்டு வரமாட்டானென்க-எ-று.                    (௯௬)

இந்தவிந்தப் பூதியத்துக் கிந்தவிந்த ஆயுதமெடுத்துப்
போருகவெனவும், அதற் கிவ்விடத்தி னிற்க
வெனவுங் கூறுகின்றார்.

கால்மூலை தொடங்கியழன் மூலையேறக்
கயிறெனவே கீறிமதி கதிரோனாக
கோல்மேற்குந் தெற்குமதி நிலமாக்கொள்க
கொழுங்கதிரோன் கிழக்குவடக் காகக்கொள்க
சேல்போலு நெடுங்கண்ணாய் புவிக்குங்கத்தி
சேர்ந்தசலம் வானழற்குச சிலைகாலுக்கு
மேற்றண்டாம் வானுக்கா யுதங்கல்லேந்தி
விதித்தநிலத் திற்பொருதல் வெற்றியாமே.

இ-ள், மேற்கூறியபடி சமர்செய்ய வேண்டில் வாயுமூலை தொடங்கி அக்கினிமூலையளவாக ஒருகயிறு பிடித்தாற்போற் சரியாய் பாவனைசெய்து அதில் மேற்கையுந் தெற்கையுஞ் சந்திரன் கூறாகவும், வடக்கேயுங் கிழக்கேயுஞ் சூரியன்கூறாகவுங் கொண்டு போர்செய்கிறவனுக்கு அப்போதுசூரியகலை இயங்கில் தான் அச்சூரியன் றிசையிற்றானே நின்று எதிரியைச் சந்திரன் றிசையில் நிறுத்திச் சமர்செய்யவேண்டியது அப்படிச் செய்கையில் சந்திரனாலுஞ் சூரியனாலுஞ் சரி வடுத்தெரியு மாயுதங்கள் எவையெனில் சேல்மீன்போலும் நீண்டகண்களையுடைய பெண்ணே பிருதிவாகில் கத்தி அப்புவாகில் வாள், தேயுவாகில் வில், வாயுவாகில் தண்டு, ஆகாயமாகில் கல், இப்படியாக அந்தவந்த பூதியங்களுக்கு அந்தவந்த ஆயுதங்களேந்தி விதித்தபடி அந்தந்த நிலத்தினின்று சண்டைசெய்தால் வெற்றியடைவான்-எ-று.

நோய்க்குறி கூறுகின்றார்.

ஆகியநோய் புருடருக்காய் புருடர்வலங்கேட்கி
லாறுமென்க மாதருக்கு மாதரிடங்கேட்கிற்
சோகமிகும் முறைதப்பிற் பொல்லாதென்க
தொலையாது நாட்சென்று மீளுமென்க

தோகைநிலநாட்செவ்வாய் கர்த்திகைநாளு
மேழெழுநாளுமூன்றதப்பிற றருசப்பண்ணு
மேஷகைகாலுகாண்டினை மிருந்தாறுகொலஹு
மெழிலவான மன்றுதப்பி லிறககுமபின்னே.

இ-ள், புருடன் கொண்டபிணிக்காகப் புருடனே வந்து சரம்பார்க்கிறவனைக் கண்டு ஞானத்தைய் லகுவாமாவென் வினவிலு மந்நோய்தா விலையாம் சரம் பார்க்கிறவனுக்கு வலது பக்கத்தில்நின்று கேட்கிலும் நிவர்த்தியாகும் ஐயமில்லை ஸ்திரீகொண்ட நலிக்காக ஸ்திரீயேவந்து வினவினலுங் குணமாகும் வந்தவள் அவனுக்கு இடதுபக்கத்தில்நின்று கேட்கில் மீளும் சமுசயமில்லை முன்பதினமூனருங்கவியிற் சொல்லியபடி சூனியபக்கமாகவேயிருந்தாலு முதத்மம் இப்படி யல்லாமல்ஆணுக்குப் பெணவந்தாலும பெணணுக்கு ஆணவந்தாலும் அவ்வியாதி தீர்வது துலபம் அன்றியும ஒருவன் வலதுபக்கத்தினின்று குறி கேட்டுக் கொண்டே இடதுபக்கத்தில் வந்து நின்றாலும் ஒருத்தி யிடது பக்கத்தில் நின்று குறிகேட்டுக்கொண்டே வலதுபக்கத்தில் வந்து நின்றாலும் நோய் போக்கு கடினம் ஆயினும் மெல்லென நாட்சென்று சொஸ்தப்படும் அப்படி யப்படியே சரியாய்வந்து கேட்கில் அவன் நோய்நீங்குமென்க அதிலுமெப்போதுநீருமெனில் அந்நேரம் பூதியம் பிருதிவாகில் கொஞ்சநாட் செல்லுமென்க அப்புவாகில்விரைவிலென்க அக்கினியாகில் மூன்றுநாட்களில் விமோசனமென்க மிருந்தாற் கொல்லும் வாயுவாகில் அன்றைக்கே நோய் பிரிந்துகாணும் மிஞ்சில மறுநாளமரிக்குமென்க-எ-று

இதின் முன் கவிபுற சொல்லிய வியல்பும அதன்மேற் கவிகளிற் செப்பிய பூதியங்களின் குணமும் முன் கூ-ங்கவியிற் கூறியபடி சரம்பார்க்கிறவனை ஓரிடத்துக்குப் போகவேண்டியது இத்தருணமென்றும பேசவேண்டியது இத்தருணமென்றுங் கூறுகின்றார்.

இறக்குமுபயர் தனக்கைக்து நாளிலேவினைக்காற்
சாவில்லை யிதுவுண் மெய்யே

பிறக்குமொரு பூதத்தி லைந்துபூதம்
பிரிந்தோடு மதுவுன் பேசக்கேட்டுச்
சிறப்புடைய பயன்றெரிவ தெல்லாநூலின்
செயலதனுற்றேவர்களுந் தெரியமாட்டார்
நிறக்குமதிக் கிருந்தழைத்தால் வந்துகேட்டா
னின்வெயிலாச் செலசொல்க நினைந்துகேளே.

இ-ள். இதற்கு முன் கவியிற் கூறிய பூதியங்களி னியற்கை யாகிய குணங்களுக்குரியவை சொல்லக்கூடாது அதற்குமுன் ௰-ஐ கவியிற் சொல்லியபடி சுழிமுனை நடக்கில் ஆகுமென்ப து ஆகாது ஆகாதென்பது ஆகும்போல இப்போதும் ஒருவ ன் நோயைக்குறித்துக் கேட்கும்போது சுழிமுனை நடந்தால் அந் நோயாளி ஐந்துதினங்களில் மரிக்காமல் தப்பினால் அவ னுக் கினியொரு விபத்து வருமளவுஞ்சாகான் இதுமெய்மை அன்றியும்முன் ௰௪-ங் கவியிற் சொல்லிய வண்ணம் ஒருபக் கமாடுகிறசரத்தில் ஐந்துவகைபட்ட பூதியங்களுண்டு அப்பூதி யம்ஒவ்வொன்றுக்குள் ஐந்துபிரிந்து நடப்பனவுண்டு அவை எவையெனில் ஒருபிருதிவுக்கு பிருதி விலம்பு, பிருதிவிற் றே யு,பிருதிவில் வாயு, பிருதிவில் ஆகாயம்,|இப்படி இவ்வைந்து க்குள் ளைந்தாயோடும் இதனையும் மற்றின னூற்பயன் யா வையும் குருமுகாந்தரத்தி லறிந்துகொள்வதல்லாமல் தேவர் களேயானாலுந் தனியே சுருதியைக்கொண்டு வருவைதள்ளிச் சுயானுபவத்தால் இந்நூலைகொண்டேஅறிவது கூடாது அ ல்லாமலும சரம்பார்க்கிறவன் ஒருவன்வந்தழைத்தால்அவன் சூரியகலை யியங்கும்போதே போகவேண்டியது பேசுகிறதா னாலும் சூரிய னியங்கும்போதே சொல்லவேண்டியது மற்றப டி கூடாது மிஞ்சிநடக்கில் மதிபமென்றறிக. இன்னமுஞ் சொல்லுகிறேன் மனதுற்றுக்கேள்.

முன் ௰௩-ங்கவியிற்சொல்லிய பூதியசரங்களி

னியல்பு கூறுகின்றார்.

கேளிதனை நிலத்திற்கு நீரிற்குங்குணமாம்
கெற்பமெனி லானுகும் கினர்ந்தொருவன்வினவி

ஞளின்மிகு லாபங்கள் சாந்திபோக்கு
நனயநன் ருகுமங்கித னிலங்கம்வெல்லும்
வாளமரிற் பொல்லாது கெபங்கேடாம்
வாயுவெனிற் பெண்ணுகு மற்போர்தோர்க்கு
நீள்விசும்பிற் றனுவித்தை போசந்தானு
நீமேிக கெற்பமெனி லவியாய்வீயும்.

இ-ள். பெண்ணே கருத்துற்றுக் கேட்பாயாக முன்-ம்கூ-ங் கவியிற் சொல்லிய பூதியசரங்களி னியல்பு கூறுமிடத்தில் பிருதிவும் அப்பும் நன்மைகளேயேதருவன. இதன்பின்-ங௩-ங் கவியிற் சொல்லியபடி ஐந்துநாழிகைக்கு மிஞ்சி நடக்கையில் இவ்விரண்டு பூதியங்கள் அதிகமாக நடந்தால் லாபமுண்டு வேண்டில்-ம்அ-ங் கவியையும் பார்க்கில் ஈ திங்ஙனம் நிற்க முன்-ம்சு-ங் கவியிற் சொல்லியபடி ஒருபிராணியைக் கைப்பற்ருமலும் அதின்பேரி லூர்ந்தூசில்லாமலுந் தனியேவந்து குனியத்தினில்லாமல் பூரணத்தில் நின்று கெற்பக்குறி கேட்டால் அப்போது சரம் பிருதிவாவது, அப்புவாவதுநடந்தால் ஆண்பிள்ளை பிறக்குமென்க க, சு-வது கவியிற் சொல்லியபடி சாந்திபண்ணுதல் போக்குகழித்தல் செய்யவேண்டியது அங்ஙனஞ் சொல்லிய சுலேபில் இவ்விரண்டு பூதியங்களிலேதாவது நடக்கும்போது செய்தால் பலிக்கும் இதன்றித் தேயுபூதியம் நடக்கையில் போராங்கம் புரியில் வெல்லும் அப்போரில் வாளெடுத்தால் மத்திபமாம் அப்போது கெற்பத்தைக்கேட்டால் அது அழிந்துபோகும் வாயு நடக்கையிற் கெற்பம் பெண்ணுமென்க மற்போர் தோல்வியடையும் ஆகாயமாகில் விற்சமர்செயிக்கும் இப் போரிலக்கணஞ் செப்பிய உ0-ங் கவியையும்-ம்அ-ங் கவியையும்-ம்-ங் கவியையும் பார்க்கவும் கூ-ங்-கவியிற்சொல்லிய யோகம்புரிய நன்மைஆகாயச்சரம் நடக்கையில் கெற்பங்கேட்டால் அவியாய்ப்புறக்கும் பிறந்து மிறக்கும் என்க-எ-று. (உங)

திதி வாரம் நட்சத்திரகாலசரபன் முன் சு-ங் கவியிலும் ௩௫-ங் கவியிலுஞ் சொல்லியபடி பிராதகாலத்திற் சரம்பார்க்கவேண்டிய கிரமத்தினும் விசேஷமாய்ப் பார்க்கவேண்டியது இதுவென்றுங் கூறுகின்ருர்.

வியாத பிரதமைமுதல் விளங்கும்பக்கம்
விரவிவரு முப்பதிறு மும்மூன்றாக
மாயாது வருஞ்சோம னிடமதாக
வருகின்ற வருக்கனுக்கும் வலமதாகச்
சாயாது புதன்வெள்ளி திங்கண்மூன்றுந்
தப்பாது சந்திரனுஞ் சாற்றுங்காலே
தேயாது கதிர்செவ்வாய் சனிவியாழஞ்
செங்கதிரோன் றினமென்று தேறுநீயே.

இ-ள், முன் ௬-ங் கவியிலும் பின் ௩௫-ங் கவியிலுஞ் சொல்லியபடி பிராதகாலத்தில் சரம்பார்க்கவேண்டிய கிரமத்திலும் விசேடமாய்ப் பார்க்கவேண்டிய தெதுவெனில் பொழுதுவிடிய ரு-நாழிகை யிருக்கையில் எழுந்து மேல் ௬-ங் கவியிற் சொல்லியபடி சரம் பார்க்கும்போது வளர்பிறை பிரதமைக்கும் துவிதிகைக்குந் திரிதிகைக்கும் சந்திரகலை யுதித்து நடக்கவேண்டியது இப்படி மும்மூந்நான்கு பன்னிரண்டும் போக தேய்பிறையில் பிரதமைக்குந் துவிதைக்குந் திரிதிகைக்குஞ் சூரியகலை யுதித்து நடக்கவேண்டியது பொழுதுவிடிய ரு-நாழிகையிருக்கையி லுதித்த சரம் மற்றமைந்துநாழிகையுங் கலங்கா தோடவேண்டும் இனி யோக வாரங்களில் எவை நிகழவேண்டியவெனில் ஞாயிறுக்குஞ் செவ்வாய்க்குஞ் சனிக்கும் வியாழத்திற்கும் சூரியகலை யுதித்தோடவேண்டியது திங்களுக்கும் புதனுக்கும் வெள்ளிக்குஞ் சந்திரனுதித்தோடவேண்டியது இப்படியுதிக்குஞ் சரம் எந்தபூதியத்தி லுதிக்கவேண்டியதெனில் பின் ௬ரு-ங் கவியைப் பார்க்கவேண்டியது இதில் பூதியங்கள் அதிகமாய்க்கதித்தோடில் பயன்கள் என்னவையாமெனில் முன் ௨௩-ங் கவியிற் றெரியும் அன்றியும் விபரம் ௩௩-ங் கவியிற் காண்க-எ-று. (௨௬)

இதனுள் நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரமும் இதன்மேற் கவியிற்கூறிய வாரங்களுக்குரியனவாகிய காலசரங்கள் சரவரில் இடரில்லை பிழைக்கில் இன்னவின்ன நிகழுமென்றுங் கூறுகின்றார்.

தேறிநீ யொன்பதுநாள் பூரமாதி
சிறந்தரோ கணிசதய முத்திரட்டாதி

செங் கதிரோனு ளாகக்கொள்க
கூறுனு ளடையுமதிக் கென்றுகொள்க
வீறிடுஞ்செங் கதிர்பிழைக்கி ஞெய்காரிக்கு
மிடித்திடுமண்டலஞ் செய்யிக்கும் வெம்போர்ச்சாவாய்
யாறிடும்பொன் பிழைக்கின்மன்னா கேடாம்புந்தி
பதிக்கதிபன் கெடுமிந்து கிளைஞர்போக்கே.

இ-ள். பெண்ணே திதி யாரமென்று இரண்டு வேறுபாடாய்க் கூறினேமென்று தியக்கம் வேண்டியதில்லை விபரம் மேற்கவிகளிற்றானே சொல்லியிருப்பதனைக் காண்க இவ்விரண்டிலுள் கீழ்வரும் நட்சத்திரபலனாகிய மூன்றினுள்ளும் எதாவது கஷ்டமோ அதிலும் எதாவது இஷ்டமோ தெரிந்து அதிலும் வீக்கந் தாக்கம் னோகஇப் பார்ப்பதென்று காண்க கண்டு தேறியிரு அஃது நட்சத்திரங்களுக்கு நடக்கவேண்டிய காலசரமாம் எதெனில் பூரம்; உத்திரம், அஸ்தம், சித்திரை, ஸ்வாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், உரோகணி, சதயம், உத்திரட்டாதி இப்பனிரண்டிலுஞ் சூரிய னடக்கவேண்டுமெனக் கொள்க மற்றப் பதினைந்திலுஞ் சந்திர னடக்கவேண்டும் அல்லாமலும்மேற்கவியிற்கூறிய வாரங்களுக் குரியனவாகியகாலசரங்களில் ஞாயிறுதப்பில்வியாதி, சனி வறுமை, செவ்வாய் சண்டை, சாவு, வியாழம்தன்மன்னனுக்குக்கேடாம், புதன் அவ்வூரதிகாரிக்குக்கேடு, திங்கள் சுற்றத்தாருக்குக் கேடுவரும் தன மன்னனென்பதும் அவ்வூரென்பதும சரம் பார்ப்பவனுக்கு குறியெனலாம் வெள்ளியின் கவியிற் காண்க: சனி கருமையுடன் தான்காண்க சனி வறுமையுடன் தனைகையிலிருப்பதாம்போகும் பொன்பிழைக்கில் மன்னர் கேடாமென்பதில தன்தாவிறகு வருத்தம்வரில் தனக்கு எப்படிப் பொருள்வரும் வராது பதிக்கதிபன் கெடுமென்பதில் அயனிவனெல பறிகொடுக்கப்பட்டா னெனவரும்

இதன்மேற் கவியிற் கூறுத வெள்ளி பிழைக்கில் நிகழ்வன விவையெனவும் மற்றதன்மேற் கூறிய திதி பிழைக்கில் நிகழ்வன விவையெனவுங் கூறுகின்றார்.

போக்கரிய புகர்பிழைக்கி லூர்விட்டேகல்
பொருந்தியதோர்மெயனோதல் புணர்ந்தோர்சாத

லாக்கமதி லிடராமுற் பக்கந்தன்னி
வருகைகலக மிரண்டாகி லர்த்தநாச
மூக்கமுடன் மூன்றதனிற் போக்குண்டாகு
முரைத்தநான் கிற்கிளைஞர்க் குறுநோயுண்டாந்
தேக்கியவைந் திற்றேச மலையுமாறிற்
செகத்தரசர் கெடுமேழிற் சேருநோவே.

இ-ள். வெள்ளி தப்பில் தான்வசிக்கும் பதியைவிட்டு சூழ்ந்து போதலாகவேணும் அவ்வெல்லையை விட்டு மற்றொரெல்லையைப்போய் மிதிப்பதாகவேணும் வரவரும் தேக நலிவரும் தன் மனைவிக்குச் சாவுவரும் சாவென்பதில் சண்டை பிணக்குநோய் முதலிய வருத்தமாதலையும் சதிபதிகளுக்குப் பொருத்தம் போதலையுங் காண்க நூலாசிரியர் புணர்ந்தோர் சாதலென்றும் சாமுடி வரைக்கும் வருத்தம் வருமென்றுந் துணிந்து கூறினமையால் நன்மையதேவாருக அட்டமா சித்திமட்டும் பெருகுமென்ற கருத்துக் கண்டு இதன்மேற் கலயில் கூறியது காண்க மற்றதனிற் சொல்லியபடி ஊருக்கும் மன்னனுக்கும் அதிகாரிக்கும் வந்தாலும் வரும் இதன்றியில் வளர்பிறை காலத்தில் பிரதமை தப்பில் யாதேனு மிடர் வருவது விதிகை கலகம், திரிதிகை பொருட் சேதம். சதுர்த்தி போக்குண்டாகும், (சகலவித நஷ்டதுக்குங் காண்க) பஞ்சமி பந்துக்களுக்கு வியாதி, சஷ்டி அத்தேசத்தாருக்கும் அரசனுக்கும் வருத்தம், சததமிநலி, அரசனுக்குந் தேசத்தாருக்குங் குழப்பமுண்டு தனக்கில்லையெனநேமாத்திருத்தர் கூடாவாகுந் தன்னாலே யவர்களுக்கு வருத்தம் வந்ததென்று அவதாருன வொச்சாப்பினாலாவது தான் வருத்தப்பட வருமென்ற விவரம் மேற்கவியிற்றானே செப்பியிருப்பதனைக் காண்க-எ-று.()

திதி பிழைக்கில் நிகழ்வன விவையென்றும்
சந்திர சூரிய ரியல்புங் கூறுகின்றார்.

நோவுடனே சாவுமா மெட்டாகின்மற்றை
நுவலாத பக்கமுமிம் முறையேகொள்க
தாவில்வெங் கதிரவனின் மதியமுண்டாஞ்
சந்திரனுள் வெங்கதிருந் தப்பாதுண்டா

மோவரிய விவர்களையே யுணரும்போதி
லுற்றசரங் குருமுகத்தா லுணர்ந்துகொள்க
தேவர்பிரா னுரைத்தருள வுமையாள்கேட்டச்
செவ்வியிதன் முறைமைதனைத் தெளிந்துதேறே.

இ-ள், அஷ்டமி பிழைக்கில் நோவுஞ் சாவும் வரும் வளர் பிறை இதமனமிருக்கத் தேய்பிறைக்கு மிம்முறையே கொள்வது இதல்லாமலும் சூரியனுக்குள் சந்திரனும்சந்திரனுக்குள் சூரியனு மொன்றுக்கு ளொன்று கரந்து தோன்றுவது மூண்டாம்உமையவளே தன் சுயவல்லமையினால் தெரிந்துக்கொள்ள வல்லவளல்லவளாகிப் பின்சரமகா னருளினால் தெரிந்துக் கொள்ளத்தக்க சிறப்பினதாகில் இந்நூலை யார்தான் தம்மாற்றுமே தெரிந்துக் கொள்வர் கொள்ளமாட்டார்கள் ஆதலாற் றெளிக - எ-று. (உஎ)

மேற்கவிகளிற் கூறிய சரம்பிழைக்கில் இடர்

வரும் வந்தாலும் அதற்கு உபசாந்தங்

கூறுகின்றார்.

தெளிர்கதிசேய் மூன்றடியாத் தெற்குமந்தன்
செம்பொன்மூன் றடி மேற்குத்திங்கள்வெள்ளி
இளகியாா லடிவடக்குப் புந்திமுன்போ
லிரட்டையது கிழக்கிரவி யெழுதன்முன்னே
வளமுடனே பூரணபக்கத்திற்சென்று
வந்திருந்து நமைமிதினைந்து வழுத்தல் செய்தே
உளமகிழ்ந்து போகிலெல்லாம் பலிக்குந்துன்ப
முண்டாகா விவையனைத்து முணர்ந்துதேறே.

இ-ள், பெண்ணே மேற் கவியிற் சொல்லியபடி காலசரஞ் சரிப்பட்டுவருமோ வாராதே ஊழ்வினைப்படிக்கல்லவோ நடக்கும் அதை நம்முடைய வசமாக்குவதற்கு இலேசோ எனத் தளர்வுற்றிருக்க வேண்டியதில்லை சரம் பார்க்கிறவன் முன் கவிகளிற் சொல்லியபடி பிராதகாலத்தில் அருணோதயதிற்கு முன்னெழுந்து ஞாயிறு, செவ்வாய்க்கிழமைகளுக்குத் தென்

புறமாய் மூன்றடி முன் ம்க - ௭ கவியிற் சொல்லியபடி சாரத தைப் பூரணமாகவே யக்காலையே முன்னிட்டுக்கொண்டு போ கவும சனி வியாழங்களுக்கு மூன்றடிமேற்கேபோகவும திங கள் வெள்ளிக்கு நாலடி வடக்கேபோகவும் புதனுக்கு இரண் டடி கிழக்கேபோகவும் இப்படியாகப் போய்வந்து ஒரு திவ வியமான ஆதனத்திலிருந்து என்னை நினைத்து துதிசெய்து பின்னெழுந்து எங்கே சென்றாலும் அல்லது அங்கே யிருந் தாலும முற்கவிகளிற் கூறிய துன்பங்கள்யாதேனு மடராது.

இதனமேற கவிகளிற்கூறிய ஒருவாரத்திற்குச் சரந்தப்பி ல பூரணமையாமெனவும எழுநாட்களுஞ் சரிவரிலஇன்னி னமை யாமெனவுங் கூறுகின்றார்.

தேறுநீ யிவையெலாஞ் செவ்விதாக
 செங்கதிர்ரான றன்னுளிற நிங்களோடி
மாறிவருங் கதிரவனுஞ் சோமநாளின
 மறிந்தோடி வருங்கிழமை யேழுமாறிற
கூறுபட வுடலுயிர்விட் டேகுமென்க
 குணமாகு மிக்கிழமை கோணூதோடிற்
சீறிவருங் காலனையும் செயிப்பர்மற்றச
 சித்தியோ கத்தர்நிலை சித்தியாமே.

இ-ள். இவையெலலாந் தேர்ந்தறி சூரிய னடக்கவேண்டிய நாளிற் சந்திர னடந்து சந்திரனடக்கவேண்டியநாளிற் சூரிய னடந்து இப்படியாக மாறுபட்டு ஒருவாரமுழுதும் நடந்தால மரித்துப்போவேன் அப்படியல்லாமல கிழமை எழுந் தவறாம ல திக்குநோக்கிச செலவுதுடன் பிராணயாமமுமாறாமல நிக ழுந்து வருமாகில் அயமனடரான் பிராணனுக்கழிவில்லை சிவ னாமுகந்தகனுய் வாழந்திருப்பன் அஷ்டமாசித்தியு மவனுக்குச சித்திக்கும் ௭-று. (௨௧)

குறிசொலமார்க்கங் கூறுகின்றார்.

சித்தமுடனிரேசகத்தில வந்துகேட்டாற்
 செப்பியவப் பொருள்களெல்லாந் தீதேயாகும்
உத்தமமாம பூரகத்தில் வந்துகேட்டா
 லுரைத்தபொரு ளத்தனையு முண்மையாகு

மெத்தியரும் பதததை ந்தி னன்றேயாகும்
வேண்டாரை ரேசகத்தில் விளியப்பார்க்க
வைத்தமலம் வாயுநீர் கழிபோதென்னின்
மாற்றலர்தாங் கெடுவரிது மாறிலாதே.

இ-ள், சரம்பார்க்கிறவன் ரேசகஞ்செய்போதில்வந்துகேட்டால்கேட்டகாரியஞ் சித்தியாது பூரகத்திலென்னில் நம்மையவன் சொல்லுகிறது முண்மையாயிருக்கும் கும்பகஞ் செய்காலத்திலாகில் நற்காரியம் அது சித்திக்கும் மலம் சலம் வாயுகழியும்போதானால பகைவர்கெட்டுப்போவார்கள் இன்னமிதற்கு விபரம் குருமுகாந்தரத்திற் றெரிந்துக்கொள்ளவேண்டியது அல்லாமற்றெரியாது-எ-று. (௩௰)

சனி வியாழன் பகல் கூறுகின்றார்.

மாறிவளர் பக்கங்குறைபும் பக்கமதி
நாடி சுதிர் நாடிவளர் பொன்னேடிற்
பேறுமிக வுண்டாகும பிராணனிற்கும்
பின்புரைதத காரியகக ளெல்லாமேரு
கூறுகின்ற சனிநாளிற பகலிரவிற்
குலவுசரம் வலமிடக்திற் கோணுதோடி
ஞறுமலர்ப் பொருந்திருவே சொன்னேமிந்த
ஞாலமெங்கும் புகழ்பெறவே நடக்குமென்றே.

இ-ள், வளர்பிறை வியாழத்திற்குச் சந்திரனுந் தேய்பிறை வியாழத்திற்குச் சூரியனுந் தப்பாமல் நடந்துக்கொண்டேவந்தால் சிறந்த பேறுண்டாகும் ஜீவன்முத்தனுய்த் தளர்வின்றி வாழ்வான் இதல்லாமல் சனிக்கிழமைக்கு இரவிலும் பகலிலுஞ் சந்திர சூரிய சரங்கள் மாறுபாடில்லாமல் நடக்கவேண்டியது நடந்தால் இவ்வுலகமெங்கு மெச்சத்தக்க கீர்த்திவந்துறும் மற்றும் முன்காலசரஞ்சொல்லிய கவியை நோக்கவேண்டியது-எ-று. (௩௧)

குறிசொல்மார்க்கம் கூறுகின்றார்.

நடைப்புடையவொருவனெங்கேயென்றொருவன்கேட்கி
ஞனிலத்தி லகத்திருப்ப னன்னீர்முற்றம்

அடக்குமுழுவாகிலுள்ளூர் வாயுவேற்றா
ரம்பலமென் மலைமேற் றுயிலலாகும்
விடப்போனுன் புவிக்குநிலை ரீர்க்குமீண்டான்
வெவ்வழற்கு வருகின்றான் வெயில்காலுக்கு
மடற்குழலா யூர்வந்தான் வானமாகில்
வருவனொரு நாழிகைபின் மாறிலாளே.

இ-ள், ஒருவன்வந்து இன்னு னெங்கேயிருக்கிறனெனில் அப்போது சரம் பிருதிவாகில் வீட்டுக்குள்ளிருக்கிறான் அப்பு வாகில் முற்றத்திலிருக்கிறான் தேயுவாகில் அக் கிராமத் தெல்லைக்குட்டானே யிருக்கிறான் வாயுவாகில் எல்லைக் கப்புறப் பட்டான் ஆகாயமாகில் மலையேறுகிறான் அல்லது தூங்குகின்றான் என்று சொல்லவேண்டியது இதுவிட புறத்தேசம் போனவனைக்குறித்துக்கேட்டபோது பூதியமைந்தில்முதலாகில் அவ் வூரில்தானே நிலையாயிருக்கிறான் இரண்டாகில் திரும்பிவருகிறான் மூன்றாகில் திரும்பினவன் நில்லாமல் நடந்துவருகிறான் நான்காகில் அவனிருக்கு மூருக்குள் வந்தான் ஐந்தாகில் ஒருநாழிகைக்குள்வந்து வீடுசேர்வானென்று சொல்லவேண்டியது-எ-று (௩௨)

இச் சரம் மனதுடன் லயப்பட்டால் இன்னவை
யாமெனக் கூறுகின்றார்.

மாறிவரு வாயுமனே வலயந்தன்னின்
மரிக்கவுமிர் சித்திநிற்க வதுதானிற்கும்
கூறுசம யங்கூற்றூர் பயமுமில்லை
குறித்திருமண் ணென்றவைநா ழிகையாக்கொள்க
தேறுபுனற் கொன்றேகால் வன்னிக்கொன்று
சிவன்முக்கால் வானமரை சிறந்தநாடி
பாருமைந்து நாழிகைக்குள் வரிசுற்குன்றிற்
பழுதுபடு முடம்பிலிது பற்றிப்பாரே.

இ-ள். இடதுபக்கத்திலும் வலதுபக்கத்திலும் ஒன்றைவிட்டொன்றை|மாறிமாறி நடக்குமிச்சரமானது தேகத்திறூடே லயப்பட்டுப்போகுமேயானல் பிராணனுக் கழிவில்லை அப்படி

லயப்பட்டு சிற்கில் மனமுதலிய வந்தக்கரணங்களுக்கும் வே லையில்லை அலைசவுற்றிருப்பனவாகும் பின்புமற்றெச்சமயத்தா ராலும் பயமில்லையமனுலும் பயமில்லை முன்சொன்னபடி இ டதுபக்கமும் வலதுபக்கமும் மாறியோடுஞ் சரம் ஒவ்வொரு பக்கத்தி லென்னேரந்தரித்து நடக்குமென்னில் ஐந்துநாழி கையாம் அதிலும் பூதியங்களின்கூறுக் கெவ்வாறு பகுப்பதெ னில் மண்ணில் ஒன்றரைநாழிகையும் நீரில் ஒன்றேகாலும் நெருப்பில் ஒன்றும் காற்றில் முக்காலும வெளியில் அரையும் ஆக நிறைந்தோடும் இப்படியாகிய பூதியங்கள் கூறுகொண் '- ஐந்துகடிகைகளும் ஒவ்வொருபக்கததிற்குச் சரியாய்ச் சி தையாதோடவேண்டியது இதைவிட குறைந்தாலும் வளர்ந் தாலும் தேகாலியாம் சரம் லயப்படும்'வழி தேடவேண்டியது தேடில் முன்கணட பயனுண்டா மில்லையேல் நாலடியொன் றுக்கு ஐந்துநாழிகையும் பூதியங்களினளவே, சிதருமல் நடப் பிக்கவேண்டும் அதுவுமின்றெனில் தேகாலியேவரும்-எ-று.

தத்தமது வாழ்நாட்பிரமாண மறியும்படி

அயனசகைகற்பதை கூறுகின்றார்.

பற்றினுஞ் சொன்னபடி மயனமுன்னுட்
பாலொருபோதுண்டுபரி,சுத்தனுகி
மற்றைநாளுத்தரமா மயனந்தன்னின்
மாறியிடந் தனிலோடும் வவர்தெற்காகும்
பெற்றதொரு நாழிகைதானைந்து நூறும்
பெருமகடிகை தனிற்குறைபிற் பிராணனுச
முற்றெருமா நாழிகைக்கோராண்டுதாழு
முமையோநான் சொன்னகணக் குண்மைதானே.

இ-ள், சரம்பார்க்கிறவனுக்குச் சென்றநாட்கள் போக மற் றும் நின்றநாட்கள் எவ்வளவோ என்னுங் கருத்துக்கொண்டு பார்த்துத் தெளியுமாறு யாதெனில் அயன சரமாம்அதனைப் பார்ப்ப தெவ்வாறெனில் தைமாதமுதற்றேதியில் உத்ராயண காலம் ஆடிமாத முதற்றேதியில் தெக்ஷணயனகாலம் இவ்வா யனகாலத்திற்கு முன்னுள்பகலில் ஒருபொழுது தன்னமுண்

டு தத்துவங்களைப் பரிசுத்தமாக்கித் தேகமெலிவதனால் மன துக்கும் மற்ற வாயுவாதி காணங்களுநாசும் வருமிடையூறிலை நிருவி தைமாதமுதற்றேதியில் பொழுதுவிடிய ஐந்துநாழிகை யிருக்கையில் பார்க்கும்போது சரம் வாரம் திதி நட்சத்திரங் களைத்தன்னி இடதுபக்கத்திலுதித்து முன்கவிகளிற் சொல்லி யபடி ஐந்துநாழிகைகளுஞ் சிதறுமல் ஓமெதனைப் பார்க்கவே ண்டியது இதுபோக ஆடிமாதமுதற்றேதியில் முதேபிரகாரமா ய்ப் பார்க்கவேண்டியது அப்போது சரம்வலதுபக்கத்திலோ டும்அப்படியோடிய சரம் முற்கூறியவண்ணம் ஐந்துநாழிகைக ளுஞ் சிதறுமலோடினுல் சரம்பார்க்கிறவன் தான்செய்யும் பி ராணயாம வுதவியினுல் அன்றுதொட்டுவரும் நூறுவருஷகா லம் வாழ்ந்திருப்பான் இதுவின்று குறைந்தால் அவ்வைந்து நாழிகையைநூற்றெருமா ஐந்தாகநூறுக்கிக்குறைந்தநாழிகை ஒருமாவோ இரண்டுமாவோ அல்ல ததன்மேற் றெகைப்பட் டவையோ அதற்கு ஒவ்வொரு வருஷத்தைக்கூட்டிப்பார்த்து குறைந்த ஒவ்வொருமா நாழிகையின் பேரில் கணக்காக்கிக் கொள்ள வேண்டியது முழுவதுமே தப்பிச சரம் இடத்திற்கு வலமாகவும் வலதிற்கு இடமாகவும் ஓடில் அவனுக்குக்ஷீண காலமென்றறிக - எ-று. (௩௪)

போசனவிதி கூறுகின்றூர்.

உண்பவனுக் கப்புவிட மதிக்குவெய்ய
 வுவர்த்தனைத் தனகார்த்த லுண்கமுன்னே
பண்பயில்செகதிர்க்கு நெய்பால்புளித்தல்கன்னல்
 பாகுடனே சொத்தனமு லுண்டுபோர்க்க
ன்பனம வயிறறிறதுச் சோறுபாதி
 நன்னீர்கால காற்றுக்காவோர் தால்கிக்
கண்பாயிஞ டிகள்சத்தி பணனிறுபங
 காட்டிமலர் குட்டியிருள் கழியுங்காலே.

இ-ள். முன்கவியிற்சொல்லியபடி சரம் பார்க்கிலவன் சூரி யகலை யியங்கிவருகிறபட்டும் போஜனமில்லாமல் மற்ற தனு க்காக காக்கவேண்டியதில்லை ந்திரனடக்கும்போதுஞ் சாப் பிடலாம் எப்படியெனில் ஊடிணமான பண்டங்களும் உப்பு

கசப்பு, காரலாகிய பண்டங்களை வைத்துக்கொண்டு தாக பானத்தை நிறுத்தி யுண்ண வேண்டியது சொல்லியபடியே சூரியனடக்கில நெய்பால புளித்தல் தித்தித்தல் துவர்த்தலா கிய பண்டங்களுடனே சாப்பிடலாம் தாகபானமு மப்போ தேசெய்யலாம் சந்திரனுக்கு அப்போதுகூடாதாயினும்பின்பு சூரியனடக்கில் சாப்பிடவேண்டியது இதுமாறினும் ஆத்தி ரத்தினும்அவாவினுலுஞ் சூரியனுக்காககாத்திராமல் அடுத் தடுத்துசசந்திரனிற்றானேதின் றுகொண்டுவந்தாலும்நலியாம் இப்படியாகச் சாப்பிடுகிறதாயினும் அவ்வுணவு வயிற்றிற்குப் பாதிதானுகும் மிஞ்சினுலாகாதுமற்றப்பாதிக்கு சலங்காலாக வும் கொள்ளவேண்டியதுகொண்டு தசநாடிகளையும் பிராணு யாம முன்னிலையில் சுத்திசெய்துவைக்கிற சித்தனுய்ச சரம் பார்க்கவேண்டியது - எ-று. (௩௫)

சரத்தை யேறவொட்டாமலும் குறையவொட்
டாமலுந் தன் வயப்படுத்திக்கொள்ளு
மார்க்கங் கூறுகின்றார்.

கால்கொண்டு கணக்கறிவார்க் கியாதுந்தப்பா
 கருதரியவெல் லாமுடியுங் காண்போர்க்கெல்லா
மேல்கொண்ட புவியுடனே யப்புவன்னி
 விளங்கியகால் வானமுடன் வினவுவார்க்குப்
பால்கொண்ட மொழியாளே பவனங்கட்டிப்
 பற்றியவா ராதாரம் பரிசுபார்த்துச்
சால்கின்ற முதனடி தன் னுணின்ற
 தபனன்வழி செந்தழலாந் தன்மைபாரே.

இ-ள், பால்போலு மினியசொல்லையுடைய பெண்ணே சர ம்பார்க்கிறவனுக்கு அனுபவ மிந்நூற சொல்லியபடி வருமோ மற்றவ் விதிப்படி பிறழாது போஜனமுறைமையும் வந்தொத் துக்கொள்ளுமோ மிகினுங் குறையினும் நோய்செய்யுமோ எளிதிற்சரிப்படவாராதே வராதெனில் தானெப்படிநன்கடை வன் வினவுவார்களுக்கு யெவ்வாருய் நன்றெனவுந்தீதெனவு

மூழறிந்தெடுத் தோதுவனென்று ஐயமுறவேண்டிய தில்லை சரம்பார்ப்பான் பரமபாரப்பாரென்பதுபோல் சரத்தைக் கணக்கின்படி யறிந்துபார்க்கிறவனுக்கு யெந்த காரியமானாலு ந் தப்பிப் போகாது அதனைக் கண்டபேர்களுக்கும் நினைத்த காரிய மெல்லாமுடியும் அதெப்படியெனில் பிரிதிவு அப்பு தேயு வாயு ஆகாயமாகிய பஞ்சபூதியங்களின்கூறுகூடியவாயு வினைப் பாழ்போகாமல் மனமறிவுடனே கட்டி ஆராங்கரத் திலுள்ள பரிசினையறிந்து தசனாடிகளுள்ளால் முதனாடியாகிய பிராணநாடியினின்று மற்றங்கிருந்துதித் தோடுஞ் சந்திரன் சூரியன் அக்கினியென்னு மிம்மூன்றினையுடைய குணங்களை யும் பார்த்தால் கைக்கனிபோல் இலேசிற் றெரியவரும்.

சரம்பார்க்கிறவனுக்கு நன்மை தீமை மரணகால

மறியும்படி சாயபுருஷதெரிசனங் கூறுகின்றார்.

பாரிலொத்த நிலத்தகல்வான் களங்கமற்றாற்
பத்தடிக்குள் ளைந்தடியாம் பருவந்தன்னிற்
சீரியமெய் நிழல்கழுத்து கைகால்சென்னி
சிமிட்டிப்பார்த் திமையாமற் றிகழ்வான்பார்க்கிற்
கூருருவாம் பொன்கண்டாற்செல்வம்வெள்ளை

காருருநோ யாறுபிரை கைகால்குன்றிற்
கக்குறையின் முப்பிறையிற்காட்டுஞ்சாவே.

இ-ள், பூமியிலே மேடுபள்ளமில்லாதயிடத்தில் ஆகாயத்தில் மேக மறைவில்லாமல் வெயில் காயும்போது தன்னிழல் ஐ தடிநீளமுதல் பத்தடிக்குட்பட்டதருணத்தில்தான் அந்நிழல் முகமாய்நின்று கைகளிரண்டையுந் தொங்கவிட்டு கண்களி மையாமல் அந்நிழல்களை கழுத்து கைகள்கால்கள் இவ்வுறுப் புகளி லொன்றைப்பார்த்து அப்படியே இமையாமல் ஆகாய த்தைப்பார்த்தாலங்கே அவனுருவம்தோன்றும் அவ்வுருவம் பொன்னிறமாயிருந்தா லவனுக்குச் செல்வம்வரும் வெண்மை யெனில் பிராணபயமில்லை ஆயுள்வளரும் செம்மையாகில் ஆ யுள்தேயும் அதற்கொருகுறைவும் வரும், கருமையேல் கலி இ துவிட அவ்வுருவில் கைகளாவது கால்களாவதுதோன்றாமலி

ருந்தால் ஆறுமாதங்களுள் மரணம் இதுவன்றித் தலையே கா ணுமல் கவந்தமாய்த்தோன்றில் மூன்றுமாதத்தில் மரணமிஇ ல்லாமலுஞ் சந்திரனிலுமிப்படியே பார்ப்பதுமுண்டு இதனை சாயாபுருஷ தெரிசனமென்று சொல்லுவார்கள் இச்சா யாபுருஷதெரிசனத்தை விடாமல் பன்னிரண்டுவருஷம் பார் த்துக்கொண்டுவந்தால் தன்முன்னிற்கு மந்நிழல் தன்னுடன் பேசும் பேசில் அதன்மூகாந்தரமாய் அஷ்டமாசித்தியையும் பெறலாகும் பெருவதன்றிப் பின்னுஞ்சிலநாட்களில் அந்நிழ ல் ஓராளுருவமாகித் தன்னுடனே திரியும் படுத்தால் தானு ம்படுக்கும் எழுந்தா லுடனெழும்பும் இவனுக்கு வரு நன்மை தீமைகளை முன்னதாகவுணர்த்தும் இன்னமு மிப்படிப்பட்ட அநேகவற்புதங்கள் விளைக்குமென்று பெரியோர் சொல்லுவா ர்கள்-எ-று. (௩௭)

மரண விலக்கணம் வில்லுருவின்

பயன்கூறுகின்றார்.

காட்டியகா னிழற்றனக்கு முன்பின்னேகைக்
கடிபுனல்வாம் கொண்டகல்வானின் களங்கமற்றால்
பூட்டியசீர் துகள்பிறக்க வுமிழ்ந்தால்வானிற்
பொருந்தியவில் லைந்துருவாய் பொலிந்துதோன்று
மீட்டியவில் லுருவுளதே லாண்டுவாழ்வ
னிதுமுறியி லவ்வாண்டி னிறந்துபோவான்
கோட்டியவில் லுருமறிய வணங்குதோன்றிற்
கொண்டுபோம் பிறையாறிற் குறித்துக்கூறே

இ-ள்,'வானிற் களங்கமில்லாமல் சூரியனெறிக்கையில்மர நிழல்வீட்டுத் தாழ்வாரநிழல் இப்படிப்பட்டயாதொரு நிழல் தனக்கு முன்னிருக்கச் சரம்பார்க்கிறவன் பின்னின்று வாய் நிறைய சலங்கொண்டு அந்தநிழலருகில் துகள்பறந்து அனுப் போல் பறக்க ஒரேதாரமாய் உமிழ்ந்து அத்துகளைப்பார்த்தா ல் அதி லிந்திரதனுசு அமைந்து வானங்களுடனே தோன்று ம் தோன்றில் பார்க்கிறவனுக்கு அன்றுமுதல் ஒருவருஷமட் டுக்குஞ் சாவில்லை இல்லையே லதுவரும் வருவதிலும் அவ்வில் நிறமாறி அங்ஙனமே ஒரு பெண்ணுருத்தோன்றில் ஆறுமா தங்களிலிறப்பன்-எ-று. (௩௮)

சந்திர சூரியரைப் பார்க்கு மிலக்கணங்கூறுகின்றார்.

குறிகொண்ட நிறமதியங் குறைமதியந்தன்னிற்
குலவியதோர் செப்பகலில் கோநெய்யைவிட்
டெறிகின்ற மதிக்கதிரைப் பகற்கதிரைப்பார்த்தா
லியல்வெண்மை செம்மை பொன்மை பசுமைகறுப்பெ
னெறிகொண்ட வுயிர்வாழ்வு கெடநோய்சாத (ன்னி
னிரைநிறையே யறியிதனிற் றெற்குமேற்கு
மறிகின்ற வடக்குடனே கிழக்குநடுகுறைந்தால்
லாண்டுதிங்க ளாறுமுன் றொன்றுநாட்பத்தழிவே

இ-ள், ஒரு செப்பகலில் பசுவின்நெய்யை யுருக்கிவிட்டு அதிற் பூரணசந்திரனை யல்லது அமாவாசையின்போது சூரியனைப்பார்த்தால் அதிற்றோன்றுகிற சந்திரன் அல்லதுசூரியன் வெண்மை செம்மை பொன்மை பசுமை கருமை இவ்வைந்தில் ஒன்றுளதாய் தோன்றும் அதில் வெண்மையேல் பிராணபயமில்லை செம்மையெனில்வாழ்வுண்டாம் பொன்மையாகில் கேடு பசுமை யானால் நோய் கருமையோ சாவுவரும் அதிலுமப்படிச்சாகிறவனுக்குக் காலமெப்போதெனில் தென்புறவட்டங்குறைந்தால் ஒருவருடம் மேல்புரம் வட்டங் குறைந்தால்ஆறுமாதம், வடபுறம் மூன்றுமாதம், கீழ்புரம்ஒருமாதம் நடுவேதொள்ளை யாயிருந்தால் பத்துநாள்நிறைமதியம் பௌர்ணை குறைமதியம் அமாவாசையென்றறிக-எ-று (௩௧)

சரீரபழுதுமுதலான மரணவிலக்கணங்
கூறுகின்றார்.

அழிந்திடுங் கைகாலெனன்றி கன்னந்தம்மி
லடர்ந்துடிப் புறிவறண்டு திங்களாறு
மொழிந்ததிங்கண் மூன்றுநாள் மத்திலாவி
முடிந்துவிடு மிதுவொழிய செவியிலோசை
யொழிந்திடுனே ளேழுகண்ணி னொளிதானேந்தா
முனைந்தழுண மூன்றிரண்டி லுரைவேறானல்
கழிந்திடேல் லுயிரொன்றுகருதியீசன்
கழலிணையைப் போற்றில்வினை கழிந்துபோமே.

இ-ள், கை கால் நெற்றி கன்னம் இவை அடர்ந்து துடித்தால் மரணகாலம் வந்ததென்றறிக அதிலும் கைதுடிக்கில் ஒருவருஷம், கால் ஆறுமாதம், நெற்றிமூன்று மாதம், கன்னம் பத்துநாளென்று கொள்ளவேண்டியது இது வொழிய காது கேளாவிட்டால் எழுநாளில் மரணம் கண் பார்வைமழுங்கினுல் ஐந்துநாள், மூக்கில் கந்தம்போனுல் மூன்றுநாள் வாய் குழறிப் பேசசழிந்தால் இரண்டுநாள் இதையறிந்து கடவுளுடைய பாதங்களை நினைத்து போற்றிசெய்தால் வினையென்பதிராது அவனவனே கலந்துபோதலுமாகும்-எ-று.(௪0)

உசுவாசிசுவாசங்களின் பயனுங்கூறுகின்றார்.

போம்வாயு சிவமுள்ளேபுகுதற்சத்தி
 போகில்விடப் புகிலமுதம் புகன்றவெல்லாம்
ஆம்வாயு புகிற்போகி லல்லவாகு
 மடங்கில்விடய கெடும்போகிலகலுமப்பாங்
தேமேவுசத்தியிரண் டொற்றையீசன்
 செவியிற்போ வார்வருவர் சரமீனமாகில்
ஓமேவுமுயிற்போகி லுேயாமற்ற
 துட்புகிலுேயாகவெய் யுரைத்தநாமே.

இ-ள், உசுவாசம் நிசுவாசம் அல்லது ரேசக பூரக காலபலனைச் சொல்லுமிடத்தில் உடலைவிட்டுப் போகிற வாயுவே சிவம் உட்புகுவது சத்தி சரம் வெளிப்பட்டுப் போவதெல்லாம் விடமுண்பதற்குச் சரி சரம் உட்பட்டுப் புகுவதெல்லாம் அமுதமுண் பதற்குச் சரி சரம் உள்ளேபோகும்போது ஒருவன் சொன்னது அல்லது நினைந்தகாரியம் ஆகும் வெளிகொள்ளுகையில் ஆகாது அந்தவாயு கும்பகத் தடங்கில் உண்டவிடங் கெடுமெனச் சரிஅடங்கியது நடுநாடி வழிபோகில்பாவமென்பதில்லை இதன்றியில் ஒருவன்வந்து குறிகேட்கையில் முதற் சொன்ன சொல்லின் எழுத்தை யெண்ணிப்பார்க்கில்ஒற்றையாகில்சிவன்கூறென்றும் இரட்டையாகில் சத்திகூறென்றுங் கொள்ளவேண்டியது சரம் வெளியேபோகும்போது ஒருவன் வந்து இன்னுன் போவானுவெனில் போவான் வரான் உட்புக்கையில் வருவான் சரம்போகும்போது வருவானுவென்றும்

புகும்போது போவானென்றும் மாறுபட்டு வினவில் சரிப்படாது போகும்போது போவானேயல்லது வாரான் புகும்போதுவருவானேயல்லது போகான் சரம் போகும்போது நோய் தீருமோவென்னில தீராது புகும்போது தீருமென்க

குறிசொல்லவும் போரபுரியவு மார்க்கங்

கூறுகின்றார்.

உரைத்தொருவ னிறைவிற்போய் குறைவிலுறத்தீதாம்
உயிரில்புறத் துறைத்துநிறைபுறத்துறமத்திபமாம்
நிரைத்துநிறை பகத்தினின் றிடினன்மையதாம
நிறைமதியந் தனிலேகி நேர்ந்திடும்போர்களத்து
சுதைத்தசெழுவ கதிர்வெட்ட வல்லவனேதோர்பன்
வாகான சந்திரனே வெல்லமாட்டான்
விரித்தகதி யனிலேகி வெஙகதிரிலவெட்ட
மேனியிலும் வடுப்படான் வெல்வானாருனே.

இ-ள், குறிகேட்கவந்த வொருவன் தன்காரியத்தைச்சொல்லிக்கொண்டே முன்னர் பூரணத்தில் வந்தாலும் பின்னர் சூனியத்தில் வந்துவிடுவானாகில் அக்காரியம்தீதாம்முன்பு சூனியத்தில்நின்று பின்பு பூரணத்தில் வருவானெனில் மத்திபம் இவ்விரண்டு மாறுடாடுமில்லாமல் வந்தவன் கழாமல் பூரணபக்கத்திற்றனே யிருந்து தான் வந்த காரியத்தைச் சொல்லி முடித்து விடுவானெனில் அக்கருமம் நன்றினதாம் என்றறிக போர்க் குறியைச சொல்லுமிடத்து சந்திரகலை யியஙகும் போது சென்று சூரியனியஙகும்போது களத்தினேரில் எதிரி எப்படிப்பட்டவனானாலும் தோற்பன் இப்படியல்லாமல் சந்திரனியஙகும் போது புறப்பட்டுச் சந்திரனிற்றனே போர்கலத்தில் தோற்பன் இதுநிற்கசூரியனிற்றனே புறப்பட்டுச அச்சூரியனிற்றனே போரில்வெல்வதிலும் தனமே லொருபடைபடாமல் வென்றுவருவன்-எ-று. (சஉ)

போர்வெல்லுமார்க்கஙகூறுகின்றார்

வெல்வனம ரிருவர்பே ரெழுத்தினையுமெண்ணின்
மிருந்தவெழுத் துடைய அ இ உ எ ஒ வென்று

ல்லவெழுத் துடனே ஆ ஈ ஊ ஏ ஓ —
    நலந்திகழ்பா லன்குமா னரசனேவிருத்தன்
சொல்லுமவர் பேரின்முத லெழுத்திலயிரெழுத்தைத்
    துலங்கியவக தானத்திற் றுகளறவேகூட்டில்
எல்லைமுதற் றானத்தி னெழுத்துடை யோன்வெல்வ
    னிருவரையு மிவரார்கா மிரட்டையெழுத்தோனே

இ-ள், அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஒ ஓ இவைமுதலானது பா லன்கூறெனவும் இரண்டாவது குமாரன் கூறெனவும், மூன் றாவது அரசன்கூறெனவும், மற்றவிரண்டும்விருத்தன் கூறெ னவும் கொள்ள வேண்டியது இதில் சண்டைக்காரனுடைய பேரில் முதலெழுத்தைப் பார்க்கும்போது ஆ வொளியே லா வுடனேயும், ஈ யொளியே லீயுடனேயும், ஊ வொளியே லூ வுடனேயும், ஏ யொலியே லே யுடனேயும், ஓவொலியே லோவுடனேயும கூட்டிக்கொண்டு அவர்களை டவெழுத் துக்களின்படி பாலன் குமாரன் அரசன் விருத்தனுக்கி பால ன் குமாரனேயும் அரசனேயும் வெல்வா னெனவும் விருத்தன் மற்றவர்களால் படுவானே னவுஞ் சொல்ல வேணடியது அதி லும் எ ஏ ஒ ஓ விருத்தன்கூறு இவ்விரண் டெழுத்துக்களைக் கொண்டவன் அவர்களாற்படுவான்-எ-று. (௬௩)

கருப்பக்குறியின் முறை கூறுகின்றார்.

இரட்டையா முபயத்திற் கேட்டபிள்ளை
    யினியபூ ரணத்திலாண்சூனியத்திறைற்பெண்ணும்
மருக்குழலா ளிடத்துயிரை விடியற்கால
    மகினன்கலத் துயிர தனுல் வாஙகடப்பாங்
தரிக்குகிலம் புதன்வெய்யோ னப்புமந்தன்
    சந்திரன்றீ வியாழஞ்சேய் தன்கால்வெள்ளி
நெருக்கியவம் பரம்பூதங் கிழமையிக்த
    நெறிகிற்கி னன்மைமிக நிகழுந்தானே.

இ-ள், முன்சொன்ன கருப்பக்குறிகளுமல்லாமல் விதவு மொன்றெனக்காண்க யாதெனில உபயசரஙகள் நடக்கும் போது கேட்கப்பெற்ற பிள்ளை இரட்டைபேறெனலாம் எப்

பக்கமாயிருக்கினும் பூரணபக்கம் ஆண் சூனியபக்கம் பெண் ஆனாலும் மேற்கவிகளிற் சொல்லியபயன் ருனுகுமெனக்கொள்க இதுநிற்க வைகறைப்பொழிதில் மனைவிக்குச் சரம் இடதுபக்கத்தில் நடந்து பெண்ணுக்கு வலத்தில்நடந்தால் அதை அம்மகினைன் அவ்வலச்சரததாற்றனே வாங்கி யுட்கொள்ளுமப்பியாசஞ் செய்துக்கொண்டுவருவானெனில் மனைவியிவன் வயமாவாள் பிறன்முகநோக்குங்கருத்து விழையாள் அப்படி வாங்குவது பன்னிரண்டுதரம் வாங்கி யுட்கொள்ளவென்றுஞ் சொல்லுவார்கள் அல்லாமலும் வாரசரங்கள் எங்கெங்கதபூதியங்களி லுதிக்கவேண்டுமெனில் புதன் பிருதிவியில்ஞாயிறு அப்பில், சனியுந் திங்களும் தேயுவில், வியாழமுஞ் செவ்வாயும் வாயுவில், வெள்ளி ஆகாயத்தி லுதிக்கவேண்டியது உதிக்கில் அவ் வாரஞ் சரியாய்நடந்து அதனுல் வரும் நன்மைகள் மிகு பலனைவிளைக்கும்-எ-று (௬௬)

இன்னதற்கு மூல மின்னதென்றுங் கூறுகின்றார்.

நிகழ்புவிக்கு மூலநீர் வாயுசீவ
நெறிதாது கனல்விண்ணு நினைக்குங்காலே
புகழுடனே பூதத்திற் குணதேசொல்க
பொருவில்சர ராசிவெய்யோன் புதுவெண்டிங்கள்
மகிழ்கொள்திர ராசியா முபயராசி
மறங்கிளருஞ் சுழிமுனையாம் வாரந்தோறும்
பகுதல்படர் துயிர்பலிக்கு நிலைமைதன்னைப்
பங்கயவா தனத்திருந்து பரித்துபாரே

இ-ள், பிருதிவிற்கு மூலம் அ வா சீவன் க ஆ தா துஇப்படி நிரைநிரையே ஒன்றுக்கொண்று ஆதாரமாய்வரும் அவைகளை விளங்க விங்ஙனம் விபரமாய்ச் சொல்லவில்லையாயினும் இதனையும் சர ராசியெனப்பட்ட சூரியனையும் திர ராசியாகியசந்திரனையும் உபயராசியாகிய சுழிமுனையையும் மற்றவற்றின் பயன் முதலிய கூறுபாட்டையும்பங்கயாதனத்திலிருந்து பரிவுற்று சிவயோகஞ்செய்தாலல்லது நன்குணர்தலரிது உயிர் பாழ்போகாது சீவன்முத்தனுதலுக்கு அது மார்க்கம் இல்லையேல் அவம்போகுமென்றறிக-எ-று. (௬௭)

மூன்றுநாடிகளின் முறைமை கூறுகின்றார்.

பாதரினைக் கதிர்மதிச்சுன் வாழ்வுகேடு
பண்டைநிலை யிம்மூன்றும் பரிந்துகேட்கில்
மோட்டருஞ் செல்வம்வரும் வெய்யோனாகில்
வெண்மதியங் கேடாகும் விரைந்துவாயு
நேரமிகு சுழிமுனை தானாகில்முன்பிற்
சிறுகாலம் பெருகாதுதேவரானோர்
போராருகில் வருமெனினு மதியில்வாரார்
பொங்கியசெங் கதிர்வருவர்புகன்றோனாமே.

இ-ள், நாமசொன்ன இச்சரநூலைப் பரிவுடன் பார்ப்பா யாக சூரியன் சந்திரன் சுழிமுனையென்னு மிம்மூன்று நாடிக ளுள்ளும்வாழ்வு கேடுநிலைமை யென்கிற மூன்றுகருமதிதான ப்பலன்களைக் கேட்குமிடத்தில் சூரியனாகில் நன்மையையும் மிகுந்த செல்வத்தையு மடைவார்கள் சந்திரனாகில் கேடுமுத லிய கன்னியக்குறைவாகும் சுழிமுனையாகில் முன்புள்ளபடி யராமல் குறையாமல் நிறைவாகும் அன்றியுந் தேவாதிதேவர் களே வசீகரப்பட்டவனாகிலும் ஜெயஜெயத்தின் முன்னிலை யில் வருவோமென் றுறுதியாகச் சொல்லினுஞ் சந்திரனேய திகமாக வியங்கிடில் வாரார் சூரியனே யதிகப்படில் வருவா ரென்று காண்க-எ-று, (௪௬)

இதுவுமது உபசாந்தங்கூறுகின்றார்.

ாமுறைத்த தொகையளவுஞ் சூரியனோடாம
னன்மதிய மேல்வாயு நடக்குமாகிற்
றமிளைத்தல் கிளையினைத்தல் பொருள்கேடாதல்
சாகுவருண்டாதவிவை தப்பதாகும்
போமிடத்தின் மதியாகின் மருந்தைப்போக்கிப்
பொருந்துமடியிரட்டித்துப் போகநன்றாந்
தேமெருவு கதிராகி லுயிருள்வாங்கித்
திகழும்வலக் காலேற்றிச் செய்கநன்றே

இ-ள், முன்சொன்னபடி சந்திரனே யதிகமாய் நடந்தால் நமக்குகேவெருவதல்லாமலும் பந்துக்களுக்குஅதுவே வாரும்

சத்துருக்கள் தோன்றிவருவதாகப்போது சந்திரனிற்போகவே ண்டிய காரியமல்லாத காரியார்த்தமாய்ப் போகும் போது சந்திரநடந்தால் சரத்தைநீளவெளிவிட்டு அப்பக்கக்காலையே இரண்டுமூன்றடி முந்திவைத்துக்கொண்டு போகவேண்டியது சூரியனிற்போகவேண்டிய காரியமல்லாதகாரியார்த்தமாய்ப் போகும் போது சூரிய நடந்தால் அச் சரத்தையேற வுள்ளே வாங்கி அவ்வலதுகாலைமுன்னிட்டுக்கொண்டு போகவேண்டியது அப்படிப்போகில் போங்காரியம் நன்று-எ-று. (சஎ)

சந்திரகலையில் நடக்கும் பூதியங்களைக்

கூறுகின்றார்

செல்லுமதி தனிலேரி சஞ்சரித்திடவுவாய்வு
சிவாலயநக ணதிமதிற்செய் காவில்லநகட்ட
நல்லமுடி சூட்டல்குடி புகுதல்போக்கும்
நயந்துமரம் வைத்தனன்று நனிர்ீதன்னி
லொல்லோநறும் ளவுகுளஞ் சோலைவைக்க
வழுவிரைக்க மணமுளதே லவக்கவாகு
நல்லழலிற் றீப்பிணியாந காற்றிலானே
நற்பரிதே ரொட்டாங்க ஞவாயோட்டே.

இ-ள். சந்திரகலையில் பிருதிவிநடந்தால் சிவாலயம் மதில், வீடுகட்டல், குடிபுகுதல், போக்கு, சாந்திகழித்தல், மரம்வை த்தல் இவை நன்றாம் அப்புவாகில் குளமுதலிய வெடுத்தல், சோலைவைத்தல், நிலத்தை உழுதல், விரைக்குதல், விவாகஞ் செய்தல் நன்றாம் தேயுவாகில் பிணிதீர்த்தலாம் வாயுவாகில் குதிரை முதலிய தேர் கப்பல் ஓட்டலாம்-எ-று. (சஅ)

ஓட்டியவா னத்திற்செபிக்க விற்போர்செய்ய
வுள்ளபின் கலைக்குமொக்கு மீதேசொல்க
நாட்டமதி வெயிற்கதிரோ னறிக்கிலந்த
நாடிகளிற் பூரணச்சேர் னன்றேயாகும்
மீட்டுதிசை பிடித்தவைகள் செயல்களாண்பெண்
ணியங்கிடவுஞ் சூனிய பூரணமெழுத்தும்

வாட்டமற மதித்தெண்ணி நிருமித்தற்கு
வல்லவனே சரம்பார்க்க வல்லனென்றே.

இ-ள், ஆகாயத்தில் மந்திரஞ்செபிக்க விற்போர்செய்ய நன்று இது சூரியகலைக்குநோக்கும் இது நிறைகச சந்திரன்நிசையாலும், அல்லது சந்திரனேயாலும் சூரியனேயாலும் வந்தவன் பூரணபட்சத்தினின்றால அவன் வந்தகாரியம நன்றாம் இது போகதிசை ஆண்பெணசூனியம் பூரணம எழுத்து இவைமுதலாய்ச சொலலப்பட்ட இச சரநூலினுள் நுட்பப்பொருளைக்கண்டு இதுஇன்னதென்றும் அது இன்னதென் நிருமிக்கவல்லவன் சரமபார்க்கவல்லவன் அல்லாதவ னல்லாதவனெனறறிக-எ-று. (௬௯)

சரம்பார்ப்போனியலபு

நனறான மறைவலலோா குலமாலெலன
ஞமுரைத்த சரநூலி னடைதப்பாம
லென்றாரும் பார்ப்பவரே பூமிதேவ
ரிசைந்தமா ளிடப்பிறப்பி னின்பங்கொள்வாா
குன்றாத மாபறவை யெரும்புதாரும்
கொடிமருந்தி னளவறிந்து கொண்டுவாழ்ந்து
பொன்றாத தெய்வீகம் பொருந்துவார்கள்
புகுதுவார் புன்பிறப்பிற் புகலாதாரே.

இ-ள், நல்ல பிராமணகுலததவராய்ப பிறந்தாலு மென்னும் அல்ல இழிந்தகுலத்தராய்ப் பிறந்துமென்னும் இச் சரநூலுணர்ந்து இதனடைதப்பாமல பார்ப்பவரே பிராமணராவர் சராசரஙகளினுடைய தன்மைகளை யறிந்தவராக இப் பூமியின்கண் இவரே தேவரென யாவராலும் பூசிக்கப்பட்டு வாழ்ந்து பரம்பொருளிற் சாயுசசமடைவர் பார்க்கமாட்டாதவர் இழிந்தகுலத்தினராய்ப் புனபிறப்பிற் பிறந்துக்கொண்டிருப்பார்கள்-எ-று. (௭0)

புன்பிறப்பிற் பிறக்கினுஞ் சற்குருமுகத்தாற்
பொருந்தியயிச் சரநூலைப் புகலக்கேட்டு

நன்குணர்ந்து நெறிநடப்போன் யாவரேனு
நாமவனென் றிரண்டில்லை நல்லாகேட்கின்
மின்பிறக்குஞ் செந்தழலை யடுத்தவெல்லா
மிக்கதழல் வடிவான விதமேபோலத்
தன்பிறப்பி லினிபிறவான் வசமேசாகான்
சடைமேனு மணிந்தசந் திரனெப்பானே.

இ-ள், இழிந்தகுலத்திற் பிறந்தவனானலுங் குருமுகாந்தா மாயிச் சரநூலை சொல்லக்கேட்டு இதனையுணர்ந்து இவ்வழி நடப்பவன் யாவனானலும் அவன் யாமேயாவன் வேற்றுமையில்லை நெருப்பு தன்னை யடைந்தவற்றையுந் தன்னுருவாக்கிக் கொள்ளு மியல்புபோல அவன்யாமேயாவன் அவமாய்ப் பிறந்திறவான் இன்னம் விசேஷமாய்ச் சொல்லுமளவில் சடாபாரத்தில் நா மணிந்திரானின்ற சந்திரன்போன்ற என் முடிமேல் வீற்றிருப்பான்-எ-று. (௩௪)

ஞானசரநூல்சாஸ்திரம் முற்றிற்று.

சிவமயம்.

# சிவானந்த போதம்.



## காப்பு.

### வெண்பா.

சிவானந்தபோதகமாஞ் சித்திமுத்திதந்து
பவானந்த மானவினை பாழாம்—நவானந்த
ஈசனே தானாகு மென்வடிவுத்தாளிணையைப்
பாசமுடன் றொழுவார் பார். (௧)

[illegible]யாகருள் போதஞ் சிவசுந்தரன்சொல்
தயாபரியென் றுய்வடிவர் தானும்—செயாவெனவே
பொய்யாவிநாயகனும் பொற்குருவாஞ்சண்முகனும்
அய்யாவு மென்னுள்ளே யாம். (௨)

முத்திபெறுமென்னெஞ்சு மூர்க்கருடனேயிணங்கி
சித்தந்ததும்பிச் சிதருமன்—முத்தனும்
பட்டினத்தார் சாட்சிப் பகுத்தறி தலிந்நூலைத்
தொட்டவர்க்கு முண்டாஞ் சுகம். (௩)

பணியறுத்தகாகப் பரபோகங்கொண்டு
துணிவுறுத்தநெஞ்சுக்குச் சொல்லின்—அணியூராய்
படபடென்றும்வெஞ்சம் பகருசிவானந்தத்
திடமுறுவார் தானே சிவம். (௪)

சிங்காதனமுடைய செல்வவடியார்கள்
தங்காற்சிரமேற் றரித்திட்டேன்—பொன்கால்
பற்றிப்புகழ்ந்தன்பா லிந்நூலென்புன்கவியால்
சாற்றத் துணிந்தேன் சரம். (௫)

## நூற்பயன்.

### விருத்தம்.

அறிவதனை மனங்கேட்கச் சிவானந்த போதத்தை யறிய
நன்றாய், நெறியுடையமுத்தர்கள்தன் திருவடியிற்பணியவரு
ள் நிலைக்கக்காட்டிக், குறியுடனேயனுபவித்து வழியடைந்து
கதிபெறவே கூறவென்றும், பிரிவறவேவாழ்ந்துசிவப் பேரா
னந்தம்பெருகப் பேசுமிந்நூல். (௬)

நிறைந்தபரி பூரணமாய் நிற்குணமாய் நிர்மலமாய்நித்த
னுகித், துறந்தமனத்துடையோர்க்குந் துரியனுமாயதீதனுமா
ய்ச்சோதியாகிக், கறந்தமுலைப்பாலாகிப் பாலிலுள்ள ருசிகா
ட்டுங்கர்த்தனுகிச்,சிறந்தகுருமாணிக்க சுவாமிகளை யெம்முள
க்கின் றொருமகல் செய்வாம். (எ)

சமயாசாரியர் மூவர் துதி.

இசைக்குருகிப்பரந்தனை யெழுந்தருளிவேண்டியதோ
ரின்பந்தந்து, இசைக்குளவாயெதிர்த்தவரை முதித்திடாச்சிவ
சமய மேலாய்ச்செய்து, இசைக்குளவோபுகழ்ந்தேத்தச் சிவா
லயத்திற் றேவாரஞ் சிறக்கவோதும், பசைக்கருதியருள்பெ
ருகி மூவரிணை மலரடியிற்பணிகின்றேனே. (அ)

பஜவண்ணர் அல்லமாப் பிரபு துதி.

பத்திநிலைதவறாமற் கிருபையுமே வழுவாமற் பாரின்மீ
தே, யுத்திசிவகணேசருக்குப் போதமுற்றுப்பூசைசெய் துகந்
துஞானத், தத்துவமேயுணர்ந்துசிவன் தானுகும்பஜவண்ணர்
சாட்சாத்கார, முத்திதருமல்லமாப் பிரமீசரிருவர்தாள் முடி
கொள்வாமே. (௯)

மருத்துமலைதேசிகர் துதி.

பன்னுமறை சாத்திரங்க ளாகமங்கள் விரித்தநூற் பலத்
திற்சென்றே, புன்னுகின்றமனத்தாலே பிறப்பிறப்பாம் நோ
ய்பலவற் றுற்றிடாமற், பொன்னுண்டைய வம்பலவர் கழற்பணி

பச்சிந்தையற்றுப் பூஜைசெய்ய, வென்னதென்றேயெனையா ண்ட மருத்துமலைத் தேசிகன்றாளிறைஞ்சுவோமே. (௪0)

## நூல்.

## அறிவிற்கும் மனதிற்கும் * வாக்குவாதம்.

கூறுதல்.

ஆனநெஞ்சமே யிமைபொழுதாகிலு மலைவறுத்திருந்தா யோ, போனநாளிலே நடந்துமிருந்ததும் புதுமைகளறியா யோ, ஈனமாகிய கவலையைநீக்கி யைம்பொறியினிலிணங்கா மல், தானமொத்துநான் சொன்மொழிகேட்டுநீ சரியென்று மகிழ்வாயே. (க)

மனங் கேட்குதல்.

(அவதாரிகை.) ஏதேது விபரீதமாக யிருக்கிறது இமைப் பொழுதாகிலும் பிரியாமலிருந்த நீ இப்போதென்னை அன்னி யமாகக்குறித்து சொற்படி கேட்கச்சொன்னதும் சந்தோஷ மாயிற்று ஆகிலும் உதவியான காரியமாக விருப்பிற் கேட்க வேண்டுந்தானே ஆதலாற்சொல்கவென்று மனங்கேட்க வறி வுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

முத்துபெறுமழகான நெஞ்சகமேபணியறுத்தன்மொழியக் கேணீ, சத்துசித்தானந்த பராபரமேகதியென்றுஞ்சார்ந்தி டாமன், முத்தர்களுமோதிவைத்த நூலதனையாராய்ந்து மு னைந்திடாமற், பத்திநிலையில்லாமற் சிந்தனையுமோயாமற் பா ர்ப்பதென்னே. (உ)

(அ - கை.) இனியாகிலும் பரதத்தைச் சேரவில்லையெனவு ம், நூலினுட்பொருளையறிந்து முனைகொள்ளவில்லையெனவு ம், பத்திநிலையி னிற்கவில்லையெனவும், சிந்தனைகளை யறுக்க வில்லை யெனவும், சொல்கின்றனவற்றை எக்காலத்திலும் யா னறியாதவளாக விருக்கிறேன் இஃது தந்தர்க்கப்பாவையாம்.

* பாக்கன் அறிவு செல்லாது,வசனங்கள் மனதுசொல்வது.

க விருக்கின்றது மாடு, மக்கள், பெண்டீர், சுற்றம், வாணாள் முதலியனவே பொருளென் றன்னியிருந்த வெனக்கிப்போ தாதிடீரென்று நான்குவகையிற்சீந்திக்கச்சொன்னீர் ஸ்பஷ்டமாகப்புலப்படுமாறு புகல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

மாடுமக்களுஞ் சுற்றமும்பெண்டிரு மாளிகையுடன் வாழ்வும், நாடுராச்சிய மாண்டிடும்புகழ்ச்சியு நம்மதென்றேதேகத்தி, னூடுசென்றுநீ யெனதுடலியானெனு வழன்றலுத்தி நெஞ்சே, வீடுவிட்டுயி ரேகிடும்போதினில் வினைவழிநுழைந்தாயே. (௩)

மனங்கேட்குதல்.

(அ-கை.) தேகத்தினுள்ளே புகுந்து மாடு, மக்கள், சுற்றம், பெண்டீர், உயர்வாழ்வு, தேசாதிபத்தியப்புகழ்ச்சி முதலியவை சதமென்றும், தேகம் நான் என்றும் பாராட்டி உழலுகிறுயென்றும், முடிவுகாலத்தில் வினைவழியிலே உயிரை நுழைக்கிறுயென்றுஞ் சொல்லுகிறுய் நீ இதுகாறும் கூட்டிருந்தையா இல்லையா இதுகாறும் யார்தாம் புகலாதிருந்தவாறென்னை? இப்போது இவையனைஞ் சொல்வதற்குக்காரணமென்னை? என்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

கேணிநெஞ்சமே யுன்னிடவயற்றிலே கிடந்துலைந் தனமின்னாள், வீணிலேபலசெனனமுமெடுத்தநின் மெலிந்திடும்போது, ஊணிலேயெனை யானறியாமலே யுத்தமர்நோக்கத்தாற், காணுமிப்படி மானிடதேகமுங் கண்டதுமறிவாயே. (௪)

மனங் கேட்குதல்.

(அ-கை.) அனேகந் திரேகத்திற் பிறந்துபிறந்திறக்கின்றதாகவுஞ் சொன்னீர், அவற்றுளிம்மானிடதேக மருமையாக பெரியோர் கிருபாநோக்கத்தாற் கிடைத்ததாகவுஞ் சொன்னீர் அது தெரியும்படிக்குச் சொல்லுமென மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

நாலுவகை யோனியிலு மெழுவகையின்றோற்றத்துளளி னமாக, மேலுகந்தமானிடந்தா னெடுப்பதுவே யருமையாய் மெய்யனுகி, பாலுபோன் மனமுடைத்தாய் புண்ணியமேமிகு ந்துபவம கீழாய்த்தளளி, நூலுணர்வ தருமைநெஞ்சே யிருவி னையிலொருவினையை நொறுக்கித்தானே. (௫)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனல் மானிடதேகமெடுப்ப தருமையென்று சொன்னீர் அதிலும் மெய்யனுகிக் கள்ளமற்று பாவம்போக்கி புண்ணியமிகுந்து நூலுணர்வ தருமை யென்றுங் காட்டுகிறீர் அப்படியானல் மானிடதேகத்திலேதானே பலவிதமா யரு மையாகியதேக முண்டோ வென்று மனமகேட்க அறிவுகூறு

அறிவு கூறுதல்.

மனிதரிலும்பறவையுண்டு விலங்குண்டுகல்லுண்டு மாமு முண்டு, மனிதரிலுநீர்வாழுஞ் சந்தியுண்டு அநேககுலமனிதரு ண்டு, மனிதரிலுமனிதருண்டு வானவருமனிதராய் வருவது ண்டு, மனிதரிலேபிறப்பறுக்க வந்ததேயருமையென வகுத்தா ர்முன்னேர். (௬)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனல் தேகமெடுப்பது எவ்விதம்? வினையென் பது ஒன்றோ? இரண்டோ? இதில்சகாயவினையெது வினைவ ழியாய் தேகமெடுக்கிறது யாராலேயென்று மனங்கேட்க அ றிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

எழுவகையின்றோற்றமாய்க் கடந்தோறும் பலவிதமாயி ன்பமுற்றே, பழுதறவேதேகம்வரும் பேய்மனமேமீசெய்த ப ண்பிறைலே, உழிதருமிக் காலத்துமொழியாம லிருவினையாலு கந்துநிற்கும், கழுசுடுமிவ் விருவினையிலொருவினையை நோக் குவதுகடினந்தானே. (௭)

மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனால்என்னாலே வினையுண்டாகிறதென்றும் வினையினாலே தேகமெடுக்கிறதென்றும்சொன்னீர் வினைவழியாய்ப் பலயோனிகள்தோறும் எப்படிப்புகுந் துஜனனமரணமுண்டாகிறதென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

மனவாக்குக்காயத்தான் மருவுஞ்செய்கை
மலர்மணம்போலுறுஜன்ம மயக்கத்தாலே
இனமாக்கும்பிறவியினி லிழுத்துக்கொண்டே
யெத்தனையோஜன்மத்தி லிறக்கச்செய்யும்
தனவாக்காய்பிரம்மாவுஞ் சிருஷ்டிசெய்ய
தான்றானேவளர்ந்திருந்தத் தரணிமீதே
இனமாக்குவெம்பாசந் தன்னிற்சிக்கி
யிறந்தார்கள்பிறந்தார்க ளின்னம்நெஞ்சே. (அ)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் பிறந்தாலு மிறந்தாலும் வேதாகம சாத்திரச்சொற்படி நடந்தால் தேவேந்திரபதவி பிரம்மபட்டமுதலானது மடையலாமென்று சொல்லுகிறீர்களே அதுசுகமல்லவோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

முந்தஜன்மமாம் புண்ணியமிருந்திடின் முக்கியமுண்டாகும், பிந்தஜன்மமாம் பாவமேமிகுந்திடிற்பெரியதோர் துயராகும், அந்தரெண்டையு மறுத்திடிலொளிதருமரன்கழற்றுணையாகும், பந்தமானதோர்புராணங்கள்வேதங்கள்படைக்கதை யறிவாயே. (௯)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் மும்மூர்த்திகள் பட்டமாயிருந்தாலும், தேவேந்திரபுகழ்ச்சி பெற்றாலும் பின்னும் பூலோகத்திலே பிறப்ப துண்டோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்,

வாழுமாலய னுருத்திரனிந்திரன் வானவருனுலும் சூழு மாயுதம் பிரளயந்தன்னிலுஞ் சுகமுடன் வாழ்ந்தாலும், தாழு மானதொல் லுலகில்வந்துறுவர்கள் தரணியோர் புகழ்ந்தே ற்ற, வீழும்நெஞ்சமெ யரனடிசேர்ந்திடில் வினைக்குழிவிழந் தாயே, (ய)

மனம் கேட்குதல்.

(அ-கை.) ஆனல் வேதாகமபுராண சாஸ்திரங்களுண்டா க்கிவைத்ததார்? அவற்ருலே என்னபிரயோஜனமென்று மன ங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

நரஜென்மத்தையெடுத்தும் பவத்தினில்நழுகிடா திவ்வ ண்ணமே திரமதாகவே யீசனுத்தரவினுற் செய்பவர் புண்ணி யமென்றே, வரமுடைத்தநல் வியாசருஞ்செய்தனர் வழங்கிடு மதனுலே, பரவடியை யுறுமுத்தர்க ளிருவினைப் பற்றறப்பார் த்தாரே. (கக)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனல்ஒருவர்செய்கிற பாவபுண்ணியமொருவ ருக்கு உண்டெண்கிறது எவ்விதமென்று மனங்கேட்க அறிவு

அறிவுகூறுதல்.

வேறு.

ஒருவர்செய்த பாவபுண்ணிய மொருவர்க்
குண்டென்று சொல்லுகின்ற வூமைநெஞ்சே
தருகுமவ ரவருயிர்க்குத் துணையார்சொல்வாய்
தந்தைதாய் பெண்பிள்ளை துணையுமாமோ
வருகுமந்த வியாதிகளும்வினை தானல்லோ
மக்கள்பெண்டு தந்தைதாய் வாங்கிக்கொண்டு
திருகுமவர் பின்னொருவர்க் கீந்ததுண்டோ
திருஷ்டாந்தங் கண்டுநீ தெளிந்திடாயே. (கஉ)

### மனங்கேட்குதல்.

(அ-கை.) அப்படியானால் புராணங்களிலேயொருவர்செய்த பாவபுண்ணியம் மற்றொருவருக் குண்டென்றுபொய்சொல்ல வேண்டிய தென்னவென்று மனங்கேட்கஅறிவுகூறுகின்றது.

### அறிவு கூறுதல்.

பாசபந்தமானதொரு மூடர்க்கிந்தப்
பற்றுதலை வையாட்டால் நம்பமாட்டார்
ஆசைகொண்டு செய்யார்கள் விகாதஞ்செய்வார்
அதனாலே பொருத்தம்வைத்துச் சொன்னதல்லால்
நேசமிதுபோலவே பகைத்தார்பாரு
நீங்கினால்வேறுகெதி நிலத்தோர்க்குண்டோ
மோசமிதுநம்பாதே நெஞ்சேகேளு
முன்னோர்தவர்க்குச் செய்தபலன்முடியுந்தானே. (௧௩)

### மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் ஒருவர்க்கொருவர் நன்மை தின்மைக் கூட்டுறவில்லையே! அப்படியிருக்க ஒரு குடும்பத்திலே பந்துஜனங்களில் தாங்கள் ஒன்றுக்கொன்று பிறவற்றிற்கிடங்கொடாமல் உள்ளுக்குள்ளே அனேக விகற்பத்தோடு மனம்பேதித்துவாழ்கின்றார்களே எந்தபற்றுதலைக்கொண்டு ஒன்றுபோலிருக்கிறார்களென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

### [illegible]றுதல்.

பெண்ணாலும் பொன்னாலும் பூமியாலும்
பெருக்கவே யிச்சைகொண்டொன்றுக்கொன்று
தின்னார்க ளுறவாடிச் செத்தாரல்லாற்
சேர்ந்துமன மொன்றாகிச் சிறந்திட்டாரோ
கண்ணாலே பார்த்துநீ சுகங்கண்டாயே
கவலைக்கே யாளாகிக் கருத்திழந்துப்
புண்ணாகிப் பிறப்பிறப்பிற் புகுந்திட்டாய்நீ
பூமலர்த்தாளிணையென்று புகழ்வாய்நெஞ்சே. (௧௪)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் வினைவழியேயுயிர் இத்தேசகத்தைவிட்டினிமேற் றேகமெடுக்கிற தெந்ததேகமோ வதைத் தெரியும்படியும் இத்தேகத்தை விடும்போது யாதொரு குறிகளுண்டோவென்றும் மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வெண்பா.

தேகந்தனிற்பொறியுஞ் சீராம்புலன்கரணம்
ஆகந்துறக்குமப்போ தந்நேரம் — போகமது
எவ்விடத்துச்சென்றதோ யேற்குங்கடவடிவம்
அவ்விடத்தை நன்கு யறி. (கஉ)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் வினைப்பயனுமறிந்தேன் இந்தஅருமையாகிய மானிடதேகம் வந்ததுமறிந்தேன் வேதாகமபுராண சாஸ்திரங்களது கட்டுப்பாடு மறிந்தேன் பிறப்பிறப்பென்கிற விவரமுமறிந்தேன் வினைவழியே தேகமெடுக்கிற தென்னும் விவரத்தையும் என்னால் வினையுண்டாகிற தென்பதையு மறிந்தேன், ஒருவர்க்கொருவர் நன்மை தீமை உதவியில்லையென்பதுமறிந்தேன், ஒருகுடும்பத்திலே பலஜனங்களொன்றுபோற்கூடி வாழ்கிறபந்தத்தையுமறிந்தேன், எல்லாமுள்ளபடி ஒத்துக்கொண்டேன் அரனது திருவடிநிழலை யடைகிறதே சுகமென்று ஆசைகொண்டேன் இத்தனைநாளாக வென்னை நம்பியிருந்த குடும்பத்தா ரெல்லாம் இளமைகளாக விருக்கிறபடியினாலே யவர்களைவிட்டுவிட்டால் வேறுகெதியின்றிஅவர்கள் வருந்துவாராதலா லவர்கள்பக்குவகால பரியந்தமிருந்து காக்கவேண்டுமென்று பரிதாபப்படுகின்றனமையா லதற்கொரு வயணஞ்சொல்கவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

விருத்தம்.

அவரெல்லா மிருக்கவிப்போ துன்னையேம
னழைத்துவிடி லியாதுசெய்வா யழகுநெஞ்சே

யிவர்களுக்குப் பிழைக்கும்வகைத் திரும்பிவந்தே
யேதுவாய் முடிப்பதுண்டோ வெண்ணிப்பாரு
தவறிநீ கடம்விட்டுப் போகும்போது
தான்கூட மாண்டாரோ பிழைப்பில்லாமல்
அவரவர்க்குச் சிவன்றுணையென் றெண்ணிடாம
லையத்தாலிப்படியே யலைவுற்றாயே. (௧௬)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனாலறியலானேன் இனிமேற் பாசபந்தத்தில் வீழ்வேனோ? திருவடியை யடையாம லிருப்பேனோ! ஆனாலின்னுங் கொஞ்சகாலம் பொருத்துதான் திருவடியையடைவதற் கேதுபண்ணிக்கொள்ளக்கூடாதோ; இப்போதுதானே துணிந்துக்கொள்ள வேணுமோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

காயமானவாக்குதான் றளர்ந்தபோது
கருத்தழிந்து வுறுதியற்றுப்பாசமீறி
நேயமந்தமாய்கையினிற் புற்றிக்கொண்டால்
நெற்றிக்கண்படைத்தவர்தா னிலைப்பிப்பாரோ
மாயமனமேயிந்தக் காயந்தானும்
வல்லமையோவெத்தனைநாள் வாழுமோசொல்
காயமதுநிலையல்ல வென்றுமுன்னோர்
கண்ணினொளி மழுங்குமுன்னே கதியுற்றாரே. (௧௭)

மனங் கேட்குதல்.

(அ-கை,) அப்படியானாற் சாலவு மச்சங்கொண்டேன் இனி திருவடியடைதற்குப் போந்தவழி சொல்லென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.
வெண்பா.

முத்திப்பரிபூரணமாய் முத்தியடைந்தவர்கள்
சித்தைமகிழ்ந்தோதுஞ் சிவநூலை — யுத்தியுந்தி
பார்த்தறிந்தேனாய் பகுத்துப்பகுத்துநெஞ்சே
சேர்த்தறிநீ யென்வசத்திற் செல்.

மனங் கேட்குதல்.

(அ-கை.) அப்படியே சொல்லுகிற சில நூல்களைப் பார்த்தேன் திருவள்ளுவநாயனார் முப்பால்வைத்துக் குறள் சொன்னதிலே "துறந்தார்க்குந் துறவாதவர்க்கு மிறந்தார்க்கு மில்வாழ்வா னென்பான் றுணை" என்று சொற்றன ரஃது தென்னகாலென மனம் வினவ வவற்றிற கறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல.

விருத்தம.

யாவரிருக்குநிலையதனை யவாககேயதனினிலையமர மூவ ரமுதலாம், ரிஷியோர்க்கு முழுககத்துறந்தோர் காமியர்கரு ந, தேவரீர்க்குந்திறமுதலாய் சிறக்கக்காட்டுமெ கண்ணொளி போல், நாவிலிருந்தே அஞ்சனமாய்நவின்ற மொழியென்று யகமே. (கக)

மனங கேட்குதல்.

(அ-கை.) ஆனால்முத்திநிலையுமித்திறம் தனிமையிற் பேசுகின்ற நூல்தானெவ்விதமாகச் சொல்லு மென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

வெண்பா.

தேகமெடுத்ததுவுஞ் சிந்தையுடைத்ததுவும்
போகசமுசாரத்திற் புக்கதுவும் — தாகமது
கொண்டுதெவிர்த்ததுவுங் கூறுகைனவெனவே
கண்டுசொல்லும் நூலதனைக்காண்.

மனங் கேட்குதல்.

(அ-கை) ஆனால் அந்த நாலும் பார்த்தே...
பொருளைச்சங்கையற இப்படியிருக்குமென்றுதெரிந்துக்கொண்டாற் போதுமோவென்று அதிவினயத்துடன் மனங்கேட்க அறிவுகூறுகின்றது

அறிவு கூறுதல்.

விருத்தம்.

அறிவுக்கேசாட்சிகொண்டு நூலைப்பேசி
அங்கத்தைத் தானழித்து அகத்தைநோக்கு
குறிவைத்தபடியிருந்து மெய்யைப்பொய்யாய்க்
குற்றமென்றேபொய்யைத்தான் பொய்யாய்க்கண்டு
நெறியுற்று இருவினையும் நீக்கிப்போட்டு
நேசமுடனீசனுடன் பாசம்வைத்து
பிறிவற்று ஒன்றாகி வாழலாகும்
பேதித்துப் போகாதேபேணிக்கூடே. (உக)

மனங் கேட்குதல்.

(அ-கை.) அந்தப்படி தானே யனுபவிக்கிறதா மற்றொருவருடைய சகாயமும் வேண்டியிருக்குமாவென்று மனங்கே

கூறுதல்

வேறு.

புகர்சமயமாகின்ற பல்சமயந்தன்னிலே புகுந்திடாமல், அகச்சமயமாகின்ற சிவசமயத்திச்சைக்கே யகப்பட்டாய்நீ, மிகப்பெரிதாம்புத்தியைநீ படைத்திருந்தும்பெரியோரை மேவிடாமல், தகப்படவேபிறவியென்ற நோய்க்குள்ளேசிக்கித்தான் தளர்வதேனோ. (உஉ)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் பெரியோர்களைச் சாரவும்வேண்டுமோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

பெரியோரைச்சாராம லவர்களுக்கேயன்புமசயதும்பசிடாமல், துரியமாதீதத்தில் சிவபூஜைசெய்யாமல்சுற்றிச்சுற்றி, அரியயனுக்காணாத பரமசிவமென்றதையு மறிந்திடாமல், சரீமென்றுவினைப்பயனுங் கொண்டதுவே கோலமாய்ச் சாதித்தாயே. (உங)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் தெளிந்த பெரியோர்களுக்கு ஜகத்திலே பிரயோஜன மில்லையே எவ்விடத்தி லிருப்பார்களோ அவர் களைக் கண்டு தரிசிக்கலாகுமோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

தெளிந்ததுறவி யிகந்தனிலே தேகப்பிராரத் துவப்படிக்கு, மொழிந்தேகரணத்தனுபோகப் புவனத்திருந்துமெச்செயலும், ஒழிந்துசிந்தைதெளிவுற்றே யொன்றேசிவமென் றிருப்பார்கள், விழுந்தபேருமவரைக்கொண் டேறுவார்களிகத்தோரே. (உ௪)

(அ-கை.) ஆனால் இகத்தில் சஞ்சரிக்கிறதினால் பெரியோர்களுக்கு இடறுவாராதோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

கருவியகன்றிவ்வுலகத்தைக் கனவென்றிருக்கக் கருத்ததனுள், ஒருமைக்கொணடொப்புவமையற் றுள்ளும்புறம்புமொன்றாகிக், குருவைப்பணிந்துபூரணத்தில் குலாவுமடியார் ஜகந்தனிலே, மருவப்பொருந்தி வாழ்ந்தாலும் மாசற்றிருப்பார்வல்லவரே. (உ௫)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் விபரீதமிருந்து வந்ததானால் அதை நீக்கிக்கொள்ள வல்லமை யுண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

முந்தவிருந்தவஞ்ஞான மூடமானசத்தியையும், பந்தமறவேதுணிந்து பராபரனைத்தினமுன்னைக்கொண்டு, சிந்தைதெ

ளிக்தேகுருபரனைச் சிவமென்றெண்ணுந் துணிவதனால்,தொ ந்தமறுத்துச் சிவானந்தச சோதியதுவாய்ச சுகிப்பாரே.(உ௬)

மனங் கேட்குதல்.

(உ-கை.) அப்பேர்ப்பட்டபெரியோர்கள் எந்தச்சாதியா யிருந்தாலும் தொண்டெடலாகுமோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

சாதிபேதந்தனைக்குறித்துத் தயங்கி மயங்கித்தளராதே
சாதியாவதெவரறிவர் சர்வவுடலுமொன்றுச்சே
சாதியாவரெவரென்னில் தன்னையறிந்துசிவமான
சாதிபெரியசாதியென்று சாற்றுமறைகள்சத்தியமே

மனம கேட்குதல்.

(அ-கை.) ஆனல் பெரியோர்களை சாதிபிரித்துச்சொல் லுகிறதினலே குற்றமுண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

ஞானம்பதியா விழிகுலத்தோர் நாட்டிற் பிரித்தேசாதி தன்னை,யீனசாதியா ரென்றே யிகழ்ந்தார் முத்தர்பத்தரை யும், ஆனபெரியோர்தங்களையு மவரிலொன்றுய்க்குறித்துக் கொண், டீனமுரைத்தே யருநரகி லிழிந்து போனு ரிகத் தோரே. (உ௮)

மனம கேட்குதல்.

(அ-கை.) இப்பேர்ப்பட்ட பெரியோர்கள் ஜகத்தோ ரி கழத்தக்கதாக திரிவானேன் ஜகததோரிகழுவானேன் இத ஞல் யாருக்குத துன்பம யாருக்கு இன்பமென்று மனங்கே ட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

பெரியோரைப் பித்தரென வுலகத்தோர்கள்
பேயரென்ன விகழ்வதென்ன பிரித்துக்கேளு

திரிவார்க ளிச்சைபடி ஜகத்தோர்பார்த்து
 தீவினையும் நல்வினையும் திரட்டிக்கொள்வார்
சரியாச்சென் றிருவினையு மொழித்துப்போட்டு
 சச்சிதா னந்தமென்ற பதத்திற்சார்ந்து
துரியாதீ தப்பொருளைப் பெற்றுமந்தச்
 சுயஞ்சோதி யாகியே சுகமுற்றாரே. (௨௯)

மனங் கேட்குதல்

(அ-கை.) ஆனால் பெரியோர்க ளிருவினையும்ஜகத்தோருக்கு ஒப்பித்து சுகம்பெற்றார்களே, அவர்களை யிகழ்ந்த வுலகத்தா ரென்னலாபம் பெற்றார்களென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவுகூறுதல்.

பெரியோரையிகழ்ந்தவர்கள் பெற்றலாபம
 பேசக்கேள்நெஞ்சகமே பெருமையாக
பரியேறிப்போனவன்றான் றீயில்வீழ்ந்து
 பதைத்ததுபோலவடிவயிற்றில்நெருப்பைக்கூட்டி
நரிவாயில்பொருள்பறிக்கு மின்பம்போல
 நகைத்திகழ்ந்தே எரிவாயி னரகம்புக்கு
விரிவானவெழுநரகில் விழுந்திளைத்து
 மெலிந்திவோ ரென்றுமறை விசுந்தானே. (௩0)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் பெரியோர்கள் மகத்துவ மிப்படியென்று மறியலானேன் அப்படிப்பட்ட மகாத்துமாக்கள் தெரிசனங் கண்டுகொள்ளுகிறதற்கு மார்க்க முண்டோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

குற்றமேதுங்குறியாமல் குணமும் பலவாய் விரியாமல், ஒத்தபொறிகள் புலனோர்ந்து முறவாய்நீயுமுகர்திதனை, பத்தும்பதன மாகத்தான் பட்சமிகவும்வைத்துரைத்தாற், சித்தமதனைச் சிவமாக்குஞ் சிவானந்தபோதமிதே. (௩௧)

மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனாலெவர்களிடத்திலும் சாத்திரத்தின் கேள்விகேட்டுத் தெரியும்படிச் செய்துக் கொள்ளுகிறதுதானோ அவர்களாக்கினைக்குட்பட்டு தொண்டுபண்ண வேண்டுமோ வென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

கூறுதல்.

ஐயமின்றி யுடல்பொருளு மாவிமூன்று
மாண்டவனே யுன்னதென் றளித்துப்பின்னுந்
துய்யகுரு நாதனுக்கே யடிமையாக்கிச்
சொன்னபடி கேட்பதற்கே தொண்டனாகி
மெய்யனென்றே யவர்மனமுங் களிக்குமட்டும்
வேண்டினதோர் சோதனைக்கு மிதத்திடாமல்
செய்யதிரு மலரடியிற் காத்திருந்தாற்
செவியதனி லுபதேசம் செய்வார்தாமே. (௩௨)

மனம் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் வெகு பிரயாசையா யிருக்கும்போலே யிருக்கிறதே சாத்திரங் கேள்விமாத்திரங் கேட்டுக்கொண்டு யுக்தியினாலே அனுபவித்து முத்தியடையக் கூடாதோ குருசமுகத்தில் தொண்டுபட்டுதான் முத்தியடைய வேண்டுமோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது

அறிவு கூறுதல்.
வேறு.

இருவினையுஞ்சமமுடைத்தே யெழுந்துவந்த
வென்குருவா மாணிக்க வீசனார்க்கு
குருவடிவா யம்பலவ ருபதேசித்த
குறிப்பைத்தா னறியாயோ குருட்டுநெஞ்சே
மருவுமிந்த வுடலுக்கு ளுடலைக்காட்டி
வாக்குக்கு வாக்கருளி மனமுமொத்து
திருவடியி லடையகுரு மூகூர்த்தமல்லாற்
சிவானந்த போதகமுந் தெளிந்திடாதே.

மனங் கேட்குதல்.

(அ-கை.) அப்படியானல் ஞானசாரியரிடத்தில்அனுக்கிர கம் பெற்றுக்கொண்டால் போதாதோ சாத்திரமும் பார்க்க வேணுமோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

கூறுதல்.

சேறுபோல் தளதளென வலைபூமிக்குள்
திடமான சம்பத்தை நாட்டினுக்கால்
மாறுகொண்டு விழுந்திடுமென் றதனைச்சுற்றி
மணற்கல்லைக் கெட்டித்து முறைக்குமாபோல்
கூறுகின்ற சாத்திரத்தின் சாட்சிதந்து
குலைந்திடாத் திடமுற்றுக் குறித்துநின்று
வீறுகொண்டு நெஞ்சேநீ யனுபவித்தால்
மெய்ஞ்ஞான வீடதனில் விளங்குவாயே.

மனங் கேட்குதல்.

(அ-கை.)ஆனல் சாத்திரம் தெரியாதபேர்கள் சற்குருவை னிட முபதேசம்பெற்று சாதித்து அனுபவம் அடைந்தபேர் கள் பெற்றகாட்சி நூலிலுள்ள பொருளுக்கு ஒத்துக்கொள்ளு மோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

உறுதிகொண்டபிள்ளையென்று லாசான்வைத்த
உபதேசங் கேட்டளவி லுறுதிகொண்ட
தில் நாட்டினது நழுவிடாம
லெப்போதும் குருபத்தி தவறிடாமல்
மறுகவலை சாராம லூன்றப்பெற்றால்
வழங்குநூல் பேசுகின்ற வண்மைக்கொக்கும்
இருபைதரும் முத்தியே யடையலாகும்
கிட்டினவர்க் கேதுகுறை கேடில்நெஞ்சே. ௩௰

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனல் ஞானனுபோகம் ஒருவர் பெற்றிருந் தால் பெறாதவர்கள் அந்தவனுபோகத்தைச் சொல்லென்றும்

காட்டென்றும் சொன்ன வவர்களுக்கு ஒதுக்கொள்ளும்ப டி சொல்லலாமோ அப்படி இப்படி யென்றுங் காட்டலா மோ ஆகிலும் மெய்ப்பொருளினிடபிரகாசத்தைப் பேசினல் மனமொத்து களிப்பார்களோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

ஒருவர்தினை வொருவர்சொரிந் துற்றபோது
  வுற்றவர்க்கோ சொரிந்தவர்க்கோ வுற்றப்பாரு
மருவுமந்த சொப்பனத்திற் கண்டகாட்சி
  மகிழ்ந்தவர்க்கோகேட்டவர்க்கோ மதித்துப்பாரு
உருசியுட னறுசுவைகொண் டுண்டவர்க்கோ
  உகமையுடன் கண்டவர்க்கோ வூன்றிப்பாரு
தெரிசனமுங் கண்டுகண்டு சிந்தையற்ற
  சிவஞான மவரவர்க்கே தெளியுந்தானே. (௧௬)

மனங் கேடகுதல்.

(அ-கை.) ஆனல் மெய்ப்பொருளினுடைய பிரகாசம் அ வரவர்கள் கண்டு களிக்கப்பட்டதுதானேவென்று மனங்கே ட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

நீதானே யறிந்தலவோ நிலைக்கவேண்டும்
  நிட்டோர் சொல்லுகின்ற நெறியிற்சென்றால்
போதாது போதாது பெருந்துக்குள்ளே
  புலியிருக்கு மென்றதென்னப் புகுந்துபார்த்தால்
வேதாள மென்றதொரு மயக்கந்தீரும்
  மெய்யடியார் மனங்களிக்க மேனிவாழவாய
வாதாடி முத்தர்களை விட்டிடாதே
  மனமேநீ யுள்ளபடி வணங்குவாயே. (௧௭)

மனங் கேட்குதல்.

(அ கை.) ஆனும் தனித்தனியே சமாமடைவதாயிருக்க பெரியோர்க ளொருவர்க்கொருவர் கூடிக்கொண் டானந்த மிருந் துறவாகின்றார்களே அஃதெவ்விதகாரணம்பற்றியெ ன மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

மறப்பான மூன்றுடனு மிழந்தமுத்தர்
 மனவெளியாம் பெருவெளியில் மருவலாலே
துறப்பான வாகாச மொன்றாந்தன்னிற்
 சூரியன்றன் பிரகாசத் தோற்றம்போல
சிறப்பாகத் தேகத்தி லிருந்தமுத்தர்
 திருஷ்டியினாற்கலந்தொன்றாய்த்தியானிப்பார்கள்
மறைப்பான தில்லைநெஞ்சே கண்மணிக்குள்
 வன்னியொளி மருவுமந்த வண்மைபாரே.

மனது கேட்குதல்.

(அ-கை.) ஆறாற் சாத்திரங்களிலே சரியை, கிரியை, யோக, ஞானமென்று சாற்றுகின்றதே யவற்றுள் முன்சொல்லிய முத்தொழிலுஞ்செய்து முடிந்தபின்னரன்றோ ஞானமறியவேண்டியது அப்போதன்றோ ஞானசாரியர் கிருபாகடாட்சம் வேண்டியதென்று மனது கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

சரியைமுதன் முத்தொழிலுஞ் செய்கின்றோர்கள்
 சாயுச்சிய முத்திரையைப்பணியவேண்டும்
உருசியுடனமுதளித்துப் பாதபூசை
 யுண்மையுட னுபசாரஞ் செய்யவேண்டும்
பரிசைகொண்டு சோதித்துநிந்தைசொல்லி
 பகைத்துவிடி னகைத்திடுவார் பலனேபோமா
விரிவுகொண்டு மயங்காதே யுற்றுப்பாரு
 வீணருடன் கேள்விவிட்டு மெய்யைப்பாரே (௩௧)

மனது கேட்குதல்.

(அ-கை.) ஆறு லவ்வளவு மகத்துவமிருக்கிறபடியினாலே யம்முத்தொழிலினது வாபமுஞ்சுளுவிலேமுடித்துக்கொள்ளலாகாதோவென மனதுகேட்க அறிவு கூறுகின்றது.

அறிவுகூறுதல்.

சாயுச்சிய முத்திரையை யடுத்துக்காத்துச்
 சங்கையுற்றுத் திருவுளத்துப் பாங்குங்கொத்தால்

நீயுச்சிய மாகவென்றுங்கிருபைநோக்கில்
நேரான முத்தொழிலி னிலாபநேர்ந்து
மாயுச்சிய மாகவே யம்பலத்தான்
மலரடிக்கே யன்பாகச் செல்வாய்நெஞ்சே
பாயுச்சிய மாகவே பெற்றோருண்டு
பராபரத்தை யடைந்தநின் பண்பிஃதாமே. (௬௰)

## மனங் கேட்குதல்.

(அ-கை) ஆனா லித்தகையனுபவத்தை யில்லரத்தினின்று பெற்றுள ரெவரேனுமுண்டு கொல்லோ; அன்றேல் துறவறம்பூண்டு சந்நியாசியாய் பற்பலவிரதவைராக்கியமும்சர்வசங்கபரித்தியுஞ்செய்து ஜெகசஞ்சாரத்தைவிட்டகன்று ஆரணியசஞ்சாரமுற்று வருபவர்களின் ஞானமென்னுமறிவு பிரகாசமாகி ஸ்பஷ்டப்பட்டுளரோவென்றும் இவர்களிலுந் தம்மனதுட் குடிகொண்டவஞ்ஞானாந்தகாரத்தையோட்டும் வன்மையிலராகி மூடராதலுமுண்டோவென்றும் மனங் கேட்க அறிவுகூறுகின்றது.

## அறிவு கூறுதல்.

சன்னியாசி யானதிலு மூடருண்டு
சமுசாரஞ் செய்வதினு ஞானியுண்டு
முன்னாலே யேதுவாம் பிராரத்துவங்கள்
மூட்டிவிட்டு ஞானிக்கு முறைதப்பாது
பின்னாலே யிருவினையுந் தொடரச்செய்து
பெற்றிடுவா ராசான்றன் கிருபைகொண்டு
பின்னுபின் னங்களா லென்றெண்ணாதே
பெருஞ்சோதி முத்திரையைப்பேணிக்கூடே. (௬௧)

## மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் இல்லரத்திலேயிருந்தும் ஞானம்பெற்றுக்கொள்ளலாமென்கிறது சுலுவாகவிருக்கிறதே உலகத்திலுள்ள பலரும் ஞானாசிரியரிடத் தனுக்கிரகம் பெற்றுக்கொண்டு முத்தியையடைவ தருமையாயிருக்கிறதே அதி லென்னபிராயாசையென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுகின்றது.

யாவர்களும் பெரியோரை யடுத்துக்காத்து
அவரடிக்கே பணிந்துமிக வன்புசெய்து
ஆவலுடன் பன்னிரண்டு வருடங்காத்து
மப்போது பக்குவத்தை யறச்சோதித்து
தேவர்முதன் மூவர்களுந்தேடிக்காணுத்
திருவடியு முடிநடுவுந் தெரிசிக்கத்தா
னுவதனு லுபதேசஞ் செய்வார்நெஞ்சே
நல்லறிவால் வெகுபூசை நவின்றதாமே. (௬௨)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் புண்ணியமிகுந்து சிவசாரபக்தி நேயம் சிவார்ச்சனை வெகுகாலஞ்செய்து பின்னே நல்லறிவ பிரகாசித்திருக்குப்பேர்களுக்குப் பெரியோர்கள் தெரிசனங்கிட்டும் அப்பேர்ப்பட்டவன் ஆசான்திருவுளத்துப் பாங்குக்கொத்து நடந்து பிரகதி யடைவானென்று சொன்னது மறியலானேன் ஆகிலும் பெரியோர்களை யடுத்து அவர் திருவுளத்துக்குப் பாங்குபோல் நடந்து தீட்சையும் பெற்றுக்கொண்டுசாத்திரத்திலுள்ள பூட்டை அனுபோகத்துக்கும் ஒப்பும்படி தெரியவுங்கேள்விப்பட்டுக்கொண்டு ஆசாரியரைக் கவனியாமல் மதங்கொண்டு ஆசாரியர் திருவடிசூட்டி மகிழ்ச்சியில்லாமலும் பூரணதீட்சையாகாமலும் தட்டிப்போகிறதுண்டோவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

அடியறக்குத் தொண்டாவ தருமைநெஞ்சே
யவரவர்க்கு விட்டகுறை யடுத்தகாலம்
பிடியாம விருப்பாரோ தொட்டுக்கொள்வார்
பேதமைக ளாலுலகம் பிணக்குவந்து
குடியாகுமதனுலே நழுகிப்போவார்
குற்றமறச் சற்குருவைக் குறிக்கச்சொல்லும்
விடியாதகாலத்தி லிருளேயாகும்
விடிந்தபின்பு கண்ணுக்கு வெளிச்சமாமே. (௬௩)

### மனங் கேட்குதல்.

(அ-கை.) நீர் உலகவிபரீதம் வருகிறதாகவும் அதனாலே ஆசானைவிட்டு நழுகும்போது ஆசானைக் குற்றமாகக் குறித்துக்கொண்டு போகிறதாகவுஞ் சொன்னீர் அறியலானேன் ஆகிலுமிவ்வளவிலே நழுகினாலும் இன்னொருதேகம்புண்ணியமிகுந்த மானிடமாயெடுத்து சடுதியிலே விட்டகுறை முடியும்படி ஞானசாத்திரியார் கிருபை யடைந்து முத்தி யடைவார்களோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

### கூறுதல்.

இவ்வளவுந் தொட்டேகும் போதுமீண்டும்
இகபோக விபரீதம் வந்தாலுந்தான்
அவ்வளவுந் தான்குருவின் றிருவுளத்துக்
கன்புதவ ருமலே யகன்றானாகிற்
றெவ்வளவாய் விட்டகுறை தாக்குஞ்சேர்க்குந்
தேசிகனைக்குற்றமெண்ணில் தெளிந்துமேலாம்
நவ்வளவாயிழிந்துவிடும் பின்னுமந்த
ஞானகுருத்துரோகமுற்றுநரகெய்வாரே. ([illegible])

### மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனால்ஞானாசாரியரிடத்தி லொத்தாப்போலிருந்து தெரிந்துகொண்டு ஞான குருத்துரோகி தானேதான் தெளிந்தவன்போலே பேசுகிறானே உலகத்தார்களுஞ் சிறிதுபேர்கள் அதைக்கேட்டு மயங்கி ஒத்து வணங்குகிறார்களே அவர்களுக்கு மிவர்களுக்கும் என்னலாபங் கிடைக்குமென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

### அறிவு கூறுதல்.

புலித்தோலை பசுவுரித்துப் போர்த்துக்கொண்டு
புலியென்றாற் புலியாமோ வின்னுங்கேளு
பலிப்பாக பெண்போல புருடன்வேடம்
பகட்டினாலவனுருவம் பாவையாமோ
சலிப்பான நரகத்தில் வீழுமாண்பர்
சற்குருவின் றன்னிடத்திற் கற்றுக்கொண்டு

கலிப்பாகப் புலிப்பாயு மியல்புபோலே
காளிலததோர் வணங்கினதா லீனமாச்சே. (சரு

(அ-கை.) ஆனு லவன்றுனுங் குருத்துரோகி யானபடியினு லே எவ்வளவு தெளிவாய்ப்பேசினுலும் முதநிவிலக்கனென்ப து சரியே அவன் நிச்சயவானென்று நேசிக்கிறவர்கட்கு என் னவிலாபமென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல.

மரப்பசுவின் முலையதனிற் பாலுண்டாமோ
மலடிக்குச் சுதனுடைய மகிழ்ச்சியுண்டோ
தூரததரியாத தண்ணீர்பாம் பதனதலையிற்
றுலங்குமணி யிரதநினமுந தோனறுமோசொல்
பரத்தினிட நிலையதனை குருமுனபாகப்
பதியாத மூடனையே பணிந்ததாலே
வியர்த்தமே யலலாம லுதவிசெய்ய
மெஞ்ஞான முண்டாமோ விளக்குநெஞ்சே. (சசு)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனு லறியலானேன் ஸ்திரீகட்கு ஞானமுண் டென்றுல் எதனுலே அஃது விளங்குமாறு சொல்க வென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவுகூறுதல்.

அஞ்சுகின்ற பெண்ணென்று மாணென்றுந்தா
னஞ்சுபஞ்ச பூதத்திற் பிரிந்ததுண்டோ
ந்சிலுள்ள வஞ்சகங்கள் வேறுமுண்டோ
நிறம்வேறே குணம்வேறே நேசம்வேறே
ஞ்சுகின்ற வுயிர்தானுண் பெண்ணென்றுண்டோ
மெய்கண்டநூலதிலே பிரித்ததுண்டோ
லததாற் சொற்கேட்டு மயங்கிடாதே
சங்கையற முன்னூலைச் சார்ந்துபாரே. (சஎ)

மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனுற் பேதமை யென்பது மாதர்க்கணிகல மென்றும் ஔவையார் கூறிய தென்கொலென்றறிவு வினவு வறிவு கூறுகின்றது

அறிவுகூறுதல்.

ஆணுக்கும் பெண்ணுக்கு மறிவொன்றேயாம்
ஆனாலும் பேதைகுணம் பெண்ணுக்குண்டு
வீணுக்கு எடுத்தசென்ம மனந்தங்கோடி
விவேகமுத்தி யடைந்தவர்க ளதிலுமுண்டு
ஊணுக்குத் தேடியுண்டு வுறங்கிச்செத்த
வுலுத்தருண்டு புருஷரிலே யனந்தங்கோடி
தாணுக்குவகசரா சரந்தானெஞ்சே
சற்குருவுக்கப்படியே சார்ந்துபாரே. (௯அ)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனு லதுவுமறியலானேன்நான் கேட்கப்பட்ட சங்கைக்குச சரி யென்னும்படி சமாதானங் கொடுத்து நன்றாக வருமையாய் தெளிவுடனே யார்சொல்லப்போகிறார்கள் இனிமேல் நடக்கவேண்டிய தென்னவென்று குதூகலங் கொண்டு மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

இன்னமின்னம் பிறவிதனிற் பிறத்தனன்றோ
வினிமேலும் பிறவாம லிருக்கைநன்றோ
வுன்னுகின்றநினைவேது கருத்தங்கேது
வோதுகின்றவாக்கேது செவிதானேது
பண்ணுகின்ற கலையேது பண்தானெங்கே
பாடுகின்றசத்தந்தான் தொனித்ததெங்கே
முன்னிலையாய் ஞானகுரு மொழிந்ததேது
முத்திநெறி யாய்மனதே முனைந்துபாரே. (௯௧)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனு லெவ்விதத்திலேயும் பார்க்குமளவில் இந்த குடும்பசேறறில உழைத்துக்கொள்ளுகிறதும் அதற்கொத்தாசையா யுலகத்தார் சொல்லை விசுவாசமாய் ஒத்துக்கொள்ளுகிறதும துக்கமேயொழிய வுள்ளபடி குடும்பத்தார் என்மேல் பிரியமா யிருக்கிறதே தயில்லை எபபடியென்றால் சின்னாள் சம்பாதனையில்லாமலும் தேகசௌக்கிய மில்லாமலும் ரோகஸ்தனுக விருக்கும்போது சர்வத்திரயோக்கியனும் என்

மேல் மனதுசலிப்புற்றிருந்தது கண்டேன் ஏவல்பணிவிடை யில வெறுப்பானதுமகண்டேன் சாலவும் பிரக்ஞைதப்பி யிருக்கும்போது பெண்பிள்ளைகளை எதிர்வீட்டார்ஆஸ்தியைக் கேட்கச் சொன்னதுமகண்டேன் அவரவர்க ளழும்போது ஒப்பனைசொல்லி அழுகிறவயணமுங்கண்டேன் எல்லாம்பொருளை யிச்சித்திருப்பதென்று மறியலானேன் எனக்குஉரிமையானபேர் ஒருவரையுங்காணேனஅல்லது சிலது நாளுழைத்து மக்கள் முதலாகியபேர் சம்பாதிக்க சாமர்த்தியம் வருந்தனிலும் உழைத்துப் போட்டு அதன்பின் சும்மாயிருப்போமென்றாலும் எனனிச்சைப்படி நடக்கவுமாட்டாது அதுவும்அறியலானேன் ஆசையால்சத்துருவாகிய இந்தப்பேயக்கூட்டங்களைவிட்டு காயக் தளராமுன சிவன திருவடி யடைதற்கு நீ சொன்னபடி சத்தியமாய் நடப்பேனென்று மனஞ்சொல்ல அறிவுகூறுகின்றது.

## பணியறுத்தல்

அறிவு கூறுதல்.

வேறு.

பொன்னி னெஞ்சமே சொற்படி கேட்கவும் பொருந்தி யோநன்றுக, இன்னமின்னமும்பேதமைகொள்ளையோ வில்லறம் [illegible]விட்டு, தன்னைத்தானறி யாமலுஞ்சிவனடிசார்வது மிழந்தாக்கால், பின்னம்பின்னமா யிரணமகெட்டானென்றே பேதமைகொள்வாயோ. (௫0)

மனங்கேட்குதல்.

(அ-கை.) இதனால் நான் தெளிந்த வததுமேல பேதமையென்ப திருக்குமிடமுங்காணேன் சர்வபணியும் அறுத்துவிட்டேன் ஆனல் தெளிவாய் கேட்பதற்குத் தெரியும்படிசெய்யுமன்று மனமகேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

சுத்தநெஞ்சமே சற்குருமலரடி தொழுவகை கேட்பா யேல், பத்தனுகியே மானுபிமானமும் பற்றறவிட்டேநீ, குற்ற மேதுமற றெவ்விடங்காண்கினும கூறுடற்களிப்புற்று, பற்று மாகியே திருவடிகெதியெனப் பண்புடன்பணிவாயே. (௩க)

மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனுல் மானுபிமானம் விட்டு குருவை யெவ்வி டங்காண்கினு மனோவாக்குக்காயம் ஒத்து அன்புகளிகூர்ந்து எண்சாண் தேகத்தை இருகையாக்கி ஈன்மலரால் அவர் திரு வடிக்குச சாத்திதீர்க்கதெண்டம்பண்ணிசசொன்னீர் அதற்கு ச்சந்தேகமில்லை இவ்வளவுமிழந்து நான் இதற்குஅஞ்சுவேனே அப்படியேசெய்வேன் ஆனுலஅதிகமாகஉலகத்தார் இகழத்த க்கதாக குரு மிகுந்த அசங்கிய ரூபமாகவிருந்தால் நான் ப ணியுமளவிலே நிந்திப்பார்களே அல்லது அவ்வாறிருக்கினும் அப்படிதான் செய்தல் முறைமையோவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

குவலயத்தோர் சொல்கின்ற கேள்வியாலே
கூசுகின்ற நெஞ்சகமே கூறக்கேளு
அவலமாங் கடலுக்கு ளாழுமான்பர்
அபிமானம் வந்துன்னை அண்டித்தானுல்
கவலையாய் ஈழுகிவோய் முத்திமார்க்கந்
தான்கிடைப்ப தருமையதைச் சார்ந்தேநீதான்
சிவனடியை யடைவதற்கு சற்குருத்தாள்
திருவுளத்துக் கொத்தவழி சொல்லுவாயே. (௩உ

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனுல் சற்குருவின் திருவடியில் சரணஞ்செ ய்வதற்கு மார்க்க முண்டோவென்று மனங்கேட்க அறிவு கூ றுகின்றது.

அறிவு கூறுதல்.

ஓம்நமசி வாயவென்ற வக்ஷரத்தை
உச்சிக்கண் புருவம்வாய் மூக்குநாசி
தாமதங்க ளில்லாமல் மூக்காலுந்தான்
சற்குருவின் றிருவடியில் தானழுத்தி
நேமமா யிப்படியுஞ் செய்வதுந்தான்
நேரான சரணத்தின் றீக்ஷையாகும்
ஆம்பின்னே யென்றெண்ணி யிருந்திடாதே
ஐயனுள்ளங்களித்திடவே யாசைவைப்பாய் (௨௩)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் சரணதீக்ஷையுமறிந்தேன் செய்யவுந் துணிந்தேன் கருத்தில் செய்யும்படி குறித்தால் போதாதோ காயத்தினாலு மிகுதியாய் வணங்கிக்கொள்ள வேணுமோவென்றுமனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவுகூறுதல்.

காயமன வாக்கினா லடைந்தகன்மங்
காயமன வாக்கினாற் கடக்கவேணும்
காயமன வாக்கினா லொன்றொளித்தால்
கடமெங்க வேதுவாங் கண்டபோரு
நேயமுள வைம்புலனாற் சூழ்ந்ததுன்பம்
நீக்குதற்கு முறைபிதுதா னிலைத்துப்பாரு
மாயவித்தை யாமென்று நழுகிடாதே
வஞ்சகத்தை நீவிட்டு வணங்குவாயே. (௨௪)

மனங்கேட்குதல்.

(அ-கை.) ஆனா லப்படியே செய்கிறேன் இன்னஞ் சற்குரு திருவுளத்துக்குப் பாங்காய் நடக்கு மார்க்கங்கள்சொல்கவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வஞ்சனைபொய் சூது கபடங்கணீக்கி
மானவபி மானமுதற் பெருமைநீக்கி

யஞ்சுகின்ற கோபமாங் காரக்கி
ஆசையதைப் பாதியடி யோடேநீக்கி
அஞ்சவே சோதித்துப் பார்த்தாலுந்தான்
துணிவாகித் திருவடியே கெதியென்றெண்ணி
தஞ்சமென்றே யையனது நிழல்போற்காத்து
சரணத்தி னேவல்செய்து தழைத்திடாயே.

மனங்கேட்குதல்

(அ-கை ) இப்படியே தொண்டுசெய்கிறதற்கு மாளானேன் எத்தொழிலுமில்லாமல் சர்வ ஆசையுமிழந்து நிரந்தரமாயிருக்கிற பெரியோர்களிடத்தில் தொண்டுபூண்டிருக்கால் வயிற்றுப்பசிக்கு அன்னம் வேண்டியிருக்குமே யதற்கென்னவயணமென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்

இச்சையுடனெத்தனைநா ளிவ்வுலகில் வாழ்ந்தாலு மிடரேசொல்வார், நச்சைவருமிதனாலே தெளிவுற்றமனதென்று நல்லோர்சொல்லார், சச்சடியைவிட்டுவீடும்பொருளையோர்பொருளாய்த் தனித்துப்பாரு, பிச்சையென்ன விசாரமென்ன தலைமேலேசுமந்துவரப் பெருமானுண்டே, ()

மனங் கேட்குதல.

(அ-கை.) அப்படியிருக்கச் சிவசொரூபத்தைப் பெற்றிருக்கின்றபேர்கள்ஆசாரத்துக்காகப் பலவிதங்களான தொழில் செய்கிறதும், சித்துகள் வித்தைகள்செய்கிறதும் பொய்சொல்லுகிறதும் சிவசின்னவேடத்தை கபடாகத் தரித்துக்கொள்ளுகிறதும் என்னவென்று மனங்கேட்க அறிவுகூறுகின்றது.

அறிவு கூறுதல்.

ஆனைமுத லெறும்புகடைக் கமுதளித்துக் காக்குமொரு வரனேயல்லால், சேனைவிதமாகவிந்த மானிடர்கள்செய்ததெல்லாஞ் செகத்தின்மாயை, ஊனைமுதல் சுமந்தவரார்கண்டபின்புகளித்தவரார் உற்றுப்பார்க்கில், தேனையுண்டுருசிகண்ட திருடனைத்தான்கண்டவர்க்குத் தெரியுந்தானே,

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனா லறியலானேன் பெரியோர்களிடத்தி ல் பக்திவைராக்கியத்துடனே நிமிடநேரமாகிலும் பிரியாமல் சரணடைந் தேவலுஞ் செய்துக்கொண் டிருக்கிறவர்களுக்கு எந்தபதவி கிட்டுமென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

வேறு.

ஆசான்கிருபைமிகுந்ததனா லந்தவுடற்போய் மறுவுடலி ல், கூசாதிருந்துந் தன்னண்டை. குறைவொன்றில்லா நிறை வாக, தேசாசேசர்சூழ்ந்திருக்கத் திருவோலக்கஞ் சேவிக்க, ஈசாவென்றேமறைபோற்ற வெய்தும்பரமபதம்நெஞ்சே. ()

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் நிழற்போற்பிரியாமல் சரணத்தேவ லுஞ் சலியாமலும் செய்கிறேன் ஐயோவெத்தனைபிறவியோ எடுத்துவந்து நொந்திருக்கிற நான் இன்னும்ஓர்பிறவி பிறப் பேனோ முழுதும் பிறவாமலிருக்கிற மார்க்கமுண்டோ அ தைச் சொல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவுகூறுதல்.

வேறு.

உடல்பொருளுமாவியுஞ் சற்குருநாதற்கே
வுண்மையுட னுதகத்தால் தாரைவார்த்து
நடமாடு மிம்மூன்று மெனதென்றெண்ணி
காயகனுஞ் சிவனையே யடிமையாக்கு
திடவாக்குத் தவறாமல் நிலைத்துநெஞ்சே
தேகர்தா னொழிய ளவு முதவிசெய்தால்
படமாடு மரவத்தை யணிந்தவீசன்
பதம்பெறுவா யுள்ளபடி பகர்ந்திட்டேனே. (௬௯)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனால் நல்லதாயிற்று இதுவரைக்கும்நானே உடல் பொருள் ஆவி மூன்றுக்குமுடையவனென்று நீர் சொ

ன்னபடி கேட்டு சர்வசங்கையுமிழந்து நிருவிகாரியாய் என்னகெதியென்று கேட்குமளவிலே சீவனுண்டென்றும் சீவனுக்கு உடல் பொருளாவி தொந்தமென்றும் அந்தக் குருவுக்குத் தத்தஞ்செய்து சீவனை அடிமையாக்கி ஆசான்சொற்படி நடந்து சிவேசனுகிறதாய்ச் சொன்னீர் மகாசந்தோஷமாயிற்று அப்படியே சீவன்முத்தியடைகிறதானால் நானித்தனைப் பிரயாசைபடவேண்டியதென்ன நான் நீயார் இவ்வளவுநான் சந்தேகமற்றுத் தெளிவுகொண்ட லாபமென்னவாகப்போகிறதென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

சீவனே நீயாகு மறிவுநீயாஞ்
சிவன்றானே நீயாகும் பரமுநீயாம்
தாவுகின்ற செயலுடனே மனதென்றுன்னை
சாற்றியதோர் நாமமாஞ் சர்வசங்கை
மேவவே மொழிகிறது முனதால்நெஞ்சே
மெல்லமெல்லச் சொற்படியே மேவினக்கால்
நாவுதனிற் பிரிக்கின்ற பேதமற்று
நாம்சிவமாய் வாழலாம் நாடிப்பாரே. (௯0)

மனங் கேட்குதல்.

(அ-கை.) ஆனு லறியலானேன் இனி உடல் பொருள் ஆவி மூன்றும் குருவுக்குத் தத்தம்பண்ணசசொன்னீர் இந்தமூன்றையுந்தெரியப்படுத்துமென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

உடலென்றுற் சடாதார உடலேயாகும்
உயிரான பிராணனே யாவியாகும்
திடமாக விரண்டையுந்தா னெனதென்றுற்ற
சீவனே சிற்றம்பலப் பொருளதாகும்
அடவாக விம்மூன்றுங் கொடுத்துத்தன்னை
அடிமையெனச் சத்தியமா யிருந்தால்நெஞ்சே
இடமான கதிபெறவே யுபதேசிப்பார்
யிப்படியே குருபத்தி விஷ்டம்மையே. (௯௧

மனங் கேட்குதல்.

(அ-கை.) அப்படியே செய்யலுற்றேன் இனி தீக்ஷை யென்பதும் முத்தியீடென்பதும் தெரியச்சொல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

தீக்ஷயது நூலாகும் நூல்விளக்காம்
திறமான சற்குருசொல் லுபாயமாகும்
தாக்குகின்ற சாதகந்தா னேணியாகும்
சபையென்ற வெளிதானேவீடதாகும்
மார்க்கமென்ற திதுநெஞ்சே முன்னோர்கூட
வாழ்ந்தவரு மிப்படியே மருவிப்பாரு
நோக்கையிலே யிதிலொன்று நழுவிற்றானல்
நொந்துநொந்து பிறவியினி லுழைக்கும்பாரே.

மனங்கேட்குதல்.

(அ-கை.) எல்லாம் உள்ளபடியென் றறிந்துக்கொண்டேன் இனிமேல் சற்குருவினுடைய திருவுளமகிழ்ந்து நான் கடைத்தேறும் பொருட்டாய் உபதேசஞ் செய்யும்படி சொல்கவென்று மனங்கேட்க அறிவு கூறுகின்றது.

அறிவு கூறுதல்.

அப்படியே செய்விப்பா மழகுநெஞ்சே
யாசான்றன் றிருவடிக்கே யன்பதாக
வெப்படியா கிலுமுன்னை மாயைகிட்டி
யிதம்போலாம் ஜெனனமதற் கிடங்கொடாதே
செப்படிபோல் வந்ததொரு ஜெனனநீங்கி
சிவானந்த போதமாய்த் தெளிவாய்நீயும்
மைப்படியுங் கன்னிபங்கன் குருவாய்வந்து
வாதனையைத் தீர்த்திவோர் வணங்குவாயே. (௫௩)

பொதுகவனிப்பு.

(அ-கை.) இதுவரையிலுஞ் சீவனைப் பின்னிட்டு மனதை முன்னிட்டு சற்குருவைப்பின்னிட்டு அறிவுமுன்னிட்டுச்

கொண்டு மனத்தினுடைய பணியறுத்து சற்குருகடாட்சம் பெற்றுக்கொள்ளும் வகைகூறினது இனிமனதைப் பின்னிட்டு ஜீவனைமுன்னிட்டு ஜீவனுக்குள் மனமொடுங்கிமுத்தியடையத்தக்கதாக அறிவைப்பின்னிட்டுசற்குருவைமுன்னிட்டுஅறிவை சீவனுக்குப்போதித்து நீ நானென்று இரண்டில்லாதபரிபூரணமாய் ஆக்கும்பொருட்டு சீவனுக்குக் குரு சிவானந்தம் போதிக்குமார்க்கம் கூறுகின்றது.

ஜீவன் சொல்லுதல்.

ஆதியேயந்தமே யருமையான
வருட்கடலே யையனே யகண்டமுற்ற
சோதியேசொரூபமே சுகத்தைக்காட்டும்
சுத்தனேசித்தனே சுயம்பிற்பொங்கும்
பாதியேபரமனே பாரின்மீதே
பரம்போகச்சுந்தரமே யெழுந்துவந்த
நீதியேயென்னுடைய பிறவிநீக்கும்
நிச்சயமே திருவடிக்குச் சரணென்றேனே. (௬௭)

குரு சொல்லுதல்.

தீக்ஷைமுறையாகவே சரணஞ்செய்த
செல்வனேஞானமென்ற தீரம்பெற்று
பாக்கியமாய் மெய்ப்பொருளைக் கொள்ளவேண்டிப்
பாரினிலே வெகுபேர்கள் பதைத்துவந்தார்
பாக்கியத்தாற் சித்தினர் சிலதுபேர்கள்
பாழ்மனதாற் சிதறினர் சிலதுபேர்கள்
தாக்கியதோர் சாதகத்தில் தாளாமற்றான்
தவறுண்டே போயினர் சங்கையுற்றே (௬௮)

சங்கையது விட்டாற்போற் றெண்டுபட்டு
சாத்திரத்தின் பூட்டுகளைத் தெரிந்துகொண்டு
மங்களமாய் தீக்ஷைதனைப் பெற்றுநன்றாய்
வையகத்தின் சுழலினிலே மயங்கிச்சென்று
பங்கமாயபிமானத் தொழிலேசெய்து
பதறுகினர் குருமுகத்துக் காகாமற்றான்

திங்களணி சடையார்தன் பாதஞ்சேர
தீவினையில் மெலிந்திட்டார் சிலதுபேர்கள். (கக)

அப்படியே நீநழுகித் தடத்தைவிட்டே
யம்பலத்திற் சேகாமற் காலன்பாசந்
தப்பவகை யறியாமற் பிறவிதன்னிற்
சாருவையோ நிலைகொண்டு சாதிப்பாயோ
ஒப்பவேயுடற்பொருளு மாவிமூன்று
முதகத்தால் தாரைவிட்டு வுனைநானென்று
செப்பவுந்தா னுவிழுந்தே யடிமையாகிச்
சிந்தையற்றுச சிவமாகி வாழ்கநீயே. (கஎ)

பாக்கியங்கள் பெறவேண்டி குருவடிக்கு
பதறியேவந்தசொரு பாரிலுள்ளோர்
வாக்கினுல் மனத்தாலுஞ்சாதகத்தின்
வருத்தத்தாற் சிதறினபே ராராரையா
நோக்கினதிற் றவறாமற் பிடித்துமுத்தி
நுண்ணறிவாற் பூரணத்தை யடைந்ததாரோ
தாக்கியதோர் மைந்தர்களை யறியச்சொல்லும்
தயாபரனே குருமூர்த்தி சொல்வாய்நாதா. (கஅ)

குருசொல்லுதல்.

எத்தனையோ மைந்தர்களைப் பெற்றேனப்பா
வெடுத்துரைப்பேன் மதலையேயின்பமாக
பத்திவை ராக்கியமு நழுகிடாமல்
பாரிலுள்ளோர் தங்களுக்குச் சொந்தமாக
முத்திபெறு மனக்கண்ணும் பிரகாசித்து
மூதறிவால் தத்துவத்தை முழுதுமாள
சத்துசித்தானந்தமுமாய்ப் பூரணத்தைச
சார்ந்திட்டேன் குழந்தையென்ற தங்கந்தானே. (கக)

ஆமென்றே வந்தவர்க ளின்னமுண்டு
அவரவர்க்குத் தீகைஷவைத்தோ மன்பதாக

ஓமென்றமுத்திநெறிக் கொவ்வுவாரோ
　　ஒதுங்கியேபதுங்கியே யோடுவாரோ
நாமென்ற வகங்கொண்டு நழுவிப்போறார்
　　நாதனையே தூஷித்து நலம்பெறாமல்
போமென்றே தள்ளவில்லை யவர்கள்தானே
　　பொல்லாங்கைக் குறித்தல்லோ போய்விட்டாரே. (௭௦)

நிலைக்கவென்று வந்தவரில் தவறிப்போன
　　நெஞ்சகரைச் சொல்லக்கேள் நினைவாய்நீயு
மூலைகருதிக் கைபிடித்துப் பாலுண்ணாமல்
　　மூடத்தால் நானென்ற மகத்தையுற்று
கலைகருதி நில்லாமற் சாதிக்காமல்
　　கற்றபொருள் போதுமென்றே பெருமைகொண்டு
கொலைகளவாம் வஞ்சகத்தை விடாமற்றானே
　　குலைந்திடான் வைதியலிங்கன் குரூரன்றானே. (௭௧)

ஜீவன் சொல்லுதல்.

அப்பனேமைந்தர்கள்தன் திறத்தைக்கேட்டு
　　அறிந்திட்டேன் முத்திபெற்றோர்க் கடியேன்றானே
செப்பமாஞ் சரணங்கள் கோடிசெய்தேன்
　　சிதறினவர் பால்மனமுஞ் செல்லவொட்டேன்
கொப்பெனவே யெனையாள விங்குவந்த
　　கொற்றவனே யுனைப்போலத் துலக்கங்காணேன்
இப்பவேயடிமைகொண்டு காக்கவேண்டி
　　யிரங்கியேயருள்புரிவா யெந்தன்கோவே. (௭௨)

அறிவாள னாகியே பணியறுத்து
　　அச்சங்க ளெல்லாந்தா னறுத்துப்போட்டு
குறியாளனாகவே துணிந்துவந்த
　　கொடும்பாவி யெனையாளக் கூச்சமென்னோ
தறியாள னாகின்ற வுலகத்தேதான்
　　சங்கையது வந்தாலுந் தாளமாட்டேன்
முறியாளவந்தகுரு நாதாவுந்தன்
　　முகிழ்மலர்த்தாள் கெதியென்று முனைந்திட்டேனே.

குரு சொல்லுதல்.

நிலமதனைச் சலத்தினாற் சுத்திசெய்து
  நிராமயமாக கணபதியைநாட்டிவைத்து
பலமுடைய சோதிமலர் சாத்திமிக்கப்
  பரிவான புகைதூபங் காட்டிப்பின்னுந்
தலமுடைய வெளியதனை நிவேதனஞ்செய்
  சரணஞ்செய் யென்மகனே யுபதேசிப்போம்
பிலமுடனே யிடம்வலமாய்ச் சுற்றிவந்து
  பெருவிரலைப் பற்றிக்கொள் பேரின்பத்தே. (எச)

அன்புடனே யுடல்பொருளு மாவிமூன்றும்
  அறுதியா யளித்துவிட்டு நீதானையா
தென்புடனே யடிமையெனச் சத்தியஞ்செய்
  சிதறாமல் நில்லப்பா தீக்ஷைவைப்போம்
பின்புந்தன் செவிதானே யோனியாக
  பேசுமெந்தனுவுதா னிலிங்கமாச்சு
இன்பமுடனனுபோகத் திருக்கவென்றே
  இருசெவியிலுபதேச மேறறுவோமே. (எரு)

ஜீவன் சொல்லுதல.

அப்படியே பஞ்சசித்தி பூசைசெய்தேன்
  அழகாகச் சரணங்கள் பிரகாரஞ்செய்தேன்
செப்பினதோர் பெருவிரலைப் பற்றிக்கொண்டேன்
  தேகமுடன் பொருளாவி தத்தந்தந்தேன்
ஒப்பதுவா யானுமே யடிமையானேன்
  யுகமுழுகத் தடைவரினு மசையாதிருப்பேன்
தற்பரனே தீக்ஷைசெய்யுங் கருணைவைத்து
  சற்குருவே திருவடியிற் சரணென்றேனே. (எசு)

குரு சொல்லுதல்.

வேறு.

ஞானமென்பதில் நால்வகையுண்டதை நாமுரைத்திடக் கேளாய் தானமுற்றனர் சரியையுங் கிரியையுஞ் சாருமேசிவ

யோக, மோனமுற்றமெய்ஞ் ஞானமோனந்கதாமுடிவதைப பெறுவாயே, யீனமற்றவென் மைந்தனேயுன்னிட லின்பமே தரைப்பாயே. (எஎ)

ஜீவன் சொல்லுதல.

தேசிகாவிந்த நால்வகையென்றதை தெரியவுமுரைத்திட்டால், மோசமாயின்ப முற்றிருப்பது தனைமொழிந்திடு மெனக்கேட்பேன், ஆசையற்றதா யிருந்திடிலுழைத்திட வதிசயங்கொள்வேனுன், நேசமுற்றதிற் பத்தியேயுறைத்திடில் நிலைத்திடுமையாவே.

குருசொல்லுதல்.

அங்கசுத்தியு மாலயந்தொழுவதுஞ் சரியையென்றறைவார்கள், மங்களதது டனட்டமாவத்தியும் வரையுஞ்சக்கரபூசை, பொங்கமானது கிரியையாம்வாயுவை பிரண்டிடா திழுத்திட்டு. தங்கிநின்றதோர் யோகமென்றிதனையே சாற்றிடுமறைதானே. (எகூ)

ஞானமேதெனக் கேட்டிடின்தத்துவ நானெனவுணர்ந்திந்த, ஊனைநானென வுரைத்ததை யகன்றபின்னுஞழிவறததனைக்கண்டு மானம்வெட்கமுங தாக்கமுஙகவலையும்வஞ்சனை தான்போக்கி, யீனமற்றுநான் சிவமெனத்துணிந்ததுமிழந்த துமுடிவாமே. (அ0)

ஜீவன் கேட்கக் குரு சொல்லுதல்

இந்தநாளினி லின்பமுற் றிருக்கையிலிச்சடம்விழுந்திட்டால், தொந்தமானாதோ பலனென்னதெரிந்திடச் சொல்லுவாய் குருமூர்த்தி, சொந்தமாகவே கேள்மகனேயதன் சுகமதையறிவிப்போம், தந்தனஙகளாய் விடாமலேகேட்பது சரியெனமகிழ்ந்தேனே. அக

சரியையென்பது குறைவறச்செய்துமே தன்கடம்விழுந்திட்டால், கிரியைசெய்யவே யெடுத்திடுங்கடமதுகிரியையுமுடிந்தேகில், உரிசையாகிய யோகமேசெய்பவு முடலெடுத்துழைக்குங்காண், பரிகொள்யோகமுமுற்றவுமுடிந்துடற் பாரினிலுருவாமே. (அ௨)

ஞானமேபெற வெடுத்திடுமெவ்வுடல் ஈழுகிடாதுனைத்தி, லீனமாகிய செனனமுமபோக்கிடுமீசனேதாஞகி, வா னமுற்றமேதோர்சசசிதானந்தமாய்வாக்குனைக்கெட்டாத, மோ னமுறறுதாணெ வகுமாயகிறைந்ததுமுத்தியென்றுணர்வாயே

ஜீவன் சொல்லுதல்.

அப்பனேயென யடிமைபாய்க்கொண்டவோ ரழகுள்ள குருமூர்த்தி; தப்பவேகெதிவே றெனக்கில்லைநின்றுளதுகெ தியேயன்றேன், ஒப்பவேசிவஞானமு முணர்ந்திடிலுகந்ததிலூ ன்றிக்கொண், டிப்பவேபரவீடதிலேகுவனீசனேயருள்வாயே.

குரு சொல்லுதல்.

வேறு.

தத்துவமேயுடல் தானெனுமானது தன்னையறிந்திடுநீ, சித்ததுவாய்பிராண னிரானதில் திரண்டதைக் கண்டிடுநீ, க ற்றமேகாணுக் கண்மணியானதை கண்டுதெளிந்திடுநீ, முற் றுசிவானாத போதகமானது முதநியுமிதுதானே. (அ௫)

வேறு.

அறிவிபோ தகமென்ற நூலைப்பாரு
அதற்குமுன்னே உடலறியும் விளக்கம்பாரு
பிறிவின்றி மேவின்றி மறைப்புமின்றிப்
பேரின்ப வமுதமழை பெய்தநூல்தான்
செறிகொண்ட வந்நூலை யிசைந்துபாரு
நிலைக்கவே யப்படியே நிகைஷவைப்போம்
பொறிவிட்டு சபைபுகுவாய் பிக்கோயில்லை
பெரும்பொருளைக் கைக்கொண்டுபிழைத்துகொள்ளே. ()

ஜீவன் சொல்லுதல்.

அப்படியே போதிக்க முத்திபெற்றேன்
அரியயனுங் காணுத வடிவுங்கண்டேன்
தப்பியே யினைக்காமற் பிழைத்துக்கொண்டேன்
சஞ்சலத்தை யிழந்தான் சுகத்தைப்பெற்றேன்

ஒப்புவமை சொல்லவொரு வரையுங்காணேன்
உனைப்போலே தெளிவுண்டாக்குங் குருவுங்காணேன்
செப்பவே நாவிழந்தேன் பரமானந்தத்
தீவிலே சேர்ந்திட்டேன் வாழ்ந்திட்டேனே. (௮௭)

ஞானியென்ற பெயர்களையே கண்டுகொள்ள
நல்லதொரு கண்பெற்றேன் பேசவென்று
வினமறச் சொற்கற்றேன் சிரவணத்தால்
ஏகாந்த பரசுவன மெய்தலானேன்
மானமற்ற வடியருட னசைகொண்டேன்
மருவுமுடல் குருவுக்கே வணங்கிப்பெற்றேன்
தானமுற்றேன் சிவானந்தர் தனிலேநின்றேன்
சச்சிதா னந்தனென்றே தழைத்திட்டேனே. (௮௮)

வாழ்வுமுதற் சம்பத்தை மதித்திடாமல்
மலைமேலே யேறினதோர் பறவையானேன்
தாழ்வுகளா யுலகோர்சொல் நிந்தையெல்லாம்
சகாயமென் றேயெண்ணிச் சந்தோஷமானேன்
வீழ்வதருன ரகிலுள்ள மாண்பர்க்கெல்லாம்
வீழாம லேமனிதர் மேலுமானேன்
எழுலகும் மேலேழும் நானேயானேன்
ஏகாந்தத் தீவினிலே யிறங்கினேனே. (௮௯)

குரு சொல்லுதல்.

மைந்தனே யுனைப்போல வோடிமெள்ள
வாதனையே தீர்ந்துமதி மயங்கிடாமல்
பந்தமறுத் தேபின்பு குருவைத்தேடி
பரமாகி வாழ்ந்தவர்க ளுண்டோவப்பா
சிந்தையற்ற பெரியோரை வணங்கிக்கொள்ளு
சிவஞானி தன்னுடனே நேசஞ்செய்தே
சிந்தனைபெற் றவனேயப் பரவப்பா
வெகுத்தனைத்தே யம்பரத்தி லிருப்போம்நாமே. (௯0)

சீவன் சொல்லுதல்.

வெண்பா.

மறந்தேனோர்வார்த்தை மகிழ்ஞானமூர்த்தி
துறந்தேனினித்தெரியச சொல்வாய்—சிறந்திலகு
பத்திசெய்வோருக்குப் பலனேதனைக்கெடுக்கும்
குத்திரருக்கென்ன குணம். (கக)

குரு சொல்லுதல்.

விருத்தம்.

எண்ணிலாத்தவங்க ளியாகங்கள்செயினு மீஸ்வரவிஷ்ணு வாலயங்கள், பண்ணுலாக்கவிதை பாடினுமனேகம் பாரினி ல்வருபலனேது, கண்ணுலாவியாற் சுருதிமெய்ப்பொருளைக் கண்டானடியாருக், குண்ணலாமென வழகளித்தவனடை பலனுரைக்கவுமுடியாதே. (கஉ)

வேதமாகம சாத்திரபுராணங்கள் முரிந்தநூலறிந்திடாவிந் து, நாதமேயுருவா மத்விதானந்தஞானமேபெற்றிடவேண்டி ன், ஓதவல்லவர்சத்துச்சித்தானந்தமுற்ற நல்லடியோர்க்குப், பாதபூஜைக ளடங்கலுஞ்செய்தவர்பலனுரைக்கடங்காதே. ()

கலித்துறை.

அன்னமளிப்பாரைக் கலைப்பாருமிந்தவனிமிசை
பின்னலவர்க்குப்புரிவார் நினைப்பாரிகழ்ந்திடுவோர்
மன்னவராயிருந்தே மறிப்பாரையுமறவியினி
என்னென்னவேதனைசெய்வான் முடிவிலியம்பரிதே. (கச

சிவனருள்பெற்றுயர் மேலோர்தமக்குஞ் சிவனையுன்னி த், தவஞ்செயுமன்பர்க்குஞ் சிவவேடம்பூண்டதன்னியர்க்கு, மூவந்தேபணிபுரி வார்மேலுலக ருண்மையதாய், அவஞ்செய் தவரை யிகழ்வோரடைவ ரருநரகே. (கரு)

பெரியோர்க்குத்தொண்டு செய்வாரைத் தடுத்திடும் பே தையரும், சரியாநடுநிலை சார்ந்தவர்க்கல்லல் சமைப்பவரும், பரிவானதீக்ஷை கொண்டோரைமறிக்கும்பாதகரும்,எரிவாய் நரகத் தெண்ணிற்றுயரி லிருப்பரொன்றும். (கசு)

## வெண்பா.

இந்நூலைப்பார்ப்போர் எடுப்போர்படிப்போர்
நன்றாலெனமனதி னுடுவோர்—பொன்றாற்
படியேறித்தாண்டிப் பவசாகரத்தைக்
கடவுளர்க்குமுன்னிற்பர் காண். (௯௭)

சந்தேகமாதிகளைச் சாராமலேபகற்றிப்
பந்தபாசங்களைப் பாழாக்கும்—இந்நூல்
எந்நாளும்மழியா யேகாந்தவீடதனைச்
சொந்தமாக்குமெனவே சொல். (௯௮)

## கலி விருத்தம்.

அரனங்கிரிவாழி யம்பிகைதான்வாழி
பெருமான்பதம்வாழி பிள்ளைசரணம்வாழி
பரமேட்டியடிவாழி பாரதிபாதம்வாழி
கரிமுகன்கழல்வாழி கந்தன்திருவடிவாழியே. (௯௯)

## கொச்சகம்.

வான்வாழியானையனி மாதவரும்வாழி
கோன்வாழிகுருவாழி குவலயத்தோர்வாழி
ஆன்வாழியமரர்முத லிருடிசித்தர்வாழி
நான்நீயென்கமற்ற நாதாக்கள்வாழி. (௧00)

சிவானந்தபோதம்

முற்றிற்று.

சிவமயம்.

# நெஞ்சறிவிளக்கம்.

## விநாயகர் காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்.

வஞ்சகமனத்திருடை மாற்றியேபெரியோர்தாளில்
கஞ்சமாமலரிட்டோதுங் கணபதிதாசனன்பால்
நெஞ்சறிவிளக்கஞான நீதிநூனூறும்பாடக்
குஞ்சரமுகத்துமூலக் குருபரன்காப்பதாமே.

நூல்வரலாறு.

பூமியிற்சௌந்தரப்பொன் புணர்ந்திடுநாகைநாதர்
நாமமெந்நாளுநாவி னவின்றுசெந்தமிழாற்பாடிக்
காமமுமாசபாசக் கன்மமுமகற்றிமூலா
ஓமெனமெழுத்தைந்தாலே யுனையறிந்துணர்வாய்நெஞ்சே.()

தந்தைதாய்நிஜமுமல்ல ஜனங்களுநிஜமுமல்ல
மைந்தருநிஜமுமல்ல மனையவணிசமுமல்ல
இந்தமெய்நிஜமுமல்ல வில்லறநிஜமுமல்ல
சுந்தரநாகைநாதர் துணையடிநிஜம்பார்நெஞ்சே. (௨)

காண்பதுமழிந்துபோகுங் காயமுமழிந்துபோகும்
[illegible]ண்பொருளழிந்துபோகு முலகமுமழிந்துபோகும்
பூண்பணிநாகைநாதர் பொற்பதமழியாதென்று சே.
வீண்பொழுதினைப்போக்காமல் வெளிதனிலொளிபார்நெஞ்

மனமெனும்பேயினாலே மாய்கையாமிருடான்மூடச்
சனமெனுமாசாபாசத் தலைமிசையேற்றிக்கொண்டு
[illegible]னமெனுஞ்சுமையைத்தூக்கிக் கவலையுற்றிட்டாய்நீயுற்
புனமெனும்நாகைநாதர் பதம்பணிந்தருள்சேர்நெஞ்சே. (௩)

இருவினைபகுதியாலே யெடுத்திந்ததேகந்தன்னை
மருவியநானென்று மாயையிலழிந்தாய்நீதான்
குருவினற்குறியைப்பார்த்துக் குண்டலிவழியேசென்றங்
குருவினாகைநாத ருண்மையையுணர்வாய்நெஞ்சே. (௫)

வான்மதிலிரவியுன்றன் வயதெலாங்கொடுபோகின்றான்
தானதையறிந்திடாமற் றரணியிலிருப்போமென்றே
ஊனமாமுடலைநம்பி யுண்மைகேட் டலைந்தாய்நீமெய்ஞ்
ஞானமேபொருளாய்நாகை நாயிரைத்தொழுவாய்நெஞ்சே.

எட்டுடனிரண்டுமாகி யிரந்ததோரெழுத்தைக்காணார்
விட்டதோர்குறையுங்காணார் விதியின்றன்விவரங்காணார்
தொட்டதோர்குறியுங்காணார் சோதிமெய்பொருளுங்காணார்
இட்டமோநாகைநாதர் கிருபைதானுரைப்பாய்நெஞ்சே. (௭)

வஞ்சகநடைமரத்தில் வளர்வினைக்கொம்பிலேறிச்
சஞ்சலமனக்குரங்கு தாவியேயலையநீதான்
பஞ்சபாதகங்கள்செய்து பாம்பின்வாய்தேரையானாய்
நஞ்சமுதருந்துநாகை நாதரைவணங்குநெஞ்சே. (௮)

உடலினைநிசமென்றெண்ணி யுலகெலாமோடியாடிக்
கடனமரக்கலப்பாய்க்கம்பம் காகமபோற்கலக்கமுற்றாய்
திடமருள்குருவின்பாதஞ் சிக்கெனப்பிடித்துநின்றால்
நடமிடுநாகைநாதர் நற்பூதம்பணிவாய்நெஞ்சே (௯)

வீட்டிருள்போகவென்றே விளக்கினையேற்றிவைத்தால
வீட்டிருளங்கேபோச்சு விளக்கொளியங்கேபோச்சு
கூட்டினிடஞ்செய்யீசன் குறிப்பறியாமனீதான்
நாட்டினிலலைந்தாய்நாகை நாதரைவணங்குநெஞ்சே. (௧௰)

காட்டினின்மேவுகின்ற கனபுழுவெல்லாம்பார்த்து
வேட்டுவனெடுத்துவந்து விரும்பியகிருமிதனைக்
கூட்டிலேயடைத்தமர்ந்தக் குளவிதன்னுருவாய்ச்செய்யும்
நாட்டினில்நீதானாகை நாதரைவணங்குநெஞ்சே. (௧௧)

குளத்திலேகிடக்குமாமை குளக்கரைமுட்டையிட்டுக்
குளத்துநீர்க்குள்ளிருந்து குறிப்புடனினைக்கும்போது
களத்திலேபுதைத்தமுட்டை கருவுருவானாற்போலுன்
உளத்திலேனுகைநாத ருருவறிந்துணர்வாயநெஞ்சே. (௧௨)

மருவியசிலர்திப்பூச்சி வயிற்றினினாலுண்டாக்கி
உருவுடன்கூடுகட்டி யுகந்ததிலிருக்குமாபோல்
குருபரனுனதுகூட்டில் குடியிருப்பதுவைப்பார்த்துப்
பெருவெளிநாகைநாதர் பெருமைகண்டருள்சேர்நெஞ்சே. ()

வாரணமுட்டையிட்டு வயிற்றில்வைத்தணைத்துக்கொண்டு
பூரணகூடுண்டாக்கிப் பொரித்திடுகுஞ்சிபோலக்
காரணகுருவைமூலக் கனல்விலக்கதனாற்கண்டு
காரணனறியானுகை நாதரைப்பணிவாய்நெஞ்சே. (௧௪)

புள்ளினுள்ளிருக்கும்பூச்சு பொருந்தவெண்ணுரையுண்டாக்கி
மெல்லியதண்ணீர்வீட்டில் வெயிற்படாதிருக்குமாபோல்
சொல்லிலேனுகைநாதர் தோய்ந்திடாசசுட்சஙகண்டால்
கல்லிலேதெய்வமில்லைக் கருத்திலேதெய்வநெஞ்சே. (௧௫)

தண்ணீரிலிருக்குமீன்க டண்ணீரிற்கருவைப்பிச்சிக்
கண்ணினாற்பார்க்கும்போது கயலுறுவானாற்போல
நண்ணியகுருவைக்கண்டு நாதனல்லுருவைச்சேர்த்து
விண்ணின்மேனுகைநாதர் மெல்லடிவெளிபார்நெஞ்சே. (௧௬)

இலகியவுஷசிகாந்த மிரும்பினையிழுப்பதேபோல்
உலவியகுருபரன்று னுனையாட்கொண்டதன்மை
நலமுடனறிந்துநீதா னுயினையறிந்திடாமல்
நிலமிசையலைந்தாய்நாத லிவகரைநினைப்பாய்நெஞ்சே

சூரியகாந்தம்பஞ்சைச் சுட்டிடும்சுடரேபோலக்
கூரியவடிமூலத்தின் குண்டலிக்கனலைமூட்டி
வீரியமிருந்துறைத வெளிவீடுதன்னிற்சென்றே
ஆரியனுகைநாத ரடியிணைதொழுவாய்நெஞ்சே

ஐவகைப்பூதந்தொண்ணூற் றாறுதத்துவங்களாட்டும்
தெய்வமுன்னிடத்திருக்க தேசத்திலலைந்தாய்நீதான்
பொய்வசத்தேகபந்தம் போக்கிமெய்ப்பொருளைநோக்கி
ஐவரோரிடத்திற்கூடு மானந்தமறிவாய்நெஞ்சே. (௧௯)

ஊனமாமுடலம்பொய்யென் றுணர்ந்துமெய்யறிவைக்கண்டு
தானவனானபோதே சற்குருபதத்தைச்சேர்ந்தாய்
வானதிலிரவிதிங்கள் வந்துபோவதுவுகண்டால்
ஞானவானைகனாதர் நடனமுங்காண்பாய்நெஞ்சே. (௨௰)

இட்டுமோஞானயோகங் கிடைக்குமோகுருவின்பாதம்
கட்டுமோமூலவாசி காணுமோகலைவீடு
எட்டுமோநாகலிங்க மேற்றுமோதீபசோதி
தட்டுமோபளிங்குமேடை தனையறியார்க்குநெஞ்சே. (௨௧)

ஒருபாதந்தன்னைதூக்கி யொருபாதந்தன்னைமாற்
இருபாதமாடுகின்ற வியல்பைநீயறிந்தாயானால்
குருபாதமென்றுகூறுங் குறிப்புனக்குள்ளேயாச்சு
வருபாதனைகனாதர் மலரடிகாண்பாய்நெஞ்சே. (௨௨)

நாடென்றுநகரமென்று நலந்திகழ்வாழ்வதென்றும்
வீடென்றுமனையாளென்று மிக்கதோர்மைந்தரென்றும்
மாடென்றுஞ்சம்பத்தென்றும் வாஞ்சைகொண் டலைந்தாயிக்
தக்,கூடொன்றுமழிந்தாற்கூடத் தொடருமோகூடுநெஞ்சே.

ஏட்டிலேயெழுதுநூல்க ளெத்தனைபடித்துநீதான்
கீட்டிலேஎரித்ததிங்கள் கானலிற்சலம்போலானாய்
நாட்டிலேதெய்வமென்று நடந்தலையாமலுன்றன்
கூட்டினினைகனாதர் குறிப்பறிந்துணர்வாய்நெஞ்சே. (௨௪)

கற்பிடிசோறுவைத்த னையனென்றறிந்துகொல
சொற்படிபின்னேயோடுஞ் சனங்கள்போற்குணமுண்டாகி
விற்பிடித்தடிக்கப்பெற்ற விமலனார்கமலபாதம்
பிற்பிடிபிடிதனாதலிங்கலைக்காண்பாய்நெஞ்சே. (௨௫)

விரகநாயகனைத்தேடி விரும்பியமங்கைபோலக்
குரவனுருபதேசத்தைக் குறிப்புடனிதமுந்தேடி
இரவுடன்பகலுமான விருபதாடனங்கண்டால்
சிரமதிஞானைகனாதர் சிலம்பொலிகேட்குநெஞ்சே. (௨௬)

வாரணனயன்மால்ருத்திரன் மகேசுரன்சதாசிவன்றன்
காரணமானவீட்டிற் கலந்தவரிருக்கும்பால்
பூரணநிராதாரதின் புதுமையுங்கண்டுபோற்றி
ஆரணஞானைகனாத ரடியிணைதொழுவாய்நெஞ்சே. (௨௭)

மோரிலேநீரைவிட்டால் முறிந்திடுங்கொள்கைபோலக்
காரியகுருவைவிட்டுக் காரணகுருவைக்கண்டு
சீரியசாலுநீர்போற் சேர்ந்திருவருமொன்றாகி
ஆரியஞானைகனாத ரடிபணிந்தேத்துநெஞ்சே. (௨௮)

நித்திரைவந்தபோது நினைவுதானிருந்ததெங்கே
புத்திரர்தாமுமெங்கே புணர்ந்திடுமனைவியெங்கே
பத்திரபூசையெங்கே பலதொழில்செய்வதெங்கே
சிற்பதஞானைகனாதர் செயலினையறிவாய்நெஞ்சே. (௨௯)

வேடத்தைத்தரித்தாலென்னவெண்பொடியணிந்தாலென்ன
காடொத்துவாழ்ந்தாலென்ன நதிதலங்கண்டாலென்ன
தேடொத்தஞானைகனாதர்சீரடிசிந்தைதேர்ந்தே
ஓடத்தாமரையின்பூப்போ லுயர்ந்திடும்பெரியோர்நெஞ்சே()

தள்ளிசேணங்கன்போலச் சாஸ்திரம்படித்தாலென்ன
வெள்ளியதுகிலைத்தாவி வேட்டியாய்த்தரித்தலென்ன
உள்ளிருந்தாட்டிவிக்கு மொருவனையுருகித்தேடித்
தெள்ளியஞானைகனாதர் செயல்காணு மாந்தர்நெஞ்சே.

பளிங்குற்றகுளத்துநீரைப் பாசிதான்மறைந்தாற்போலக்
களங்கற்றபுத்திதன்னைக் காமன்தான்மூடிக்கொண்டு
விளங்கத்தான்செய்வதில்லை மெய்யறிவிளக்கையேற்றி
முழங்கத்தாஞானைகனாதர் முழுமொழிபகர்வாய்நெஞ்சே.(௩௨)

மண்ணதையெடுத்துநீரால் வகையுடன்பிசைந்துபாண்டம்
பண்ணியேகனலாற்சுட்டுப் பாதையென்பதுதான்விட்டே
அண்ணலர்வாய்வாகாச மடந்தைவைம்பூதக்கூட்டை
விண்ணமர்குகைகுதர் விளையாட்டென்றறிவாய்நெஞ்சே. ()

கண்ணாடிதன்னிற்றோற்றுங் காரணவுருவம்போல
உண்ணாடிமூலாதாரத் ததித்தசற்குருவைக்கண்டு (ல்
விண்ணாடிவெளியைப்பார்த்து விளக்கொளிமகிமைச்சேர்ந்தா
மண்ணாகுகுகைகுதர்வந்துனையாள்வார்நெஞ்சே. (௯௪)

உருவமுநிழலும்போல உகந்துபின்றொடருநாயன்
பருவங்கண்டறிந்திடாமற் பருந்தின்காற்பட்சியாகுய்ப்
புருவனைகடுவணைக்குட் பொருந்தியநடனங்கண்டால்
குருபாகுகைகுதர் கூப்பிடவருவார்நெஞ்சே. (௯௫)

கணக்கில்லாவெழுவகைக்குட் கலந்துருவெடுத்தவின்னாள்
பிணக்கில்லாந ரசென்மந்தான் பிறப்பதேயரிதென்றெண்ணி
குணக்கிலாகுணமுண்டாகிக் கோதிலாஞானம்போற்றித்
கணக்கிலாகுகைகுத ரிணையடிசேர்வாய்நெஞ்சே. (௯௬)

அரியதோர்நரஜன்மந்தா னவனியிற்பிறந்துமுன்னாள்
பெரியபேரின்பஞானம் பெறுவதேயரிதென்றெண்ணி
உரியவேதாந்தவண்ணமையுரைக்குமாசானைப்போற்றித்
தெளியொணாகுகைகுதர் சீர்பதந்தேடுநெஞ்சே. (௯௭)

பசும்பொன்னினுமமென்றிற் பணிவேறானாற்போலே
விசும்பெலாங்கலந்தசோதி வெவ்வேறுதெய்வமாகி
உசும்பிசீவாத்துமாக்க ளுடல்பலவானதன்மை
கசிந்துகொண்டுருகிகுக விங்கரைக்காண்பாய்நெஞ்சே. (௯௮)

விண்டவர்கண்டதில்லை விட்டதோர்குறைமெய்ஞ்ஞானம்
கண்டவர்விண்டதில்லைக் ககனவம்பலத்தின்காட்சி
அண்டர்கோடஞ்சையீச னடியிணைவாசியுச்சி
மண்டலகுகைகுதர் வாழ்பதிவழிபார்நெஞ்சே. (௯௯)

நாதுடனுக்குழக்குக் கண்ணுயிர்சிரங்கருத்து
மாதுடனீசனுடு மலர்பதமறிந்திடாமல்
வாதுசொற்றர்க்கநூல்கள் வகைபலபவித்தாலென்ன
ஈாதுவாய்ஞானைகுநர் தாள்கண்டுதனைப்பார்நெஞ்சே. (௪0)

நீபத்தைமலரென்றெண்ணிச் சென்றிடுவிட்டில்போலக்
கோபத்தின்கனலில்வீழ்ந்து கொடியதோர்பிறவிபெற்றாய்
யூபத்துவந்தாலுன்றே டியாவர்தாம்வருவாரந்தச்
சோபத்தைமறந்தனுகை லிங்கரைத்தொழுவாய்நெஞ்சே. ()

மின்மினிப்பூச்சிதன்னுண் மெய்யொளிகண்டாற்போல
டன்மனதொடுங்கியேயுன் னுள்ளொளிகண்டாற்பின்னைச்
சென்மமுமில்லையந்தச் சிவத்துளேசேர்வாய்நாளும்
பொன்மகள்புகழுநாகை நாதரைப்போற்றுநெஞ்சே (௪௨)

சம்பினிற்களிம்புபோலச் சீவனுஞ்சடமுங்கூடி
ம்பினவுடலைக்கண்டு நலவுயிர்வடிவங்காணாய்
வெம்பியகாமமாயை விட்டுமெய்ப்பொருளைதேடிக்
ம்பியனுகைநாதர் கூத்தாடல்காண்பாய்நெஞ்சே. (௪௩)

லவுகாத்திருந்தபட்சி யேங்கியேபறக்குமாபோல்
லகமேபொருளாய்நம்பியொருபலனற்றாய்நீதான்
லைமையாங்குருவைப்போற்றித் தாளிணைவாசிகண்டால்
நிலைமையாம்னுகைநாதர் சின்னிடைநிற்பார்நெஞ்சே. (௪௪)

பூத்துமலிங்கைங்கண்டு வன்பெனுமலரைநன்றாய்ச்
சாதகியேபிரணவத்தாற் றனிப்பெருவட்டஞ்சூட்டி
போற்றியேதீபமூல விரிசுடர்விளக்கும்பார்த்துப்
போற்றியேனுகைநாதர் பொன்னடிபூசைநெஞ்சே. (௪௫)

சுக்கிலவிந்துதானுஞ் சுரோணிதக்கருவிற்கூடிப்
க்குவக்கிழவியாகிப் பையுளேயடைந்தபாவை
க்குவையதனைவிட்டுக் கவனியிற்பிறந்தசூட்சம்
க்கினினுகைநாத ரமைந்ததென்றறிவாய்நெஞ்சே. (௪௬)

நீக்கமில்லாமலெங்கு நிறைந்தோர்வெளியையுன்னுள்
தாக்கியேயறிவினாலே தனைமறந்திருந்துபார்வை
நோக்கியேநிஷ்டைகூடி நொடியளாகிமிஷம்வாங்கி
தூக்கியேனாத்னை நாதரைத்தொழுவாயநெஞ்சே. (சஎ)

கடலெனவிளங்கும்வேத காரணகுருவைக்கண்டுன்
உடல்பொருளாவிமூன்று முகந்தவர்க்குதவிநீதான்
திடமுடன்பூர்த்தியாகி செந்துசிற்பரத்திற்சேர்ந்து
நடமிடம்வாசினை ஞதனைநாடுநெஞ்சே. (சஅ)

நாசியினுனியின்மீது நடனமேசெய்யுந்தேசி
வாசிவாவென்றவன்னுள் வாங்கியேமௌனமுற்று
காசிமாநதியுந்தில்லைக் கனகவம்பலமுங்கண்டு
பூசித்தனைனதர் பொன்னடிவணங்குநெஞ்சே. (சகூ)

தாவுநல்லுதயகாலந் தபனன்றேரெழும்பக்கண்டு
கூவுமாக்குக்கிடங்க கூப்பிடுகோட்டிற்சம்பு
மேவியேநீயுமந்த மெய்யறிவறிந்தாயானால்
மூவர்கோனைகனதர் முன்வந்துநிற்பார்நெஞ்சே. (ருO)

வஞ்சையர்மீதிலாசை வைத்திருந்தவையமீதில்
சங்கையில்லாததுன்பச் சாகரந்தனிலேவீழ்ந்தாய்
நங்கைமேல்வைத்தபாச நாயன்மேல்வைத்துநீயும்
செங்கையானைகனதர் சீர்பதந்தொழுவாய்நெஞ்சே. (ருக)

அன்றிலும்பேடுபோல வடிமையுங்குருவுங்கூடிக்
கொண்டிருந்தடிமூலத்திற் குதித்தெழும்வாசியாடக்
கண்டிமையாதகாட்டக் கருணையால்வெளியிலேறிப்
பண்டிண்டினைகனத லிங்கரைப்பணிவாய்நெஞ்சே. (ருஉ)

குலங்கெட்டுப்பாசங்கெட்டுக் கோத்திரப்பேதங்கெட்டு
மலங்கெட்டுக்கோபங்கெட்டு மங்கையராசைகெட்டுத்
தலங்கெட்டுத்தானுங்கெட்டுத் தனக்குளேவெரும்பாழாக்கிப்
பலங்கெட்டினைகனதர்பதஞ்சொன்னார்பெரியோர்நெஞ்சே.

ஓமென்னும்பிரணவத்து ளுதித்தவைந்தெழுத்துமாகி
ஆமெனுமகாரபீடத் தமர்ந்திடுவாசிகண்டு
ஊமெனுமௌனமுற்றே யூரிமெதிப்பாலுண்டு
நாமெனுஞானைகநாதர் தாண்டவம்பார்ப்பாய்நெஞ்சே. (௫௪)

அலைதனிற்றுரும்புபோலு மாலைவாய்க்கரும்புபோலும்
வலைதனின்மானைப்போலு மயங்கினைந்தலைந்தாய்நீதான்
உலைதனின்மெழுகைப்போலு முருகிமெய்ப்பொருளை யுன்னி
நிலைதனினின்றஞானைகலிங்கரைக்காண்பாய்நெஞ்சே. (௫௫)

பொறிவழியலைந்துமீளும் புலன்களை யடக்கிஞான
அறிவெனும்விழியினாலே யம்பரவெளியைப்பார்த்து
உறிதனிலிருக்குங்கள்ளை யுண்டுதற்போகமிட்டு
நெறிதருஞானைகநாதர் நிலைமைகண்டறிவாய்நெஞ்சே. (௫௬)

ஆயாதநூல்களெல்லா மாய்ந்துநீபார்த்துங்காமத்
தீயானகுழியில்வீழ்ந்து செனனமுற்றலைந்தாயுன்னின்
காயாதபாலையுண்டு கனகவம்பலத்தைக்கண்டு
மாயாமஞானைகநாதர் மலரடிவணங்குநெஞ்சே. (௫௭)

ஆதாரமாறுந்தாண்டி யைம்பூதவடிவந்தாண்டி
மீதானவெளியுந்தாண்டி விளங்கியபரந்தன்கூத்தை
நீதானுமறிந்துகொண்டு நின்மலவடிவமாகி
வேதாந்தஞானைகநாதர் மெல்லடிவெளிபார்நெஞ்சே. (௫௮)

பார்த்திடுந்திசைகளெங்கும் பராபரவெளிதான்கூடிக்
கோர்த்திடும்வடிவைஞான குருவினாலறிந்துகொண்டு
பேர்த்திடுமிமையாநாட்டத் திருந்துபேரின்பவெள்ளம்
வாழ்த்தியேமூழ்கிஞானைக லிங்கரை வணங்குநெஞ்சே. (௫௯)

சச்சிதானந்தமானசற்குரு பதத்தைப்போற்றிக்
கச்சிமாநகராமூலக் கனல்விளக்கதனையேற்றி
உச்சிமேல்வைத்துப்பார்வை யுணர்பிலான்வெளியிலுன்னித்
தச்சிலாவீட்டிஞானைக லிங்கரைத்தழுவுநெஞ்சே. (௬௰)

காரின்பழுலையாளோடு பன்றிலோடஞ்செய்வோனைப்
பேரின்பவீட்டைக்கண்டு பிரணவவிளக்கையேற்றிச
சேரின்பவெளியில்வாசித் திருவிளையாடல்பார்த்தால
ஓரின்பனாகைனாதர்க் குகந்துவந்துரைப்பாநெஞ்சே. (௬௧)

நாயனையறிந்திடாம னானென்னுமாண்மையாலே
ஆயனில்லாதகாலி யாகியலையலுற்றாய்
காயமேகோயிலாகக் கலந்திருந்தவனைக்கண்டு
மாயொனுவாழ்க்கைனாகை னாதரைவணங்குநெஞ்சே. (௬௨)

உருப்படுங்கல்லுஞ்செம்பும உண்மையாய்த்தெய்வமன்றே
மருப்புனைமலரைச்சூட்டி மணியாட்டித்தூபங்காட்டி
விருப்பமுற்றலைந்தாயந்த வினைமயலவிட்டுநின்னுள்
இருப்பவனாகைனாத ரிணையடிபூசிநெஞ்சே. (௬௩)

உனைவிடவேறேதெய்வ முண்டெனவுலகிற்றேடும்
நினைவதேதெய்வவாகி நீகண்டுநின்றாயானால்
செனனமாம்பிறவிபோகுஞ் சிவத்துளேசேர்க்குமெங்கோன்
மனமகிழ்வாசினாகை னாதந்தாள்வணங்குநெஞ்சே. (௬௪)

ஆசையாம்பாசமாயை யறிவதைமயங்கியுன்னுள்
ஈசனைத்தேடொட்டாம லிருக்குமவ்விருளைப்போக்கி
கோசமாகுறியைநோக்கிக் குருபரன்வடிவைக்கண்டு
வாசமாமலரானாகை னாதரைவணங்குநெஞ்சே. (௬௫)

கன்றதைத்தேடுங்கானும் காலியைப்போலேயுன்னுள்
நின்றபேரொளியைக்கண்டு நினையெனுமறிவாற்றெய்வம்
ஒன்றெனக்கண்டாயானா லுமையவளுடனேதில்லை
மன்றினுளாடுனாகை னாதர்முன்வருவாய்நெஞ்சே (௬௬)

மடைவாயிற்பட்சிபோலே மனந்தனையடக்கிவாசி
விடையேறுமீசன்பாதம் விரும்பியபெரியோர்பின்னே
தடையறத்திருந்துஞான சாதனம்பெற்றுநீர்தான்
புடைசூழுனாகைனாதர் பொன்னடிபோற்றுநெஞ்சே. (௬௭)

சிரமெனுங்குகையினுள்ளே சிவகைலாயமன்றில்
அரனுடமமையுவாசி யாடல்தான்செய்வரென்று
பரமமெஞ்ஞானநூல்கள் பகர்வதையறிந்துபார்த்து
வரமிகுஞானானந்தர் மலரடிவணங்குநெஞ்சே (௬௮)

கடமதுநிறைந்துநின்ற கனவொளிபோலேவுன்றன்
செடமதினிறைந்துநின்ற சிவனையறிவாற்கண்டு
திடமிகுசிவசாட்சி தரிசிக்கசீவன்முத்தி
இடமருஞானானந்த ரிணையடியுணர்வாய்நெஞ்சே (௬௯)

மெய்யருள்விளங்குட்சோதி வெளிதனையறிவாலுன்னி
ஐயமில்லாமற்காண்போ ரவரின்பமுற்றவரென்று
துய்யமெஞ்ஞானநூல்கள் சொல்வதாற்பரத்தைநோக்கிச்
செய்யதாள்வாசிஞானானந்தரைத்தெரிசிநெஞ்சே. ௭௰

முந்தினபிறப்புவந்த முதன்மையுமறியாயிப்பால்
பிந்தினபிறப்புவந்த பெருமையுமறியாய்நீதான்
அந்தரப்பட்சிபோலே யலைகின்றாயகத்துளேறச்
சந்தியையறிந்துஞானானந்தரைச்சார்வாய்நெஞ்சே. (௭௧)

காகத்தின்கண்ணிரண்டிற் காண்பதுங்கண்ணொன்றேபோல்
தேகத்தினறிவின்கண்ணைத் திடமுடனறிந்துகொண்டு
மோகத்தின்கனலில்வீழா முனைசுழிவாசிபார்த்தால்
ஏகத்தஞானானந்தரிணையடிசார்வாய்நெஞ்சே. (௭௨)

ஓட்டிலேபட்டபட்சி யுழல்கின்றநெறிபோலாசைக்
காட்டிலேமயங்கிமாறுக் கவலையுற்றலைந்தாய்நீதான்
நெட்டிலேயோடுவாசி நிலைமையாய்நிறுத்திமேறு
வட்டிலேஞானானந்தர் வாழ்பதியறிவாய்நெஞ்சே. (௭௩)

ஆலைவாய்க்கரும்புபோலு மரவின்வாய்த்தேரைபோலும்
பூனைவாயெலியைப்போலும் புவிபுனைந்தலைந்தாய்ஞானத்
தேனைவாயருந்திமுத்தி சேர்ந்திச்சிவத்தைநோக்கி
ஊனுளேஞானானந்த ருற்றிடமறவாய்நெஞ்சே. (௭௪)

மித்திக்குருக்கள்சொல்லை மெய்யென்றுகல்லைவைத்துப்
பத்திரபுட்பஞ்சாத்திப் பணிந்திடும்பாவைநீதான்

சித்திரப்பதுமைபோலுஞ் செய்தொழிலொடுங்கிநின்று
புத்தியாய்ஞானநாதர் பொன்னடிபோற்றுநெஞ்சே. (௭௫)

உப்பொடுபுளிப்புங்கைப்பு முணர்வினாலறிந்துநீதான்
எப்போதுமுனக்குஞான னிருப்பிடமறியாதென்னே
முப்போதுங்குருவைப்போற்றி மூலைசுழிவாசிபார்த்தால்
அப்போதுஞானநாத ரடியிணையறிவாய்நெஞ்சே. (௭௬)

படிக்கவுநாவிருக்கப் பணியவுஞ்சிரமிருக்கப்
பிடிக்கவுங்கரமிருக்கப் பேணவுங்காதிருக்க
நடிக்கவுந்தாளிருக்க நாடவுங்கண்ணிருக்க
இடுக்கமுற்றலைந்தாய்ஞான நாதரையிறைஞ்சுநெஞ்சே. (௭௭)

அருவுருவில்லாநாய னணுவினுக்கணுவாய்நின்றும்
மருவுபல்லுயிர்கட்கெல்லாம் வடிவுவேறான தன்மை
ஒருவருமறியாரல்லோ ருறுதியாலறிவார்ஞான
குருபரஞானநாதர் குறிப்பறிந்துணர்வாய்நெஞ்சே (௭௮)

ஆண்டொராறாறுகற்ப மௌஷதமுழவிரண்டு
நீண்டதோர்காயசித்தி நெடுநாளைக்கிருக்கபோதும்
மாண்டுதான்போவாரல்லால் வையகத்திருப்பாருண்டோ
தீண்டொணாஞானநாதர் சீர்பதந்தேடுநெஞ்சே. (௭௯)

பொருடனைத்தேடிப்பாரிற் புதைக்கின்றபுத்திபோன்மை
யருடனைநிதமுந்தேடி யானடியதனில்வைத்தால்
இருடனையகற்றுஞ்சோதி யெம்பிரான்முன்னேவந்தான்
மருடனைமாற்றிஞான நாதரைவணங்குநெஞ்சே. (௮௰)

ஆண்டியின்வேடந்தானு மறிவுடனெடுத்திடாமல்
தூண்டிலின்மீனைப்போலத் துள்ளிவீழ்ந்தலையாய்நீதான்
வேண்டியபோதுநாயன் மெல்லடிவெளிதாய்த்தோன்றும்
தாண்டியவாசிஞான நாதரைத்தழுவாய்நெஞ்சே. (௮௧)

சத்திலேநுழைந்திருந்த சிறுபிள்ளைபூச்சிபோலும்
நீற்றிலேநுழைந்திருந்த நேர்மையாம்கழற்சிபோலும்
மாற்றுபேருலகினல்லோர்மருவிரிமருவார்சித்தத்
தேற்றியேஞானநாத ரிணையடிவைப்பாய்நெஞ்சே. (௮௨

நாடகப்பெண்ணையாட்டு நட்டுவன்போலயுன்றன்
கூடகச்சடத்தையாட்டுங் குருவையறிந்திடாமன்
மூடகமானுய்ஞான முதல்வனையறிவாற்றேடி
ஆடகநாகைநாத ரடியிணைபணிவாய்நெஞ்சே (௮௩)

சத்தியுஞ்சிவமுமாகித் தாண்டவமாடும்வாசி
சுத்தியமூலாநாடிச் சுழிமுனைகம்பத்துள்ளே
புத்தியைச்செலுத்திமேலாம்பொருடனையடக்கவல்லார்
பத்திசெய்ஞைநாதர் பதிதனைபார்ப்பாய்நெஞ்சே. (௮௪)

நாட்டமாமறிவின்கண்ணு னுயனையருகிப்பார்த்துத்
தேட்டமாங்கருணைபெற்ற சிவனடியார்கடங்கள்
கூட்டமாம்பரத்திற்சென்று குருபணிவிடையுஞ்செய்து
கோட்டமாநாகைநாத ருருவருவாய்நெஞ்சே. (௮௫)

காலனையுதைத்தநாயன் காலெனும்வாசிதானை
மூலநன்மனைபிற்கண்டு முப்பதிமுப்பாழ்தாண்டி
பாலமுதருந்தமேலாம் பராபரைபாதம்போற்றி
மாலயனையானை நாதனைவணங்குநெஞ்சே. (௮௬)

கடுமையாம்பதட்டிலேறிக் கபிமுருகுலமேந்திக்
கொடுமையாங்காலன்வந்து கொண்டுபோமுன்னேநீதான்
அடிமையானுயன்பாதமனுதினமறவாதேத்தில்
நெடுமையானைகநாதர் நிலைமைகண்டறிவாய்நெஞ்சே. (௮௭)

அரகராசிவசிவாவென் றனுதினமறவாதற்கே
சிரகசிலாயவீட்டிற் சிவனைநீயறிந்துதேடி
மரகதவல்லிபங்கன் வந்துமுன்காட்சிநல்கிப்
பரகதிகொடுக்குனைகை நாதரைப்பணிவாய்நெஞ்சே. (௮௮)

நடக்கிலும்வாசிப்பாரு நாட்டமும்வாசிப்பாரு
முடக்கிலும்வாசிப்பாரு முனைசுழிவாசிப்பாரு
மடக்கிலும்வாசிப்பாரு மறிவிலும்வாசிப்பாரு
திடக்குறுநாகைநாதர் திருநடஞ்செய்வாய்நெஞ்சே. (௮௯)

போனனுள்வீணுய்ப்போனுற் புதியநாள்கோவிடாமல்
ஞானநாளிதுதானென்று நாடொறுங்குருவைப்போற்றி

வானநாளத்திற்சென்னி யழிக்கண்டுமதிப்பானூறும்
தேனைநன்கருத்திறுகை யிங்கரைத்தெரிசிநெஞ்சே. (கo)

தராதலமெல்லாந்தானாய்த் தாபரசங்கமெங்கும்
விராமயுமாகக்காத்து நின்றதோர்பொருளாமந்தப்
பராபரவடிவங்கண்டு பரத்துளேயடிக்கிமேலாம்
புராதனமூர்த்திநாகை லிங்கரைபோற்றுநெஞ்சே. (கக)

மாணிக்கவாசகர்க்கு மகிழ்பரஞ்சுந்தரர்க்கும்
ஆணிப்பொன்றிருமூலர்க்கு மறுபத்துமூவருக்கும்
பேணிக்கொள்பெரியோருக்கும் பேரருள்சிவனேபுன்னுள்
தோணக்கண்டிருந்துநாகை லிங்கரைத்தொழுவாய்நெஞ்சே.

மகத்துவமடைந்தநெஞ்சே மனமாயைகொண்டநெஞ்சே
பகுத்தறிவில்லாநெஞ்சே பலநினைவானநெஞ்சே
மிகுத்திடுங்காமநெஞ்சே மெய்ப்பொருளறியாநெஞ்சே
செகத்தினிநாகைநாதர் சீர்பதந்தேடுநெஞ்சே. (கங)

காலதுமேலதாகக் கனியுண்ணும்வவ்வால்போல
மூலால்வாசியோடு முறைமையையறிவாற்கண்டு
சீலமெய்ஞ்ஞானபோத சிவயோகந்தன்னைப்பார்த்து
ஞாலமேநாகைநாதர் நடனமுங்காண்பாய்நெஞ்சே. (கச)

உறக்கமும்விழிப்பும்போல வுடல்பிறந்திறக்குந்தன்மை
சிறக்கவேயறிந்துமிந்த செகவாழ்வைமெய்யென்றெண்ணிக்
குறைத்தலைக்குலாமர்சொல்லைக் குறிப்புடனம்பலாமோ
மறக்கொணாநாகைநாதர் மலரடிவணங்குநெஞ்சே. (கரு)

எத்தனைபுத்திசொல்லி யெடுத்துரைத்ததுவுநீதான்
பித்தனைப்போலவேயோடிப் பிரவிசாகரத்தில்வீழ்ந்தாய்
முத்தமிழ்நாகைநாதர் முண்டகமலர்த்தாள்போற்றி
சத்தமுன்னுடலிற்றோற்றுந் தலந்தனைப்பார்ப்பாய்நெஞ்சே.

சுவர்தலைப்பூனைபோலச் சுற்றியபிரவிதீரத்
தவத்தினுக்குருவமான சற்குருதாளைப்போற்றிச்
சிவத்துடன்கலந்துமேலை சிதம்பரவழியேசென்றங்
கெவர்க்குமேலானநாகை லிங்கரைப்பணிவாய்நெஞ்சே. (கஎ)

அலைவாயிற்பூடுபோலு மானைவாய்க்கவளம்போலும்
உலைவாயின்மிருகம்போலு மயனகினைந்தலைந்தாய்நீதான்
உலைவாயின்மெழுகைப்போல யுருகிமெய்ப்பொருளையுன்னிப்
பலகாலுமேத்திறுைை லிஙகரைப்பணிவாய்நெஞ்சே. (கஅ)

மூலமாககரமீதின் மூளைத்தெழுஞ்சுடரைக்கண்டு
காலநீமேலேயேற்றிக் கபாலதநேனமுதிருத்தி
கோலமாமதுவேயுண்டு குருபதந்தன்னிற்சேர்ந்து
வாலசுந்தரியானுைை லிங்கரைவணங்குநெஞ்சே. (கக)

இறந்திடுமிருபத்தோரா யிறததாறுநூறுபேரும்
இரந்திடுமிக்காயம்போனு லீசனைக்காண்பதென்னுள்
மறந்திடாதறிவான்மூல வாசியைமேலேயேற்றிச்
சிறந்தசற்பரத்தானுைை லிங்கரைதரிசிநெஞ்சே (ள)

கதிதருமூலாதார கணபதிதாசன்சொன்ன
நிதிமணிவாலையான நெஞ்சறிவிளக்கநூறும்
துதிசெயுமறிவோர்ஞான சோதியின்வடிவமாக
மதியணிநாகைநாதர் மலர்பதம்பெற்றுவாழ்வார். (ளக)

நித்தியப்பொருளதான நெஞ்சறிவிளக்கநூறும்
பத்தியாய்மனதிலெண்ணிப் படித்ததன்பயன்காண்போர்கள்
முற்றிமெஞ்ஞானம்பெற்று மூவர்க்குமுதல்வராகிச்
சத்தியுஞ்சிவமுந்தோன்றுந் தற்பரமதனுட்சார்வார். (ளஉ)

கனகமார்மணிசேர்மூல கணபதிதாசனுை
நினைவினுலறிகட்செப்பு நெஞ்சறிவிளக்கநூறும் [ம்
விவிலியேபடிப்போர்கேட்போர் வினையெலாமகன்றுமெய்யு
மனமெனுமோட்சநாலாம் பதம்பெற்றுப் பதத்துள்வாழ்வார்.

நெஞ்சறிவிளக்கம்

முற்றிற்று.

சிவமயம்.

# சேஷயோகி அருளிச்செய்த

# ஞானயேத்தம்.

பிள்ளையாரும்வாரி
பிள்ளையாருமங்கே
பெருத்தமூலாதாரஞ்
நாலாம்

ஓங்கியுசிதொட்டு
தாங்கியதின்கீழாய்
தானிரண்டதாகி
தங்கியேவாயுவானல்
அங்கிமேகடந்து
சங்கிலிபிளந்து
சமதத்வாயுவானல்
இங்கிதுவுரைததே

ன்னமதின்மேலே
வன்னமதைச்சொல்வே
அன்னத்துக்கிராஜன்
ஆயன்சரஸ்வதியாம்
நயந்தவிதழாறும்
நலநிறம்பொன்னு
நகரமேயெழுத்தாம்
உகாரமெகந்தமாகு
மிதந்திதந்நாதா
மூன்றுடனேவாரி
மோசமபண்ணமாயன்
வாசமணிபூரம்
மலட்சுமியாம்
வீசம்பத்திதழும்
ஓசமெவ்வெழுத்தாம்
மேதசமேவெளுப்பாம்
ஆறுசுவையாலே
சமதேயுவீடாம்
நாலுடனேவாரி

நாலுமெட்டிதழும்
நல்லசெம்புமேனி
யெல்லைருத்திரனும்
தொல்லைவிழிப்பார்வை
செல்லுமேசிகாரம்
அல்லலுண்டேயின்னம்
அஞ்சுடனேவாரி
நெஞ்சிலவ்வெழுத்தாம்
கொஞ்சியமயேசன்
மிஞ்சுமறுகோணம்
மேனிகருப்பாமே
தன்னிதழைப்பார்க்கில்
தனியேபதினாறும்
மூனிந்தவேலையோடல்
அந்தரங்கஞ்சொல்வேன்
ஆறுடனேவாரி
கூறுவேனானுங்
குருவிருந்தநேர்மை
யருகிருந்தபூசம்
அமச்சல்லோவத்தான்
என்னவென்றுசொல்வேன்
ஏழுடனேவாரி
தாழசொன்னபேச்சு
சத்தியவகாணத்தான்
ஏழைசொன்னபேச்சு
எட்டுடனேவாரி
எட்டுசாணுடம்பு
கட்டையைநம்பாதே
ஒன்றல்லவோதெய்வம்
ஒருபதியாலெட்டாம்
ஊமையெழுத்தாலே
ஓங்காரமுண்டாச்சு
ஓங்காரத்தினாலே

உண்டாச்சுதேலோகம்
இதுவுங்குருவாலே
இருபதியாலெட்டாம்
இறைக்கிறரெண்டேத்தம்
சுரக்குமேழைநாலாம்
மூர்த்திகுருபாதம்
முப்பதியாலெட்டாம்
முப்பாழுங்கடந்து
அப்பாலேநடந்தால்
அதிசயம்பார்த்தால
நல்லகுருபாதம்
நாற்பதியாலெட்டாம்
நாலுமூலகுண்டம்
[illegible]
படுமுதலில்ரெண்டாம்
படுமுதல்பிடுங்கி
பருத்தமரமேறி
[illegible]ள்ளிறங்கி
கூசாமற்குடித்தார்
பேசாதபிறகு
அஞ்சாதேநீயத்தான்
ஐம்பதியாலெட்டாம்
அஞ்சல்லவோபூதம்
பிஞ்சல்லோவெழுத்து
அஞ்சொடுங்கும்போது
நெஞ்சடங்குமத்தான்
ஆறுமுகமல்லோ
அறுபதியாலெட்டாம்
ஆரல்லோவாதாரம்
வேறல்லோசுரூபம்
வேரறிந்தபேர்க்கு
தூரமில்லையத்தான்
என்னவென்றுசொல்வேன்
எழுபதியாலெட்டாம்
ஏழல்லவோநாடி
வாழின்பத்துநாடி
பாழல்லவோநாளும்

பாழ்கடந்தபேர்க்கு
பத்துகோடிதெண்டம்
என்னவென்றுசொல்வேன்
எண்பதியாலெட்டாம்
எண்[illegible]
கண்ணப்பனைக்கண்டு
தின்னப்பாபழத்தை
[illegible]
[illegible]
சண்ணப்பாகுருவை
சொன்னதபசாரம்
தொண்ணூறுடனெட்டாம்
மண்ணில்வெகுதூரம்
குண்ணறிந்தபேரை
எண்ணறிந்தவாடி
ஏகமானதாகி
பாரமுமறிந்து
நாகத்தையெழுப்பி
பீசத்தைதுறந்து
யோகத்தைநடத்தி
போகத்தைக்கடந்தால்
தாகத்தைநிறுத்தும்
சோதியறிந்தோர்க்கு
தூரமில்லையத்தான்
சாதிகுலமில்லை
சற்குருவறிந்தால்
நித்தியமிதுவே
பத்தியாய்ப்பணிந்தால்
முத்திதருமத்தான்
வாமனெறிசிவன்
ராமயோகிதந்த
ராஜயோகிசேஷன்
சாதனருளாலே
பாசமறச்சொன்னேன்
பிரியாமலேயத்தான்
பின்னை யாரும்வாரி

ஞானயேத்தம்-முற்றிற்று.

பிசுமில்லாகிற்றகுமானிற்றகீம்.

# ஞானரத்தினக்குறவஞ்சி.

## காப்பு.

பொன்னுலகுபொருந்துமனப்
    பொருளறியத்தனமறிய
மின்னுலகில்மெய்ஞ்ஞானம்
    விளங்ககுறவஞ்சிதனை
உன்னுமத்தன்னினைவி
    னுன்னியுதிப்பொருநான்காய்த்
தன்னிறையைத்தன்னினைவாய்த்
    தரிப்பதுவேகாப்பாமே.

ஆதிக்குமுன்னமநாதியமென்னடிசிங்கி
அந்தக்கருக்குழிமூந்தவிருளறைசிங்கா. ௧

ஆதியாய்வந்தவரும்பொருளேதடிசிங்கி அது
சோதியிலாதிசொரூபமாயெழுந்ததுசிங்கா. ௨

சோதியிலாதிசொரூபானதெப்படிசிங்கி அது
வேதமாம்முப்பொருளொன்றாய்முடிந்ததுசிங்கா. ௩

முப்பொருளென்றுநீமுன்சொன்னதாரடிசிங்கி அது
அப்பனுமாயிமாதையாம்நாமடாசிங்கா ௪

எப்படியுலகத்திலிப்படியுருவானோம்சிங்கி அது
அப்பன்தன்னட்புக்குவொப்பியதாயாலேசிங்கா. ௫

பராபரத்தினிற்பஞ்சவன்னமேதுசிங்கி அது
வோராகித்தூராணவிந்துநிறமடாசிங்கா. ௬

ஒன்றுக்குளைவர்களுண்டானதெப்படிசிங்கி அது
வொன்றோடேயொன்றாகவோடியிணைந்ததுசிங்கா. ௭

மூலக்குகைக்குள்ளேமுச்சுடரேதடிசிங்கி அது
நாதத்திலைம்பூதமன்பாயுதித்ததுசிங்கா. ௮

மூலக்குகையெனுங்கோட்டைக்கரசர்யார்சிஙகி அது
முப்பொருளொன்றாய்முடிந்தவிளைவெடாசிஙகா. ௯

மூலக்கிழஙகுமுளை தகிடமெவ்விடஞ்சிஙகி அது
நாததகிலானநவெிலையல்லவோசிஙகா. ௰

முன்னேமுளையாய்முளைத்திடமெவ்விடம்சிஙகி அது
மூளைமுனையிருகண்ணிகழல்லவோசிஙகா. ௰௧

பின்னேயுருவாய்முடிந்திடமெவ்விடம்சிஙகி அது
பெண்ணாணுமாகபபிறந்த தலமடாசிஙகா. ௰௨

இந்தவுடலுக்குவேறென்னதூரென்னசிஙகி அது
இநதவுடலுக்குயிராதிமூலமேசிஙகா. ௰௩

இநதவுடலுக்குயிராவநததெப்படிசிஙகி அது
தொந்திநடுக்குழிதொபபூழ்வழியடாசிஙகா. ௰௪

இந்தவுடலுககுயிரெஙகேநின்றதுசிஙகி அது
அந்தரமாயண்டமாக்கொடிநினறதுசிஙகா. ௰௫

இந்தவுடறகனியெந்தக்கொடிகனிசிஙகி அது
முந்தியதொப்பூழுமாககொடியலலவோசிஙகா. ௰௬

மாக்கொடியெனபதைமானிடரென்சொன்னார்சிஙகி அது
மட்டிலடஙகாதமாகலிமாவடாசிஙகா ௰௭

எநதவழியினுல்வந்தோமுலகினில்சிஙகி அது
வெலலாமுடிநதபொருள்வழியடாசிஙகா ௰௮

முன்னேயறிவாலறிவகையென்னடிசிஙகி அது
முசசுடாமூன்றுமுடலுயிராத்துமாசிஙகா. ௰௯

பிரனேரறிவாகவொனறுனதெப்படிசிஙகி அது
பேதகமற்ற பெருவெளியானதுசிஙகா. ௨௰

ஆசைகொண்டெம்மையாட்டுகிறதாரடிசிஙகி அது
அக்கினிவாயுநீர்மண்ணின் மகிமையேசிஙகா ௨௧

ஆசைபாசபலனனுபோகமாராடிசிஙகி அது
அகம்பொருந்தியபஙகுமண்ணல்லவோசிஙகா ௨௨

தன்னையறியுந்தலமேதுசொல்லடிசிங்கி அ
கண்ணிடையானநடுநிலையல்லவோசிங்கா. ௨௩

என்னவிதமாகத்தன்னையறிவதுசிங்கி அ
தன்னவன்றாய்த்தந்தையாகிநாமானதுசிங்கா. ௨௪

இறையையறிவதெப்படிசொல்லடிசிங்கி அ
இறையெங்குநின்றுமெதன்னினைவாகுமெசிங்கா. ௨௫

தன்னுள்விளங்குந்தவமென்னசொல்லடிசிங்கி
தன்னைமறந்துதவத்திலிருப்பதுசிங்கா. ௨௬

என்னவிதமாகத்தன்னைமறப்பதுசிங்கி
யொன்றைப்பொருந்தியொடுங்கியிருப்பதுசிங்கா ௨௭

என்னவிதமாகவொன்றைப்பொருந்தலாம்சிங்கி அது
யெல்லாமறந்துயிருளாயிருப்பதுசிங்கா. ௨௮

ஒன்றென்றுசொன்னவுயிர்நிலையென்னடிசிங்கி அது
உன்னுளுதிப்பலமுன்னால்நினைவடாசிங்கா. ௨௯

கன்னியெழாதுகலந்திடாமெய்விடஞ்சிங்கி சிவ
முன்னியெழுந்தவுயிர்நிலையலலவோசிங்கா, ௩௰

எங்கும்மாகதபெரும்பொருளென்னடிசிங்கி அது
அங்கிங்குமெங்குமகண்டபெருவெளிசிங்கா. ௩௧

அண்ணினுமெண்ணுமழியாப்பொருளென்னசிங்கியிரு
கண்ணையுமூடவிருளழியாயப்பொருள்சிங்கா. ௩௨

ஓங்காரவுடலுக்குஆணியாரென்னடிசிங்கி அது
ஓங்காரமூலத்திலுள்ளொளியல்லவோசிங்கா. ௩௩

ஆணியாய்வந்தவரும்பொருளென்னடிசிங்கி முன்
தோணியசற்குருமுதனுமமல்லவோசிங்கா, ௩௪

இந்தபொருள்வந்தசேர்ந்தவழியடிசிங்கி அது
அந்தக்கதிமதிவந்தவழியடாசிங்கா. ௩௫

கத்தனொளிவுகலந்திடமெவ்விடம்சிங்கி வழி
யத்தநடனந்தானாடியதற்பரஞ்சிங்கா. ௩௬

உத்தமமப்பாருளக்குயிரெழுத்தென்னடிசிங்கி அது
நச்சவாடுநடுநிலையலலவோசிங்கா. ௩௭

எட்டெழுத்தாகவெழுந்தெழுத்தென்னடிசிங்கி அது
மட்டிலடங்காவடிவட்டகோணமேசிங்கா. ௩௮

அஞ்செழுத்தாகச்சமைந்தெழுத்தென்னடிசிங்கி அது
அஞ்சும்பொருந்தியஆகாயவட்டமேசிங்கா. ௩௯

அன்பதோராட்சரமதியநீசொல்லடிசிங்கி அது
வஞ்சமகாரநடுச்சுழிமூன்றுமேசிங்கா. ௪0

கற்பகவாசிகலந்திடமெவ்விடஞ்சிங்கி அது
உற்பனமூலத்தினுள்ளொளிவலலவோசிங்கா. ௪௧

சத்தம்பிறந்திடுஞ்சற்குருவேதடிசிங்கி அது
உற்றகவாசமுயிர்நிலையலலவோசிங்கா. ௪௨

கண்டுதொழுஞ்சிவகாரணமேதடிசிங்கி நம்மை
யுண்டுபடுத்தியயுள்ளொளிவானதேசிங்கா. ௪௩

எப்படிக்கண்டிறைவணங்கலாம்சிங்கி அது
நட்புடன்ரெண்டுநடுநிலைகாண்பதுசிங்கா. ௪௪

நடுநிலையானதைநாடுறதெப்படிசிங்கி அது
நாட்டந்தேட்டமோட்டமாட்டமொன்றாகினல்சிங்கா. ௪௫

தேட்டமுநாலுந்திருந்துறதெப்படி சிங்கி அது
திருவைப்பொருந்தியொருமித்திருப்பதேசிங்கா. ௪௬

ஒருமித்திருக்கின்ற வோரிடமெவ்விடம்சிங்கி அது
வொன்றுமிரவும் பகலு முற்றயிடம்சிங்கா ௪௭

இரவும்பகலுமொன் றனதுமெவ்விடம்சிங்கி அது
யெப்போதுமிருளா யிருப்பதுமூலையேசிங்கா ௪௮

இரவும்பகலும் பிறப்பிடமெவ்விடம்சிங்கி அது
யிருளிலுதித்துன்னி வநதததுமூலம்சிங்கா ௪௯

இரவும்பகலு மெழுந்திடமெவ்விடம்சிங்கி அது
யேகாந்தஉன்னலந் தேறியதாமரைசிங்கா ௫0

சாஃதி.

இரவும்பகலும் பிரிந்திடமெவ்விடம்சிங்கி அது
யெழுந்தருகோண மிடம்வலம்வாசியேசிங்கா ௬௧

இரவும்பகலும்நின்றுடியதெவ்விடம்சிங்கி அது
யெழுந்துநின்றுடுஞ் சுழிமுனை மண்டலம்சிங்கா ௬௨

இரவும்பகலு மிருப்பிடமெவ்விடம்சிங்கி அது
யீராறுமோடிய வோராணநான்கடாசிங்கா. ௬௩

இரவும்பகலு முதிப்பிடமெவ்விடம்சிங்கி அது
மேறுமெட்டங்கல மிருவிழிநடுநிலைசிங்கா, ௬௪

இரவும்பகலென்று யென்னத்தைசசொல்லலாம்சிங்கி அது
யிரவும்பகலிட பின்கலைவாசியேசிங்கா. ௬௫

இடகலைபின்கலை என்னத்தைச்சொல்லலாம்சிங்கி அது
இடகலைசந்திரன் பின்கலைசூரியன்சிங்கா. ௬௬

என்னத்தைச்சொல்லலாம் சந்திரன்சூரியன்சிங்கி அது
கலையும்பொருந்து நடுச்சுழிமுனையேசிங்கா. ௬௭

சந்திரன்சூரிய னென்றுனதெவ்விடம்சிங்கி அது
கலையும்பொருது நடுச்சுழிமுனை யேசிங்கா. ௬௮

என்னத்திலேபால மேறிநின்றுடுதுசிங்கி அது
உன்னுக்குளவுசி நடனப்புரவிமேற்சிங்கா, ௬௯

என்னவிதமாக வெடுத்திநின்றுடலாம்சிங்கி அது
ஏற்றவுமாற்றவு மிணையநின்றுடிப்பார்சிங்கா. ௭0

மாற்றிப்பிடிக்க மருந்தென்னசொல்லடிசிங்கி .
மாளாமல்மாண்டு மறந்துஇருப்பதேசிங்கா ௭௧

அட்டகெஜங்க ளறிந்திடமெவ்விடம்சிங்கி அது
எட்டுவிதமா யெழுதும்பலனடாசிங்கா. ௭௨

உற்றஞானப்பொரு ளுத்தியாய்ச்சொன்னதார்சிங்கி அது
உற்றமர்பீரு முகம்மதுரைத்ததுசிங்கா. ௭௩

ஞானரத்தினக்

முற்றிற்று.

# ஞானக்கு

சீர்மேவுஞான வடிவான பர
தேசிகன்சற்குரு தன்னருளால்
பார்மீதின்ஞானக் கும்மிப்பாடச்-சிவ
பாலன்கணபதி காப்பாமே. (க)

அம்பிகைவாலைப் பதம்போற்றி யரு
ளானந்தகும்மித் தமிழ்பாட
தும்பிமுகனுக் கிளையவனுஞ் சிவ
சுப்பிரமணியனுங் காப்பாமே. (உ)

நாலாம்வேதமு மோராறும் வெகு
நானுபேதமு நின்றுனை
மேலாய்போற்றிக் கும்மிப்பாடச் செந்தில்
வேலவன்றன்பதங் காப்பாமே. (௩)

தாரிலுயர்மது ராபுரியில் வாலை
சாமிசொல்லுங்கும்மிப் பாடலுக்கு
மேருவதனடி மூலமுக்கோண
விநாயகன்றன்பதங் காப்பாமே (௪)

ஆதியுமந்தமு மொன்ருகி ௳
ரண்டபிண்டமு மிரண்டாகிச்
சாதிபலபல வேருகி நின்ற
தத்துவங்கேளடி ஞானப்பெண்ணே. (௫)

தேகமானமலப் பாண்டம் அதிற்
சிற்பனம்வந்திடு முற்பனத்தை
யோகமெனுந்தமிழ்ப்பாடலுக்கு மன
மூவந்துகேளடி ஞானப்பெண்ணே. (௬)

மேலதோசித்த னொருவனுண்டாம்
வாசனிலேபேச வாயுமில்லை அந்த
மாப்பிள்ளைபெண்ணென்று ஞானப்பெண்ணே. (எ)

சாட்சியெனும்பிர்மா பிள்ளைக்கு மூல
சத்தியென்றொரு பெண்ணாசசு
சூட்சமகாரண மிரண்டினுக்கு நிலை
தூலநாமென்கிறாள் ஞானப்பெண்ணே. (அ)

ஊமையனென்றே யறிந்துக்கொண்டா ளந்த
ஆமைபேச்சல்லோ காமென்கிறாள்
சீமையையாளத் தூசங்கட்டினா ளந்த
சீமாட்டிதானடி ஞானப்பெண்ணே. (க)

பெண்ணரசானது ரத்தினமா மதைப்
பெண்ணென்றசொல்லவுங் கேள்வியுண்டோ
மண்ணையும்விண்ணையுங் கூட்டிப்பயிர்செய்த
மார்க்கத்தைக்கேளடி ஞானப்பெண்ணே. (க0)

பட்டணங்கட்டி மகராசிதுரை
பாங்குடன்செய்த வதிகாரச்
சட்டமுஞ்சொல்லத் தொலையாதே விதைச்
சற்றேகேளடி ஞானப்பெண்ணே. (கக)

அஞ்ஞூரஞ்ஞூர் வகுப்பாச்சா மதி
லஞ்ஞூரஞ்சு பிரிவாச்சாம்
அஞ்ஞூருக்கொரு வித்தாரச்சா மதற்
கானகுளமுண்டு ஞானப்பெண்ணே. (கஉ)

ஊரையடுத்து மலையுமுண்டா மதற்
குள்ளேயிருந்த நிலைக்காரர்
பேரையுரைக்க வினிகேளு மவர்
பெருமைதானென்னடி ஞானப்பெண்ணே. (கங)

## ஞானக்கும்மி.

தலைமன்னாரிலிருப்பவரா மந்தச்
சட்டையப்பிள்ளை செட்டையாராம்
நிலமுமானியமு மென்னவென்றுளந்த
நிசந்தெரியுமோ ஞானப்பெண்ணே. (௰௪)

கும்பகோணத்திலே யப்புபிள்ளை யவர்
கூட்டமற்றலவெகு வாட்டமென்று
செம்பாதிப்பங்கு கேட்டவர் தானியாயர்
தெளிவதெப்படி ஞானப்பெண்ணே. (௰௫)

மூலக்குடிவன்னித் தேவரைவரவர்
மூர்க்கமுந்தீர்க்கமு மார்க்கமுண்டோ
நாலுகரைபங்கு நாமென்கிறா ரிந்த
நியாயந்தெரியுமோ ஞானப்பெண்ணே. (௰௬)

காத்தவராய வகண்டனுக் குத்திசை
காவலுமற்ற விசாரணையும்
பார்த்துவருவது நாமென்கிறா ரிந்தப்
படிநிலைக்குமோ ஞானப்பெண்ணே. (௰௭)

ஆகாயமான பரஞ்சோதி யவ
ரஞ்சுக்கரைப்பங்குந் தன்னுக்குள்ளே
சேகரமாமென்றுஞ் சொல்லுறா ரிந்த
சேதியைக்கேளடி ஞானப்பெண்ணே. (௰௮)

அம்பலக்காரரு மூன்றுபேராம் பின்னு
மஸ்தகநாட்டுக் கணக்கனொன்றாம்
வம்புசெய்தாலந்த முன்னாளுப்படி
வகைதெரியுமோ ஞானப்பெண்ணே. (௰௯)

ஒன்பதுகூத்தரும் பங்காளி யெந்த
வூருக்குளூர்களு மப்படியாம்
[illegible]சேருவைக் காரருக்கு மவ
[illegible]னொருவனும் ஞானப்பெண்ணே. (உய)

கோயிற்குருக்க ளொருபார்ப்பான்றெப்பக்
குளத்தின்மேலே யவன்வீடு
தாவிக்கொண்டுதொடை தட்டுகிறானிலஞ்
சாருமோகேளடி ஞானப்பெண்ணே. (உக)

செட்டியொருவனும் பககாளி யதிற்
சேர்ந்தவனக மிகவோகஙி
கட்டியவராகனைக் கொண்டுவந்தால் காணி
யாட்சிசெல்லுமோ ஞானப்பெண்ணே. (உஉ)

காரியக்காரரோ வஞ்சுபேரா மவர்
காரியம்பாக்கவீ ரஞ்சுபேராம்
மாரீசக்காரர் சமாதிகண்மூன்றுபேர்
வார்த்தையைக்கேளடி ஞானப்பெண்ணே. (உங)

ஊழியக்கார ரனேகருண்டா மவர்க்
கும்பளஞ்சம்பள நிரம்பவுண்டாம்
பாளையககோட்டைக்குச் சாரிவைத்தா லிவர்
பதுங்குவாரடி ஞானப்பெண்ணே. (உச)

பாழூருக்கொரு மேன்மணியா மவன்
பார்த்தாற்சின்னப் பயல்காணும்
வேளூரானரைப் பங்குத்தன் முதல்
விற்றுக்கொடுக்கிறான் ஞானப்பெண்ணே.

ஆராறு குடியுமுண்டா மதி
லங்கியக்குடி முப்பத்தைந்துமுண்டாம்
ஓராறுபத்துக் குடிதனிலே யஃ
தொட்டுகுடியடி ஞானப்பெண்ணே. (உசு)

இத்தனைபேரு மிருந்தாலுமதி
லிரண்டேபேர்கள் சமுசாரி
அத்தனைபேரையுந் தள்ளிவைத்தார் பயி
ராரிடுவாரடி ஞானப்பெண்ணே. (உஎ)

ஒற்றைறொற்றை யெருதாரு மதி
லொன்றுபரம்புச சாலடிக்குங்
கற்றுடன்காரணங் கண்டாயோ ஞானக்
கண்கொண்டுபாரடி ஞானப்பெண்ணே. (உ௮)

இரண்டுகரைக்குடி மானியமா மதி
விட்டவிரையொட்டி ரட்டியுண்டாம்
பண்டுபழகின மேன்புள்ளிக்காரனும்
பார்த்துப்போயினான் ஞானப்பெண்ணே. (உ௯)

புள்ளிக்குறைச்சலும் வாராமன் முன்னே
போட்டபலனுமகை யாடாமற்
கொள்ளையிடச்சொல்லி யோலைவந்தா விதை
கொடுமைசொல்லடி ஞானப்பெண்ணே. (௩௰)

வந்தவிதியென் றிருந்தாலும் வசக்
கட்டுகிலவையுங் கேட்கிறான்
இந்தமகிமை யவன்றானோ விதற்
கென்னசுகமடி ஞானப்பெண்ணே. (௩௧)

தருகிச்சிக்கிடக்கிற பெட்டியிலே யேரித்
தண்ணீர்பாய்ச்சவுஞ் சொல்லுகிறான்
வரிகொடுக்கிற தில்லையென்றாற் பூசை
மாட்டுகிறானடி ஞானப்பெண்ணே. (௩௨)

ஊரிற்குடிய திருக்கவொட்டா னிருந்
தூழியஞ்செய்யவும் வேலைவிட்டான்
நீரமில்லையென்று சொன்னாலு மவன்
றெண்டம்பிடிக்கிறான் ஞானப்பெண்ணே. (௩௩)

அந்தவிருபத்தோ ராயிரத்திருநூற்
றுக்கலநெல்லுங் கண்டுமுதல்
வந்ததுண்டோவதின் மூன்றைத்தொருபங்கு
வாரம்பிடித்தாண்டி ஞானப்பெண்ணே. (௩௪)

மிச்சமிருந்தநெல்லுத்தொகையில் வாரம்
விண்ணுநோய்கொண்ட பேயனுடன்

அச்சுதன்சேயனுந் தூங்கக்கோனுனுமா
யழித்துப்பேப்பாட்டாரடி ஞானப்பெண்ணே. (௩௫)

நிலம்விற்ளோததுங் காணீரோவதிந்
செலவழிந்ததும் பாரீரோ
அலமந்து திரியாமலரு
ளானந்தஞ்சேரடி ஞானப்பெண்ணே. (௩௬)

எண்சாணீள மொருவீடா மதி
லெட்டொருபீற்றன் மலக்கூடாம்
பஞ்சாயக்காரரீ ரைந்துபேருந்தெய்வப்
பதியிதென்கிறர் ஞானப்பெண்ணே. (௩௭)

தேகமெனுஞ்சிவ வாலய மாமதிற்
சென்னிசிறுவாயிற் கோபுரமாம்
காகமன விரண்டுகொக்கோடுங்
கையாங்கேளடி ஞானப்பெண்ணே. (௩௮)

உண்ணுக்கென்ற கொடிமரமா மதிற்
கோபுரசந்திர புட்கரணி
அண்ணுக்கென்ற தலப்புறத்திற்கண்ட
தக்கினிதீர்த்தமாம் ஞானப்பெண்ணே. (௩௯)

நாற்பத்துமுக்கோண மண்டப மாமதி
நடுவிருக்குதாஞ் சிங்காரம்
பார்ப்பதுசக்கரக் கோட்டையிலே யிந்தப்
படியிருக்குதாம் ஞானப்பெண்ணே. (௪0)

பீடமிருப்பது மையத்திலே பலி
பீடமிருப்பதுங் குய்யத்திலே
மாடமிருந்த சிவாலயத்தின் மணி
விளக்கிருக்குது ஞானப்பெண்ணே. (௪௧)

இப்படியான திருக்கோவி லதற்
கெட்படிவாய விருக்காதோ
அப்படியென்று தெரியாமற்றெரிந்
தலைகிறாரடி ஞானப்பெண்ணே. (௪௨)

பூட்டைத்திறப்பதுங் கையாலேமனப்
பூட்டைத்திறப்பது மெய்யாலே
வீட்டைததிறக்க முடியாமல் விட்ட
விதியிதென்கிறார் ஞானப்பெண்ணே. (௪௩)

வாசலிலேயொரு மேல்வாச லந்த
வாசலிலேசிறு வாசலுண்டு
நேசமுடன்றிரு வாசலிற்பூட்டு
நெருக்கம்பாரடி ஞானப்பெண்ணே. (௪௪)

அகூரமாமௌ ஞகூரமாமது
வானல்நல்ல திறவுகோலா
முத்திதமாகத் திறந்தாலேயந்த
வுசசிவழிகாணும் ஞானப்பெண்ணே. (௪௫)

கண்ணுலேமனக் கண்ணுலே யதைக்
கண்டாலேவழி யுண்டாகும்
பெண்ணைசதனே யடுக்காமல் வழி
பேணிப்பாரடி ஞானப்பெண்ணே. (௪௬)

பார்ததுநடப்பது மேல்வாச லந்தப்
பாதையறிவது மெவ்வாறு
மாத்திரைநேரம் பிரியாமற் பாதை
மார்க்கங்கேளடி ஞானப்பெண்ணே. (௪௭)

எருக்கிடந்த குழிதாண்டி யதி
லிரண்டுவிரற்கடை மேற்றூண்டி
கருக்கிடைக்கு மடையான மதைக்
கண்டுகேளடி ஞானப்பெண்ணே. (௪௮)

மாயனரண்மனை காணீரோ வன்னி
மரமிருப்பதுந் தோணீரோ
சேயமதுகடந் தப்பாலே யறு
சேர்ணப்படியடி ஞானப்பெண்ணே. (௪௯)

தோணத்தினின்று மயங்காதே சுழி
காற்றையடக்கிச் சிணுக்காதே

வீணுக்கலைந்து தியங்காதே நூல
வேட்டைத்தள்ளடி ஞானப்பெண்ணே. (௩௰)

நூலத்தைவிட்டு விடாயாகிலதிற்
சூட்சத்தைக்காண முடியாது
பாலத்திலேறி நடந்தாக்காற் பெரும்
பாதையிதல்லவோ ஞானப்பெண்ணே. (௩௧)

பாதையானபெரும் பாதைகிட்டப்
பட்டணமுண்டொரு வட்டமதாய்
நாதசங்கீதமுங் கேட்குதடி தெய்வ
நாயகன்சந்நிதி ஞானப்பெண்ணே. (௩௨)

சந்நிதியென்னடி கண்டதுண்டோ கண்டாற்
றத்துவம்பேசத் திறமுமுண்டோ
முன்னே முப்பாழுங் கடப்பதுண்டோ வதின்
முச்சுடருண்டடி ஞானப்பெண்ணே. (௩௩)

முச்சுடர்வட்டமே சக்கரமா மது
மூக்குநுனியது சுழிமுனையா
மச்சுடர்வட்டத் திருந்தவனே குரு
வானந்தநந்தியா ஞானப்பெண்ணே. (௩௪)

நந்தியிருந்தது வன்னிவட்ட மதி
ஞட்டம்புருவமத்தி யானதிட்டஞ்
சந்திரனுங்கதிர் சூரியனுமந்தத்
தலத்தினின்றனர் ஞானப்பெண்ணே. (௩௫)

நாதவிந்தல்லவோ நால்யோனி தச
நாதவிந்தல்லோ வெழுதோற்றம்
நாதவிந்தாலுட லுடலுமுயிரும்பர
நந்தியைப்போற்றடி ஞானப்பெண்ணே. (௩௬)

விந்துவிருந்த தலந்தனிலேகுரு
நந்தியிருந்தார் கொலுவாகி
சிந்தைதெளிந்து மகாரம்வைத்தா லந்தச்
சிமோனைக்காணலாம் ஞானப்பெண்ணே. (௩௭)

சீமான்கிட்ட வடுத்தாக்கான் மேலேச்
சீமைகமக்குக் குடியாச்சு
ஆமாமென்று கும்மிப்பாடி யரு
ளானந்தஞ்சேரடி ஞானப்பெண்ணே. (௫௮)

ஆனந்தமான தலந்தானே அது
அத்வீதமான தலந்தானே
தானந்தமான சதாசிவத்தைப் போற்றித்
தாண்டிக்கும்மி யடியுங்கடி. (௫௯)

ஞானமாமாயிரத் தெட்டிதழ்ப்பீடம்
நாட்டமாஞ்சந்திர ளுர்வீடு
மோனமிருந்த மகாரமௌனத்தை
மூட்டிகும்மி யடியுங்கடி. (௬௰)

குண்டலிவாசி யகாரமடி பிடர்க்
கண்டமதிலே யகாரமடி
உண்டெசுழியின் மகாரம்வைத்தாற் சிவ
யேகமிதல்லவோ ஞானப்பெண்ணே. (௬௧)

ஓங்காரமான பிரணவத்தால் எங்கு
முயர்ந்தசோம கலைசிறத்தாள்
றீங்காரமான பராசத்தியை நீங்கள்
சேர்ந்துகும்மி யடியுங்கடி. (௬௨)

பூரகமுப்பத் திரண்டாகு மனப்
பூரணகும்ப மிரட்டியதாம்
கூறவேரேசக மெண்ணிரண்டா மந்தக்
குறிப்பறிந்துகொள் ஞானப்பெண்ணே. (௬௩)

பிங்கலையாவ திரேசகத்தை வளர்
பூரகந்தன்னி லிடததாது
கஙகளை நந்தியிற் கும்பிக்கவே சிவ
நாட்டமிதல்லவோ ஞானப்பெண்ணே. (௬௪)

அறிந்துகொள்ளு மெழுத்தோடேபௌ
ரணைமுதலமா வாசிமட்டும்

மறந்தடாமற்செய் மாத்திரையின்படி
வாசிவசமாகும் ஞானப்பெண்ணே. (சுரு)

காலாலேகன லேற்றங்கடி சுழி
மேலேகொண்டமு தூட்டுவெகடி
மூலாதாரத் தலங்கேசரமென்று
முழங்கிக்கும்மி யடியுங்கடி. (சுசு)

சாந்துகொள்ளடி கேசரத்தைமுதற்
றன்னையறியலாந் தானாகக்
கூர்ந்துமூலக் கணபதிபாதத்தைக்
கும்பிட்டுக்கொள்ளடி ஞானப்பெண்ணே. (சுஎ)

நவ்வெழுத்தேபிரம னாகுமதில்
நாரணன் மவ்வெழுத் தானனே
சிவ்வெழுத்தேதெய்வ ருத்திரனின்னுஞ்
செப்புவன்கேளடி ஞானப்பெண்ணே. (சுஅ)

செப்பவேவவ்வு மகேசுரனும்வட்டஞ்
சேர்ந்தவுபசாரஞ் சதாசிவனும்
தப்பிலாவைந்தெழுத் தாலேசராசரந்
தங்கியிருந்தது ஞானப்பெண்ணே. (சுசு)

வாலையினட்சர மூன்றாகும் அதை
வாய்கொண்டுசொல்வ ரார்காணும்
மேலொன்றுங்கீழொன்று மத்திமமுங்கூட்டி
விரைந்துபாரடி ஞானப்பெண்ணே (எ0)

விரைந்துசொல்லுவேன் மூன்றெழுத்தாற் சதம்
விரிந்துதானாயி ருண்டாச்சு
தெரிந்துகண்டவர் தங்களுக்காவலே
தீட்சையிலல்லவோ ஞானப்பெண்ணே. (எக)

தீட்சையெனுஞ்சிவ சக்கரத்தின்மையந்
தேவியெழுத்தை நிலைநிறுத்தி
காட்சியுடன்சிவ பூசைசெய்தாற்சித்தி
கைவசமாமடி ஞானப்பெண்ணே. (எஉ)

கள்ளுண்டுதள்ளுண்டு கில்லாதேயபின்
கஞ்சாவுறக்கமுங் கொள்ளாதே
உள்ளுண்டுசோமக் கலையாதிபானத்தை
யூட்டிக்கும்மியடியுங்கடி. (எங)

கும்மியடிப்பெண்கள் அம்பலத்தையரைக்
கூட்டியமுதங் குடியுங்கடி
அம்மென்றுமும்மென்றுஞ் சொல்லாமனின்ற
அத்தவிதம்பாரடி ஞானப்பெண்ணே. (எச)

அத்விதமாவத்துக் காதியடிமதி
ஆயிரத்தெட்டிதழ் பூசைபண்ண
முத்திதருஞ்சோமப் பாலையனுதின
மூட்டிக்கும்மி யடியுங்கடி (எரு)

மூட்டுவதென்ன திரிகோணவட்ட
மூலத்திற்குண்டலி வாசியினால்
காட்டுவேன்பூரண காலைகட்டினு
வியாயமிதல்லவோ ஞானப்பெண்ணே. (எசு)

கட்டிக்கொள்விந்துவைத் தள்ளாதே சுழிக்
காற்றையடக்கிப் பொருதாதே
சுட்டிமனப்பொரு தாருதேகாமச்
சோம்பலைத்தள்ளடி ஞானப்பெண்ணே. (எஎ)

சோம்பலுந்தூக்கமு மாகாதே அன்ன
சுகியுஞ்சோகமுங் கொள்ளாதே
சாம்பசதாசிவ நாட்டத்திலேநின்று
சார்ந்துகும்மி யடியுங்கடி. (எஅ)

கைவசமாமது சஷ்டிவித்தை ஞானக்
கற்பமும்வந்து லபிக்குமடி
தெய்வமிவரென்று சொன்னாரேகல்ல
சித்தருமுத்தரு ஞானப்பெண்ணே. (எகூ)

யோகத்துக்காதி யுமைநீட்சைமற்ற
யோகத்துக்கெல்லா முதற்றீட்சை
போகத்தைக்கைவிட லாகாதேசத்திப்
பூசையைவேண்டிக்கொள் ஞானப்பெண்ணே.

வேண்டிக்கொள்விந்து முதனுதஞ்சத்தி
மேவுஞ்சிவத்துட னேபரமாம்
தாண்டிக்கொளிந்த வகையாறும்யோக
சாதகசாக்கிரம ஞானப்பெண்ணே.

சாக்கிரம்விந்துக்கு மேலண்டமாமதைச்
சார்ந்திநிற்குண நிஷ்களந்தான்
பார்க்கினிராதா ராமலத்தை அதைப்
பாராவிடமந்தமாம் ஞானப்பெண்ணே.

அந்தமடியிந்த மேலாறுங்கண்டே
ஆறறிவாரடி ஞானவழி
சிந்தைதெளிந்த பெரியோரைக்கண்டு
சேவித்துக்கும்மியடியுங்கடி.

சேவிப்பதுந்தவ நந்தியடியோக
மாய்நிற்பதுவிந்து நாதமடி
ஆவிக்கிசைந்த சதாசிவசாக்கிரம்
அவ்விடமாமடி ஞானப்பெண்ணே.

அவ்விட்டேயுவ்விட்டே மேற்சுழிநிற்குமடி
அங்கியைவிட்டுக் காலாலே
மவ்விட்டுநாதவிந் துட்பொருளைக்கண்டு
வாழ்த்திக்கும்மி யடியுங்கடி

மூழக்கமென்ன பிராணுயமஞ
மூட்டுச்சமாதியி லிரேசகத்தை
விளக்குமாகு மிரவிதாந்திரித்தும்
வேண்டிக்கும்மி யடியுங்கடி.

பார்க்குஞ்சுழிமுனை காணுரேயது
மூக்குநுனியென் றறியாரே

மார்க்கமறிந்த பெரியோரைக்கண்டு
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. (அஎ)

வாழ்த்தியடிபெண்ணே தேசாந்தைவினை
மாற்றியடிபெண்ணே பூரணத்தை
அர்றுமகாமிய சஞ்சிதத்தை
தொலையைத்தொலைத்துக் கும்மியடியுங்கடி. (அஅ)

பாசமற்றவிடம் கேசரமாமொரு
பாதியினின்றிட யோகமுமாம்
கேசமற்றார்பிர்ம ஞானசமாதியு
நிருவிகற்பமாம் ஞானப்பெண்ணே. (அக)

கற்பமடியிது மெய்யாகுமற்றைக்
கர்மமெல்லாமிக அற்பமடி
தற்பரானந்த சதாசிவமோனத்தைச்
சார்ந்துகும்மி யடியுங்கடி. (கo)

பாசத்தைச்சொல்லு முடலாகஅந்தப்
பசுவைச்சொல்லு முயிராக
கேசத்தினிற்ப தியாதுபிர்ம
நிஷ்டையென் பாரடி ஞானப்பெண்ணே, (கக)

தேகதுக்காதியா மைம்பூதமற்றைச
செயலுக்காதியாம் விட்சேபம்
மோகத்துக்காதியா மாயையின்னு
முழுதுங்கேளடி ஞானப்பெண்ணே. (கஉ)

இன்னமுண்ட. வியாஷ்டிருதற்கும்
இரணியகற்பன் விஷ்ணுவுக்கும்
மின்னியவிராட புருடனுக்குமின்னு
மேலுண்டுசைதன்யம் ஞானப்பெண்ணே. (கங)

சைதன்யவஸ்துவே பிரமமடிஅந்த
சாட்சிக்குப்பிரதி பிம்பமடி
மெய்கின்றசுத்த வறிவாளுல்பிரதி
பிம்பத்தைதன்னலாம் ஞானப்பெண்ணே. (கச)

ஆமடியிந்தப் பதந்தானேகண்டா
லாதியுமந்தமு நீதானே
காமடிவாசிக் குதிரையினுன்மிக்க
நல்லகதியடி ஞானப்பெண்ணே. (௧௫)

சாதிகுதிரை வலுவேகஞ்சரு
தாருயிருக்கின்றான் மேலாக
வீதிக்குவீதி சாரிவைத்தாற்பரி
வேடிக்கைபார்க்கலாம் ஞானப்பெண்ணே. (௧௬)

கட்டுபடாதந்த வச்சமட்டம் அது
காலோபன்னிரண் டங்கையினால்
எட்டுகையிற்றினாற் கட்டிக்கொண்டாலிது
மட்டுப்படுமெடி ஞானப்பெண்ணே. (௧௭)

கட்டுப்படுமோ மலவாயில்கடு
மையத்தின்குண்டலி வாசியினால்
எட்டையுகாலையுங் கட்டியேபோற்றிடி
லேறிநடத்தலாம் ஞானப்பெண்ணே. (௧௮)

சூட்சக்குதிரை யடங்காது சுழிக்
கோட்டைக்குட்செல்ல முடியாது
மூச்சக்காமிரங் காதவழிமிக
மூர்திநடக்குதாம் ஞானப்பெண்ணே. (௧௯)

குதிரைகட்டிய லாயத்திலேமனக்
கோட்டையிலேசந்தைப் பேட்டையிலே
எதிரிதான்வந்து தட்டுகிறானதை
யேதென்றுகேளடி ஞானப்பெண்ணே. (௨௰)

காமனவருக்கு மூத்தவனுமவன்
கற்றிடும்வித்தைகள் மெத்தவுண்டாம்
தாமதமான குரோதனும்லோபனுந்
தம்பியாங்கேளடி ஞானப்பெண்ணே. (௨௧)

மோகமதமிரண்டு பிள்ளைகளாமொரு
மூர்க்கமகசியக் காரனுமே

சேகரவீரஸை டம்பனுஞ்சம்பனுஞ்
சிநேகிதமாமடி ஞானப்பெண்ணே. (௬௨)

சிநேகிதனுக்கேற்ற வுறவாளிபொல்லாத்
தீயவனுமோ ராங்காரி
அநேகத்தைச்செய்ய மதியில்ரோஷனு
மத்தைமகனடி ஞானப்பெண்ணே. (௬௩)

பெண்ணேகேளு பதின்மூன்று
பேர்களுண்டு பகையாளி
ஒன்றையொன்று வசமாஞலவ
ரொடுங்குவாரடி ஞானப்பெண்ணே. (௬௪)

ஒடுக்கமில்லை யிவராலேபல
னோட்டமெல்லாமனக் கோட்டையிலே
படுகளத்துக்கு மேய்ந்துவரப்பசு
பற்றுகிறாரடி ஞானப்பெண்ணே. (௬௫)

பாம்பிருக்குது புற்றுக்குள்ளே சக
பந்தமிருக்குது நெஞ்சுக்குள்ளே
வீம்பையடக்கி யுயர்ந்தாக்காற் பரி
வேடிக்கைபார்க்கலாம் ஞானப்பெண்ணே. (௬௬)

பித்துப்பிடித்த மனக்குரங்கு வெறிப்
பேயும்பிடித்துக்கொண் டாட்டமிட்டால்
அத்தையடக்க மருந்துசெய்தாற் பரி
யன்றுநடத்தலாம் ஞானப்பெண்ணே. (௬௭)

நடத்தலாமே மோனவாசி ஒரு
நாலேந்துபீத்தலை மூடாமல்
திடத்தினன் மனஞ் சித்தனுற்சித்தக்
தெளிந்துகொள்ளலாம் ஞானப்பெண்ணே. (௬௮)

தெளிந்தசித்தகம் பூட்டியதிற்சேணத்
தேறுமறிவையதிற் சேர்த்துக்
குளிர்ந்தஞான வைராக்யக்குறடா
கொண்டுமொட்டடி ஞானப்பெண்ணே.

மூலத்தெருவி லொருபாச்சலந்த
முச்சந்தவீதியி லோர்பாய்ச்சல்
மேலைத்தெருவி லொருபாய்ச்சற் பரி
வேடிக்கைபார்க்கலாம் ஞானப்பெண்ணே. (௱௰)

இந்தவிதங்க ளறியாமன் மணி
மந்திரமென்று திரியுகின்றார்
அந்தரமான வெழுத்தறிந்தால் மணி
மந்திரமல்லவோ ஞானப்பெண்ணே. (௧௧௧)

மௌனமந்திரங் களினாலேதங்கள்
வாய்தனை மூடித் திரிவார்கள்
புவனசாரம் புசிப்பார்க்குமதி
போசனமாகுமோ ஞானப்பெண்ணே. (௧௧௨)

தாயென்றுசொல்லுவார் சொற்பனத்தில் காம
சன்னதம்வந்தா லினைப்பாரோ
வாய்கொண்டுவேதம் படித்தாலுஞ்சுத்த
மௌனந்தங்குமோ ஞானப்பெண்ணே. (௧௧௩)

தாடிவளர்த்துச் சடைவளர்த்தானல்ல
சன்யாசியென்றொரு வேடமிட்டு
ஓடித்திரிந்த புலையாட்டையிங்கே
யொப்புவதாரடி ஞானப்பெண்ணே. (௧௧௪)

பேசாதிருக்கு மிடம்பார்த்துஅதைப்
பெற்றேயிருப்பது மந்திரமாம்
ஆசானென்றுப தேசமிட்டாற்குரு
வல்லவென்றுகும்மி யடியுங்கடி. (௧௧௫)

சொற்குருவாலே கதியாமோபொய்யைச்
சொல்லுவார்தங்க ளுறவாமோ
சற்குருவானவ ரைச்சேர்ந்தேயவர்
தன்சொல்லைக்கேளடி ஞானப்பெண்ணே. (௧௧௬)

நானென்றவாணவம் பேசார்களல்ல
நாடென்றுங்காடென்றுஞ் சொல்லார்கள்

தானென்றியாவையுங் கண்டாரே நல்ல
சற்குருவாமடி ஞானப்பெண்ணே. (௧௧௭)

குருவிருப்பது முள்ளத்திலேமன
கோணலறுப்பதுந் தன்னுக்குள்ளே
பொருளிருப்ப தறியாமற்புடம்
போடுவதெப்படி ஞானப்பெண்ணே. (௧௧௮)

வாதஞ்செய்ய வறியாமல் ரச
வாதஞ்செய்கின்றே மென்றுசொல்லிச்
சூதங்கெந்தி புடத்திலிட்டாலதிற்
சொர்ணம்விளையுமோ ஞானப்பெண்ணே. (௧௧௯)

லிங்கமுருக்க வலைவார்கள்சாதி
லிங்கமிருப்ப தறியாமல்
வங்கமுந்தங்கமுஞ் சேர்த்துருக்கினாற்
பங்கமிதல்லவோ ஞானப்பெண்ணே. (௧௨௰)

பாஷாணங்குகை தன்னில்வைத்துவெள்ளைப்
பாலாலூட்டி குகைமூடி
யீசானியப்புட மிட்டாலுமதி
லிருப்பதென்னடி ஞானப்பெண்ணே. (௧௨௧)

காரணமானது காரியமாமதைக்
கட்டவறியார் முழுமூடர்
பூரணமென்று திரிந்தாலுமதிற்
புண்ணியமுண்டாமோ ஞானப்பெண்ணே. (௧௨௨)

முப்பூவென்று திரிவார்களந்த
முப்பூவந்த வகைகாணார்
அப்பூவென்று மறிந்தாக்காற் சித்தி
யாமென்றுகும்மி யடியுங்கடி. (௧௨௩)

காரத்தைக்கட்ட வறியார்கள் கழிஞ்
சாரத்தைநீற்றினஞ் செய்யாமல்
வீரத்தைப்பூரத்தைச சேர்த்ததினாலது
வீணல்லவோசொல்லு ஞானப்பெண்ணே. (௧௨௪)

கோரவித்தையை யறியாமல்லோக
வேஷத்தினின்று மலைவார்கள்
கோசபீச மறிந்தாலேவாதய
கேசரமாமடி ஞானப்பெண்ணே. (௧௨௫)

வாதத்திறவுகோல் காணாரே பஞ்ச
பூதச்சரக்கையுந் தோணாரே
யேதுக்குகண்புகைந் தூதுகின்றாரிதை
யேதென்றுகேளடி ஞானப்பெண்ணே. (௧௨௬)

தூருசுசன்ன முடிந்தாச்சு அதைச்
சோதிக்கவெட்டரை மாற்றாச்சு
பொருளைச்சொல்லிப் பணம்பறிப்பாரிவர்
பொய்க்குருவல்லவோ ஞானப்பெண்ணே. (௧௨௭)

கவனகூத முடிந்ததென்பார் ஊசிக்
காந்தத்தைக்கிண்ணமுஞ் செய்தோமென்பார்
பொருளைச்சொல்லிப் பணம்பறிப்பாரிவர்
பொய்க்குருவல்லவோ ஞானப்பெண்ணே. (௧௨௮)

பிழைக்கமுத்தி யறியாமற்சென்ம
பூர்வக்கியானமுந் தெரியாமற்
மழையைத்தின்று சருகாகித்
தயங்குகிறாரடி ஞானப்பெண்ணே. (௧௨௯)

நயங்கியென்ன பலனுமோ மனஞ்
சாதித்துநிற்கத் திறமாமோ
மயங்கிடாதே வழலைமகத்துவம்
வருவதெப்படி ஞானப்பெண்ணே. (௧௩௦)

உப்பையறிந்தவ னேவாதி சகத்
துப்பையொழித்தவ னேயோகி
நப்பிலேயேபூமி காதமகிமையைச
பார்த்துபாரடி ஞானப்பெண்ணே. (௧௩௧)

வீட்டிலிருக்கு தொருமூலம் வெளி
காட்டிலிருக்கு திருமூலம்

மாட்டிலிருக்கும் பெரியோர்க்கு ரச
வாதமிதல்லவோ ஞானப்பெண்ணே. (கஙஉ)

தோணுதென்ற சரக்கெடுத்துக்கருஞ்
சூரகுகைரயில் வைத்தெடுப்பச்
சாணன்கண்ட பொருள்போலே சித்தி
தானென்றுகும்மி யடியுங்கடி. (கஙங)

நெல்லியிருக்குது காட்டுகுள்ளே கரு
நெல்லியிருக்குது வீட்டுக்குள்ளே
கொல்லிமலைக்குத் தரித்தாலுங் குரு
கொண்டுவருவாரே ஞானப்பெண்ணே. (கஙச)

காயம்பட்டிக் குளத்துக்குள்ளே வெள்ளை
காசாம்வேரு முளைத்திருக்கும்
வாயாற்றின்று நிமிர்ந்தாக்கா லுடல்
மாயாதல்லவோ ஞானப்பெண்ணே. (கஙரு)

கற்பநிலையறிர் தெண்ணமல் வெறிக்
கஞ்சாவுண்டு விழிப்பார்கள்
அற்பர்குகைமலை சென்றாலும்வஸ்து
வறியலாகுமோ ஞானப்பெண்ணே. (கஙசு)

கொங்கணர்சொன்ன கடைக்காண்டமதிற்
சங்கையறிவது பிர்மாண்டம்
எங்கள்குரு சட்டமானியா
ரிருநூறம்பாரடி ஞானப்பெண்ணே. (கஙஎ)

நூறிலுரைத்தது மெய்ஞ்ஞானந் திரு
மூலருணர்ந்தது வேஞானம்
பூரணகும்ப முனிசொன்னசூத்திரம்
பூட்டகம்பாரடி ஞானப்பெண்ணே. (கஙஅ)

தீட்சையின்மச்ச முனிதீட்சை யவர்
செப்பினஞான மொருநூறும்
தாழ்ச்சிவாரது பெரியோரைக்கண்டு
காடசிகேளடி ஞானப்பெண்ணே. (கஙகூ)

## ஞானக்கும்மி.

ரேசகபூரக கும்பத்தால்வாசி
நேரிட்டுச்செய்வது மாசையடி
நேசமாகிய வத்விதமர்மத்தைக்
கிட்டிக்கும்மி யடிபுங்கடி. (௧௪௰)

உப்பைவிடுவது மாசையடியன்ன
மோர்பொழுதுண்பது மாசையடி
செப்பவொண்ணாத மனோன்மணித்தேவினைச்
சேர்ந்துகும்மி யடியுங்கடி. (௧௪௧)

வாசலிலேயொரு மேல்வாசலந்த
வாசலிலேசிறு வாசலுண்டு
நேசமுடன்சிறு வாசலிற்பூட்டி
நெருக்கம்பாரடி ஞானப்பெண்ணே. (௧௪௨)

தேசங்கள்போவது மாசையடிகுல
தெய்வமுண்டென்பது மாசையடி
நேசமெம்பிர்ம ஞானசோதியை
நேர்ந்துகும்மி யடியுங்கடி. (௧௪௩)

சமயபேதமு மாசையடி கங்கா
ஸ்நானபூசையு மாசையடி
மமதையற் றிருக்கின்றமமதையை
வாழ்த்திகும்மி யடியுங்கடி. (௧௪௪)

பால்கரவாப்பசு தள்ளுங்கடிபதி
பாசத்தையும்விட்டுத் தீருங்கடி
மேல்விளங்கிய தற்பரசோதியை
வேண்டிகும்மி யடியுங்கடி. (௧௪௫)

தத்துவகுப்பையைத் தள்ளுங்கடிவேத
சாஸ்திரப்பொததலை மூடுங்கடி
முத்திதருஞான வஸ்துவைவாவென்று
மூட்டிகும்மியடியுங்கடி. (௧௪௬)

ஆறாதாரமுந் தொல்லையடி யதற்
கப்பாலேயொன்று மில்லையடி

சீராய்நின்ற நிலைபார்த்துபெண்கள்
சேர்ந்துகும்மி யடியுங்கடி. (கசஎ)

சித்தர்சொற்படி சித்தாந்தங்கண்டு
தெளிந்துகொள்ளடி வேதாந்தம்
தத்துவமாகிய வுற்பத்தி சூக்குமச்
சார்புகேளடி ஞானப்பெண்ணே. (கசஅ)

சார்புதானென்னடி வேதாந்தஞ்சொல்லுந்
தத்துவந்தானிவ் வகையுடனே
காரணாதி யவஸ்தைநிலைகளின்
கணக்குரைக்கிறேன் ஞானப்பெண்ணே. (கசக)

உரைக்குந்தத்துவ நாலேழிற்கண்
டோதுஞ்சித்தரு நாலாறும்
மறைக்குட்சொல்லிய சித்திருகாலாகு
மகிமைபாரடி ஞானப்பெண்ணே. (கருய)

மகிமையாகிய தொம்பதமா மதில்
வந்தவுபாதி யுணர்த்துகிறேன்
தகைமையென்னமுன் சொன்னவசித்திரு
தன்செயல்கேளடி ஞானப்பெண்ணே. (கருக)

வாசன்மிகுந்த வுடம்போடுபிராண
வாயுவோடிந்திரிய மானதொன்று
காசலையாமதி சேர்ந்தவளர்ந்த
காரணாலடி ஞானப்பெண்ணே. (கருஉ)

காரணமென்ப திவைபோமும்வந்து
கலந்ததாமடி தொம்பதத்தைத்
காரணதொம்பத மானதுரியத்திற்
றன்னுடலாச்சுதா ஞானப்பெண்ணே. (கருந)

தன்றூலமாகிய சாக்கிரத்தைத் தன
தாகவிருந்திடு மாத்துமற்கும்
பின்சொல்வதாம்விஸ்வ னென்றபிமானப்
பேரல்லோசொல்லடி ஞானப்பெண்ணே. (கருச)

பேர்பெறுமெந்தா முபாதியுடன் கூடப்
பெற்றிடுஞ்சம் சொற்பனத்தின்
சார்பிலிருந்த துரியர்க்குநாமமுஞ்
சைதனுமடி ஞானப்பெண்ணே. (கருரு)

ஆகும்பிராணனல் வாயுவுடன்கூடி
யடங்கிமூலத் துடன்சேர்ந்து
சேகரமாவந்த நாததுரியத்தை
சேர்த்திடிற்காரண தேகமடி. (கருசு)

சேர்ந்தவவத்தை சுழுத்தியடி யதைச்
சேர்த்தவனும்பிராக்ஞ னுகுமடி
கூர்ந்தமூன்றையுங் கண்டதுரியத்தைக்
கும்பிட்டுகும்மி யடியுங்கடி. (கருஎ)

கும்பிட்டுத்தொம்பதச் சித்தார்த்தங்கண்டு
கூறியஞ்ஞயமிதுபோல
வம்பிட்டுத்தற்பத மானவிவேகத்தை
யறியச்சொல்லுவேன் ஞானப்பெண்ணே. (கருஅ)

அறிவதென்னடி தொம்பதமாம் பொரு
ளானவுபாதியு மானதுபோற்
சருவதற்பர மானபொருளுக்குத்
தன்னுடல்சிவன் றுரியமடி. (கருகூ)

சர்வஞ்ஞன்சருவக் காரணுக்கு சரு
வேந்திரியாமிசர் வேஸ்வரனுஞ்
சர்வசிருஷ்டி சர்வஸ்திதிசர்வ
சங்காரனும்போம் ஞானப்பெண்ணே. (கசுய)

போனதென்ன விலையேழுமிகப்
பேசிடில்வாதம் துரியமடி
தோராவுபாதியைப் பெற்றதினுன் முக்தி
ஞானமுண்டாச்சு ஞானப்பெண்ணே. (கசுக)

ஞானச்சிவ னிலையேழுங் கண்டு
சொல்லும்பாலுக் குடலாச்சு

சாஸ்வதமென்ற தானத்திறசாயா
சிரகமென றுபேர் ஞானப்பெண்ணே. (௧௩௨)

சாக்கிரந்தன்னைத்தா னென்றுசொல்லியப்பால்
தானபிமானி தருந்தாக்காற்
சேர்க்கவிராட்டெனச சொல்லுவார்காமக்
தெரிந்துக்கொள்ளடி ஞானப்பெண்ணே. ௧௩௩

தெரிந்தமூன்ற னுபாதியுமாமதிற்
சேர்ந்தபரன்பர சொப்பனமாம்
பிரிந்திடாதபி மானனிரணிய
கற்பனென்பாரடி ஞானப்பெண்ணே. (௧௩௪)

பாருமிதிலொரு பாதியுடன்
பானுக்கல்லவோ பார்சுழுத்தி
சேரும்பொழுது வியாகிருதனெனச
சிந்தையிற்காணடி ஞானப்பெண்ணே. (௧௩௫)

காணடிதற்பத சத்தார்த்தமதைக்
கண்டுதெரிந்த வகைபோல
யூணடிஞான சிவபதார்த்தத்தி
லுண்மையைக்கேளடி ஞானப்பெண்ணே. (௧௩௬)

உண்மையான்தற்பர நற்றுரியங்கண்டு
முற்றும்பாராதொரு தோஷமதால்
தண்மைச்சிவபத சுத்தனுக்குப் பரன்
தன்னுடலாச்சுது ஞானப்பெண்ணே. (௧௩௭)

ஓதும்பரம்விஸ்வ கிராசமடி யுப
சாந்தமெனும்வகை மூன்றிலொன்றைச
சாதனை செய்த சிவத்துக்கல்லோபர
சாக்கிரமாகுமே ஞானப்பெண்ணே. (௧௩௮)

ஆகும்பொருள்சிவ சாக்கிரத்தை யபி
மானித்திருந்த சிவதுரியம்
சேகரமாயிடிற் சிற்சொலிதையென்று
செப்பிடும்வாக்கிய ஞானப்பெண்ணே (௧௩௯)

வாக்கியமாய்விஸ்வ கிராசமடி யந்த
மார்க்கமென்னசிவ சொப்பனத்தைப்

பாக்கியனபிமா னிடத்திற்பிரசா
பத்தனென் றுசொல் ஞானப்பெண்ணே (கசம)

சொல்வதுமென்ன வுபசாந்தஞ்சிவ
சுழுத்திதானென் றிருந்தாக்கால்
நல்லதுபொற்புறு சாந்தனென்றுலது
நாமமதல்லவோ ஞானப்பெண்ணே. (சுளக)

நாமச்சிவதுரி யத்திலடி யபி
மானமிழந்து தனித்ததினுல்
சேமமிதல்லவோ வாதிதுரியத்தி
னிலைமைகண்டிலோ ஞானப்பெண்ணே. (சுளஉ)

கண்டறியாதது முற்றறியமதைக்
கண்டேசுழன் றுமே லானதடி
பண்டேபிர்ம வானந்தசொரூபத்தைப்
பணித்துகும்மியடியுங்கடி. (சுளங)

பணிந்துஞான மதுதாண்டி பர
மானந்தமான திதுதாண்டி
துணிந்துபாரு மானந்தசொரூபனைத்
தொழுதுகும்மி யடியுஙகடி. (சுளச)

தொழுதுகொள்ளுஞ் சுகசிவ பர
சுத்தப்பொருளு மிதுதாண்டி
பழுதிலாத சொரூபக்குருவுடைப்
பாதமிதல்லவோ ஞானப்பெண்ணே சுளரு

பாதமாகிய தொம்பதமாம் அதிற்
பாதமுத்தற்பத மானதடி
பேதவுபாதி யவத்தைகளும் பல
பேர்களுமானது ஞானப்பெண்ணே. சுளசு

பேருக்குச்சார்ந்த துரியமடி யதைப்
பேசவுத்தற்பிர காசமடி
யாருக்குங்கண்டறி யாதபொருளைக்கண்
டகத்தெளிந்துகும்மி யடியுங்கடி. சுளஎ

முத்திபெருந்தேவ தத்தனைபோற்சக
முழுதுந்தன்மய மானதடி

நத்தியேவிட்டு விடாதேவிலக்கண
ஞாயமிதல்லவோ ஞானப்பெண்ணே. ௧௭௮

ஞானமாமோட்ச மிதுதாண்டி மற்ற
ஞாயமெல்லா மன மாயமடி
தானசங்கற்ப விசற்பசமயமுந்
தன்மயமானது ஞானப்பெண்ணே. ௧௭௯

தூராதூரமு மில்லையடி யதைச்
சொல்வதுங்கேட்பது மில்லையடி
தாரார்பிர்ம நிலைபார்த்துப் பெண்கள்
தாண்டிக்கும்மி யடியுங்கடி. ௧௮௰

அண்டமும்பிண்டமும் பாழாச்சே அதற்
கப்பாலும்பெரும் பாழாச்சே
உண்டில்லையென்று பராபரப்பிரம்மத்தை
யுவந்துகும்மி யடியுங்கடி ௧௮௧

சொல்லினுங்கல்லினு நில்லாதே பிர்ம
சோதியையாதியைத் தூவெளியை
வல்லதற்பிர காசமவுனத்தை
வகையறிந்துகொள் ஞானப்பெண்ணே. ௧௮௨

பிருதிவியில்தூய்மை மயமாச்சே யதில்
பேதஅபலபல வுண்டாச்சே
சுருதிமுடிவைக் குருசொல்லுவாரந்த
சூட்சந்தெளியுமோ ஞானப்பெண்ணே. ௧௮௩

அறிந்துகொண்ட பெரியோர்பாதங்க
ளர்ச்சனைசெய்துகும் மித்தமிழைப்
பிரிந்திடாமனூற் றெண்பத்தைந்துகண்ணி
பேசினேன்சற்குரு தாள்வாழி. ௧௮௪

சற்குருபாத மிகவாழி வாலை
சாமிதமிழ்நிதந் தான்வாழி
நற்குணஞானக் கும்மித்தமிழ்கற்றவர்
ஞானநெறியே மிகவாழி. ௧௮௫

ஞானக்கும்மி.

முற்றிற்று.

ஒழியாதசுழிமுனையி லொடுங்கிநல்ல
உற்றகலைவாசிசிவ யோகத்தேகி
வழியானதுறையறிந்து மவுனங்கொண்டு
மகத்தானஅண்டவளை முடிமேற்சென்று
தெளிவானவோங்கார வடிவேல்கொண்டு
தெளிந்துமனதறிவாலே தன்னைக்கண்டு
வெளியானபரவெளியில் வாசமாகி
வேதாந்தசத்திசிவ ஆதிகாப்பே.

## நூல்.

ஆதியிலேபராபரத்திற் பிறந்தசத்தம்
அருவுருவாய்நின்றபர சிவமுமாகி
சோதியென்றசிவனிடமாய் சத்தியாகித்
தொல்லுலகிலெழுவகையாந் தோற்றமாகி
நீதியென்றஅறிவதனால் தானாய்நின்று
நிறைந்தபரிபூரணமாய் நிஷ்களமுமாகி
சாதியென்றசத்திசிவ மருள்தன்னாலே
சண்முகமுங்கணபதியுந் தானுண்டாச்சே.

உண்டானசத்திசிவம் ஏகமாகி
உளங்கனிந்துபூரணமாய நிற்கும்போது
குண்டானமாங்கனியைக் கையில்வாங்கி
குமரனுடன்கணபதியைக் குணமாய்ப்பார்த்து
நன்றாககிரிவலமாய் வந்தபேர்க்கு
நல்லகனிதானீவோ மென்றுசொன்னார்
பன்றானகனியறிந்து குமரன்றானும்
பாய்ந்துமயிலேறிகிரி வலஞ்சென்றாரே.

சென்றபின்புகணபதியு மாலோசித்துத்
  தீர்க்கமுள்ளமேருகிரி நீர்தானென்று
கண்டவுடன்சிவனுமையாள் பாகந்தன்னைக்
  கருத்துடனேசுற்றிவந்து கனிமையவாகில்
கொண்டுமெந்தசிவனுமையை தியானஞ்செய்து
  குறியறிந்துநெறிதமக்குள் குருவைப்போற்றி
நின்றருசிகண்டறிந்து நிற்கும்போது
  தீர்க்கமுள்ளகணபதியை வாவென்றாரே                    (௩)

வாவென்றேயெடுத்தணைத்து அருட்பாலீந்து
  மகத்தானஐவருக்கும் பீடமாகி
ஆவென்றமூலமதற் காசாய்நின்று
  ஐந்தெழுத்திற்குயிரான ஆதியாகி
கூவென்றசத்துசித்த சுத்தமர்கிக்
  குவிந்தெழுந்தவாசிதிருதேசியாகி
பூவென்றஆயிரத்தெண் மலருக்குள்ளே
  பொருந்திமனவறிவாலே யறிந்துவாழே.                    (௪)

இருநதுவாழென்றுரைத்த வேளை தன்னில்
  ஏகாந்தமயில்வீர னெதிரில்வந்து
அருந்தவமாய்நின்றநிலை தன்னைப்பார்த்து
  அருமையுள்ளகண்மணியே வாவென்றேதான்
வருந்தியேமாக்கனியொன் றீந்துநல்ல
  மகத்தானஅண்டரண்டவரைகள்சுற்றி
திருந்தியேதீர்க்காயுள் பெற்றுவாழ்ந்து
  தீர்க்கமுடன்மலைக்காசா யிருந்துவாழே.                    (௫)

வாழென்றுசொன்னவுடன் மயில்வீரன்றான்
  மகத்தானசிவசத்தி பதமேற்கொண்டு
ஆவென்றுமயிலேறி கயிலாசத்தை
  யாவலுடன்சுற்றிவரும் போதிலேதான்
சூழென்றுஇமயகிரி வடபாகத்தில்
  சுத்தசித்தமானதபோ தனர்கள்கண்டு
தான்பணிந்துவணக்கமதாய் நிற்கும்போது
  தபோதனர்கள்ரிஷிகளுமே தான்வந்தாரே.                    (௬)

வந்தவரைத்தான்பார்த்து வரையில்நிற்க
மகத்தானசற்குருவென் றடிபணிந்து
இந்தமலைச்சாரலிலே வெகுநாளாக
இன்பமுடன் தவஞ்செய்து வாழ்ந்தோமையா
அந்தரமாய்ராட்சதர்க ளண்டிவந்து
அலவகோலஞ்செய்துமே துரத்துகின்றார்
சுந்தரமாயிருந்துதவ காருமென்று
சுத்தசித்தமாய்த்தவத்தைத் தொடங்கினாரே.

தொடங்கிமனதடக்கிநிலை தன்னைக்காத்து
சுத்தமுடனின்றவிளை யாடும்போது
அடங்கிமனமடங்காத அசுராள்தானும்
அஞ்சாமலழும்புசெய்யு மகத்தைப்பார்த்து
திடங்கொண்டுமயிலேறி செவ்வேல்கொண்டு
சினந்துவருமசுரர்களை மாளவென்று
படங்குவிந்துவேல்முனையைத் தியானம்பண்ணி
பாயவிடஅசுரர்களை பறந்துபோசசே.

பறந்துபோய்பலவிதமாய் ரூபங்கொண்டு
பந்திபந்தியாயசுரர் பறந்துவந்தார்
சிறந்துவந்தசேனைகளை நன்றாய்ப்பார்த்து
தீர்க்கமுள்ளமயிலேறித் தெளிந்துநின்று
அறந்தழைக்கவேணுமென்று ஸ்தூலசூட்சம்
அரூபமென்னுங்காரணமாய் ரூபங்கொண்டு
நிறந்தரமாய்வந்தவொரு அசுராள்தன்னை
நிர்த்துளிசெய்துதவ நிலைகொண்டாரே.

நிலைகொண்டுநின்றஜெயங் கொண்டசித்தை
நேர்மையுடன் தவஞ்செய்யு முனிவர்கண்டு
கலைகொண்டுமனந்தெளிந்து மகிழ்ச்சியாகிக்
கானமயில்வீரனடி கருதிப்போற்றி
கலைகொண்டுதாள்பணிந்து அருட்கண்பெற்று
தபோதனரும்ரிஷிகளுமே தான்பணிந்து
சிலைகொண்டன்றவடி வேலர்தன்னைத்
தெரிசித்துஅவரவர்கள்பதிசென்றாரே.

பதிதேடியவரவர்கள் செல்லும்போது
பத்தியுள்ளஅகத்தியமா முனிவர்வந்து
விதியறிந்துஅசுரர்களை மாளவென்று
வெற்றியுள்ளவடிவேலை தியானம்பண்ணி
கெதியறிந்துஸ்தூலமுடன் சூட்சுமமாகிக்
கிருபையுள்ளகாரணமாம் ரூபங்கொண்டு
சதியறிந்துசங்காரஞ் செய்தீரையா
சண்முகமேயென்குருவே சரணந்தானே. (௧௧)

சரணமென்றுஅகத்தியமா முனியைப்பார்த்து
சண்முகமாய்நின்றவடி வேலர்தானும்
திரணமதாய்தானறிந்து நீயாரென்ன
திருவடியைப்பூசைசெய்யுஞ் சேயனென்றார்
தரணமந்தக்கரணமதாய் வந்ததேதோ
கருணையுடன்வாருமென்று கடாட்சங்கித்
தருணமறிந்துதவுவது தருமமென்று
சங்கையுடன்தான்வந்த வகைசொல்வீரே. (௧௨)

சொல்லென்றுமயில்வீரன் கேட்கவந்தச்
சோதிமயமானதொரு அசுரர்தன்னைச்
சல்லென்றுவந்ததொரு அசுரர்தன்னைச்
சண்முகமாய்நின்றவடி வேலுகொண்டு
சொல்லென்றுசங்காரஞ் செய்தீரந்த
திருவுருவாய்நின்றகா ரணத்தைக்காட்டி
உள்ளென்றஆதார ஸ்தூலசூட்சுமம்
உண்மையென்றகாரணமு முரைசெய்வீரே. (௧௩)

உரைசெய்வீரென்றுசொன்ன வுறுதிகேட்டு
உண்மையென்றுமயில்வீரன் உறுதியாகி
நிறைசெய்துயக்கியங்கள் தானுண்டாக்கி
நேமமுடன்அகத்தியமா முனிவாவென்று
அரையறிந்துஅருகிருத்தி யோமகுண்டம்
ஆதியென்றமந்திரதா லக்கினியுண்டாக்கி
புரையறிந்துமந்திரங்கள் ஜெபிக்கும்போது
பூரணமாய்கும்பமதில் தானுண்டாச்சே. (௧௪)

உண்டானபூரணமாய் கும்பம்வாங்கி
உண்மையென்றமாமுனிக்கு அபிஷேகித்து
நன்றானநவக்கிரக மொன்பதுக்கும்
நலமான அனுக்கிரக நிலையுங்காட்டி
குன்றான அனுக்கிரக வாசலகாணக்
குவிந்துமன அறிவதனால வின்னென்றானே.

வின்னென்றவிசையுடனே மூனைநிரவுள்ளே
மெஞ்ஞானவவ்வாசல் திறக்குமப்போ
கன்னென்றகபாடவழிக் குள்ளேநின்று
கலையறிந்தவாசியினால் கமலநோக்கி
யுன்னென்றமூலமதில் வங்கென்றபூரி
யுறுதியென்றதமரதிலே சிங்கென்றேசி
என்னென்றுமிப்படியே கொண்டுநின்றால்
யோகமுள்ளதசதீட்சை யுண்மைகாணே.

உண்மையுடன் சுழினையிலே வின்னென்றாணி
உறுதியுடன் ஆதார தீட்சைகேளு
நன்மையுடன் ஓரீங் அங்கெங்கென்று
நாட்டமுடன் பதினாறு உருவேசெய்தாய்
தண்மையுடன் கணபதியும் பிரகாசிப்பார்
தானமென்றசுழினையிலே தன்னைப்பார்த்து
நுண்மையுடன் -ஓம்- நமசிவாயமென்றால்
நோக்குமுன்னேபிரமன் தரிசனமுமாமே.

ஆமப்பாசிவயநம சிவயநமவென்று
அதின்பிறகுவயநமசி வயநமசிவாவென்று
தாமப்பாதலைகாலாய் மாறிக்கொண்டு
சங்கையுடன் கால்தலையாய் மாறிக்கொள்ளு
ஆமப்பாநமசிவய வென்றுமாற
அதின்பிறகுவயநம சிவயநமவென்று
ஓமப்பாநமசிவய வென்றுமாற
உண்மையென்ற ஆகாரஞ்சித்தியமே

சித்தமுனோர்தைந்தெழுத்தை மைந்தாநீயும்
செம்மையுடன்தலைகாலாய் கால்தலையாய்மாற
சுத்தமுடன்ஆதார தேவதைகள்வந்து
சொன்னபடியிருதயத்தில் சுகமாய்நிற்பார்
பக்தியுடனிப்படியே தியானம்பண்ணி
பதிவாகவிபூதியுந் தனமாய்ப்பூசி
நித்தமுநீயிப்படியே செய்துநின்றால்
நிலையில்லாதாலசடம் நிலைக்கும்பாரே. (மக)

பாரப்பாகலையறிந்து நிலையில்நின்று
பத்தியுடனாதார சூட்சம்கேளு
நேரப்பாஓங்கிலி அங்கென்றோது
நிலையறிந்துஅங்கிலி ஙங்கென்றோது
காரப்பாமங்கிலி சிங்கென்றோது
கருணையுடன்சிங்கிலி வங்கென்றோது
சாரப்பாவங்கிலி யங்கன்றோது
சலுதியாய்அங்கிலி மங்கென்றோது. (உம)
ஓதியபின்யங்கிலி உங்கென்றோது
உண்மையுடன்உங்கிலி அங்கென்றோது
நீதியுடன்அங்கிலி மஙகென்றோது
நிலையறிந்துமங்கிலி றீங்கென்றோது
ஆதியுடன்றீங்கிலி ஓமென்றோது
அப்பனேதலைகாலாய் மாறியோது
சோதியுடன்சுழிமுனையிலே மனக்கண்சாற்றி
சுத்தமுடன்விபூதியைநீ தரித்துக்கொள்ளே. (உக)

கொள்ளப்பாவிபூதியைநீ தரித்துக்கொண்டு
கூர்மையுடன்கால்தலையாய் மாறக்கேளு
சொல்லப்பாஓங்கிலி றீங்கென்றோது
சுத்தமுடன்றீங்கிலி மங்கென்றோது
வில்லப்பாமங்கிலி யங்கென்றோது
விவரமதாய்த்தோன்றுமடா செய்கையாவும்
உள்ளப்பாமங்கிலி அங்கென்றோது
உறுதியுடன்அங்கிலி வங்கென்றோதே. (உஉ)

ஓதியபின்வங்கிலி சிங்கென்றேது
  உத்தமனேசிங்கிலி மங்கென்றேது
நீதியுடன் மங்கிலி ஓமென்றேது
  நிலையறிந்தாநங்கிலி யங்கென்றேது
சோதியுடன்மங்கிலி ஓமென்றேது
  சுத்தமுடன்ஈராறு தவமுஞ்சித்தி
வீதியென்றஆதார மேலாதாரம்
  விண்ணடங்கிகண்ணடங்கி மேவிநில்லே.

நில்லப்பாகண்ணடங்கி வின்னென்றாலு
  நிலையறிந்துபிராணாயஞ் செய்தால்மைந்தா
கல்லப்பாதிரேகமது காலனேது
  காலனென்னும்வியாதி யெல்லாங்காணாதோடு
உள்ளப்பாவாசியது உறுதியாகும்
  ஓதுகின்றமந்திரமுஞ் சித்தியாகும்
சொல்லப்பாஸ்தூலமுடன் சூட்சஞ்சொன்னேன்
  துலங்கிகின்றஸ்தூலத்தின் சுருக்கங்கேளே.

சுருக்கமுடன்ஆதார ஸ்தூலசூட்சஞ்
  சொன்னபடிபிராணாயஞ் செய்துகொண்டு
உருக்கமுடன்ஜபதபங்கள் பூசையாவும்
  உண்மையாயுனக்குள்ளே கண்டுதேறி
பருக்கமுடன் தானிருந்து சிவன்மாவே
  பிரணவமாய்நின்றபரம் நிருமாகி
நெருங்கியர்தஅண்டவெளிக் குள்ளேசென்று
  நேமமுடன்பிராணாயம் நினைவாய்ச்செய்யே.

செய்யப்பாபிராணாயம் நினைவாய்செய்ய
  சிவசிவாகருமானஞ் செப்பக்கேளு
பொய்யப்பாபோகாது பிராணாயவாய்வு
  பொருந்திநின்றுவிளையாடும் புதுமைகேளு
பையப்பாசுழினையிலே வின்னென்றாணி
  பதியாகமூலமதில் வங்கென்றுபூரி
மெய்யப்பாசுழினையிலே சிங்கென்றுரேசி
  வேகமுடன் கண்டமதில் அங்கென்றுகும்பே.

நமென்றகண்டமதில் கும்பித்தேதான்
　அசையாதுவாசிதிரு வாசிதானும்
செஙகமலமானசுழி பிண்டத்தேரும்
　திரும்பியக்தபிண்டமதில் சென்றுவாழும்
சஙகையுடன்தன்னகத்தில் தானேதானாய்
　தன்மையுடன்நின்றவிளை யாடும்வாசி
மஙகளமாய்சுழினையிலே விண்ணென்றாணி
　மார்க்கமுடன்இகபரமா யிருந்தகாணே. (உ.எ)

காணவேசத்தியவள் தியானஙகேளு
　கருவாகச்சொல்லுகிறேன் கருத்தாய்க்கேளு
பூணவேயுரைத்திடுவாய் அஙகிஙகென்று
　புத்தியுடன்பதினாறு உறவேசெய்து
தோணவேவிபூதிது ளிதமேபூசச்
　சத்தமுடன்பராசத்தி கீர்த்தஞ்செய்வாள்
ஊணவேயிப்படியே தியானம்பண்ணி
　உண்மையுடன்பிராணய வுறுதிபாரே. (உ அ)

உறுதியுள்ளஅகத்தியமா முனியேகேளு
　உண்மையுள்ளசத்தியைநீ தியானம்பண்ணி
பருமதிசுடரொளிபோல் பஞ்சகர்த்தாள்
　பதியறிந்துபிராணயம் பதிவாய்ச்செய்து
சுருதிபொருளானதொரு பொதிகைமேவி
　சுகசிவபிராணகலை வாசியேறி
கருதிமனமொன்றாகி சுழியில்நின்று
　கலகமற்றஅமிர்தபா னஙகொள்வாயே.

பானமென்றமதியமிர்த பானஙகொள்ள
　பரப்பிரமமானசுழி வழியுஙகாட்டி
தானமென்றஆதார மேலாதாரந்
　தனையறியப்பிராணயச் சஙகைசொல்லி
ஞானமென்றநிலைகாட்டி மூலங்காட்டி
　காதாந்தஆறுமுக நிலையுஙகாட்டி
மோனமென்றவடிவேலின் முனையுஙகாட்டி
[illegible]

நில்லப்பாசதுரகிரி முடியிற்சென்று
நிலையானபொதிகையிலே வாசமாகி
உள்ளப்பாதானுகி விண்ணென்றாணி
உன்மனதில்நினைத்தவொரு மந்திரந்தன்னை
சொல்லப்பாநியானமுடன் ஜெபிக்கும்போது
சித்தமுடன்சித்திக்கும் சுகமாய்நின்று
செல்லப்பா அஷ்டாங்க யோகத்தேகிச
சிவாயகுருபாதமதில் தெளிவாய்நில்லே.

தெளிவானதெளிவதனால தன்னைக்கண்டு
தீர்க்கமுடனிருந்து தவஞ்செய்வாயென்று
மழியாதவனுக்கிரக வரமுமீந்து
மார்க்கமுடன்மயில்வீரன் வடிவேலகொண்டு
அழியாதஅண்டவரை முடிமேறசென்று
அஷ்டகிரிபர்வதத்திற் காசுமாகி
ஒளிவாகிஅண்டவெளி யெங்குந்தானாய்
ஓங்காரவடிவேலை யுவந்தான்முறறே.

சுப்பிரமணியர் ஞானம்.

முற்றிற்று.

சிவமயம்.

# ஞானக்கப்பல்.

ஏலேலோ ஏகமேகம சாலமேகம
பிரமமேகம் ஏலேலோ ஏலேலோ.

பஞ்சபூதப்பலகை கப்பலாய்ச் சேர்த்து-பாங்கானதுங்கும ரமலாமரங்கட்டி நெஞ்சமனப்புத்தி ஆங்காரஞ்சித்தம்-மாறு பாணவு கயிராகச்சேர்த்து-அறுமுறைக்கட்டி சரக்காக யேற்றி-ஐம்புலந்தனிலேசுகாரிந்தரிநெஞ்சுகட்டச்சுத்தா ல சீனிப்பாய்தூக்கி-சிவனுடையதிருப்பெயர்நூலை சிந்தையில வைத்து-அருசவானந்த வெள்ளத்தில்தூர்மேனி அகண்டாகம போகுதடா ஏலேலோ ஏலேலோ. (௧)

களவையுங்கேள்வையுந் தள்ளுடா தள்ளு கருணைக்கடலி ல தள்ளுடாகப்பல்- சிறகுணத்தன்னிமேல தள்ளுடா தள்ளு-நி றைந்தபரிபூரணத்தால தள்ளுடாகப்பல்- மூக்கணைமூன்றையு ந் தள்ளுடாதள்ளு - முப்பாழுக்கப்பாலே தள்ளுடாகப்பல-தி க்குத்திசையெங்கும் தள்ளுடாதள்ளு- திருமந்திரஞ்சொல்லி தள்ளுடாகப்பல்-பக்கமுடன் கீழ்மேலும தள்ளுடாதள்ளு-பரி வெளிக்கப்பாலே போகுதடாகப்பல்- ஏலேலோ ஏலேலோ

தந்தைதாயசுற்றமும சகலமுமறந்து -தாரம்சகோ ம் தானதும்மறந்து பந்தமும் நேசமும் பாசமுமறந்து- பதினாலு லோகமும் தனையுமமறந்து- இந்திரியர்கள இரட்சித்த கப்பலி லேறி - ஏகாந்தமானதொரு கடலிலேதள்ளி-அந்திரமானவெ ளி அருட்பானந்த வெள்ளத்திலே அழுந்துதை பாகப்பல் - ஏலே லோ ஏலேலோ. (௨)

ஞானக்கப்பல் முற்றிற்று.

கணபதிதுணை.

வால்மீகர் அருளிய

# ருத்திரஞானம் ௫௰.

இருள்வெளியாய்நின்றசிவ பாதம்போற்றி
  எழுத்தினுடவிபரத்தை விரித்துச்சொல்வேன்
அருவுருவாய்நின்றதுவே யெழுத்ததாகும்
  ஆதியந்தம்அண்டபிண்ட மதுவேயாகும
திருவுருவாய்ரவிமதியாய் நின்றரூபம்
  சிவசத்திதிருமாலின் ரூபமாகும்
வருமுருவேசிவசத்தி வடிவமாகும்
  வந்ததிலும்போனதிலும் மனதைவையே. (௧)

வந்ததுவும்போனதுவும் வாசியாகும்
  வானில்வரும்ரவிமதியும் வாசியாகும்
சிந்தைதெளிந்திருப்பவனே யவனேசித்தன
  செகமெலாஞ்சிவமென்று யறிந்தோன்சித்தன்
நந்தியெனறவாகனமே நாலுதேகம்
  நான்முகனேகண்மூக்கு செவிநாக்காகும்
தந்திமுகன்சிவசத்தி திருமூச்சாகும்
  தந்தைதாய்ரவிமதியென் றறிந்துகொள்ளே. (௨)

அறிந்துகொள்ளும் * பூரகமே சரிதைமார்க்கம்
  அடங்குகின்ற () கும்பகமே கிரியைமார்க்கம்
பிரிந்துவரும்ரேசகமே யோகமார்க்கம்
  பிசகாமல்நின்றதுவே ஞானமார்க்கம்
மறிந்துவுடல்புகுகின்ற பிராணவாய்வு
  மகத்தானசிவசத்தி அடங்கும்வீடு
சிறந்தமனத்தெளிவாகி சேர்ந்தோன்சித்தன்
  சிவசிவா அவனவனென் றுரைக்கலாமே. (௩)

---

* பூரகம்-இழுக்கிறது () கும்பகம்-அடக்கிறது () ரேசகம்-விடுகிறது.

ஆமப்பாவுலகத்தில் பெருநூல்பார்த்தோர்
அவரவர்கண்டத்தையெல்லாம் சரிதையென்பார்
ஓமப்பாகல்லைசெம்பை தெய்வமென்று
உருகுவார்பூசிப்பார் கிரிகையென்பார்
வாமப்பாயோகமென்று காய்கனியைத்தின்று
வாய்பேசாவூமைபைப்போல் திரிகுவார்கள்
காமப்பாஞானமென்று விண்டுமேலும்
காக்கைபித்தன்மிருகம்போல் சுத்துவாரே. (ச)

சுத்துவார்பெருநூலைப் பார்த்துபார்த்து
அவனிப்பாருலகத்தில் சிறிதுபேர்கள்
தெத்துவாரவர்பிழைக்க வனேகவேஷம்
தேகத்திலணிந்துகொண்டு திரிகுவார்கள்
பசுதுவாரகுருக்களென்பார் சீஷரென்பார்
பையவேதீக்ஷைசைப்பார் தீமையென்பார்
கத்துவார்திரிமூர்த்தி தாமேயென்று
காரணத்தையறியாத கசடர்தானே. (ரு)

தானென்றவுலகத்தில் சிறிதுபேர்கள்
சடைபுலித்தோல்காஷாயம் தாழ்டம்பூண்டு
ஊனென்றவுடம்பெல்லாம் சாம்பல்பூசி
உலகத்தில்யோகியென்பார் ஞானியென்பார்
தேனென்றசிவபூசை தீட்சையென்பார்
திருமாலைக்கண்ணாலே கண்டோமென்பார்
கானென்றகாட்டுக்கு ளலைவார்கோடி
காரணத்தையறியாமல் கதறுவாரே. (சு)

கதறுகின்றபேய்களையர்கோடாகோடி
காரணத்தைக்கண்டவர்கள் கொஞ்சம்கொஞ்சம்
பதறுகின்றபேர்களெல்லாம் பராபரத்தைப்
பத்தினின்றுபார்த்தவர்கள் சுருக்கமப்பா
உதறுகின்றபேர்களெல்லா முலகத்துள்ளே
உதித்தகலைதன்னுள்ளே யறியமாட்டார்
சிதறுகின்றபேர்களைப்போல் சிதறிடாமல
சிவசத்திவரும்பாதை தன்னில்நில்லே.

நில்லென்றபெரியோர்கள் பாஷையாலே
நீமேலகம்தன்னுக்குள் நாலுவேதம்
வல்லமையாய்சாஸ்திரங்க ளிருமூன்றாக
வயிர்பிழைக்கபுராணங்கள் பதினெட்டாக
கல்லுகளைக்கமைப்பதுபோல் வேதாந்தங்கள்
கட்டினாவரர்கள் பாஷையாலே
தொல்லுலகில்நாலசாதி யனேகஞ்சாதி
தொடுத்தார்களவரவர்கள் பிழைக்கத்தானே. (அ)

தானென்றவுலகத்தி லில்லாவிட்டால்
தன்பெருமையாலறிந்து சகத்தில்வீழ்வார
ஊனென்றவுடம்பெடுத்தா லெல்லாம்வேணும்
உலகத்தில்அவரவர்கள் பாஷைமேணும்
மானென்றசிவகாமி சிவனுங்கூடி
மாமுனிவர்முகம்பார்த்து மறைநூல்சொன்னார்
தேனென்றசிவகாமி யருளினாலே
திரட்டினார்வெகுகோடி தேசபாஷை

தேசத்தின்பாஷைதனை யறிந்திடாமல்
தெளிவாகத்தாமுனைப்பார் பாஷைபார்த்தோர்
ஆசிப்பாருலகத்தில் கண்டதெல்லாம்
ஆச்சரியந்தனைக்கண்டு மறந்துபோவார்
வாசிதனையறியாத சண்டிமாண்பர்
வார்த்தையினால்மருட்டிவைப்பார் மற்றபேரை
நாசிநுனிதனிநடுவில் சிவத்தைக்கண்டோர்
நான்முகனும்திருமாலும் சிவனுந்தானே. (௧0)

சிவசிவாபதினெண்பேர் பாடற்கெல்லாம்
திறவுகோல்வால்மீகன் பதினாறும்
செம்பெத்தசித்தரெல்லா மெனனூல்பார்த்து
சிவஞேடேகோள்கள்சொன்னார் சினந்தார்நாதன்
அவமாகப்போகாமல் சிவனுத்தாரத்தின்
அருளினால்திறந்துசொன்னேன் உலகுக்காக
நலமானதவக்கிரகங்கள் தன்னுக்குள்ளே
நாக்குவாய்செவிமூக்கு அதனுள்பாரே. (௧௧)

நாக்குவாய்செவிமூக்கு மத்திக்கப்பால்
நடுவீதிகுய்யமுதல வுச்சிதொட்டு
தாக்குவாய்அங்கென்றே அதிலேமுட்டு
தாயாரைப்பூசித்து வேதம்வோது
வாக்குவாய்அசையாமல மவுனங்கொண்டு
வாசிவருமிடத்திலமனம் வைத்துக்காரு
நீக்குவாயவாசியொடு மனந்தான்புகல
நினைவுஅதிலடங்கிவரும் வரிசைகாணே. (௯௨)

காணரிதுயெவராலு மிருசுவாசம்

புணரிதுவுலகத்தி லிந்நூல்கிட்டில்
பூலோகசித்தனென வுரைக்கலாகும
காணரித சிவசத்தி திருமூசசாகும்
காட்டாதமூடருக்கு யிந்நூலதன்னை
தோணரிதுவிழிமயக்கம் சும்மாப்போமோ
சொலலரிது சுமத்தைச சொனனேனப்பா. (௯

சூட்சமின்னூல்சொலலுகிறேன் வாசிகாண
சூட்சாதிசூட்சத்தைத துறக்கப்போகா
சாட்சியில்லைதுணையிலலை கேழ்விமில்லை
சந்தேகமொன்றுமில்லை விழியைக்காண
காட்சியென்னகற்பத்தில வசிக்குமாபபோல்
காரணத்தைக்கண்ணாலே கண்டிருக்க
ஆட்சிதருமுமையாளை யப்படியேகண்டேன்
ஆனந்ததிருக்கூத்தின் நடக்கைக்காரே. (௯௪)

காற்பதற்குபத்தியத்தைச் சொலலக்கேளு
காய்கனிகள்பஞ்சாசம பாமானங்கள்
எறகையுடனுணவுகொண்டு சித்தைக்காரு
என்மக்காள்சித்தருட குருநூலபாரு
ஆததுமததுக்கழிவிலலை தருக்கவேணும்
அவரவர்கள்நிததியகாம நடத்தவேணும்
தீர்க்கமுடனவரவர்க்கு வாசிசித்து
சிறப்புடனேயதிஞூறும் பலிக்குந்தானே. (௯௫)

தானவனுயிருக்கவென்றால் வாசிவேணும்
  தன்னுக்குள் தானிற்க விடமும்வேணும்
வானவனும்நின்றவர்க் கெல்லாஞ்சித்தி
  வானுக்குள் மனமிருக்க மதிபோல்காணும
தேனவனுஞ்சித்தருக்குத் தெசிட்டார்மூலி
  சிரசப்பாவுடலுக் குப் பதியயாகும்
கோனென்றவட்டதநுள் நடுவேநின்றால்
  குமரியவள்வாலைசிறு பெண்தானதேவி
கோனவனுயிருக்கவென்று குறியைச்சொன்னேன்
  குவலயத்தில்பதினாறுக் குருகத்தானே. (௧௬)

வால்மீகர்ஞானம ௧௬.

முற்றிற்று.

சற்குருவேதுணை.

# அகஸ்தியஞானம்-௰௬.



பூரணமேதெய்வமென் றுரைத்தாரையா
  பூரணத்தையின்னதென்று புகலவேணும்
காரணத்தைச்சொல்லுகிறேன் நினைவாய்க்கேளு
  கலையானபதினாறும் பூரணமேயாகும
காரணமாமூலகத்தில மனமயங்கி
  மதிகெட்டுப்பூரணத்தை யிகழ்ந்தாரையா
வாரணத்தைமனம்வைத்துப் பூரணத்தைக்காத்தால்
  வாசியென்றசிவயோக வாழ்க்கையாச்சே.

ஆச்சப்பாவித்தமுறை பதினெண்பேரும்
  அயன்மாலுமரனோடு தேவரெல்லாம்
மூச்சப்பாதெய்வமென் றறியச்சொன்னார்
  முனிவோர்கள்ரிஷியோர்க ளிப்படியேசொன்னார்

பேச்சப்பாபேசாமல் நூலைப்பார்த்து
　பேரானபூரணத்தை நினைவாய்க்காரு
வாச்சப்பாபூரணத்தைக் காக்கும்பேர்கள்
　வாசிநிலைமையத்துள் வாழ்வார்தாமே　　　௨

தாமென்றபெரியோர்க ளுலகத்துள்ளே
　தாயானபூரணத்தை யறிந்தபின்பு
தேனென்றவமுதமதைப் பானஞ்செய்து
　தெவிட்டாதமவுனசிவ யோகஞ்செய்தார்
ஊமென்றவுடலைநம்பி யிருந்தபேர்க்கு
　ஒருநான்குவேதமென்றும் நூலாறென்றும்
நானென்றும்நீயென்றும் பலஜாதியென்றும்
　காட்டினாருலகத்தோர் பிழைக்கத்தானே.　　　(௩)

பிழைப்பதற்குநூல்பலவுஞ் சொல்லாவிட்டால்
　பூரணத்தையறியாம லிறப்பாரென்றும்
உழைப்பதற்குநூல்கட்டிப் போடாவிட்டால்
　உலகத்திற்புத்திகெட்டே யலைவாரென்றும்
தழைப்பதற்குச்சாதியென்றும் விந்துவென்றும்
　தந்தைதாய்பிள்ளையென்றும் பாரியென்றும்
உளைப்பதற்குச்சொன்னதல்லாற் கெதிவேறில்லை
　யுத்தமனேயறிந்தோர்கள் பாடினாரே.　　　(௪)

பாடினாரிப்படியே கதைசொல்லாவிட்டால்
　பரிபாஷையறியார்க ளுலகமூடர்
சாடுவார்சிலபேர்கள் பலநூற்பார்த்து
　தனைமறந்துபடுகுழியில் விழுவார்சாவார்
வாடுவார்நாமமென்றும் ரூபமென்றும்
　வையகத்திற்கற்செம்பைத் தெய்வமென்றும்
நாடுவார்பூரணத்தை யறியார்மூடர்
　நாய்போலேகுலைத்தல்லோ வொழிவார்தானே.　　　(௫)

தாணுமலைக்கண்டோர்கள் கோடாகோடி
　காரணத்தையறிந்தோர்கள் கோடாகோடி

வீணாசைப்புலம்பினதா லறியப்போமோ
வாய்ஞானம்பேசுவது மேதுக்காகும்
கோணமற்சுழிமுனையில் மனதைவைத்து
குருபாதமிருநான்கில் நாலைச்சேர்த்து
நாணமலொருநினைவாய்க் காக்கும்போது
நாலுமெட்டுமொன்றாகும் நாட்டிப்பூசை.

ஊதியதோருத்திரதா லவனேசித்தன்
உத்தமனைப்பதினாறும் பதியேயாகும்
வாதிகளேயிருநான்கும் பதியினபாதம்
வகைநான்குமுப்பாகும் மார்க்கங்கண்டு
சோதிபரிபூரணமு மிதுவனைநதான்
தாவகாமரூபங்கியங்கே காக்கும்போது
ஆதியைமபராபரையு மாணுமொன்றாய்
அண்ணாக்கினவட்டத்துள் ளாகும்பாரே.

பாரப்பாவுதயத்தி லெழுந்திருந்த
பதாமற்சுழிமுனையில மனதைவைத்து
காரப்பாபரிதிமதி ரண்டுமாறி
கருவானசுழிமுனையி லுதிக்கும்போது
தேரப்பாவனைக்கு னிறுவொன்று
தியங்காமற்சுழிமுனைக்குள் ளடங்கும்பாரு
சீப்பாபதினால எட்டு நன்கும
சேருமலமுனறுமொன்றாய்ச் சேர்ந்துபோமே.

ஒன்றானபூரணமே யிதுவேயாச்சு
உதித்தகலைதானொன்று மிதுவேயாச்சு
நன்றாகத்தெளிந்தவர்க்கு ஞானஞ்சித்தி
நாட்டாமற்சொன்னதினால ஞானமாமோ
பன்றானவாதிகுரு சொன்னஞானம்
பரப்பிலேவிடுக்காத பாவமாகும்
திண்டாடுமனத்தோர்க்குக் காணப்போகா
தெளிந்தவர்க்குத்தெரிவித்த வுண்மைதானே.

உகமையின் னுஞ்,சொல்லு கிறே னுலகத்துள்ளே
யுவமையுள்ளபரிகாசம் நனிபேசாதே
பகமைபண்ணிக்கொள்ளாதே வீண்பேசாதே
பரப்பிலேதிரியாதே மலையேறாதே
நகையாதேசிலை நகாதே யுறங்கிடாதே
சழுகாதேசுழிலனைவிட்டுப் பின்வாங்காதே
ஜகமுழுதும்பரிபூரண மறிந்துவென்று
தெளிந்தபினபுலகத்தோ டொத்துவாழே. (௧0)

வாழாமலுலகம்விட்டுப் பலவேடம்பூண்டு
வயிர்பிழைக்கவாய்ஞானம் பேசிப்பேசி
தாழ்வானகுடிதோறு மிரப்பான்மட்டை
தனையறியாசசண்டாளர் முழுமாடப்பா
பாழாகப்பாவிகடன சொற்கேளாதே
பதறாதேவயிர்பிழைக்க மயங்கிடாதே
கேளாதபேசசெல்லாங் கேட்டுக் கேட்டுக்
கலங்காதேயுடலுயிரொன் றுரைத்திடாதே. (௱௧)

உடலுயிரும்பூரண மூன்றுமொன்று
வுலகத்திற்சிறிதுஜனம் வெவ்வேறென்பார்
உடலுயிரும்பூரணமு மேதென்றக்கால்
உத்தமனேபதினாறு மொருநான்குமெட்டு
உடலுயிரும்பூரணமு மயன்மாலீசன்
உலகத்தோரறியாமல் மயங்கிப்போனார்
உடலுயிரும்பூரணமு மடிமுடியுமாச்சு
உதித்தகலைநிலையறிந்து பதியில்நில்லே. (௱௨)

பதியின்னவிடமென்ற குருவைச்சொல்லும்
பரப்பிலேவிள்ளாதே நிலைரண்டாகும்
விதியென்னவிடமென்று சொல்லக்கேளு
விண்ணானவின் னுக்கு வண்ணக்கப்பா
மதிரவியும்பூரணமுங் கணவாய்மூக்கு
மகத்தானசெவியோடு பரிசமெட்டும்
பதியவிடஞ்சுழிமுனை,யென் றதற்குப்போராம்
பகருவார்சொர்க்கமென் றுங்கைலாசமென்றே. (௱௩)

கைலாசர்வைகுந்தர் தெய்வலோகம்
　காசிகன்னியாகுமரியென்னுஞ் சேதுவென்றும்
மயிலாடுமேகமென்றம் நாகமென்றும்
　மாய்கையென்றம்பின்னலென்று மவுனமென்றுந்
துயிலானவாடையென்றஞ் சூக்ஷமென்றும்
　சொல்லற்றவிடமென்று மொடுக்கமென்றும்
சுயிலானபாதமென்று மடியென்றும்
　தாயானவஸ்துவென்றும் பதியின்பேரே. (௰௪

பேர்சொன்னே னூர்சொன்னேனிடமுஞ்சொன்னேன்
　பின்கலையுமுன்கலையு மொடுக்கஞ்சொன்னேன்
பாருலகிற்பலநூலின் மார்க்கஞ்சொன்னேன்
　பலபேர்கண்டத்துகின்றதொழிலுஞ்சொன்னேன்
சீருலகிலின்னதென்று தொட்டுச்சொன்னேன்
　சித்தானசிதமெல்லாஞ் சுருக்கிச்சொன்னேன்
நேர்சொன்னேனவழிசொன்னேன் நிலையுஞ்சொன்னேன்
　நின்னுடம்பையின்னதென்று பிரித்துச்சொன்னேன் (

பிரித்துரைத்தேன்சூத்திரமீ ரெட்டுக்குள்ளே
　பித்தர்களோநன்றாகத் தெரிந்துபார்க்கில்
விரித்துரைத்தநூலினது மார்க்கஞ்சொன்னேன்
　விள்ளாதேயிந்தநூ லிருக்குதென்று
கருத்துடனேயறிந்துகொண்டு கலைமாறாதே
　காரியத்தைநினைவாலே கருத்திற்கொ
[illegible]
　சூத்திரம்போல்பதினாறுந்தொடுத்தேன்முற்றே.

## அகஸ்தியர் ஞானம் ௰௬.

முற்றிற்று.

உ

சிவமயம்.

சிவகணபதியேநம:

# திருச்சிற்றம்பலம்

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்,

## இராமலிங்கப்பிள்ளை அவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய திருமுறையாறினுள் சில

# பாடற்றிரட்டு.



எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருவுமகல்வியுஞ் சீருஞ்சிறப்புமுன் றிருவடிப்புகழ்ப்பா
டுந்திறமுநல், லுருவுஞ்சீலமு மூக்கமுந்தாழ்வுறு வுணர்வுந்த
ந்தெனை யுள்ளத்தமர்ந்தவா, குருவுநதெய்வமுமாகியன்பாளர்
தம குறைதவிர்க்குங் குணப்பெருங் குன்றமே, வெருவுஞ்சிந்
தை விலககஜானனம் விளஙகுஞசிதது விநாயகவள்ளலே. (௧)

தஞ்சமென்றனைச சார்ந்தனனெனைத் தாஙகிநதச
சகததவர்போலவே, வஞ்சமண்ணியிருந்திடிலென்செய்வே
ன் வஞ்சமற்ற மனத்துறையண்ணலே, பஞ்சபாதகந் தீர்த்த
னையென்றுநின் பாதபங்கயம் பற்றினன்பாவியேன், விஞ்ச
நல்லருள் வேண்டித்தருதியோ விளங்குஞ்சித்தி விநாயகவள்
ளலே. (௨)

ஆணிலேயன்றி யாருயிர்ப்பெண்ணிலே யவியிலையிவ்
வடியனைப்போலவே, காணிலேனொரு பாவியையிப்பெருங்
கள்னெஞ்சக் கடையனையாளையா, பேணிலேயிட ரெய்தவி
தெதியே லென்செய்கேனினி யிவ்வுலகத்திலே, வீணிலேயு
ழைப் பேனருளையனே விளங்குஞ்சித்திவிநாயகவள்ளலே (௩)

சீர்பூத்த வருட்கடலே கரும்பேதேனே செம்பாகே
யெனதுகுல தெய்வமேநற், கூர்பூத்தவேன்மலர்க்கையரசே சாந்
த குணக்குன்றே தணிகைமலை கோவேஞானப், பேர்பூத்த
சினைபுகழைக் கருதியேழை பிழைக்கவருள்செய்வாயோ பி
ழையைநோக்கிப் பார்பூத்தபவத்துழலவிடினென்செய்கேனே
பாவியேனந்தோவன் பயந்திரேனே. (௪)

தீராததுயர்க்கடலி லழுந்திநாளுந் தியங்கியழுதேங்கு
மிந்தச் சேய்க்குநீகண், பாராதுசெயலலன்னேயெந்தாய் யெ
ந்தாய் பாவியெனையிட்டனையோ பன்னாளாக, வேராயவருட
ருவா யெனைத்தேயமாக அருந்தேனேயென்செய்கேன் யாரு
மிலலேன், சீராருந்தணிகைவரை யமுதேயாகி தெய்வமேயெ
ன்கருத்தைத்தெளிந்திலையோ. (௫)

வாழ்வேநற்பொருளேகண் மருந்தேஞான வாரிதியேத
ணிகைமலை வள்ளலையான, பாழ்மையலையெனுங்கொடியதுய
ருண்மாழ்கிப் பதத்தையாமுமையாயுன் பதத்துக்கென்றே,
தாழ்வேனீதறிந்திலையே நாயேன்மட்டுந் தயவிலையோ நான்
பாவிதானோபார்க்கு, வாழ்வென்றயலவிட்டா லீதியே
யோவஞ்சோவிதெனைசெய்கே னென்றனலன்றலை. (௬)

பெருங்களப முலைமடவா ரென்னும்பொல்லாப் பேய்க்
கோட்பட்டாடுகின்றபித்தனேனுக், கருமபுலவர்கரியதிரு
வருளீவாயே யெனைசொல்வாரடியாரதமெந்தாயெந்தாய, கரு
ம்பினிழிந்தொழுகுமருட்சுவையமுக்கட் கனிகனிந்ததேனே
யெனைகண்ணேஞானந, தருமபுனிதாபுகழ்தணிகை மணியே
ஞ்சீலசாக்ஷியாய்நிறைந்தருளுஞ்சகசவாழ்வே. (௭)

வாழ்நாளவண்ணமெனக் கெடுகெகுமபொல்லாவஞ்சகநெ
ஞ்சாலுலகின் மாதராந்தந்தோ, பாழானவடங்கைதயாபாற் சிந்
தைவைக்கும் பாவியேன் முகம்பார்க்கப் பயந்தேயோ, யே
ழாயவன்பவத்தை நீக்குஞான வின்பமேயென்னரசே யிறை
யசுறாப், தாழாதபுகழ்த்தணிகை மணியேஞ்சீல சாக்ஷியாய்நி
றைந்தருளுஞ் சகசவாழ்வே. (௮)

மின்னைநிகர்ந் தழிவாழ்க்கைத் துயரானெஞ்சமெலிந்து
நினதருள்பருக வேட்டுநின்றே, னென்னையுன் பெரும்பா
வி யென்றேதள்ளி லென்செய்கேன் றனைபெறுஞ்சே யியற
றுங்குற்ற, மன்னைபொறுத திடனீதி யல்லவோவென்னையா
வே நீபொறுக்க லாகாதோ தான், றன்னைநிகா தருந்தணிகை
மணியே ஜீவ சாக்ஷியாய்நிறைந்தருளுஞ் சச்சவாழ்வே. (௯)

கூவியழையர் குரைகடிரவாட் கொள்ளும்வள்ளலே கு
றகும்வாழ்க்கையிற், பாவியேன்படும் பாடனைத்தையும் பார்
த்திருந்துநீ பரிந்துவந்திலாய், சேவியேனெனிற் றன்னீதி
யோ திருவருட்கொரு சிந்தைவல்லையோ, தாவியோர்வளைப்ப
யிலசெய்போரியாழ் சாமியேதிருத தணிகைநாதனே. (௰)

செல்லும்வாழ்க்கையிற் றியங்கவிட்டுநின் செய்யதாட்டு
தி செய்திடா துழல், கல்லும்வெந்திடக் கண்டுமிண்டுசெய்கள்
ள நெஞ்சினேன் கவலைதீர்ப்பையோ, சொல்லுமின்பவான்
சோதியேயருட் டோற்றமேசுகசொரூபவள்ளலே, சல்விபங
கெடவருள்செய்போரியாழ் சாமியே திருத்தணிகைநாதனே.

மாலின்வாழ்க்கையின் மயங்கிநின்பதம் மறந்துழன்றிடு
ம் வஞ்சநெஞ்சினேனை, பாலினீரென நின்னடிக்கணே பற்றி
வாழ்ந்திடப் பண்ணுவாய்கொலோ, சேலின்வாட்கணார்தீய
மாயையிற் றியங்கினின்றிடச செய்குவாய்கொலோ, சாலநி
ன்றுளந் தானெவ்வண்ணமோ சாற்றிடாய்திருத் தணிகை
நாதனே. (௰௧)

அடுத்திலேனினனடி யாலைக்குட்சற்று மன்பிலேனின்
றொழும்பனுகேன்வஞ்சந், தடுத்திலேறணிகைதனிற் சென்று
நின்னைத் தரிசனஞ்செய்தேமதுரத்தமிழ்ச்சொன்மாலை,தொ
டுத்திலே னழுதுநின் கருணைவேண்டித்தொழுது தொழுதா
னந்தத்துய்நீராடே, னெடுத்திலே னல்லனென்னும் பெய
ரையந்தோவேன்பிறந்தேன்புவிச் சுமையாயிருக்கின்றேனே.

அரும்பாயகைமடவார்க் காளாய்வாளா வலைகின்றே
னறிவென்பு தலயேனின்பாற், றிரும்பாதபாகனேன் றிரு

வொன்றிலேன் றிருத்தணிகைமலைக்கேகச்சிந்தைசெய்யேன, கரும்பாயவெறுத்துவேம் பருந்துமபொல்லாக் காக்கையொத்தேனை சுறந்தேனுனைக்கனிதலில்லா, விரும்பாய வுன்னெஞ்சககனவனேனைய வீனன்பிறந்தேன்புவிச்சுமையா யிருக்கின்றேனே. (௰௪)

முன்னறியேன் பின்னறியேன் மாதாபாலென் மூடமனமிழுத்தோடப் பின்சென் றெய்த்தேன், புன்னெறியேன் பொய்யரொடும் பயின்றேனின்றன் புனிதவருட் கடலாடேன் புளகமூடேன், பொன்னரையன்றெழுஞ்சடிலப் புனிதனீன்ற புண்ணியமே தணிகைவளர் போதவாழ்வே, யென்னரைசே யென்னமுதே நின்பாலன்றி யெவர்க்கெடுத்தென்குறைதன்னை யியம்புகேனே. (௰௫)

மூலையொருபான் முகமொருபால் காட்டும்பொல்லாமூடமடவார்க்கடிமைமுயங்கினின்றே, னிலையொருபாலனமொருபான் மலஞ்சோதனுண்ணு மேழைமதியேன்றணிகையேந்தலைபொன், மலையொருபால் வாங்கியசெவ் வண்ணமேனிவள்ளற்றருமருந்தேநின் மலர்த்தாளேத்தேன், புலையொருவாவஞ்சகநெஞ்சுடையேனென்றன் புன்மைதனையெவர்க்கெடுத்துப் புகலுவேனே. (௰௬)

நீங்குநெஞ்சினேன் வேங்கையையனையேன் றீயமாதர்தந் திறத்துழல்கின்றேன், பாங்கிலாரொடும்பழகியவெறியேன் பாவியேனெந்தப் பரிசுகொண்டடைவேன், தேங்குகங்கையைச் செஞ்சடையிருத்துஞ் சிவபிரான்செல்வத் திருவருட்பேறே, யோங்குநற்றணிகாசலத்தமர்தவுண்மையேயெனக்குற் றிகிர்த்துணையே. (௰௭)

பட்டிமாடெனத் திரிதருமடவார் பாழ்க்குழிக்குள்வீழ்ந் தாழ்ந்திளைக்கின்றேன், றட்டிலார்புகழ் தணிகையையடையேன் சம்புவென்னுமோர் தருவொளிர்கனியே, யொட்டிலேனினை யுளத்திடைநினையேனுதவுருத்ராக்கச் சுறுமரமானேனெட்டியென்முன் னினிப்புதுமந்தோ வென்செய்வான்பிறந்தேனெளியேனே. (௰௮)

ஆறுமுகப்பெருங் கருணைக்கடலே தெய்வயானைமகிழ்மணிக்குன்றே யரசே முக்கட், பேறுமுகப்பெருஞ்சுடர்க்குட்சுடரேசெவ்வேல் பிடித்தருளும்தகையே பிரமஞானம், வீறுமுகப்பெருங்குணத்தோரிதயத்தோங்கும் விளக்கமேயானந்தவெள்ளமே முன், றேறுமிகப்பெரிய வருட்குருவாயென்னைச்சிறுகாலையாட்கொண்ட தேவதேவே. (௰௯)

ஞாலமெலாம் படைத்தவனைப் படைத்துமுக்க ணாயகனேவடிகற்கை நாதனோநான், கோலமெலாங்கொடியேனைற் குணமொன்றில்லேன் குற்றமேவிழைக்கேனிக் கோதுளோனைச், சாலமெலாஞ்செயுமடவார்மயக்கினீக்கிச் சன்மார்க்கமடையவரு டருவாய்ஞானச், சீலமெலாமுடையவருட்குருவாய்வந்து சிறுகாலையாட்கொண்ட தேவதேவே. (௨௰)

இயற்கையிலேபாசங்க ளொன்றுமிலார் குணங்களேதுமிலார்தத்துவங்களேது மிலார்மற்றேர், செயற்கையில்லார்பிறப்பில்லாரிறப்பில்லார் யாதுந்திரிபில்லார்களங்கமில்லார்தீமையொன்றுமில்லார், வியப்புறவேண்டுதலில்லார் வேண்டாமையில்லார் மெய்யேமெய்யாகியெங்கும் விளங்கியின்பமயமாய், உய்த்தருமோர்சுத்தசிவா னந்தசபைதனிலே யோங்குகின்றதனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். (௨௧)

ஒன்றுமிலாரிரண்டுமிலா ரொன்றிரண்டு மானார் உருவுமலாரருவுமலா ருருவருவுமானார், அன்றுமுளாரின்றுமுளா ரென்றுமுளாதமக்கோராதியிலாரந்தமிலாரரும்பெருஞ்சோதியினார், என்றுகனல்மதியகத்தும் புறத்தும்விளங் கிடுவார் யாவுமிலார் யாவுமுளார்யாவுமலார்யாவும், ஒன்றுறுதாமாகிநின்றார்திருச்சிற்றம்பலத்தே யோங்குகின்றதனிக்கடவுளொருவருண்டேகண்டீர். (௨௨)

குலத்திடையுங் கொடியனொரு குடித்தனத்துங் கொடியேன், குறிகளிலுங்கொடியனன்றிக்குணங்களிலுங்கடையேன், மலத்திடையேபுழுத்தசிறு புழுக்களிலுங்கடையேன்வன்மனத்துப் பெரும்பாவிவஞ்சநெஞ்சப்புலையேன், நலத்திடை

யோரணுவளவும்நண் ணுகிலேன் பொல்லாநாய்க்குநகைதோ
ன்றநின்றேன்பேய்க்குமிகவிழிந்தேன், நிலத்திடைநானேன்
பிறந்தே னின்கருத்தையறியே னிர்க்குணனேநடராசநிபுண
மணிவிளக்கே (௨௩)

அரசரெலாமதித்திடப்பே ராசையிலேயரசோ டாலெ
னவே மிகக்கிளைத்தே னருளறியாக்கடையேன், புரசமயம்
போற்பருத்தே னெட்டியெனத்தழைத்தேன் புங்கெனவும்
புளியெனவும் மயங்கியுதிர்கின்றேன், பரசும்வகைதெரிந்து
கொளேன் றெரிந்தாரைப்பணியேன்பசையறியாக்கருங்கண்
மனப் பாறைசுமந்துழல்வேன், விரசுநிலத்தேன்பிறந்தே னி
ன்கருத்தையறியேன் வியக்குமணிமன்றோங்கி விளங்குபரம்
பொருளே. (௨௪)

கொடியவெவ் வலிக் குணத்தினேனுதவாக் கூவலோர்ந்து
னேன் பாவமேபயின்றேன், கடியநெஞ்சினேன் குங்குமஞ்சு
மந்த கழுதையென வெப்பொழுதையேகழிப்பேன், விடியுமுன்
னரே யெழுந்திடாதுறங்கும் வேடனேன்முழு மூடரிற்பெரி
யேன், அடியனைதற் கென்செயக்கடவே னப்பனேயெனையா
ண்டுகொண்டருளே (௨௫)

துருக்கலோகொடுமை கருங்கலோ வயிரச் சூழ்கலோவெ
னக் காழ்கொளுமனத்தேன், தருக்கலாணவக் கருக்கலோடு
ழல்வேன் சந்தைநாயெனப்பந்தமுற்றலைவேன், திருக்கெலா
ம்பெறு வெருக்கெனப்புகுவேன் தீயனேன்பெரும் பேயனே
னுளந்தான், உருக்கலாகுதற்கென்செயக்கடவே னுடையவா
வெனை யுவந்துகொண்டருளே. (௨௬)

மருந்தறியேன் மணியறியேன் மந்திரமொன்றறியேன்
மதியறியேன்விதியறியேன் வாழ்க்கைநிலையறியேன், திருந்
தறியேன்றிருவருளின் செயலறியேனகந்தான் செய்தறியே
ன்மனமடங்குந் திறத்தினிலோரிடத்தே, யிருந்தறியேனறிந்
தோரை யேத்திடவுமறியேனெந்தைபிரான் மணிமன்றமெ
ய்தவறியேனே, யிருந்திசைசெலவறியேனெங்ஙனநான்புகு
வேன்யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே,

அகங்காரக்கொடுங்கிழங்கை யகழ்ந்தெறியவறியே னறி
வறிந்தவந்தணர்பாற் செறியுநெறியறியேன், சகங்காணவுறுத
வர்போல் நலம்புரிந்துமறியேன் நச்சுமரக்கனிபோலே யிச்
சைகனிந்துழன்றேன், மகங்காணும்புலவரெலாம்வந்துதொ
ழநடிக்கும் மணிமன்றந்தனையடையுமவழியுமறிவேனோ, இக
ங்காணத்திரிகின்றே னெங்ஙனநான்புகுவேன்யார்க்குரைப்
பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே. (௨௮)

தேகமுறுபூதநிலைத் திறஞ்சிறிதுமறியேன்சித்தாந்தநிலை
யறியேன சித்திநிலையறியேன், யோகமுறுநிலைசிறிது முணர்
ந்தறியேன்சிறியே னுலகநடையிடைக்கிடந்தே யுழைப்பாரிற்
கடையேன், ஆகமுறுதிருநீற்றி னொளிவிளங்கவசைந்தே யம்
பலத்திலாடுகின்ற வடியையறிவேனோ,ஏகவனுபவமறியேனெ
ங்ஙனநான்புகுவேன் யார்க்குரைப்பேனென்னசெய்வேனே
துமறிந்திலனே. (௨௯)

சாதிமதஞ் சமயமெனுஞ் சங்கடம் விட்டறியேன் சாத்
திரச்சேறாடுகின்ற சஞ்சலம்விட்டறியேன் ஆதியந்தநிலையறி
யே னலையறியாக்கடல்போ லானந்தப்பெரும்போகந் தமர்
ந்திடவுமறியேன், நீதிநெறிநடந்தறியேன் சோதிமணிப்பொ
துவில் நிருத்தமிடுமொருத்தர்திருக் கருத்தையறிவேனோ, ஏ
திலாசாருலகினிடை யெங்ஙனநான்புகுவேன் யார்க்குரைப்
பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே, (௩௰)

வெறுத்துரைத்தேன் பிழைகளெலாம் பொறுத்தருளல்
வேண்டும் விளங்கறிவுக்கறிவாகி மெய்ப்பொருளினடிப்போ
ய, கறுத்துரைத்தார்தமக்குமருள் கனிந்துரைக்கும்பெரிய க
ருணைநெடுங்கடலேமுக்கண்ணுடைய கரும்பே, மறுத்துரைப்பா
ரெதவனருணீ வழங்குகினுமென்று மறுத்திடினுமுன்னையலா
ன்மற்றொருசாரறியேன். செறுத்துரைத்தவுரைகளெலாந்
திருவருளேயென்று சிந்திப்பதல்லாமற் செய்வகையொன்றி
லனே. (௩௧)

குற்றமொருசிறிதெனினுங் குறித்தறியேன் வேறோர் கு
றையதனாற்சிலபுகன்றேன் குறித்தறியேன்மீட்டும், சற்றுமன

திருவுடையாய்சிற்சபைவாழ் சிவபதியேயெல்லாஞ் செ
ய்யவல்லதனித்தலைமைச சித்தசிகாமணியே, யுருவுடையென்
னுயிர்க்குயிரா யொளிர்கின்ற வொளியே யுன்னுதொறுமென்
னுளத்தே யூறுகின்றவமுதே, யருவுடையபெருவெளியா யது
விளங்குவெளியா யப்பாலுமாய்நிறைந்த வருட்பெருஞ்சோ
தியனே,மருவுடையாள்சிவகாம வல்லிமணவாளாவந்தருள்க
வருட்பெருஞ்சோதி தந்தருள்கவிரைந்தே (௪௧)

மறப்பறியாப்பேரறிவில் வாய்த்தபெருஞ்சுகமே மலைவ
றியாநிலைநிரம்ப வயங்கியசெம்பொருளே, இறப்பறியாத்திரு
நிலையி லென்னைவளர்த்தருளு மென்னுடையநற்றாயே யெந்
தாயேயினது, சிறப்பறியாவுலகமெலாஞ் சிறப்பறிந்துகொள
வே சித்தசிகாமணியேநீ சித்தியெலாம்விளங்கப்,பிறப்பறியா
ப்பெருந்தவரும் வியப்படைந்துதருவாய் பெருங்கருணையரசே
நீதருந்தருணமிதுவே. (௪௨)

பாவிமனக்குரங்காட்டம் பார்க்கமுடியாதே பதிவெறு
த்தேனிதிவெறுத்தேன் பற்றனைத்துந்தவிர்த்தே, னாவியுடல்
பொருளையுன்பாற் கொடுத்தேனுன்னருட்பே ராசைமயமா
கியுனை யடுத்துமுயல்கின்றேன், கூவியெனை யாட்கொள்ள
நினையாயோநினது குறிப்பறியேன்பற்பலகால் கூவியிளைக்கி
ன்றேன், தேவிசிவகாமவல்லி மகிழுமணவாளா தெருணிறை
வானமுதளிக்குந் தருணமிதுதானே. (௪௩)

காட்டையெலாங்கடந்துவிட்டே னாட்டையடைந்துன
து கடிநகர்ப்பொன்மாடகாட்சிகண்குளிரக்கண்டேன், கோ
ட்டையெலாங்கொடிநாட்டிக் கோலமிடப்பார்த்தேன் கோ
யிலின்மேலவாயிலிலே குறைகளெலாந்தவிர்ந்தேன், சேட்
டையற்றுக்கருவியெலா மென்வசநின்றிடவே சித்தியெலாம்
பெற்றேனுனதிருசிற்றம்பலமேல், பாட்டையெலாம்பாடுகி
ன்றே னிதுதருணம்பதியே பலந்தருமென்னுளந்தனிலேகல
ந்துநிறைந்தருளே. (௪௪)

அவ்வண்ணம்பழுத்தவரு மறிந்திலர்சற்றெனினு மறிந்த
னமோர்சிறிதுகுரு வருளாலேயகதச், செவ்வண்ணம்பழுத்த

தனித் திருவருக்கண்டெவர்க்குந் தெரியாமலிருப்பமெனச்சி
ந்தனைசெய்திருந்தேன். வெவ்வண்ணமிருந் தவெனைப்பிராரிய
த்தெருவிலிழுத்துவிடுத்ததுகடவ ளியர்கையருட் செயலோ
மவ்வண்ணப்பெருமாயை தன்செயலோவறியேன் மனமாலை
பாய்வதுகாண் மன்றினடத்தரசே. (௪௫)

கருங்களிறுபோன்மதத்தாற் கண்செருக்கி வீணேகால
மெலாங்கழிக்கின்ற கடையர்கடைத் தலைவாய்,ஒருங்குசிறியே
ன்றனைமுன்வலிந்தருளேவடிவா யுள்ளமர்ந்தேயுள்ளதனையுள்
ளபடியுணர்த்திப், பெருங்கருணையாலளித்த பேறதனையின்
றும் பிராரியாவகைபெருதும்பெறுதுமெனவுள்ளே, மருங்கி
ருந்தவெனைவெளியி லிழுத்துவிட்டதென்றே மனமாலைபாய்
வதுகாண் மன்றினடத்தரசே. (௪௬)

மஞ்சனையகுழலம்மை யெங்கள்சிவகாமவல்லி மகிழ்ந்திட
மேனி வண்ணமதுசிறிதே, நஞ்சனையசொரூபயென்கண் டிரி
ப்புரிந்தவருளை நாடறியாவகையின்றுநீடநினைத்திருந்தேன்,
அஞ்சனைய பிறரெல்லா மறிந்துபலபேசி யலர்தூற்ற வளிய
வெனை வெளியிலிழுத்திட்டு, வஞ்சனைசெய்திடவந்த விதியை
நினைந்தையோ மனமாலைபாய்வதுகாண் மன்றினடத்தரசே.

அரிபிரமருருத்திரரு மறிந்துசொள்ளமாட்டா தலமாவு
மீதென்னவதிசயமோமலத்திற், புரிபுழுவிலிழிந்தேனைப்பொ
ருளாக்கியருளாம்பொருளளிக்கப்பெற்றனனிப்புதுமைபிறர
றியா, துரிமைபெறவிருப்பனென வுள்ளிருந்தவென்னை யுல
கறியவெளியிலிழுத் தலகில்விருத்திபிறுல், வரிதலையிட்டாட்
டுகின்ற விதியைநினைந்தையோ மனமாலைப்பாய்வதுகாண்
மன்றினடத்தரசே. (௪௮)

அப்பாகான்பற்பலகா லறைவதென்னேயடியே னச்ச
மெலாந்துன்பமெலா மறுத்துவிரைந்துவந்தே, யிப்பாரிலிது
தருண மென்னையடைந்தருளி யென்னமெலாமுடித்தென்
னையேன்றுகொளாவெனிலோ, தப்பாமலுயிர்விடுவேன் சத்
தியஞ்சத்தியமின் றுளிணைகளறிகவிது தயவுடையோயெவர்க்
குந், துப்பாகித்துணையாகித் துலங்கியமெய்த்துணையே சத்தி
சிவானந்தவருட் சோதிநடத்தரசே. (௪௯)

வாழையடிவாழையென வந்ததிருக்கூட்ட மரபினில்யா
னொருவனன்றோ வகையறியேனிந்த, வேழைபடும்பாடுனக்கு
த் திருவுளச்சம்மதமோ விதுதகுமோவிதுமுறையோவிதுதரு
மந்தானோ, மாழைமணிப்பொது நடஞ்செய் வள்ளால்யா
னுனக்கு மகனலனோநீயெனக்கு வாய்த்ததந்தையலையோ, கோ
ழையுலகுயிர்த்துயர மினிப்பொறுக்கமாட்டேன் கொடுத்தரு
ணின் னருளொளியைக் கொடுத்தருளிப்பொழுதே.

பொய்கொடுத்தமனமாயைச் சேற்றில்விழா தெனக்கே
பொன்மணிமேடையிலேறிப் புந்திமகிழ்ந்திருக்கக், கைகொ
டுத்தீருலகமெலாங்களிக்கவுலவாதகாலிரண்டுங்கொடுத்தீரெ
க்காலுமழியாத, மெய்கொடுக்கவேண்டுமுனைவிடமாட்டேன்
கண்டீர் மேலேறினேனினிக்கீழ் விழைந்திறங்கேனென்றும்,
மைகொடுத்த விழியம்மை சிவகாமவல்லி மகிழநடம்புரிகின்
றீர் வந்தருள்வீர்விரைந்தே. (௩௧)

மின்போலேவயங்குகின்ற விரிசடையீரடியேன் விளங்
குமிணையடிகள்மெய்யழுந்தப்பிடித்தேன், முன்போலேயே
மாற்றிவிடமாட்டேன்கண்டீர்முனிவறியீரினியொளிக்கமுடி
யாதுமக்கே, யென்போலேயிரக்கம்விட்டுப் பிடித்தவர்களி
லையே யென்பிடிக்குளிசைந்ததுபோலிசைந்ததிலையிறைக்கே,
பொன்போலேமுயல்கின்ற மெய்த்தவர்க்குமரிதே பொய்த்
வனென்செய்தவம்பாண் வையகத்திற்பெரிதே. (௩௨)

தத்துவமெல்லாமென்றன் வசமாக்கிச்சாகாவரத்தையு
ந்தந்தெனைத்தேற்றி, யொத்துவந்தென்னொடுகலந்து கொண்டெ
ல்லா வுலகமும்போற்றவுயர்நிலையேற்றிச், சித்தியெலாஞ்செ
யச் செய்வித்துச்சத்தஞ் சிதம்வெளிப்படச்சத்தாந்த,
அத்திருவீதியி லாடச்செய்தீரே யருட்பெருஞ்சோதியென்
னாண்டவர்நீரே. (௩௩)

மருந்திதுமணியிதுமந்திரமிதுசெய் வகையிதுதுறையிது
வழியிதுவெனவே, யிருந்தெனுளறிவித்துத் தெள்ளமுதளித்
தே யென்னையுந்தன்னையு மேகமதாக்கிப், பொருந்தியெலாஞ்

செய வலைலமோரசைத்திப் புண்ணியவாழ்க்கையில் கண்ணியே
சாந்த, வருந்தவவீதியிலாடச்செய்நீரோ யருட்பெருஞ்சோதி
யென் ஞண்டவர்நீரோ. (௰௪)

படமாட்டேன்றுயரசிறிதும் படமாட்டேனினிநான் ப
யப்படவமாட்டேனுன் பதத்துணையேபிடித்தேன் விடமாட்
டேனெமாந்து விடமாட்டேன்கண்டீர்மெய்ம்மையிதுநும்மா
ணை விளம்பினனும்மடியேன, கெடமாட்டேன்பிறர்மொழிக
ள கேட்டிடவமாட்டேன் இளவொளியம்பலத்தாடல்வல்லரொ
ளிநும்மல்லால், நடமாட்டேனென்னுளத்தே நான்சாகமாட்
டே னல்லதிருவருளாலே நான்றுணனேனே. (௰௫)

பாயிரமாமறைகளெலாம் பாடுகின்றபாட்டுன் பாட்டே
யென்றறிந்துகொண்டேன்பரம்பொருளுன்பெருமை, ஆயிர
மாயிரங்கோடி நாவுடையோரெனினு மனுத்துணையும்புகலரி
தே லக்தோவிச்சிறியேன், வாயிரக்காவகைபுகலத்துணிந்தே
னென்னுடைய மனத்தாசையொருகடலோ வெழுகடலிற்
பெரிதே, சேயிரவகாமுனமெடுத்தே யணைத்திடுந்தாயணையா
ய் திருச்சிற்றம்பலம் விளங்குஞ் சிவஞானகுருவே. (௰௬)

கருணாநிதியேயபயமபயங் கனகாகரனேயபயமபயம்
அருணாடகனேயபயமபய மழகாவமலாவபயமபயம்
தருணாதவனேயபயமபயந் தனிநாயகனேயபயமபயம்
தெருணாடுறவாயபயமபயந் திருவம்பலவாவபயமபயம். (௰௭)

அருள்விளக்கேயருஞ்சுடரே யருட்சோதிச்சிவமே யருளமுதேயருணிறைவே யருள்வடிவப்பொருளே, யிருள்கடித்தெனுளமுழுது மிடங்கொண்டபதியே யென்னறிவேயென்னுயிரே யெனக்கினியவுறவே, மருள்கடிந்தமாமணியே மாற்றறியாப்பொன்னே மன்றில்நடம்புரிகின்றமணவாளாவெனக்கே, தெருளளித்ததிருவாளா ஞானவுருவாளா தெய்வநடத்தரசேநான் செய்மொழியேற்றருளே. (௰௮)

உன்னையுன்னைத்தெவிட்டாதேநினைத்துநினைத்தென்னுடம்போ,
டுயிருணர்வுங் கலந்துகலந்தன்னகத்தும்புறத்துந் தன்னியல,

ண்ணம்பரவும்பொங்கிசிறைந்தாரங்கே ததும்பியென்றன்மய மெல்லாந்தன்மயமேயாக்கி, யெண்ணியவென்னெண்ணமெ லா மெய்தவொளிவழங்கி யிலங்குகின்றபேரருளா மின்னமு தத்திரளே, புண்ணியமேயெனதுபெரியபொருளேயென்னரசே புன்மொழியெனநிகழாதேபுனைந்துமகிழ்ந்தருளே. (௫௯)

சாதிகுலஞ்சமயமெலாந்தவிர்த்தெனைமேலேற்றித் தனித்த திருவமுதளித்ததனித்தலைமைப்பொருளே, ஆதிநடுக்கடைகாட் டா தண்டபகிரண்ட மாருயிர்க ளகம்புறமற்றனைத்துநிறை யொளியே, யோதியுணாந்தவரெலலாமெனைக்கேட்கவெனை த்தானேதாமலுணர்ந்துணர்வாமுருவுறச்செயயுறவே, சோதி மயமாய்விளங்கித் தனிப்பொதுவில்நடிக்குந் தூயநடத்தரசே யென் சொலலுமணிந்தருளே. (௬0)

கலலார்க்குங்கற்றவாக்குங்களிப்பருளுங்களிப்பே காணா ர்க்குங்கண்டவாக்குங் கண்ணளிக்குங்கண்ணே, வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக்குமவரமே மதியார்க்கும்மதிப்பவர்க் கும் மதிகொடுக்குமதியே, நல்லார்க்கும்பொல்லார்க்கும் நடு நின்றநடுவே நரர்களுக்குஞ்சுரர்களுக்கும் நலங்கொடுக்குநல மே, யெல்லார்க்கும்பொதுவில்நட மிடுகின்றசிவமே யென்ன ரசேயான்புகலு மிசையுமணிந்தருளே. (௬௧)

காட்சியுறக்கண்களுக்குக் களிக்கும்வண்ணமுளதாய்க் கை யுமெய்யும் பரிசிக்கச சுகபரிசத்ததுவாய்ச், சூழ்ச்சியுறநாசிக் குச் சுகந்தஞ்செய்குவதாய்த தூயசெவிக்கினியதொரு [illegible] ததததுவாய், மாட்சியுறவாய்க்கினிய பெருஞ்சுவையீ[illegible]ய் மறைமுடிமேல்பழுத்தெனக்கு வாய்த்தபெரும்பழமே,[illegible]சி யுறவருளொளியாறறிருச்சிறறம்பலததேயாடல்புரியரசேயெ ன் னலங்கலணிந்தருளே. (௬௨)

கையாததீங்கனியேகயக்காதவமுதே கரையாததற்கண் டேபுரையாதகரும்பே, பொய்யாதபெருவாழ்வே புகையாத கனலே போகாதபுனலேயுள் வேகாதகாலே, கொய்யாதநறு மலரே கோவாதமணியே குளியாதபெருமுத்தே யொளியாத வொளியே, செய்யாதபேருதவிசெய்தபெருந்தகையே தெய் வநடத்தரசேயென் சிறுமொழியேற்றருளே. (௬௩)

க்குக், கையானையென்னையெடுத் தணைத்துக்கொண்ட கையானை யென்னைக்கென்றுங் கையாதானை, மெய்யானைமெய்யுலகு மேத்தவென்னை யீன்றானைக் கண்டுகளித் திருக்கின்றேனே. (௬௮)

மருந்தானைமணியானை வழுத்தாநின்ற மந்திரங்களானானைவானநாட்டு, விருந்தானையுறவானைநண்பினானைமேலானைக்கீழானைமேல்கீழெனப்.பொருந்தானையென்னுயிர்ற்பொருந்தினானைப் பொன்னானைப்பொருளானைப் பொதுவாமெங்கு, மிருந்தானையிருப்பானையருக்கன்றானை யெம்மானைக்கண்டுகளித் திருக்கின்றேனே. (௬௯)

அருளரசையருட்குருவை யருட்பெருஞ்சோதியை யென்னம்மையையென்னப்பனையென் னுடையவனையமுதைத், தெருளுறுமென்னுயிரையென்ற னுயிர்க்குயிரை யெல்லாஞ்செய்யவல்லதனித்தலைமைச சித்தசிகாமணியை, மருவுபெருவாழ்வையெல்லா வாழ்வுமெனக்களித்த வாழ்முதலைமருந்தினமா மணியையென கண்மணியைக் கருணைநடம்புரிகின்றகனகசபாபதியைக் கண்டுகொண்டேன்கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே. (௭௦)

திருத்தகுவேதாந்தமொடு சித்தாந்தமுதலாந் திகழ்கின்ற வந்தமெலாந்தேடியுங்கண்டறியா, வொருத்தனையுமொளியையொளிருமொளிக்குளொளியை யுளபடியுள்ளவனை யுடையபெருந்தகையை, நிருத்தனை மெய்ப்பொருளானநின்மலனைச்சிவனை நித்தியனைச்சத்தியனைஞானக்கூத்தனை மெய்யனை, கருத்தனைச்சிற்சபையோங்குங் கடவுளை மெய்யலகனைக் கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே. (௭௧)

அருட்சோதித்தெய்வமெனை யாண்டுகொண்டதெய்வ மம்பலத்தேயாடுகின்ற வானந்தத்தெய்வம், பொருட்சாருமறைகளெலாம் போற்றுகின்றதெய்வம் போதாந்தத்தெய்வமுயர் நாதாந்தத்தெய்வ, மிருட்பாயங்கெடப்பொளியீந்தருளுந் தெய்வ மென்னையுமென்னியவா றெனக்கருளுந்தெய்வம், தெரு

ட்பாட லுவந்தெனையுஞ் சிவமாக்குந்தெய்வம்சிற்சபையில் வி
ளங்குகின்ற தெய்வமதேதெய்வம். (௭௨)

என்னிதயக்கமலத்தே யிருந்தருளுந்தெய்வ மென்னிர
ண்டுகண்மணிக்கு ளிலங்குகின்றதெய்வம், பொன்னடியென்
சென்னியிலே பொருந்தவைத்ததெய்வம் பொய்யாததெய்வ
மிடர் செய்யாததெய்வ, மன்னியமல்லாத தெய்வ மறிவான
தெய்வம் வறிவுக்கறிவாமென் னன்பானதெய்வம், சென்னி
லையிற்செய்பொருளாய்த் திகழ்கின்றதெய்வம்சிற்சபையில் வி
ளங்குகின்ற தெய்வமதேதெய்வம். (௭௩)

பதியேயெம்பரனேயெம் பரம்பரனேயெமது பராபர
னேயானந்தப்பதந்தருமெய்ஞ்ஞான, நிதியேமெய்ந்நிறைவே
மெய்ந்நிலையேமெய்யின்ப நிருத்தமிடுந் தனித்தலைமைச்சிபுண
மணிவிளக்கே. கதியேயென்கண்ணேயென் கண்மணியேயெ
னதுகருத்தேயென் கருத்திலுற்றகனியேசெங்கனியே, துதி
யேயென்றுணையேயென் றோழாவென்றனத்தே சுத்தநடம்பு
ரிகின்ற சித்தசிகாமணியே. (௭௪)

அற்றதவடிச்சிறியேற் காற்றல்மிகக்கொடுத்தே யம்மை
யுமாயப்பனுமா யாதரித்தன்புடனே, போற்றாதகுற்றமெலா
ம் பொறுத்தருளியெனைப்பூதலத்தார்வானகத்தார் போற்
றிமதித்திடவே, யேற்றதவுயர்நிலைமை வேற்றியெல்லாம்வ
ல்லவிறைமையுந் தந்தருளியவென்னிறையவனேயெனக்கே,
தோற்றாததோற்றுவித்த துரையேயென்னுள்ளத்தேசுத்தநட
ம்புரிகின்ற சித்தசிகாமணியே. (௭௫)

ஆவாவென்றெனையாட்கொண்டருளியதெள்ளமுதே ய
ம்மையென்னப்பாவென்னையாவென்னரசே, சாவாதவரமெ
னக்குத் தந்தபெருந்தகையே தயாநிதியே சிற்சபையிற் றனி
த்த பெரும்பதியே, யோவாதென்னுள்ளகத்தே யூற்றெழும்
பேரன்பே யுள்ளபடியென்னறிவினுள்ளபெருஞ்சுகமே, நீவா
வென்மொழிகளெலா நிலைத்தபயன்பெறவே நித்திரைதீர்ந்
தேனிரவு நீங்கிவிடிந்ததுவே. (௭௬)

நானுண்டதொருதருண மென்னையறிந்திலனுலகந் தன்னையு
நானறியேன், தேடரியநறும்பாலுந் தேம்பாகுநெய்யுந்தேனு
மொக்கக்கலந்ததெனச் செப்பினுஞ்சாலாதே, ஈடறியாச்சு
வைபுகல வென்றாலேமுடியாதென்னடியோவவ்வமுதம் பொ
ன்னடிதானிகரே. (௮௬)

தாழ்குழலாயென்னைச்சற்றே தனிக்கவிட்டால்ஞானசபை
த்தலைவாவருகின்ற தருணமிதுநான்றான், வாழ்வடைஞான
மண்டபத்தே பளிக்கறையினூடே மலரணையையலங்கரித்து
வைத்திடுதல்வேண்டும், சூழுறநானலங்கரிப்பே னென்கின்றா
ய்தோழி திரைக்குமனமில்லையதுதுணிந்தறிந்தேன்பலகால்,
ஏழ்கடலிற்பெரிதன்றோ நானடைந்தசுகமிங் கிதைவிடநான்
செய்பணிவே றெப்பணிநீயியம்பே. (௮௭)

வான்கண்டபிரமர்களும் நாரணரும்பிறரும் மாதவம்ப
ன்னாட்புரிந்துவருந்துகின்றாரந்தோ, நான்கண்டகாட்சியவர்
கண்டிலரேயுலகில் நானொருபெண்செய்ததவ மெதுதவமோ
வறியேன், கோன்கண்டகுடிக்கொன்றுங் குறைவில்லையேய
ண்ட கோடியெலாந் தனிப்பெருஞ்செங் கோனடத்துமிறை
வர், தான்கண்டகுடியானேன் குறைகளெலாந்தவிர்ந்தேன்
தனித்தவளமாடமிசை யினித்திருக்கின்றேனே (௮௮)

திருச்சிற்றம்பலத்தின்பத் திருவுருக்கொண்டின்பத்திரு
நடஞ்செய்தருள்கின்ற திருவடிக்கேதொழும்பாய் அருச்சிக்
கும்பேரன்ப ரறிவின்கணறிவா யவ்வறிவில்விளைந்தசிவா
னந்தவமுதாகிப், பரிசசிகுமவ்வமுதினிறைந்தசுவையாகிப் ப
யனாகியத்தினனு பவமாகிநிறைந்தே, உருச்சிகுமெனமறை
களாகமங்களெல்லா மோதுகின்ற வெளியவர்தம் மொழியு
ரைப்பதெவரே. (௮௯)

கூசுகின்றதென்னடிநா னம்பலத்தேநடிக்குங் கூத்தாடி
க்கணவருக்கேமாலையிட்டாயெனவே,யேசுகின்றாரடியோ
வண்டபகிரண்டத் திருக்கின்றசத்தர்களுஞ் சத்திகளும்பிறரு
ம், பேசுகின்றவார்த்தையெலாம் வள்ளலருட்கூத்தின் பெரு

மையலால்வேறொன்றும் பேசுகின்றதிலையே, வீசுகின்றபெ
ருஞ்சோதித் திருக்கூத்தினறிறமே வேதமுடனாகமங்கள் வி
ளம்புகின்றதனறே. (௧௦)

கொடியிடைப்பெண்பேதாய்நீ யம்பலத்தேநடிக்குங் கூ
த்தாடியென்றெனது கொழுநர்தமைக்குறித்தாய் படியிடத்
தேவானிடத்தே பாதலத்தேயண்ட பகிரண்டகோடியிலே ப
திவிளக்கமெல்லாம், அடிமலர்கொண்டையர்செயுந் திருக்கூ
த்தின்விளக்க மாகுமிதுசத்தியமென் றருமறையாகமங்கள்,
கெடியுறவே பறைபடிக்கத் திரிகின்றவவற்றைக் கேட்டறிந்
துக்கொள்வாய்நின் வாட்டமெலாந்தவிர்ந்தே. (௧௧)

பொய்பிடித்தாரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்
பொதுநடங்கண் டுளங்களிக்கும் போதுமணவாளர், மெய்பி
டித்தாய்வாழியநீ சமரசசன்மார்க்கம்விளங்கவுலகத்திடையே
விளங்குகவென்றெனது, கைபிடித்தார் நானுமவர்கால் பிடித்
துக்கொண்டேன் களித்திடுகவினியுனைநாங் கைவிடோமெ
னனும், மைபிடித்தவிழியுலக ரெல்லாருங்காண மாலையிட்
டோமென்றெனக்கு மாலையணிந்தாரே. (௧௨)

காமாலைக்கண்ணர்பலர் பூமாலைவிழைந்தார் கணங்கொ
ண்டகண்ணர்பலர்மணங்கொள்ளத்திரிந்தார், கோமாலைமன
சசெருக்கால மயங்கியுடம்பெல்லாங்குறிகொண்டகண்ணர்ப
லர் வெறிகொண்டிங்கலைந்தார், ஆமாலையவரெல்லாங் கண்டு
ளநாணுறவே யருமபெருஞ்சோதியரென்னை விரும்பிமணம்
புரிந்தார், தேமாலையணிகுழலாய் நான்செய்ததவந்தான் தே
வர்களோ மூவர்களுஞ் செயநிலர்கண்டறியே. (௧௩)

மாலையிலேயுலகியலார் மகிழ்நரொடுகலத்தல் வழக்கம
துகண்டனை நீ மணவாளருடனே, காலையிலேகலப்பதற்கிங்கெ
ணப்புறமபோவெனறுய கண்டிலநீதநிசயமென் றுரையே
லெனறோழி, ஓலையிலேபொறித்ததைநீயுன்னுளத்தேகருதி யு
ழல்கின்றாயாதலிலிவ் வுளவறியாய்தருமச், சாலையிலேசமரச
சன மார்க்கசங்கந்தனிலே சுற்றிருந்தாயெனிலிதனையுற்றுண
ர்வாய்காணே. (௧௪)

அறங்குலவுதோழியிங்கே நீயுரைத்தவார்த்தை யறவறி யார்வார்த்தையெத னுலெனிலிம்மொழிகேள், உறங்குவது மு விழிப்பதும்பின் னுண்ணுவது மிறத்தலுறுவதுடன் பிறத்தல்ப ல பெறுவதுமாயுழலும், மறங்குலவுமனுக்கள்பலர் செய்தவி ரதத்தால் மதத்தலைமை பூண்டதொரு வாய்த்தனரங்கவர்பா ல், இறக்கலிலென்பேசுதலா லென்பயனேடுஞ்செய் யிறை வரடிப்புகழ்பேசி யிருக்கின்றேன்யானே. (௧0௪)

உலகுபுகழ்திருவமுதக் திருச்சிற்றம்பலத்தே யுடையவரி ன்றதவினர்நா னுண்டுகுறைதீர்த்தே, னிலகுசிவபோகவடி வாகிமகிழ்கின்றே னிளைப்பறியேன்றவிப்பறியே னிடர்செய் பசியறியேன், விலகலிலாத்திருவனையீர் நீவிரெலாம்பொதித் தே விரைந்துவம்மி னம்பலத்தே விளங்குதிருக்கூத்தி, னலக றியாத்திறம்பாடி யாடுதுநாமிதுவே யருளடையுநெறியென வே தாகமமார்ப்பனவே. (௧0௫)

ஒளியாகி யுள்ளொளியா யுள்ளொளிக் குள்ளொளியா யொளியொளியி னொளியாயவ் வொளிக்குளுமோ ரொளியா ய், வெளியாகிவெளிவெளியாய் வெளியிடைமேல்வெளியாய் மேல்வெளிமேற்பெருவெளியாய்ப் பெருவெளிக்கோர் வெளி யாய், அளியாகியதுவாகி யதுவுமல்லாதாகி யப்பாலாயப்பா லு மல்லவாய்நிறைவார், தளியாகியெல்லாமாய் விளங்குகின் றஞானசபைத்தலைவாநின்னியலைச்சாற்றுவதெவ்வணமே.

மாற்றறியாதசெழும்பசும் பொன்னேமாணிக்கமேசுடர் வண்ணக்கொழுந்தே, கூற்றறியாதபெருந்தவருள்ளக் கோயி லிருந்தகுணப்பெருங்குன்றே, வேற்றறியாதசிற்றம்பலக் கனி யே விச்சையில்வல்லவர் மெச்சவிருந்தே சாற்றறியாதவென் சாற்றுங்களித்தாய் தனிநடராசவென்சற்குருமணியே (௧0௭)

உருவமுமருவமு முபயமுமுளதாயுளதிலதாயொளிரொ ருதனிமுதலே, கருவினிலெனக்கருள் களிந்தளித்தவனே க ண் ணுடையாய்பெருங்கடவுளர்பதியே, திருநிலைபெறவெனை யுணர்த்தின்றபரமே சிவகுருதுரியத்திற்றெளியறுபவமே, தரு வளர்பொழில்வடற் சபைநிறையொளியே தனிநடராசவென் சற்குருமணியே. (௧0௮)

என்னை மணமாலையிட்டாரென்னுயிரிற் கலந்தாரெல்லாஞ்செய்வல்லசித்த ரெனக்களித்ததனை, யின்னவுலகினரறியா ராதலினாற்பலவே யியம்புகின்றாரியம்புகநந் தலைவர்வருந் தருணம், மன்னியகாலையிலாகு மாளிகையைவிளக்கி மங்கலங்கள்புனைந்திடுக மங்கையைமடையேல், தன்னிகர்தானும் பொதுவிலநடம்புரிவாரானை சத்தியஞ்சத்தியமாதே சத்தியஞ்சத்தியமே. (௧0௯)

இளையனந்த மறையாலும் நிச்சயிக்கக்கூடாக் கிளரொளியாரென்னளவிற் கிடைத்ததனித்தலைவ, ரிளையவெனக்குணர்த்தியதை யானறிவேனுலகரறிவாரோ வவருரைகொண் டையமுறேலிங்கே, யிளவடையேன்மாளிகையை மங்கலங் கணிரம்ப வினிதுபுனைந்தலங்கரிப்பாய் காலையிதுகண்டாய், தளர்வறுசிற்றம்பலத்தே நடம்புரிவாரானை சத்தியஞ்சத்தியமாதேசத்தியஞ்சத்தியமே. (௧0௰)

கட்டோடேகனத்தோடே வாழ்கின்றோமென்பீர்கண்ணோடே கருத்தோடே கருத்தனைக்கருதீர், பட்டோடே பணியோடே திரிகின்றீர்தெருவில் பசியோடேவந்தாரைப்பார்க்கவுநேரீர், கொட்டோடேமுழக்கோடே கோலங்காண்கின்றீர் குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக்குறியீர், எட்டோடேயிரண்டுசேர்த் தெண்ணவுமறியீ ரெத்துணைகொள்கின்றீர் பித்துலகீரே. (௧௧௧)

சாமாந்தராகாததாஞ்சிறிதுணரீர் தத்துவஞானத்தையிற்றெனத்தெரியீர், மாமாந்தக்கோயுறமருமூலியை குழைக்கீர் வாழ்க்கையிலற்ப மகிழ்ச்சியும்பெறுதீர், காமாந்தகாரத்துறக் கண்மூடித்திரிவீர் கற்பனைகறங்கலீர் கருத்தனைக்கருதீர், தேமாக்கனிக்குலைகின்றீர் விழிக்கின்றீ ரெத்துணைகொள்கின்றீர் பித்துலகீரே. (௧௧௨)

சாதியிலேமதங்களிலே சமயநெறிகளிலே சாத்திரச்சந்தடிகளிலே கோத்திரச்சண்டையிலே, ஆதியிலேயபிமானித் தலைகின்றவுலகீ ரலைந்தலைந்துவீணேநீரழிதலழகலவே, நீ

யிலேசன் மார்க்க னிலைதனிலே நிறுத்தியெந்தனித்தலைவரொ
ருத்தரோதாமே, வீதியிலேயருட்சோதி விளையாடல்புரிய
மேவுகின்ற தருணமிது கூவுகின்றேனுமையே. (௧௧௩)

காடுவெட்டி நிலந்திருத்திக் காட்டெருவும்போட்டுக் கரு
ம்பைவிட்டுக் கடுவிரைத்துக் களிக்கின்றவுலகீர், கூடுவிட்டுப்
போயினபின் எதுபுரிவீரெங்கே குடியிருப்பீரையோ நீர் குறி
த்தறியீரிங்கே, பாடுபட்டீர்பயனறியீர் பாழ்க்கிறைத்துக் கழி
த்தீர் பட்டதெலாம்போதுமிது பரமர்வருந்தருணம், ஈடுகட்டி
வருவீரே லின்பமிகப்பெறுவீ ரெண்மையுரைத்தேனலா னு
ண்மையுரைத்தேனே. (௧௧௪)

சத்தியவேதாந்தமெலாஞ் சித்தாந்தமெல்லாந் தனித்த
னிமேலுணர்ந்துணர்ந்து முணர்தற்கரிதாய், சித்தியெனு
சபைநடுவே நிறைந்துநடம்புரியு நித்தபரிபூரணனைச் சித்தசி
காமணியை, அத்தகையோர்பெரும்பதியை யருமருந்தை யடி
யேனுயிரையென்னுயிரிலேயமர்ந்த வரநிதியைச், சித்தியெ
லாமெனக்களித்த சிவகாமியையுலகர் சிந்தைசெய்து வாழ்த்து
கின்றேன் சிந்தையெலாந்தவிர்ந்தே. (௧௧௫)

வாங்குவின்றுதன் மங்கையர்விழியான மயங்கிவஞ்சா
யால் வருந்தாமோ மாறு, மேங்குகின்றதுவெனப்பயன் கண்டா
யெழிலையகா வொளாற்றூரக வெவ்வளுடலம்போகாது. தேங்குலவ
வுசெங் கருமபுயமன் தாயத் ததும்பதனைப் பாதஞ் சித்தத்தன்
ளூறி, யோங்குமொருசிவசண்முகசிவவோ மோருசிவாயமெ
ன வோன்றுதிமனனே. (௧௧௬)

சொல்லவாவியதொண்டர்தம்மனத்திற சுதந்தரங்கொ
டு தோன்றியதனையைக் கல்லவாவிய வேழையேனெஞ்சக
ரைந்து வந்திடக்கலந்தியங்களிப்பைச், செல்லவாவியபொழு
து திருவொற்றியூரத்தேனைத் தில்லைச் சிற்றம்பலத்தாடு, நல்லவாழ்
வினைநான் மறப்பொருளை நமசிவாயத்தைநானமறவேனே

அஞ்சவேண்டிய வைம்புலப்பகையா லிடர்கொண்டோ
ய்ந்திலே யென்னிளுமினிநீ, யஞ்சவேண்டிய தெனனையென
னெஞ்சே யஞ்சலஞ்சல்கா னருமறைநான்கும் கிஞ்சவேண்

டியு மாலவன்மலரோன் விளக்கவேண்டியுமிடற்றின்கணழு
த்த, நஞ்சைவேண்டிய நாதன்றன்னும நமச்சிவாயக்க ளும்
பெறுக்குணையே. (௧௧௮)

திரப்படுத்திரமா லயன்வாழ்த்தத்தியாக ரென்னுமோர்
திருப்பெயரடைந்தீர், வரப்படுத்திறத்திருமையடைக்கால்வா
ய் திறந்தொருவார்த்தையுஞ்சொல்லீ, ரிரப்பவர்க்கொன்று
மீகிலீராகில் யாதுக்கையகீரிப்பெயரெடுத்தீ, ருரப்படுத்தவத்
தோர் துதித்தோகைவோங்குசீ ரொற்றியூருறையீரே. (௧௧௯)

ஆனந்தக்கூத்தனை யம்பலத்தானை யற்புதத்தேனையெம்
மாதிபிரானைத், தேனந்தக்கொன்றையஞ் செஞ்சடையானை
ச் செங்கண்விடையணி யெங்கண்மணியே, மோனந்தத்தார்
பெறுந்தானந்தத்தானைமுத்தனை முத்தியின்வித்தனைமுத்தை,
யீனந்தக்காதெனை யென்றுகொண்டானை யின்றையிரவிலெ
திர்ந்துகொள்வேனே. (௧௨0)

அணிகொளகோவணக் கந்தையேநமக்கிங் கடுத்தவா
டையென் றறிபடநெஞ்சே, கனிகொண்மாமணிக்கலன்கள
ங்கடவுட் கண்ணுண்மாமணிக்கண்டிகைகண்டாய்,பிணிகொ
ள்வன்பவ நீறகும்வெண்ணீறே பெருமைச்சாந்தமாம் பிறங்
கொளிமன்றிற், றிணிகொள்சங்கர சிவசிவவென்று சென்று
வாழ்த்தலே செய்தொழிலாமே. (௧௨௧)

கண்கண்மூன்றுறுங் கறைமணிமிடற்றார்கங்கை நாயகர்
மங்கைபங்குடையார், பண்கணீடிய பாடலாமன்றிற் பாதநீ
டிய பகையப்பதத்தா, ரொண்கண்மாதரார் கடம்பயிலொற்
றியூ ரமர்ந்துவாழ்விற்றவர்க்கேநம், மண்கொண்மாலைபோம்
வண்ணநற்றமிழ்ப்பூ மாலைசூட்டுதும் வருதியென்மனனே.

பண்ணுறுமுன்னருட்புகழைப்பாடுகின்றார் பணிகின்றார்
நின்னழகைப் பார்த்துப்பார்த்துக், கண்ணாவளகுளிரக் க
ளித்தானந்தக் கண்ணீர்கொண்டாடுகின்றார்கருணைவாழ்வை,
யெண்ணுகின்றானையெந்தாயெந்தாயெந்தா யென்கின்றார் நின்

னன்பரெல்லாமென்ற, னண்ணுகாவொருபாவி வஞ்சநெஞ்
சர்வலேனின்றே னென்செய்கேனந்தோவந்தோ. (கஉ௩)

ஆண்டதுண்டுநீயென்றனையடியே னுக்கையொன்றுமே
யசைமடர்ப்பனைபோ, னீண்டதுண்மெற் றன்னடிக்கன்பே நீ
ண்டதில்லைவன்னெறிசெலு மொழுக்கம், பூண்டதுண்டுநின்
புனிதநல்லொழுக்கே பூண்டதில்லையென் புன்மையைநோக்
கி, யீண்டவந்தருளாயெனிலந்தோவென்செய்கே னாகிடை
யிடும்போதே. (கஉ௪)

நன்றியொன்றிய நின்னடியவர்க்கே நானுமிங்கொருநா
யடியவன்காண், குன்றினொன்றிய விடர்மிகவுடையேன் குற்
றக்குகற் குணமிலேனெனினு, மென்றினொன்றிய சிவபாஞ்
சுடரே யின்பவாரியே யென்னுயிர்த்துணையே, யொன்றினொ
ன்றியவுத்தமப்பொருளேயுனையலாவெனையுடையவரெவரே.

விண்படைத்த புகழ்த்தில்லை யம்பலத்தா னெவர்க்கும்
மேலானா னன்பருள மேவுநடராசன், பண்படைத்த வெனை
யறியா விளம்பருவந்தனிலே பரிந்துவந்துமாலையிட்டான் பா
ர்த்தறியான்மீட்டும், பெண்படைத்தபெண்களெலா மவமதி
த்தேவலது பேசுகின்றார் கூசுகின்றேன்பிசகியெனலானேன்
கண்படைத்தும குழியில்விழக் கணக்குமுண்டோவவன்றன்
கணக்கறிந்தும்விடுவேனோ கண்டாயென்றோழி. (கஉ௬)

அற்புதப்பொன்னம்பலத்தே யாடுகின்றவரசே யாரமு
தேயடியேன்றனையேயென்னறிவே,கற்புதவுபெருங்கருணை
க் கடலேயென்கண்ணே கண்ணுதலேயானந்தக் களிப்பே
மெய்க்கதியே, வெறபுதவு பசுவைகொடியை மருவுபெருந்தரு
வே வேதவாகமமுடியின் விளங்குமொளிவிளக்கே, பொற்பி
றவேயிவ்வுலகிற் பொருந்துசித்தனானேன் பொருத்தமுநின்
றிருவருளின் பொருத்தமதுதானே. (கஉ௭)

அன்பருளக்கோயிலிலே யமர்ந்தருளும்பதியேயம்பலத்தி
லாடுகின்ற வானந்தநிதியே, வன்பருளத்தேமறைந்துவழங்கு
மொளிமணியே மறைமுடியாகமமுடியின் வயங்குகின்றமதி
யே, வென்பாகவன்றுறையாம லென்னைவலிந்தாட்கொண்டி

ன்பநிலைதனையளித்த வென்னறிவுக்கறிவே, முன்பருவம்பின்
பருவங்கண்டருளிச்செய்யு முறைமையினை தருளெறிக்குமொ
ழிதலறிந்திலனே. (கஉஅ)

என்னையொன்றுமறியாதவிளம்பருவந்தனிலே யென்னு
ளத்தேயமர்ந்தருளி யான்மயங்குந்தோறு, மன்னையெனப்ப
ரிந்தருளி யப்போதைக்கப்போ தப்பனெனத்தெளிவித்தே
யறிவுறுத்திநின்றாய், நின்னையெனக்கென்னென்பே னென்
னுயிரென்பேனோ நீடியவென் னுயிர்த்துணையா கேயமதென்
பேனோ, வின்னலறத்தருள்கின்ற வென்குருவென்பேனோ
வென்னென்பே னென்னுடைய வின்பமதென்பேனே.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகெலாந்தழைப்பவ ருண்மதவருவி யொழுகு மாமுக்
மைங்கரமு, மிலகுசெம்மேனிக் *காட்சியுமிரண்டோ டிரண்
டெனவோங்குதிண்டோளுந், திலகவாணுதலார் சித்திபுத்தி
களைச் சேர்த்தணைத்திடுமிருமருங்கும், விலகுறாதெளியேன்
மிழைக்தனன்சித்தி விநாயகவிக்கினேச்சுரனே. (க)

மருளுறுமனமுங் கொடியவெங்குணமு மகித்தறியாதவ
ன்மதியு, மிருளுறுநிலையு நீங்கநின்னடியை யெய்தநாளடை
குவனெளியே, னருளுறுமொளியா யவ்வெளிக்குள்ளே யமர்
ந்தசிற்பரவெளிநிறைவே, வெருளுறுசமயத் தறியொணச்சித்
தி வியாகவிக்கினேசசுரனே. (உ)

கும்பமாமுனியின் கரகநீர்க்கவிழ்த்துக் குளிர்மலர்ச்சந்த
னக்காத்தச, செம்பொனுட்டிறைவற் கருளியசினத் திருவ
ருட்பெருமையையமறவேன், சம்பனூர்க்கினியவருண்மகப்பே
றே நற்குணத்தோர்பெருவாழ்வே, வம்பறுமலர்த்தார் மாமு
முனிற்கூர்த்தல் வல்லவைக்கணேசமா மணியே (௩)

வல்லிருட்பவத்திர் மருத்தெனுகினது மலரடிமனமுறவு
மூத்தாப், புல்லர்தம்மிடமிப் பொய்யனேன்புகுதல்பொறுத்தி
லன்பொறுக்கினின்கண்டா, யெய்ல்லையினையீட் டுன்னை

டியவர்பா லுற்றவாழ்த்திடச்செயினுய்வேன, சல்லமற்றவர்க
ட்கருடரும்பொருளே தணிகைவாழ்சரவணபவனே. (௪)

நீற்றணிவிளங்கு மவர்க்கருள்புரியுநின்னடிக்கமலங்கணி
னைந்தே, போற்றிடாதவர்பாற் பொய்யனேனபுகுதல்பொறு
க்கிலன்பொறுக்கிலன்கண்டாய், யாற்றலகொணிலைபொன்ன
டியருக்கடியனுச செய்யினுயகுவனழுதே,சாற்றிடுமபெருமைக்
களவிலாதோவகுந் தணிகைவாழ்சரவணபவனே. (௫)

போதுகொண்டவனு யாலுநின்றேத்தும் புண்ணியநின்
றிருவடிக்கே, யாதுகொண்டடைகேன்யாதுமேற்செய்கேன்
யாதுநின்றிருவுளமறியேன், நீதுகொண்டவனென் றெனக்
கருள்சிறிதுஞ்செய்திடா திருப்பையோசிறியோ, னேதிவன்
செயலொன் றிலையெனக்கருதி யிவையோதணிகைவாழிறை
யே, (௬)

வாழ்வனேநின்பொன் னடிநிழல்கிடைத்தே வயங்குமா
னந்தவெள்ளத்து, ளாழ்வனோவெளியே னல்லதிவ்வுலகி லற
ஞ்செயாக் கொடியர்பாற்சென்றே, தாழ்வனோதாழ்ந்தபணி
புரிந்தவமே சஞ்சரித்துழன்றகென்னரகில்,வீழ்வனோவிக்கெ
ன் றறிகிலேன்றணிகை வெற்பினுளொளிர்அருள்விளக்கே. (௭)

பொன்னுர்புயனுர் புகழும்புகழார் புலியின்னதளார் பு
யகாலார், தென்னுர்சடையார் கொடிமேல்விடையார் சிவனு
ரருமைத்திருமகனு, ரென்னுயகனு ரென்னுயிர்போலவா ரெ
ழின்மாமயிலாரிமையோர்க, டக்காயகனுர் தணிகாசலனுர் த
னிவந்திவண்மாறந்தாரே. (௮)

காரூர்சடையார் கனலார்மழுவார் கலவார்புரமூன்றெ
ரிசெய்தா, ராருருடையார் பலிதேர்ந்திடுமெம் மானுரருமை
த்திருமகனுர், பேருருவாயார் ,தணிகாசலனுர் புதியாரென
வென்முனம்வந்தா, ருரேரெமதூரினில்வாவென்று ரெளியே
னேமாந்திருந்தேனே. (௯)

வகமோவன்றி யனேகமோவென்று மியற்கையோசெய
யாசித்தோ, தேகமோபோதமோ சிறப்பதோபெண்

ளோ திகழ்ந்திமோனந்தோவதுவோ, யோகமோ பிரிவோ வெ ளியதோ வெளியோ வுரைப்பதெற்றோ வெனவுணர்ந்தோர், ஆகமோமொழிந்து வழுத்தநின்றோங்கு மருட்பெருஞ்சோதி யென்னரசே. (௰)

தத்துவமனைத்துந் தனித்தனிகடந்தேந் தத்துவாதீதமே னிலையில், சித்தியல்முழுதுந் தெரிந்தனமவைமேற்சிவநிலைதெ ரிந்திடச்சென்றேம், ஒத்தவாநிலைக்கண் யாமுமெம்முணர்வு மொருங்குறைக் கரைந்துபோயினமென், றத்தகையுணர்ந் தோர் வழுத்தநின்றோங்குமருட்பெருஞ்சோதியென்னரசே.

தவம்வளர்தயையே தயைவளர்தவமே தவநிறைதயைவள ர்சதுரே, நவம்வளர்புரமே புரம்வளர்நவமே நவபுரம்வளர்தரு மிறையே, துவம்வளர்குணமே குணம்வளர்துவமே துவகுணம் வளர்தருதிகழ்வே, சிவம்வளர்பதமேபதம்வளர்சிவமே சிவபத ம்வளர்சிவபதியே. (கஉ)

நிதிவளர்நிலமே நிலம்வளர்நிதியே நிதிநலம்வளர்தருநி றைவே, மதிவளர்நலமே நலம்வளர்மதியேமதிநலம் வளர்தரு பரமே, கதிவளர்நிலையே நிலைவளர்கதியே கதிநிலைவளர்தரு பொருளே. பதிவளர்பதமே பதம்வளர்பதியே பதிபதம்வளர் சிவபதியே. (கங)

எழுவினும்வலிய மனத்தினேன்மலஞ்சாரீயினுநாயினு மிழிந்தேன், புழுவினுஞ்சிறியேன் பொய்விழைந்துழல்வேன் புன்மையேனபுலைத்தொழிற்கடையேன், வழுவினும்பெரியே ன் மடத்தினும்பெரியேன்மாண்பிலாவஞ்சகநெஞ்சக், குழுவி னும்பெரியே னம்பலக்கூத்தன் குறிப்பினுக்கென்கடவேனே.

கடைமையேன்வஞ்சக் கருத்தினேன்பொல்லாக் குன்மன க் குரங்கனேன்கடையேன், கொடுமையாண்டனைபோல் நின் றவெற்றுடம்பே னீசனென்பாசமேயுடையேன், கடைமையொ ன்றறியேன் கொடுமையிற்றிளைத்த நச்சுமாமரமெனத் திளைத் தேன், கொடுமையேகுறித்தேனம்பலக்கூத்தன் குறிப்பினுக் கென்கடவேனே. (கச)

பணியிலார்க்கிடைக்கண் புரிந்துணுஞ்சோற்றுப் பணம்பறி
த்துழல்கின்றபடியேன், எணியிலாதவெத்தார்க் குறுபெருந்தி
மை யியற்றுவேனெட்டியேயனையேன், மணியிலாமலரிற் பூத்
தனனிருகான் மாடெனத்திரிந்துழன்கின்றேன். குணமிலா
க்கொடியே னம்பலக்கூத்தன் குறிப்பினுக்கென்கடவேனே

கொட்டிலையடையாப் பட்டிமாடனையேன் கொட்டை
தன்பரப்பிமேல்வளர்ந்து, கட்டிலைவிரும்பி யடிக்கடிபடுத்த க
டையனேன்கங்குலும்பகலும், தட்டிலையடுத்த பூசையேனு
ணவை யறவுண்டுகுப்பைமேற்போட்ட, வெட்டிலையனையே
னென்னினும்வேறு நினைத்திடேன் காத்தருளனையே. (கஎ)

தொழுதெலாம்வல்ல கடவுளேநின்னைத் துதித்திலேன்
றூய்மையொன்றறியேன், கழுதெலாமனையே னிழுதெலாமு
ணவிற் கலந்துணக்கருதியகருத்தேன், பழுதெலாம்விரிந்து
பொழுதெலாங்கழித்த பாவியேன்றீமைகளறிந்து, மெழுதெ
லாம்படிதந்தென் றென்மிகவுடையே னென்னினுங் காததரு
ளனையே. (கஅ)

வட்டியேபெருக்கிக் கொட்டியேயேழை மனைகவர்கரு
த்தினேனேட்டைச், சட்டியேயெனினும்பிறர்கோளத்தறியே
ன் தயவிலேன்றுதெலாமடைத்த, பெட்டியேநிகர்த்த மனத்
தினேனுலகிற் பெரியவர்மனம்வெறுத்திடச்செய், எட்டியே
மன்னுங் கட்டியேயனையேனென்னினுங்காததருளனையே.

சோற்றிலேவிருப்பஞ் சூழ்ந்திடுவொருவன் றன்னுடற்
றவமெலாஞ்சுருங்கி, யாற்றிலேகரைத்த புளியெனப்போடு
மென் றறிஞர்களுரைத்திடல்சிறிதும், போற்றிலேனுன்னைப்
போற்றிலேன்சவையிற் பொருந்தியசாரசாரஞ்சேர், சாற்றி
லேகலந்த சோற்றிலேயாசை தங்கினேனென்செய்வேனெந்
தாய். (உய)

விருப்பிலேன்போலக் காட்டினேனன்றி விளைவிலாது
ணைவாமறந்த, கருப்பிலேயெனினுங் கஞ்சியாதிகளைக் கரு
த்துடன்றுதற்கமையேன், நெருப்பிலேயுருக்கு மெய்யி

லேசிறிதும் நீரிடாத்தயிரிலேநெகிழ்ந்த, பருப்பிலேசோற்றுப்
பொருப்பிலேயானை பற்றினேனென்செய்வேனெந்தாய். ()

உறியிலேதயிரைத் திருடியுண்டனனென் றொருவனையி
ரைப்பதோர்வியப்போ, குறியிலேயமைத்த வனைவெலாந்திரு
டிக் கொண்டுபோயுண்டனன்பருப்புக், கறியிலேபொரித்த க
றியிலேகூட்டுக் கறியிலேகலந்தபோரானை, வெறியிலேயுனையு
மறந்தனன்வயிறு வீங்கிடவுண்டனனெந்தாய். (௨௨)

பருப்பிடியரிவா லிடிகளாதிகளாற் பண்ணியபண்ணிகா
ரங்க, ளருப்பிடிநிரம்ப வரவரவெல்லா மொருபெருவயிற்றி
லேயடைத்தேன், கருப்பிடியுலகினெருப்பிடியனைய கடைய
திற்கடையனேனுதவாத், துருப்பிடியிருப்புத் துண்டுபோற்கி
டந்து தூங்கினேனென்செய்வேனெந்தாய். (௨௩)

உன்கடனடியேற் கருளலென் றுணர்ந்தே னுடல்பொரு
ளாவியுமுனக்கே, புன்கடனின்றிக் கொடுத்தனன் கொடுத்த
பின்னுநான்றளருதலழகோ, என்கடன்புரிவேன் யார்க்கெடு
த்துரைப்பே னென்செய்வேன்யார்துணையென்பேன், முன்
கடன்பட்டார் போன்மனங்கலங்கி முறிதலோர்கணந்தறி
யேனே. (௨௪)

தந்தையுந்தாயுமா குருவும்யான்போற்றுஞ் சாமியும்பூமி
யும்பொருளுஞ், சொந்தநல்வாழ்வு நேயமுந்துணையுஞ் சுற்
றமுமற்றுநீயென்றே, சிந்தையுற்றிலகே யிருக்கின்றேனிது
நின்றிருவுளந்தெரிந்ததேயெந்தாய், நிந்தைசெய்யுலகில் யா
னலங்கலகைல் நீதியோநின்னருட்கழகோ. (௨௫)

என்னுளவரைமே லருளொளியோங்கிற் றிருளிரவெழு
ந்ததுமுழுதும், மன்னுறுமிதயமலர்மலர்ந்ததுநன் மங்கலமுழு
க்குகின்றனசீர்ப், பொன்னியல்விளக்கம்பொலிந்ததுசித்திப்
பூவையர் புணர்ந்திடப்போந்தார், சொன்னநற்றருண மருட்
பெருஞ்சோதி துலங்கவந்தருளுகவிரைந்தே. (௨௬)

சீரிடம்பெறுமோர் திருச்சிற்றம்பலத்தே திகழ்தனித்தந்
தையேநின்பாற், சேரிடமறிந்தே சேர்ந்தனன்கருணைசெய்த

ருன் செய்திடத்தாழ்க்கில், யாரிடம்புகுவேன் யார்துணையெ
ன்பேன் யார்க்கெடுத்தென்குறையிசைப்பேன், போரிடமுடி
யா தினித்துயரொடுநோன்பொறுக்கலேனருள்க விப்போதே.

யாரினுங்கடையேன் யாரினுஞ்சிறியேனென்பிழைபொ
றுப்பவர்யாரே, பாரினும்பெரிதாம் பொறுமையோய்நீயேயா
வியென்பிழைபொறுத்திலையேல், ஊரினும்புகுத வொண்ணு
மோபாவியிடம்பைவைத்துலாவவும்படுமோ, சேரினுமெனைத்
தான்சேர்த்திடார்பொறுவாந்தெய்வத்துக்கடாதவனென்றே

அடாதகாரியங்கள் செய்தனனெனினு மப்பநீயடியனே
ன்றன்னை, விடாதவாறிங்கே களித்திருக்கின்றேன் விடுதி
யோவிட்டிடுவாயேல், உடாதவற்றரைநேர்ந்து யங்குவேனை
யோவுன்னருளடையானிங்கே, படாதபாடெல்லாம் பட்ட
னனந்தப் பாடெலாம் நீயறியாயோ. (௨௧)

களித்தெனதுடம்பிற் புகுந்தனையெனது கருத்திலேயம
ர்ந்தனைகனிந்தே, தெளித்தவென்னறிவில் விளங்கினையுயிரிற்
சிறப்பினுற்கலந்தனையுள்ளக், குளிர்த்திடச்சாகா வரங்கொடு
த்தென்றுந் தடைபடாச்சித்திகளெல்லாம், அளித்தனையெனை
க்கே நின்பெருங்கருணை யடியன்மேல்வைத்தவாறென்னே.

எவ்வுயிர்திரளு மென்னுயிரெனவே யெண்ணிநல்லின்பு
றச்செயவு, மவ்வுயிர்களுக்கு வருமிடையூற்றையகற்றியேயச்ச
நீக்கிடவுஞ், செவ்வையுற்றெனது திருப்பதம்பாடிச் சிவசிவ
வென்றுகூத்தாடி, யொவ்வுருகளிப்பா லழிவுறாதிங்கே யோ
ங்கவுமிச்சைகாணெந்தாய். (௩௦)

கருணையேவடிவாய்ப் பிறர்களுக்கடுத்த கடுந்துயரச்சமா
தியனைத், தருணநின்னருளாற் றவிர்த்தவர்க்கின்பந் தரவுமெ
ய்ப்புலைகொலையிரண்டு, மொருவியசெறியிலுலகெலாநடக்கவு
ந்தறவுமம்பலத்தனிலே, மருவியபுகழை வழுத்தவுநின்னையு
ந்தவுமிச்சைகாணெந்தாய். (௩௨)

சேர்த்தசித்சபையென் னப்பனேயெனது தெய்வமே யெ
ன்பெருஞ்சிறப்பே, யார்த்தவில்லுவகை யன்மையர்துணைவ ரெ

த்தவருறவினர்நேயர்,சேர்ததமற்றயலார்பசியினாற்பிணியால் மெய்யுளம்வெதும்பிய வெதுப்பைப் பார்த்தபோதெல்லாம்ப யந்தெனதுள்ளம்பதைத்ததனையுளமறியாதோ. (௩௩)

வேறுபல்விடஞ்செய் யுயிர்களைக்கண்டு வெருவினேன் வெய்யநாய்க்குழுவின், சிறியகுரலோ டழுகுரல்கேட்டுத் திய ங்கினேன்மற்றைவெஞ்சகுனக், கூறதாம்விலங்கு பறவையூர் வனவெகைகோள்செறுமாடவர்மடவா, ரூறுசெய்கொடுஞ்சொ ல் விளைக்கெலா முள்ளமுயங்கினேன் மயங்கினேனெந்தாய்.

பொருளிலேயுலக மிருப்பதாதலினால் புரிந்தநாமொரு வர்பாற்பலகால், மருவினற்பொருளு னிச்சையாற்பலகால் ம ருவுகின்றறெனக்கருதி, வெருவுவரெனநானஞ்சியெவ்விடத் து மேவிலேனெந்தைநீயறிவா, யொருவுமப்பொருளைநினைக் தபோதெல்லா முவட்டினேனிதுவுநீயறிவாய். (௩௪)

திருவெலாந்தருமோர் தெய்வமாமொருவன் றிருச்சிற்ற ம்பலத்திகழ்கின்ற, னுறவெலாமுணர்ச்சி யுடல்பொருளாவி யுளவெலாமாகவன்றனக்கே, தெருவெலாமறியக் கொடுத்த னன்வேறு செயலிலேனெனநினைந்திருந்தே, னருவெலாமு டையாய் நீயறிந்ததுவே யடிக்கடியுரைப்பதென்னெனக்கே.

சாதியுமதமுஞ் சமயமுந்தவிர்ந்தேன் சாத்திரக்குப்பை யுந்தணந்தேன், நீதியுநிலையுஞ்சத்தியப்பொருளு நித்தியவாழ் க்கையுஞ்சுகமு, மாதியுநடுவு மந்தமுமெலலா மருட்பெருஞ் சோதியென்றறிந்தே, ஞேதியவனைத்து நீயறிந்ததனா னுரை ப்பதென்னடிக்கடியுனக்கே. (௩௫)

திருச்சிற்றம்பலம்.

—(*)—

## வர்க்கமாலையென்னுங் காலைப்பாட்டு.

இராகம்-காம்போதி-தாளம்.

பல்லவி.

வாரீர்சிதம்பரவல்லிசிவகாம
வல்லிமணாளரேவாரீர்
மணிமன்றவாணரேவாரீர்.

சரணங்கள்.

அருட்பெருஞ்சோதி யென்றுண்டவரே
வம்பலவாணரேவாரீர்
அன்புடையாளரேவாரீர் (வா)

அச்சந்தவிர்த்தென்னை யாட்கொண்டருளிய
யந்தணரேயிங்குவாரீர்
அம்பலத்தையரேவாரீர் (வா)

அன்புருவானவ ரின்புறவுள்ளே
யறிவுருவாயினீர்வாரீர்
அருட்பெருஞ்சோதியீர்வாரீர் (வா)

அண்டர்களெல்லா மணுவிலடக்கு
மரும்பெருஞ்சித்தரேவாரீர்
அற்புதரேயிங்குவாரீர் (வா)

அம்மையுமாயெனக் கப்பனுமாகியென்
அப்பனுமாயினீர்வாரீர்
அங்கணரேயிங்குவாரீர் (வா)

அல்லலறுத்தென் னறிவைவிளக்கிய
அம்பலவாணரேவாரீர்
செம்பொருளாயினீர்வாரீர் (வா)

# திருப்புலம்பல்.

பற்றுவினைத்தெழும்பி பாவிமனத்தீமையெலா
முற்றுவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

எள்ளேதநின்னிடத்தே யெண்ணுகின்றதோறுமதை
யுள்ளேவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

துன்னுகின்றதீமைநின்பாற் சூழ்ந்துரைக்குந்தோறுமதை
யுன்னுகின்றபோதிலெனக் கூடெருவிப்போகுதடா

என்னுகின்றதீமைநின்பா லெண்ணுகின்றதோறுமதை
யுன்னுகின்றபோதிலெனக் கூடெருவிப்போகுதடா

மிக்கவினைநிற்க விரும்பேன்பிழைகளெல்லாம்
நக்கவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

கோகோவெனுமகொடியேன் கூறியகுற்றங்களெலாம்
ஓகோவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

பித்துமனக்கொடியேன பேசியவன்சொல்லையெலா
மொத்துவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

தேர்ந்துதெளியாச் சிறியவனேன்றீமையெலா
மோர்ந்துவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

திறத்தியறியே னிகழ்த்தியவென்சொல்லை
யுறத்திவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

தோன்றிவிரியுமெனத துட்டனேன்வன்பிழையை
யூன்றிவினைக்கிலெனக் கூடெருவிப்போகுதடா

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

நேரிசை வெண்பா.

முன்னவனேயானை முகத்தவனே முத்திநலஞ்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே—மன்னவனே
சிற்பரனேயைங்கரனே செஞ்சடையஞ்சேகரனே
தற்பரனே நின்றாள் சரண்.

இராகம்-இன்தூஸ்தான்-பியாக்-ஆதிதாளம்.

சிவசிவகஜமுக கணநாதா, சிவகுணவந்தித குணநீதா
சிவசிவசிவசிவ தததுவபோதா, சிவகுருபரசிவசண்முகநாதா
சிவசிவசிவசிவ சின்மயதேஜா, சிவசுந்தரகுஞ்சித நடராஜா.

அம்பலத்தரசே யருமருந்தே
யானந்தத்தேனே யருள்விருந்தே

பொதுநடத்தரசே புண்ணியனே
புலவரெலாம்புகழ் கண்ணியனே

மலைதருமகனே மடமயிலே
மதிமுகவமுதே யிளங்குயிலே

ஆனந்தக்கொடியே யிளம்பிடியே
யற்புதத்தேனே மலைமானே

சிவசிவசிவசிவ சின்மயதேஜா
சிவசுந்தரகுஞ்சிதநடராஜா

படனவிவேக பரம்பரவேதா
நடனசபேச சிதம்பரநாதா ௬

அரிபிரமாதியர் தேடியநாதா
அரகரசிவசிவ வாடியபாதா ௭

அந்தணவங்கண வம்பரபோகா
அம்பலநம்பர வம்பிகைபாகா ௮

அம்பரவிம்ப சிதம்பரநாதா
அஞ்சிதாஞ்சித குஞ்சிதபாதா ௯

தந்திரமந்திர யந்திரபாதா
சங்கரசங்கர சங்கரநாதா ௰

கனகசிதம்பர கங்காபுரஹர
அனகபரம்பர சங்கரஹரஹர ௧௧

சகலகலாண்ட சாரசரகாரண
சகுணசிவாண்ட பராபரபூரண ௧௨

இக்கரைகடந்திடி லக்கரையே
இருப்பதுசிதம்பர சர்க்கரையே ௧௩

என்னுயிருடம்பொடு சித்தமதே
இனிப்பதுநடராஜ புத்தமுதே ௧௪

ஐயர்திருச்சபை யாடகமே
ஆடுதலானந்த நாடகமே ௧௫

உத்தரஞான சிதம்பரமே
சித்தியெலாந்தரு மம்பரமே ௧௬

அம்பலவாசிவ மாதேவா
வம்பலவாவிங்கு வாவாவா ௧௭

நடராஜனெல்லார்க்கு நல்லவனே
நல்லவெலாஞ்செய வல்லவனே ௧௮

ஆனந்தநாடகங் கண்டோமே பர
மானந்தமோனங் கொண்டோமே ௧௯

சகளவுபகள நிட்களநாதா
உகளசத்தன மங்களபாதா ௨

சந்ததமுஞ்சிவ சங்கரபசனம்
சங்கீதமென்பது சற்சனவசனம் ௨

சங்கரசிவசிவ மாதேவா
வெங்களையாட்கொள வாவாவா ௨

அரகரசிவசிவ மாதேவா
அருளமுதந்தர வாவாவா ௨

நடனசிகாமணி நவமணியே
திடனகமாமணி சிவமணியே ௨

நடமிடுமம்பல நன்மணியே
புடமிடுசெம்பல பொன்மணியே ௨

உவட்டாதுசித்திக்கு முள்ளமுதே
தெவிட்டாதுதித்திக்குந் தெள்ளமுதே

நடராஜவள்ளலை நாடுதலே
நற்தொழிலாம்வினை யாடுதலே

அருட்பொதுநடமிடு தாண்டவனே
யருட்பெருஞ்சோதியென் னுண்டவனே

நடராஜமாணகசவமானறதுவவ
கண்ணுதலாணிப்பொன மன்றதுவே உக

நடராஜபலமது நம்பலமே
நடமாடுவதுதிரு வம்பலமே ௩௰

நடராஜர்பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார்பாட்டெல்லாம் வெறும்பாட்டு ௩௪

சிதம்பரப்பாட்டே திருப்பாட்டு
சிவர்கள்பாட்டெல்லாந் தெருப்பாட்டு ௩௨

அம்பலவாணனை நாடினனே
அவனடியாரொடுங் கூடினனே ௧௪

தம்பதமாம்புகழ் பாடினனே
தந்தனவென்றுகூத் தாடினனே ௧௫

நான்சொன்னபாடலுங் கேட்டாரே
ஞானசிதம்பர நாட்டாரே ௧௬

இனிதுயர்படமாட்டேன் விட்டேனே
யென்குருமேலாணை யிட்டேனே ௧௭

இனிபாடுபடமாட்டேன் விட்டேனே
யென்னப்பன்மேலாணை யிட்டேனே ௧௮

சன்மார்க்கம்நன்மார்க்கம் நன்மார்க்கம்
சகமார்க்கந்துன்மார்க்கந் துன்மார்க்கம் ௧௯

நாதாந்தநாட்டுக்கு நாயகரே
நடராஜரேசபா நாயகரே ௨0

நான்சொல்லுமிதுகேளீர் சத்தியமே
நடராஜரெனில்வரு நித்தியமே ௨௧

நல்லோரெல்லார்க்குஞ் சபாபதியே
நல்வரமீயுந் தயாநிதியே ௨௨

நடராஜர்தன்னட நன்னடமே
நடம்புரிகின்றது மென்னிடமே ௨௩

சிவகாமவல்லிக்கு மாப்பிள்ளையே
திருவாளனென்னுஞ் சீர்ப்பிள்ளையே ௨௪

சிவகாமவல்லியைச் சேர்ந்தவனே
சித்தெல்லாஞ்செய்திடத் தேர்ந்தவனே ௨௫

இறவாவராதரு நற்சபையே
யெனமறைபுகழ்வது சிற்சபையே ௨௬

என்னிருகண்ணு ளிருந்தவனே
இறவாதருள மருந்தவனே ௨௭

சிற்சபையப்பனை யுற்றேனே
சித்தியெலாஞ்செயப் பெற்றேனே ௪௮

அம்பலவாணர்தம் மடியவரே
யருளரசாள்மணி முடியவரே ௪௯

அருட்பெருஞ்சோதியைக் கண்டேனே
ஆனந்தத்தெள்ளமு துண்டேனே ௫௰

இருட்பெருமாயையை விண்டேனே
எல்லாஞ்செய்சித்தியைக் கொண்டேனே ௫௧

கருணாநிதியே குணநிதியே
கதியாநிதியே கலாநிதியே ௫௨

தருணாபதியே சிவபதியே
தனிமாபதியே சபாபதியே ௫௩

கருணாநிதியே சபாபதியே
கதியாநிதியே பசுபதியே ௫௪

சபாபதிபாதம் தபோபிரசாதம்
தயாநிதிபோதம் சதோதயவேதம் ௫௫

கருணாம்பரவர கரசிவபவ
அருணாம்பரபர ஹரஹரசிவசிவ ௫௬

கனகாகரபுர ஹரசிரகரதர
கருணாகரபர சுரவரஹரஹர ௫௭

கனகசபாபதி பசுபதிநவபதி
அனகவுமாபதி யதிபதிசிவபதி ௫௮

வேதாந்தபராம் பரசயசய
நாதாந்தநடாம் பரசயசய ௫௯

ஏகாந்தசர்வேச நமோநம
யேகாந்தநடேச நமோநம ௬௰

ஆதாம்பரவாடக வதிசயசய
பாதாம்புசநாடக சயசயசய ௬௧

போதாகதபுரேச சிவகாம
நாதாந்தகடேச சோமகம ௬௨

ஜாலகோலகன காம்பரசாயக
காலகாலவன காமபாசாயக ௬௩

உபலசிரதல சுபகணவங்கண
சுபலகரதல கணபணசங்கண ௬௪

அபயவரதகர தலபுரிகாரண
உபயபாதபக பராபரிபூரண ௬௫

அகரவுகாசுப கரவாசினகர
தகரவகாரநவ புரசிரஸினகர ௬௬

வகாரிகாதின காசசிகாபுர
மகாரவகாரவர புரஹாரஹாரஹர ௬௭

பரமமந்திரிசக ளாகளகரண
படனதந்திரிக மாகமசரண ௬௮

அனந்தகோடிகுண காகாரசொலித
அகண்டவேதசிர காதாரபலித ௬௯

பரிபூரண ஞானசிதம்பர
பதிகாரண நாதபரம்பர ௭௰

சிவஞானப தாடகநாடக
சிவபோதப ரோகனகூடக ௭௧

சகலலோகபர காரகவாரக
சபளயோகசர பூரகதாரக ௭௨

சத்வபோதக தாரணதன்மய
சத்யவேதக பூரணசின்மய ௭௩

வரகேசாந்தம கோதயகாரிய
பரபாசாந்த சுகோதயசூரிய

பளிதநீபக கோபிதபாதா
லளிதரூபக ஸ்தாபிதகாதா

அனர்தகோப கருணாம்பகாதர
அமிர்தரூப தருணாம்புசபாதா ௭௬

அம்போருகபத அரஹரகங்கர
சம்போசிவசிவ சிவசிவசங்கர ௭௭

சிதம்பரகாசா பரம்பிரகாசா
சிதம்பரேசா சுயம்பிரகாசா ௭௮

அருட்பிரகாசம் பரப்பிரகாசம்
அகப்பிரகாசம் சிவப்பிரகாசம் ௭௯

கடப்பிரகாசம் தவப்பிரகாசம்
நவப்பிரகாசம் சிவப்பிரகாசம். ௮௰

நாதபரம்பரனேபர நாதசிதம்பரனே
நாததிகம்பரனேதச நாதசுதந்திரனே ௮௧

ஞானநடத்தவனேபர ஞானிபீடத்தவனே
ஞானவரத்தவனே சிவஞானபுரத்தவனே ௮௨

ஞானசபாபதியேமறை நாடசேதாகதியே
தீனதயாநிதியேபர தேவியுமாபதியே ௮௩

புத்தர்தரும்போதா வித்தர்தருந்தாதா
நித்தர்தரும்பாதா சித்தர்திரும்பாதா. ௮௪

திருச்சிற்றம்பலம்.

இராகம்-சஹானா-ஆதிதாளம்.

திருச்சிற்றம்பலம்

கையறவிலாதுநடுக் கண்புருவப்பூட்டு
கண்டுகளிகொண்டுதிறந் தண்டைகோட்டு
ஐயாமிகவுய்யும்வகை யப்பர்விளையாட்டு
ஆடுதென்றுமறைகள் பாடுதபாட்டு.

சிற்சபையும்பொற்சபையும் சொந்தமெனதாச்சு
தேவர்களுமூவர்களும் பேசுவதென்பேச்சு
இச்சமயவாழ்விலெனக் கென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலா மின்றோடேபோச்சு.

ஐயாருட்சோதியரசாட்சியெனதாச்சு
ஆரணமுமாகமமும் பேசுவதென்பேச்சு
எய்யுலகவாழ்விலெனக் கென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலா மின்றோடேபோச்சு.

ஈசனருளாற்கடலி லேற்றவொருவோடம்
ஏறிக்கரையேறினே னிருந்ததொருமாடம்
தேசறுமம்மாடநடுத் தெய்வமணிப்பீடம்
தீட வொளிகண்டவுடன் சேர்ந்ததுசக்தோடம்.

மேருமலைஉச்சியில் விளங்குகம்பீட்சி
மேவுதன்மேவுலகில் வீறுமரசாட்சி
சேருமதிற்கண்டபல காட்சிகள்கண்காட்சி
செப்பலரிதாம்தற்கென் னப்பனருட்காட்சி.

துரியமலைமேலுளதோர் சோதிவளநாடு
தோன்றுமதிலேயர்கடுஞ் செய்யுமணிவீடு
தெரியுமதுகண்டவர்கள் காணிலுயிரோடு
செத்தவரெழுவரென்று கைதாளம்போடு.

சொல்லாலளப்பரிய சோதிவரைமீது
தூயதுரியப்பதியில் நேயமறையோது
எல்லாஞ்செய்வல்லசித்தர் தம்மையுறும்போது
இறந்தாரெழுவாரென்று புரந்தாரையூது.

சிற்பொதுவும்பொற்பொதுவும் ஞானறியலாச்சு
சித்தர்களும்முத்தர்களும் பேசுவதென்பேச்சு
இப்பெரியவிவ்வுலகி லென்னையினியேச்சு
என்பிறவித்துன்பமெலா மின்றோடேபோச்சு.

வலதுசொன்னபேர்களுக்கு வந்ததுவாய்த்தாழ்வு
மற்றவரைச்சேர்ந்தவர்க்கும் வந்ததலைத்தாழ்வு
வலதுபுசமாடநம்மால் வந்ததருள்வாழ்வு
மற்றுநமைச்சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல்வாழ்வு.

அம்பலத்திலெங்களைய ராடியநல்லாட்டம்
அன்பொடுதுதித்தவருக் கானதுசொல்லாட்டம்
வம்புசொன்னபேர்களுக்கு வந்ததுமல்லாட்டம்
வந்ததலையாட்டமன்றி வந்ததுபல்லாட்டம்.

நாத்திகஞ்சொல்கின்றவர்தம் நாக்குமுடைநாக்கு
நாக்குருசிகொள்ளுவது நாறியபிண்ணாக்கு
சீர்த்திபெருமம்பலவர் சீர்புகன்றவாக்கு
செல்வாக்குநல்வாக்கு தேவர்திருவாக்கு.

திருச்சிற்றம்பலம்.

# திருவுந்தியார்.

—:*:—

### கலித்தாழிசை.

இரவுவிடிந்த திணையடிவாய்த்தன
பரவிமகிழ்ந்தேனென் றுந்தீபற
    பாலமுதுண்டேனென் றுந்தீபற ௧

பொழுதுவிடிந்தது பொற்பதம்வாய்த்தன
தொழுதுமகிழ்ந்தேனென் றுந்தீபற
    தூயவனானேனென் றுந்தீபற ௨

அக்கந்தொலைந்தது சூரியன்றோன்றின
னேக்கந்தவிர்ந்தேனென் றுந்தீபற
    விண்ணமுதுண்டேனென் றுந்தீபற ௩

துன்பந்தவிர்ந்தது துக்கந்தொலைந்தது
இன்பங்கிடைத்ததென் றுந்தீபற
    வெண்ணம்பலித்ததென் றுந்தீபற ௪

ஞானமுதித்தது நாதமொலித்தது
தீனந்தவிர்ந்ததென் றுந்தீபற
    சிற்சபைகண்டேனென் றுந்தீபற ௫

உள்ளிருணீங்கிற்றென் னுள்ளொளியோங்கிற்றுத்
தெள்ளமுதுண்டேனென் றுந்தீபற
    தித்திக்கவுண்டேனென் றுந்தீபற ௬

தந்தையைக்கண்டேனான் சாகாவரம்பெற்றேன்
சிந்தைகளித்தேனென் றுந்தீபற
    சித்தெலாம்வல்லேனென் றுந்தீபற ௭

முத்தியைப்பெற்றேனம் முத்தியினுள்ஞான
சித்தியையுற்றேனென் றுந்தீபற
    சித்தனுமானேனென் றுந்தீபற.

திருச்சிற்றம்பலம்.

